# கொடியேற்றுரை



திரு. வா. து. நடராசன் அவர்கள்
(தலைவர், வாலாசாபாத் ஊராட்சிமன்றம், கூட்டுறவு வேளாண் நிதி நிலையம், இந்துமத பாடசாலையின் பழைய மாணவர்.)

பேரன்பு மிக்க சைவப் பெரியீர்!

சென்னைச் சைவசித்தாந்த மகா சமாஜ 54-ஆம் ஆண்டு விழா மாநாட்டில் கொடி யேற்றும் பேற்றினை எனக்கு அளித்த சமாசத்தினர்க்கு நன்றி செலுத்தும் கடப்பாடுடையேன். ஊர்ப் பொதுத் தொண்டில் ஈடுபட்டுள்ள என்னை இந்த அருள் தொண்டில் ஈடுபடுத்தியமைக்கு மகிழ்ச்சி மிக்க வணக்கத்தைச் செலுத்துகிறேன்.

## பலவகைக் கொடிகள்

அன்புச் செயல், அருட் செயல், ஆண்மைச் செயல், அறிவுச் செயல் எதுவாயினும், முதலில் கொடியேற்றப்பட்டே அதற்குப் பின் வேறு நிகழ்ச்சிகள் நடைபெறக் காண்கிறோம்.

4158—1

அன்னதானம் போன்ற அன்புச் செயல்கள் கொடிகட்டியே செய்யப்பட்டு வருகின்றன என்பதை, ஈயாத ஒருவனை நகை யாடுவதற்கு, 'அவன் வீட்டில் அன்னதானக் கொடிதான் பறக் கிறது' என்று கூறுகிறோம். ஆண்மைச் செயல்களாகிய போரிற்குக் கொடி எவ்வளவு இன்றியமையாதது என்பது எல்லாரும் அறிந்த ஒன்றே. அறிவியல், இலக்கிய மாநாடுகள் போன்ற அறிவுச் செயல்களும் கொடியேற்றியே தொடங்கப் பெறுகின்றன. இவ்வளவு ஏன்? விளையாட்டு நிகழ்ச்சிகள் கூடக் கொடி யேற்றப்பட்டுத்தானே தொடங்கப்பெறுகின்றன. ஆகவே இதுபோன்ற அருட் செயல்களும் கொடியேற்றலை முதலாகக் கொண்டு நடைபெறுகின்றன.

## தமிழ்க் கொடிகள்

எல்லாச் செயல்களும் கொடியேற்றியே தொடங்கப் பெற்றாலும் அந்தந்தச் செயல்களுக்கேற்பக் கொடிகள் மாறுபடு கின்றன. அருட் செயல்களுக்காக ஏற்றப்படுகின்ற கொடிகள் தாம் அழியாமல் என்றும் நிலவுகின்றன. பிற செயல்களுக் காகக் கொள்ளும் கொடிகள் மதிப்பிழந்தும் மாறுபட்டும் மாண்டும் போவன. வில்லும், கயலும், புலியும் நெடுநாளைக்கு முன் பெருமதிப்புடையனவாயிருந்தன. ஆண்மைச் செய லுக்கு அறிகுறியான அவை இப்போது இலக்கிய மாநாடுகள் போன்ற அறிவுச் செயல்களின் அறிகுறியாகிய கொடியாகக் கொள்ளப்பட்டு மாறுதல் பெற்றன. இமயமும் அஞ்ச இந் நாட்டில் பெருமிதத்துடன் பறந்த இக் கொடிகள், இன்று கேட்பாரற்றுக் கிடக்கின்றன. நம்முடைய இக் கொடிகள்தாம் இந்நிலை அடைந்தன என்பதில்லை; இந்நாட்டை அடிமைப் படுத்திய பல்லவரின் பன்றிக்கொடியும், அவர்களை அடுத்து வந்த அயலார்களாகிய நாயக்கர்கள், மராட்டியர், மகம்மதியர், ஆங்கிலேயர்களின் கொடிகளும் இவ்வாறே செல்வாக்கிழந்தன. இன்றுள்ள கொடிகளும் இனியும் செல்வாக்கிழவாமல் எப் போதும் இப்போதுள்ளபடியே இருக்கும் என்று எப்படிக் கூற முடியும்? என்றும் மாறாமல் எப்போதும் தன்னிலை குன்றாமல் நிலைத்து நிற்பன சமயக் கொடிகளே. அவ்வச் சமயங்கள் தோன்றிய காலந்தொட்டு இன்றுவரை போற்றப்பட்டு வருவன அக் கொடிகளே.

## சைவக் கொடி

அத்தகைய அழியாக் கொடிகளில் ஏற்றம் கொண்டது ஏற்றுக் கொடியே. அறத்தின் அடிப்படையில் தோற்று விக்கப் பெற்ற இக் கொடியே உலகம் தீநெறியால் அழியாது என்றும் நன்னெறியில் இயங்க நல்ல பல கருத்துக்களைத் தருவதாகும்.

இந்தக் கொடியில் உள்ள சின்னங்கள் எவ்வளவு உயர்ந்த கருத்துக்களைத் தருகின்றன என்று எண்ணுந்தோறும் எண்ணுந்தோறும் இறும்பூது தெய்துவோம். விடையூர்ந்த உமை பங்காளன்—அறிவுப் பிழம்பு ஆண்டவன்; அன்பின் உறைவிடம் அம்மை; அறத்தின் அறிகுறி காளை.

## அறிவின் சிறப்பு

உலகம் இயங்க இன்றியமையாதது அறிவு. அறிவின் ஆற்றல் இவ்வுலகத்தில் செயற்கரிய செயல்களையும் பெறுதற்கரிய வளங்களையும் தருகிறது. வாழ்க்கையில் பெறும் வாய்ப்புகளெல்லாம் இன்பங்களெல்லாம் அறிவின் விளைவுகளே. எண்ணமுடியாத, கனவிலேகூட கருத முடியாத பல விந்தைகளை, அறிவியல் நாள்தோறும் புதிது புதிதாகத் தந்தபடி இருக்கிறது. குறைந்த காலச் செலவில் மிகக் குறைந்த உடலுழைப்பில் மிகப் பெரும் பயனைப் பெற வழி வகுக்கிறது. ஆனால் அதே நேரத்தில் அனைத்துலகையும் ஒரே நொடியில் அழித்து விடுமோ என்று அஞ்சக்கூடிய கருவிகளையும் தோற்றுவிக்கிறது; தோற்றுவித்து எவ்வளவு பெரிய அளவில் அழிவு உண்டாக்க முடியுமோ, அவ்வளவு அழிவினையும் உண்டாக்கி உருக்குலையவும் செய்கிறது. இதனால் நாம் பெறும் படிப்பினை என்ன?

அறிவு மட்டும் தனித்து இயங்குமானால், அதனால் பெரும் நன்மைகளோடு பெருந் தீமைகளும் விளைகின்றன. அதே அறிவு மற்ற உயிர்களிடத்தும் அன்பு கொண்டு இயங்குமானால், தீமைகள் நீங்கிய நன்மைகளைப் பெறலாம். இன்று உலகம் அறிவை மட்டும் துணைகொண்டு இயங்குவதனால்தான் இத்துணை அல்லல்கள் நம்மை வாட்டுகின்றன. அன்போடு கலந்த அறிவானால், தன்னைப் போலப் பிறரையும் கருதுகின்ற 'தன் நோய் போல் பிறிதின் நோயும் போற்றுகின்ற' அறிஞர்களின்

அறிவாராய்ச்சியினால் உலகம் உய்யும். ஈரமற்ற—அன்பற்ற—வறண்ட அறிவினால் விளைவது கொலையும் கொள்ளையுமே. இதைத் தெளிவுபடுத்துவதுதான் அம்மை யப்பனாய், அன்போடு கூடிய அறிவாய் இக்கொடியில் ஆண்டவன் காட்சி யளிப்பதாகும்.

## கொடியின் சிறப்பு

இந்த அன்பும் அறமும் ஒருங்குகூடி நிகழ்வதுகூட அறத்தின் அடிப்படையிலே தான் நடைபெற வேண்டும். காளை அறத்தின் சின்னம் 'சுழன்றும் ஏர்ப்பின்ன துலகம்' என்ற பொதுமறையின் வழி வாழும் நந் தமிழ்நாடு, எருதில்லாமல் எங்ஙனம் பெருமை பெறும்? மாட்டினத்தைச் செல்வமாக மதித்த நாடல்லவா நம்நாடு? இதனைக்

> "கேடில் விழுச்செல்வம் கல்வி ஒருவற்கு
> மாடல்ல மற்றை யவை"

என்ற வள்ளுவரின் சொல் விளக்குகிறதே!

போர் குறித்துச் செல்லும் அரசரும் பகைவர் நாட்டிலுள்ள ஆனிரைகளைக் கருணையினால் கவர்ந்து காத்துப் போற்றுதலாகிய 'ஆனிரை கவர்தல்' என்ற முறையைப் பின்பற்றியதாக அல்லவா புறநானூறு போன்ற பழம் பாடல்கள் கூறுகின்றன? இப்படியெல்லாம் போற்றிய நம் முன்னோர்கள் எருதினை அறத்தின் அடையாளமாகக் கொண்டதில் வியப்பில்லை.

இக்காலத்தில் "குருதிக்கொடை"—இரத்த தானம்—தருவோரை—சிறிது தந்தவர்களையே மிகப் பெரிதாகப் போற்றுகிறோம். பசுக்கள் தம் உடலைப் பிழிந்து குருதியைப் பாலாக மாற்றித் தந்து நம்மை என்றென்றும் வாழ்விக்கின்றன. அவற்றை அணைத்துப் போற்றாவிட்டாலும் அடித்துத் துன்புறுத்தாமலாவது இருக்கிறோமா? அவற்றிற்கு என்ன பயனுள்ள உதவியைச் செய்கிறோம்? நாம் நெல்லை எடுத்துக்கொண்டு வைக்கோலைத் தருகிறோம். சென்னை போன்ற நகரங்களில் அந்த வைக்கோலைக் கூடத்தராது—உண்மையாகவே எச்சிலை, எச்சிலிலைகளையே தருகிறார்கள். நல்ல அழகான காற்றும் வெளிச்சமும் உள்ள வீடுகளில் மழையாலும் வெய்யிலாலும்

துன்பப்படாது வாழ்கிறோம்; அவற்றிற்கு இருட்டறை போன்ற தொழுவங்களைத் தருகிறோம். இவ்வளவு துன்பஞ் செயினும்,

"கொன்றன்ன இன்னா செயினும் அவர்செய்த
ஒன்றுநன்(று) உள்ளக் கெடும்"

என்ற குறளுக்கிலக்கியமாக நாம் தருகின்ற ஏதோ ஒரு வகையான உணவிற்கு மாறாக நல்ல பயன்களைத் தருகிறது. இத் தகைய மாட்டினை அறத்தினடையாளமாகக் கொள்வது எவ்வளவு பொருத்தமாயுள்ளது என்று எண்ணிப் பாருங்கள்.

அறத்தின் அடிப்படையிலேயே நிகழாத அன்பும், அன்போடு கலவாத அறிவும் அல்லலைத்தான் அளிக்கும் என்பதனை, ஏற்றுக்கொடி எடுத்துக் கூறுகிறது என்று கூறி அமைகிறேன்.

செந்தமிழ்நல் அருமைமொழி
செழித்துயர்க! சிவநெறியாம்
நந்தம்அரும் பெருஞ்சமயம்
நனிபரவிச் சிறந்தொளிர்க!
இந்துமதப் பள்ளியொடெம்
வள்ளலார் இல்லம்எலாம்
சந்ததமும் இறையருளால்
தழைத்தோங்கி வளர்கநன்றே!

—முருகவேள்.

# வரவேற்புரை



திரு. தி. மாணிக்கச் செட்டியார் அவர்கள்
(தலைவர், இந்துமத பாடசாலை, வள்ளலார் மாணவர் இல்லம்,
வாலாசாபாத், வரவேற்புக் குழுத் தலைவர்.)

'எல்லாம் செயல்கூடும் என்னாணை அம்பலத்தே
எல்லாம்வல் லான்தனையே ஏத்து'
'எப்போ தகத்தும் நினைவார்க் கிடரில்லை
கைப்போ தகத்தின் கழல்!'

செந்தமிழ்ப் பயனும் சைவப்பெரு நெறி யோம்பும் பெரியோர்களே! அறிஞர் பெருமக்களே! தாய்மார்களே! அன்பர்களே!

உங்கள் அனைவருக்கும் அடியேனது வணக்கம். எங்கள் பாடசாலையின் வரலாற்றிலேயே இன்று மிகவும் சிறப்பான நன்னாள், பொன்னாள். இன்று முதல் மூன்று நாட்கள் உங்கள் எல்லோருடனும் இருந்து நாங்களும் எங்கள் குழந்தைகளும்

அளவ்ளாவி மகிழும் பெரிய வாய்ப்பு நேரிட்டிருக்கிறது. உங்கள் அரிய உரைகளைக் கேட்கவும் இனிய வாழ்த்துக்களைப் பெறவும் நாங்களும் எங்கள் குழந்தைகளும் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்கவேண்டும். இந்த நல்வாய்ப்பைப் பெற்றமைக்கு நாங்கள் மிகவும் மகிழ்கின்றோம். இவ்வாய்ப்பை வழங்கிய சைவ சித்தாந்த மகா சமாஜத்தார்க்கு எங்கள் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்துக் கொள்ளுகின்றோம்.

உலகத்திலேயே மிகச் சிறந்த பண்பட்ட பழையமொழி நமது தமிழ். நம்முடைய தமிழ் முன்னோர்கள் கண்ட கடவுட் கொள்கையே சிவநெறி. அதுவே சைவம் என்ற பெயரில் இப்போது வழங்குகிறது. சைவம் ஒரு தனிச் சமயமல்ல. அது சமயங்கடந்த சமரசம்—சன்மார்க்கம். அதில் எல்லாச் சமய உண்மைகளும் அடங்கியிருக்கின்றன. அது, அறிவியல் அடிப்படையில்-ஆழ்ந்த அருளறிவினால் கண்ட முடிந்த முடிவான மெய்ப்பொருள் உண்மைகளை ஒட்டி இயல்வது. அதே முறையில் அதனை வளர்த்தல் வேண்டும். காலப் போக்கில் அதிற் சேர்ந்துவிட்ட மாசுகளை நீக்கி வளர்க்கவே சென்னைச் சைவ சித்தாந்த மகா சமாஜம் 54-ஆண்டுகளுக்கு முன் சிவப் பெருந்திரு. ஞானியாரடிகளார் திரு முன்னிலையில், ஆசிரியர் மறைமலை அடிகளார் முதலிய பெரியோர்களால் தோற்றுவிக்கப் பட்டது.

சைவசித்தாந்த மகாசமாஜம் கடந்த அரை நூற்றாண்டுக் காலமாகச் செய்த பெருஞ்செயல்களைப் பற்றி விரித்துரைக்கின் நீளும், தொகுப்பின் எஞ்சும். சமாஜத்தோடு தொடர்பு படாத தமிழ்ப் பேரறிஞர்களே இல்லை என்று சொல்லலாம். அவர்களை யெல்லாம் ஈடுபடுத்தி, ஆண்டுதோறும் வெவ்வேறு பகுதிகளில் இதுபோன்ற மாநாடுகளை நடத்தியும், அடக்கவிலையில் பன்னிரு திருமுறைகள் சித்தாந்த சாத்திரங்கள் சங்க இலக்கியங்களை எல்லாம் தூய பதிப்பாக அச்சிட்டு வழங்கியும், 'சித்தாந்தம்' என்னும் திங்கள் இதழை 32 ஆண்டுகளாக நடத்தியும், தல யாத்திரைகள் செய்தும், செய்வித்தும் சமாஜம் செய்த தொண்டுகளால்தான் இன்று 'சைவம்' நாட்டில் ஓரளவேனும் உயிர்ப்புடன் இருக்கிறது என்றால் அது மிகையாகாது. இப்படிப்பட்ட சமாஜத்தின் 54-வது ஆண்டு விழா இங்கே நடைபெறுகிறது.

ஆண்டவன் அம்மையப்பர் வடிவில் அறவிடையின்மீது

அமர்ந்து உலகுயிர்களுக்கு உய்தி செய்தருள்கின்றான் என்னும் சைவக் கோட்பாடுடையவர்களின் மாநாடு, இங்கே நடைபெறுவது பல்லாற்றானும் பொருத்தமுடையது என்றே நாங்கள் கருதுகின்றோம்.

எங்கள் வள்ளலார் இல்லம் எழுநூறு குழந்தைகளுக்கு உணவும் உறையுளும் நற்பழக்கமும் ஊட்டும் தாயாகவும், இந்துமத பாடசாலை தொள்ளாயிரம் மாணவர்களுக்குக் கல்வியறிவும் நல்லொழுக்கமும் கொடுக்கும் தந்தையாகவும் இருக்கின்றன. அம்மை அப்பர் போல உள்ள இவ்விரு பெரும் அமைப்புகளும், உங்களைப் போன்ற அன்புமிக்க பெரியோர் செய்யும் அறப் பேருதவிகளின் அடிப்படை மேலேயே இயங்கி வருகின்றன.

எங்கள் பள்ளியானது, திரு. வா. தி. மாசிலாமணி முதலியார், காலஞ்சென்ற திரு. மு. தா. கன்னிவேலு செட்டியார் அவர்கள், திரு. மு. தா. நடேச செட்டியார் அவர்கள், திரு. வே. அங்கப்ப செட்டியார் அவர்கள், திரு. கோவிந்தராச முதலியார் அவர்கள் ஆகியவர்களால் தொடங்கப் பெற்றது. இன்று திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் செயலாளர் பொறுப்பேற்று இந்து மத பாடசாலையையும் வள்ளலார் இல்லத்தையும் நடத்திவருகின்ற நேர்த்தியை இந்நாடு முழுவதும் நன்கறியும். இங்கே பயிலும் மாணவர்கள் ஒவ்வொருவரும் செந்தமிழ்த்தாயையும், சிவன் எந்தையையும் தம் வாழ்நாளில் என்றும் போற்றி உயரும் வகையில் பழக்கப்படுகிறார்கள்.

சைவக் கோட்பாடுகள், வழிபாட்டு முறைகள் அனைத்தும் இங்கே மாணவர்களுக்குக் கற்பிக்கப்படுகின்றன. திருவள்ளுவர் தொழிற்கூடம், திருஞான சம்பந்தர் நூற்குழுமம், வாகீசர் இலவச வாசகசாலை, சுந்தரானந்த இசையரங்கு, மணிவாசகர் சபை, மெய்கண்டார் கழகம், நாவுக்கரசர் நாடக மன்றம் என இங்கே உள்ள அமைப்புகளின் பெயர்களைப் பார்த்தாலே இவ்வுண்மை தெரியும். சைவக் கொள்கைகள் இங்கே அப்படியே செயலாக்கப்படுகின்றன. சுருங்கக் கூறினால் சைவப் பயிர் வளர்க்கும் முறை பற்றி நாட்டு மக்களுக்கு எடுத்துக்காட்டும் மாதிரிச் சைவ அறிவுப் பண்ணையாக இவ்விடம் இருக்கின்றது எனலாம். ஆகவே, இங்கே நமது

சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டு விழாவும் மாநாடும் நடப்பது எல்லா வகையாலும் ஏற்புடைத்து என்பதில் ஐயமேயில்லை.

மாநாட்டு நிகழ்ச்சிகளிற் பங்கு கொள்ளும் சொற்பொழிவாளர்களில் திருவாளர்கள் அ. மு. பரம சிவானந்தம் எம்.ஏ., எம்.லிட்., முருகவேள் எம்.ஏ., எம்.ஓ.எல்., K. நாரயணசாமி, மு. அண்ணாமலை, எம். ஏ., தி. செ. பழனிவேலு, பி. ஏ., இ. த. தட்சணாமூர்த்தி பி. காம்., எம். சுந்தர்வடிவேலு பி.எஸ்.சி., சொ. பரமசிவம் எம். ஏ., சி. பத்மநாபன் பி. ஏ. எம். பி. பி. எஸ்., டி. கே. ஆதிமூலம் பி. ஏ., பி. எல்., முதலிய பலரும் இங்கே பயின்றவர்கள் என்பதும் குறிப்பிட்டுச் சொல்லி மகிழவேண்டிய ஒரு சிறப்பாகும். இவர்களைப் போலவே, இங்கு நடக்கும் இந்நிகழ்ச்சிகள் எல்லாம் இப்போது இருந்து காணும் மாணவர்கள் உள்ளத்தில் பசுமரத்தாணி எனப் பதிந்து, சமாஜத்தின் எதிர்கால வளர்ச்சியில் அக்கறை கொள்ளச் செய்யும் என்னும் நம்பிக்கையும் எங்களுக்கு இருக்கின்றது. அதனால் சமாஜ மாநாடுகள் இங்கே நடைபெறுவதுபற்றி மட்டற்ற மகிழ்ச்சி அடைகின்றோம். இம் மாநாட்டுக்குப் பின் சமாஜம் மேலும் மேலும் சிறப்பாக நடைபெறுவதற்கான ஏதுக்கள் உண்டாகும் என்றும், அதற்கு நீங்கள் எல்லோரும் உறுதுணையாக இருக்க வேண்டுமென்றும் மிகவும் கேட்டுக் கொள்கின்றோம்.

இவ்விழாவிற் பங்குகொண்டு சிறப்பிக்க வந்துள்ள உங்கள் எல்லோரையும், பொதுவாக இவ்வூர் மக்கள் சார்பிலும், இந்து மத பாடசாலை, வள்ளலார் இல்லம் இவற்றின் சார்பிலும் மனமுவந்து நல்வரவேற்புக் கூறி வரவேற்கின்றேன்.

குறிப்பாக, இம்மாநாட்டைத் திறந்துவைக்க ஈண்டுப் போந்துள்ள அறப் பெருந்திருவினர் அ. உத்தண்டராமர் ஐ.ஏ.எஸ். அவர்களையும், மாநாட்டுக்குத் தலைமை தாங்கிச் சிறப்பிக்க எழுந்தருளியுள்ள சென்னைத் தருமபுர ஆதீன சமயப் பிரசார நிலையத் தலைவர் வித்துவான் சிவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள் அவர்களையும், சைவ இளைஞர் மாநாட்டைத் திறந்துவைக்க இசைந்ததோடு, இம் மாநாட்டுத் தலைமையுரைகளையும் சொற்பொழிவுகளையும் எல்லாம் தொகுத்து அச்சிட்டு வெளியிடப் பெரிதும் உதவிய

சென்னை உயர்திருவாளர் மணலி. சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ. அவர்களையும், அம் மாநாட்டுக்குத் தலைமை தாங்கும் காஞ்சிபுரம் பச்சையப்பன் கல்லூரித் தமிழ்த்துறைத் தலைவர் உயர்திரு ந. சஞ்சீவி எம்.ஏ. அவர்களையும், சைவ மங்கையர் மாநாட்டை அன்போடு திறந்துவைக்கும் சென்னை திருமதி நீலாவதி இராமசுப்பிரமணியும் அவர்களையும், அம் மாநாட்டுக்கு மனமுவந்து தலைமை தாங்கும் சென்னை திருமதி சௌந்தரம் கைலாசம் அவர்களையும், சொற்பொழிவாற்ற ஒப்புக்கொண்டதோடு, தம் சொற்பொழிவுகளை யெல்லாம் நாங்கள் கேட்டுக்கொண்டபடி முன்னதாகவே எழுதியனுப்பி ஊக்கமூட்டி உதவி புரிந்துள்ள எல்லா அறிஞர்களையும் மிகவும் பணிவோடும் பெரு மிதத்தோடும் மகிழ்ச்சி பொங்க வருக! வருக! தங்கள் வரவு நல்வரவாகுக! என்று உளமார வாயார வரவேற்கின்றேன். இந்த மாநாட்டை நடத்துவதற்கு மிகவும் ஆர்வத்தோடு ஒப்புக்கொண்டோம். மிகக் குறுகியகால அளவி லேயே எல்லா ஏற்பாடுகளையும் செய்யவேண்டி நேரிட்டது. உங்கள் எல்லோருக்கும் எங்களால் முடிந்த அளவுக்கு ஏற்ற வசதிகளைச் செய்ய முயன்றிருக்கிறோம். ஆனாலும், அவைகளில் எவ்வளவோ குறைபாடுகள் இருக்கும், இருக்கின்றன. அவற்றை எல்லாம் பொருட்படுத்தாது மன்னித்து, எங்களையும் எங்கள் குழந்தைகளையும் வாழ்த்தி ஊக்கமூட்டுமாறு வேண்டு கின்றேன்.

வாழ்கசீர் அடியாரெல்லாம்!
வளர்க சைவச் செந்நெறி!

# திறப்பு உரை



**திரு. அ. உத்தண்டராமன் அவர்கள், ஐ.ஏ.எஸ்.**
(ஆணையாளர், அறநிலையத்துறை, சென்னை.)

" எப்போ தகத்து நினைவார்க்கு இடரில்லை
கைப்போ தகத்தின் கழல் ".
" சைவம் சிவத்துடன் சம்பந்தம் ஆவது
சைவம் தனையறிந் தேசிவன் சாருதல்
சைவம் சிவமன்றிச் சாராமல் நீவுதல்
சைவம் சிவானந்தம் சாயுச் சியமாமே ".

பெரியோர்களே? தாய்மார்களே !!

சைவ சித்தாந்த மகாசமாஜத்தின் 54-வது ஆண்டு விழா இன்றுமுதல் மூன்று நாட்கள் வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் நடைபெற இருக்கிறது. இவ்விழாவின் முதற் பகுதியாகிய சைவர் மாநாட்டைத் தொடங்கிவைக்கும் பெரு வாய்ப்பை எனக்களித்த சமாஜத்தினர்க்கும், வரவேற்புக்

குழுவினருக்கும் என் அன்புகலந்த நன்றியையும் வணக் கத்தையும் தெரிவித்துக்கொள்கிறேன். சில ஆண்டுகளுக்கு முன் இராமநாதபுரத்தில் நடந்த சைவ மாநாட்டிலும் இத் தகைய பணி எனக்குக் கிடைத்தது. குன்றக்குடியிலும், சிதம்பரத்திலும் நடைபெற்ற பொன்விழாவிலும் கலந்து கொள்ளும் வாய்ப்பும் எனக்குக் கிட்டியது. இந்த மாநாடு வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் நடைபெறுவது மிகவும் பொருத்தமே. இப்பாடசாலை ஊக்கமும் உழைப்பும் மிக்க பெரியார் திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் முயற்சியால் உயர்ந்தோங்கி விளங்குகின்றது. 44 ஆண்டு களாகக் கல்வித்துறையில் மிகச்சிறந்த முறையில் தொண் டாற்றி வருவதோடு, மாணக்கர்களுக்கு அறிவு ஒழுக்கங்களை யும் நன்கு புகட்டி வருவது மிகவும் போற்றத்தக்கது. பாலாற் றின் கரையில் நல்ல சூழ்நிலையில் அமைந்துள்ள இப்பெரு நிலையம் ஒரு சிறந்த குருகுலமாகத் திகழ்கிறது. சமய மாநாடு கள் இங்கே நடைபெறுவதால் பள்ளி மாணவர்களும், ஆசிரியர் களும் பெரிதும் நலன் அடைவார்கள் என நம்புகிறேன்.

மெய்யன்பர்களே! சைவ சித்தாந்த மகா சமாஜம் அரை நூற்றுண்டுகளுக்கு மேலாகப் பல சமயத்தொண்டுகள் செய்து கொண்டிருப்பதை நாம் அறிவோம். இவ்விழாவைத் தொடங் கும் அரும்பணிக்கு நான் எவ்வகையிலும் தகுதியுள்ளவ னல்லனுயினும், சமாஜத்தினர் என்பால் கொண்டுள்ள அன்பின் மிகுதியும், நான் இப்போது பார்த்துவரும் அரசாங்க அலுவலுமே என்னை இப்பணியில் நீங்கள் ஈடுபடுத்தியதற்குக் காரணமெனக் கருதுகிறேன். இவ்விழா தொடங்க இருக்கும் இந்நன்னுள் இன்று உலகில் பல இடங்களில் பல மக்களால் பின்பற்றப்படும் சமயத் தலைவர் அவதார நாளாகப் போற்றப் பெறும் சிறப்பு வாய்ந்தது. நமது சமயம் யாராலும் எக்காலத்திலும் தோற்றுவிக்கப்பட்டதன்று. இறைவனைப் போன்றே அனுதியானது. எவ்வாற்றுனும் சிவசம்பந்த முடையது சைவம். இதன் தொன்மையை உலக சரித்திரப் புதைபொருள் ஆராய்ச்சியாளர் ஒப்புக்கொண்டுள்ளனர். மோகஞ்சேர்தாரோ, ஹரப்பா முதலிய இடங்களில் தோண்டி யெடுக்கப்பட்ட புதைபொருள்களின் ஆராய்ச்சியால் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே சிவலிங்க வழிபாடும், சிறந்த நாகரிக

மும், உயர்ந்த பண்பாடும் இந்நாட்டிலிருந்தன என்பது யாவரும் அறிந்ததொன்றே. 'ஒக்கநெடுநாள் இவ்வுலகில் உயர்ந்த சைவப் பெருந்தன்மை, தொக்க நிலைமை நெறி போற்றி' என்பது சேக்கிழார் வாக்கு. இத்தொன்மை வாய்ந்த சைவ சமயம் எல்லாச் சமய உண்மைகளையும் தன்னகத்தே கொண்டு ஏனைய சமயங்களால் தீர்க்கமுடியாத ஐயங்களை யெல்லாம் தீர்த்து உயிருக்கு உறுதி தேடிக்கொள்ளும் முறை களைச் செம்மையாக அறிவிக்கும் தோத்திரங்களையும் சாத்திரங் களையும் உடையது. இவ்வுலகத்திலுள்ள உயிர்கள் ஆண் பெண் என்ற இரு பகுதிகளாகவும், உயிர் இல்லாச் சடப்பொருள் களாகவும், அவன் அவள் அது எனும் மூவகைக் கூட்டங்களுள் அடங்கியவை. இவை யாவும் தோன்றி நின்று மறைந்து போவதைக் காண்கிறோம். இவைகளைத் தோற்றுவித்து அளித்து அழித்து மறைத்து அருளும் ஒரு பரம்பொருள் இருக்க வேண்டும் என்பதை அறிவுடை மக்கள் உணர்ந்து அப்பரம் பொருளைச் சிவம், இறைவன், கடவுள் என்று விளக்கி யுள்ளார்கள். கடவுள் என்ற சொல் எல்லாவற்றையும் கடந்து மனோவாக்குக் காயங்களுக்கு அப்பாற்பட்டதாகவும், எல்லா உயிர்களுக்குள்ளும் இருந்து அவைகளைக் கடவுகின்ற சக்தி யாகவும் விளங்குகிறது என்பதை நன்கு உணர்த்துகிறது. 'அங்கிங்கெனாதபடி எங்கும் பிரகாசமாய் ஆனந்த பூர்த்தியாகி அருளொடு நிறைந்து தன்னருள் வெளிக்குளே அகிலாண்ட கோடியெல்லாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து உயிர்க்குயி ராய்த் தழைத்தது' என்று தாயுமானாரும், 'உரைசேரும் எண் பத்துநான்கு நூறாயிரமாம் யோனிபேதம் நிரை சேரப் படைத்து அவற்றின் உயிர்க்குயிராய் அங்கங்கே நின்றான்' என்று திருஞானசம்பந்தரும், 'தில்லை மூதூர் ஆடிய திருவடி பல்லுயி ரெல்லாம் பயின்றனனாகி' என்று மாணிக்கவாசகரும் இறைத் தன்மையை நன்கு விளக்கியுள்ளனர்.

உலகில் உயிர்கள் எல்லாம் விரும்புவது இன்பம். இந்த இன்பம் உலகத்திலுள்ள பொருள்களினால் அனுபவிக்கப் படுவது; மாறுபடும் தன்மையுடையது; சிற்றின்பம் என்று சொல்லப்படுகிறது. இவ்வுலகப்பற்றைவிட்டு இறைவனுடைய திருவடியை அடைவதே பேரின்பம். சிற்றின்பம் இன்பம் போல் தோன்றி முடிவில் துன்பத்தையே தரும் இயல்புடையது.

பேரின்பம், உண்மையான உறுதி இன்பத்தைக் கொடுப்பது. இப்பேரின்பத்தை அடைவதற்குரிய வழிகளை அமைத்துக் கொடுப்பது சமயம். உலகத்தையும் உயிர்களையும் படைத்துக் காத்து அழித்து மறைத்து அருள்புரியும் இறைவனைச் சிவம் அல்லது பதி என்றும், உயிர்களைப் பசுக்கள் என்றும், பசுக்கள் பதியை அடையத் தடையாக இருக்கும் உலகப் பற்றைப் பாசம் என்றும், இப்பதிபசுபாசம் மூன்றும் உண்மைப் பொருள்கள் என்றும் நம்முன்னோர்கள் கண்டு, முப்பொருள் உண்மையை அடிப்படையாக வைத்துச் சைவ சமய நூல்களாகிய திருமுறைகளையும் சித்தாந்த சாத்திரங் களையும் இயற்றியுள்ளனர். நமது சமயத்திற்கு மூலாதார நூலாகிய திருமந்திரத்தில் 'பதிபசுபாசம் எனப் பகர் மூன்றில் பதியினைப்போல் பசுபாசம் அநாதி' என்ற உண்மை வற்புறுத்தப்பட்டிருக்கின்றது. உயிர்கள் பாசத்தை நீக்கி இறைவனுடைய திருவடிப்பேற்றை யடைவதற்கு அன்பு நெறியைக் கடைப்பிடிக்க வேண்டும். உலகத்திலுள்ள உயிர்கள் எல்லாம் ஒரே குலம் என்ற உணர்வுடன் ஒற்றுமை யாகவும் அன்புடனும் வாழவேண்டுமென்று வற்புறுத்துவது சைவசமயமே. சிவம் என்னும் பதத்திற்கே அன்பு, இன்பம், ஆனந்தம் என்று பொருள். 'ஒன்றே குலமும் ஒருவனே தேவனும்', 'அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார் அன்பே சிவமாவதாரும் அறிகிலார் அன்பே சிவமாவதாரும் அறிந்த பின் அன்பே சிவமாய் அமர்ந்திருந்தாரே' என்பது திருமந்திரம். 'இன்பமே என்னுடை அன்பே' என்பது திரு வாசகம். 'முடிவிலா இன்பமான அன்பினை எடுத்துக்காட்ட' என்கிறார் சேக்கிழார். 'இன்பமயம் ஈசன், இன்பம் விளைத்த லால் சம்புவெனும் பேரும்தரும்' என்கிறார் இராமலிங்க சுவாமிகள். 'சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி யெனை யாண்ட அந்தமிலா ஆனந்தம் அணிகொள்தில்லை கண்டேனே' என்பது மணிவாசகர் அருள்வாக்கு. 'இன்பதனை யெய்து வார்க்கு ஈயும் அவர்க்குருவம் இன்பகனம் ஆதலினால் இல்' என்பது திருவருட்பயன். இறைவனிடத்தில் அன்புசெய்வது என்றால் இறைவன் உறைவிடமாகிய உயிர்களிடத்தில் அன்பு செலுத்துவதே யாகும். உயிர்களிடத்தில் அன்பில்லாதவர் இறைவனிடத்தில் அன்பில்லாதவர். 'நடமாடுங் கோயில்

நம்பர்க் கொன்றீயில் படமாடுங்கோயில் பரமர்க்கங்காகும்' என்பது திருமந்திரம். 'எண்ணரிய பிறவிதனில் மானிடப் பிறவிதான் யாதினும் அரிது அரிது' என்று, எல்லா மக்களும் உணர்ந்தாலும் இம் மானிடப்பிறவியின் பயனை அனுபவிப்பவர் சிலரே. 'மானுடப் பிறவி தானும் வகுத்தது மனவாக்குக் காயத்தால் ஆனிடத்தஞ்சு மாடும் அரன்பணிக்காகவன்றோ, வானிடத்தவரும் மண்மேல் வந்து அரன்தனையர்ச்சிப்பர்' என்றார் அருணந்தி சிவம். சைவராக வாழ்வது பெரும்பேறு. ஆனால் சைவ சமயத்தை அனுசரிக்கும் குடும்பத்தில் பிறந்த தால் மாத்திரம் சைவர் என்று கொள்வது பொருந்தாது. 'பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா, செய் தொழில் வேற்றுமையான்' என்பது திருக்குறள். பிறப்பு வேறு; செயல் வேறு. செயலைப் பொறுத்ததே சிறப்பு. சிவ சம்பந்தம் பெற்று சிவசிந்தனையுடன் திருமுறைகள் ஓதி யுணர்ந்து சிவவழிபாடு செய்து அன்போடியைந்த வாழ்க்கை நடத்துபவர்களே உண்மைச் சைவர்கள்.

"மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு
கல்லுண்டு மரமுமுண்டு
மனிதரிலும் நீர்வாழும் சாதியுண்டு
அநேககுல மனிதருண்டு
மனிதரிலும் மனிதருண்டு வானவரும்
மனிதராய் வருவதுண்டு
மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே
அருமையெனவகுத்தார் முன்னோர்"

என்றார் பெரியோர். 'சாதி குலம் பிறப்பறுத்துச் சகமறிய எனையாண்ட, ஆதியெனக்கருளிய வாரூர் பெறுவார் அச் சோவே' என்றார் மணிவாசகப் பெருந்தகையார். 'ஆளாகார் ஆளானாரை அடைந்துய்யார்' என்பது அப்பர் திருவாக்கு. இவ்வாறு மனிதரை மனிதராக்கி, உயிருக்கு உறுதிதேடிக் கொள்ளும் வகையைச் சைவ சமய குரவர்கள் சரியை கிரியை யோகம் ஞானம் எனவும், தாசமார்க்கம், சத்புத்ரமார்க்கம், சகமார்க்கம், சன்மார்க்கம் எனவும் விளக்கியுள்ளனர்.

சைவ சமயத்தின் அடிப்படை உண்மைகளை விளக்கும் சாத்திரங்கள் பதினான்கு. அவற்றில் அடிப்படையாக உள்ளது சிவஞானபோதம் என்னும் ஒப்பற்ற ஞானநூல். இது

பன்னிரண்டு சூத்திரங்களைக்கொண்ட சிறு நூல் ஆயினும், அதில் அரன் என்னும் சொல்லுக்கு இறை என்னும் பொருள் கொண்டால் அறிவுடை மக்கள் அனைவரும் ஏற்றுக்கொள்ளும் வகையில் அமைந்துள்ளது. "யாதொரு தெய்வங்கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொருபாகனுர் தாம் வருவர்" என்ற சிவஞான சித்தியாரும், 'விரிவிலா அறிவினேர்கள் வேருெரு சமயம் செய்தே எரிவினுற் சொன்னுரேனும் எம்பிராற் கேற்றதாகும்' என்ற அப்பர் சுவாமிகள் அருள்வாக்கும் சைவ சமயத்தின் சமரசக் கொள்கையை நன்கு விளக்கக் காண் கிருேம். பதி பசு பாசம் என்ற முப்பொருள் இயல்பு, பசுக்கள் பாசநீக்கம் பெற்றுப் பதியினையடையும் வழி, அதன் பயன் இவைகளை நன்கு விளக்கும் சிவஞானபோத மெய்ஞ்ஞான நூலில் இறுதிச் சூத்திரமாக அமைந்தது,

'செம்மலர் நோன்ருள் சேர லொட்டா
அம்மலம் கழீஇ அன்பரொடு மரீஇ
மாலற நேயம் மலிந்தவர் வேடமும்
ஆலயந் தானும் அரனெனத் தொழுமே'

என்பது. எனவே அடியார் வணக்கமும், திருக்கோயில் வழி பாடும் சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கைகள் என்பதை யும், அதன் வழிதான் பேரின்பத்தை அடையமுடியும் என்பதை யும், உணர்ந்தே நம்முன்னேர்கள் பிரம்மாண்டமான திருக் கோயில்களையும், வழிபாட்டு முறைகளையும், அருள் நூல் களையும் வைத்துள்ளார்கள்.

இறைவன் திருவடியை அடைவதற்குச் சத்குருவின் துணை இன்றியமையாதது. 'மூர்த்தி தலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கோர், வார்த்தை சொலச் சற்குருவும் வாய்க்கும்' என்பது தாயுமானவர் வாக்கு. ஆலய வழிபாட்டின் அவசியத் தையும், பயனையும், ஆலயங்களில் உள்ள மூர்த்திகளின் தத்து வங்களையும், திருவிழாக்களின் விளக்கங்களையும் அறியாத மக் களிடையே சமயப்பற்றுக் குறைவதற்கும் அவதூருன பிரசாரங் கள் அவர்களை மயக்குவதற்கும் முக்கியக் காரணம் நமது சமய உண்மைகளையும், மூர்த்தி தலம் தீர்த்தம் விழாக்கள் இவை களின் தத்துவங்களையும் சைவ மக்கள் அறியும்படி செய்யாததே ஆகும் என்பதைச் சமாஜத்தினர் உணர்ந்து அக்குறையை நிவர்த்திக்க ஆவன செய்யவேண்டும். 'சித்தாந்தம்' என்ற

மாத வெளியீட்டினுல் ஓரளவு இப்பணியில் அவர்கள் ஈடுபட்டிருக்கின்றனர் என்றுலும், இன்னும் பிரசார மூலமாகவும், சிறு நூல்கள், அறிக்கைகள் மூலமாகவும் இப்பணியை மேலும் சிறப்புறச் செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்ளுகின்றேன்.

இந்தச் சமயத்தில் சமாஜத்துக்கும் சைவ சமயத்துக்கும் பல்லாற்ருனும் பெருந்தொண்டு புரிந்த பெரியார் உயர்திரு ம. பாலசுப்பிரமணிய முதலியார் பி.ஏ., பி.எல்., அவர்களை நினைக்காமல் இருக்கமுடியாது. இந்த மாநாட்டில் பேசப்படும் சொற்பொழிவுகள் எல்லாம் அச்சிட்டு நூலாக்கி அப்பெரியாரின் நினைவு மலராக வெளியிடப்படுவது மிகவும் பொருத்தமுடையதே. அதிலும், அவருடைய மருகரான மணலி திரு சீனி. இராமகிருஷ்ண முதலியார், பி.ஏ., அவர்கள் மலரை அச்சிடுவதற்காக இரண்டாயிரம் வெண்பொற்காசுகள் அளித்துள்ளது மிகவும் பாராட்டுதற்குரியது. மாமனைப்போல் மருமகரும் சைவசமயத்தொண்டைத் தொடர்ந்து செய்துவரவேண்டும் என்பது நம் எல்லோருடைய பேரவா. அத்தகைய பணிகளைச் செய்வதற்கு ஊக்கமும் ஆர்வமும் அவர்களுக்கு நிறையவுண்டு என்பதை நான் நன்கு அறிவேன்.

இம்மாநாட்டில் சைவ சமயத்தின் தொன்மையும், சங்க காலத்துக்கு முற்பட்ட காலத்திலிருந்து, சங்ககாலம், பல்லவர் காலம், சோழர்காலம், பிற்காலம், இக்காலம் என்ற தொடர்ச்சியில் சைவ சமயத்தின் நிலைகளையும், அறிவியலும் சைவமும் என்பது பற்றியும், சைவம் வளர வழிகள் பற்றியும், பல பேரறிஞர்கள் பேச இருக்கின்ருர்கள். இளைஞர்களுக்கும் மாதர்களுக்கும் தனி நிகழ்ச்சிகள் அமைக்கப்பெற்றிருக்கின்றன. வாழ்க்கையில் பல துறைகளிலும் சைவம் இருக்கும் நிலைகளைப் பற்றியும் பல அறிஞர்கள் அரிய கருத்துக்களை வெளியிடப்போகின்றனர். ஆகவே, நான் சித்தாந்தக் கொள்கைகளையும் உண்மைகளையும் பற்றி விரிவாகப் பேச விரும்பவில்லை. அப்படி விரும்பினுலும் அதைத்திறம்படச் செய்யும் ஆற்றலும் உடையேனல்லன். இம்மாநாட்டின் பயனுக இந்தச் சமாஜம் மேலும் மேலும் சமயத்தொண்டில் ஈடுபடத் திட்டங்கள் வகுத்து மேன்மைகொள் சைவ நீதி உலகமெல்லாம் விளங்க ஆவன செய்யுமென்று நம்புகிறேன். எல்லாம்வல்ல இறைவன் திருவருளும், சைவ உலகத்தின் ஆதரவும் துணை செய்வதாக.

# சங்க காலத்திற்கு முற்பட்ட சைவம்




இராவ் சாகிபு திரு. T. A. V. நாதன் அவர்கள்,
B.A., B.L., Dip. Econ., Dip. in French.
(சென்னைப் பல்கலைக் கழகம்)


## சங்க காலம்

சங்க காலம் என்பது யாது? இன்றுள்ள தொல்காப்பியம், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, சிலப்பதிகாரம், மணிமேகலை, திருக்குறள் ஆகிய நூல்கள் சங்ககால நூல்களென்றும், அவற்றின் கீழ்க்கால எல்லை ஏறத்தாழக் கி. பி. 300 என்றும் ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். ஏறத்தாழக் கி. பி. 300-ல் காஞ்சியில் பல்லவர் ஆட்சி ஏற்பட்டுவிட்டதென்று வரலாறு கூறுவதாலும், இன்றுள்ள சங்க நூல்களில் காஞ்சியையாண்ட பல்லவர் பற்றிய குறிப்புக்கள் காணப்படாமையாலும், கி. பி. 300-க்கு முற்பட்டதே சங்க காலம்; அதாவது, பாண்டியர் மதுரையில் சங்கத்தை அமைத்துத் தமிழை வளர்த்த காலம் என்று அவ்வாராய்ச்சியாளர் முடிவு கட்டியுள்ளனர்.

சங்கத்தின் தொடக்க காலம் எது என்பதை இன்றுள்ள நூல்களைக்கொண்டு யாரும் வரையறுத்துக் கூற முடியாது. ஆயினும், இன்றுள்ள பழைய நூல்களில் காலத்தால் பழமையானது தொல்காப்பியம் என்பதும், அதன் காலம் ஏறத்தாழக் கி. மு. 300 என்பதும் ஆராய்ச்சியாளர் பலரது கருத்தாகும்.

எனவே, இன்றுள்ள சங்க நூல்களின் காலம், ஏறத்தாழக் கி. மு. 300 முதல், கி. பி. 300 வரை என்று கூறுவதே பொருத்தமுடைத்து. "சங்க காலத்திற்கு முற்பட்ட சைவம்" என்ற தலைப்பிற்கு, "ஏறத்தாழக் கி. மு. 300-க்கு முற்பட்ட சைவம்" என்று பொருள் கொள்ளவேண்டும்.

இங்ஙனம் கொள்ளும்பொழுது, அதன் தொடக்க காலம் இது என்று வரையறுத்துக் கூறல் இயலாது என்பதையும் நினைவில் இருத்துதல் நலம்.

**கற்காலங்களில்**

ஆராய்ச்சியாளர் மனித வரலாற்றைப் பல காலங்களாகப் பிரித்துள்ளனர். அவை பழைய கற்காலம், புதிய கற்காலம், இரும்புக்காலம், வெண்கலக்காலம் எனப் பலவகைப்படும். இக்காலங்களிலெல்லாம் உலகத்தில் சைவம் இருந்ததா என்பதை நாம் அறிவது நலம் பயக்கும். அக்காலத்து நூல்கள் இன்று நமக்குக் கிடைக்க வழியில்லை. எனவே, அவர்கள் வழிபட்டுவந்த கல் முதலியவற்றாலான பொருள்களைக் கொண்டே அவர் தம் சமயத்தை நாம் துணியவேண்டுபவராக இருக்கிறோம்.

புதிய கற்காலப் பொருள்களுள் லிங்கத்தைக் குறிக்கும் கற்களும் கிடைத்துள்ளன. சிவபெருமான் மலைவாழ் கடவுள்; யானைத்தோலையும், புலித்தோலையும் உடையவர். அவர் விலங்குகளுக்குத் தலைவர் என்றும் பொருள்படப் "பசுபதி" என்னும் பெயரால் அழைக்கப்படுகிறார். இவற்றையும், அவரைப்பற்றிய கதைகளையும் நோக்க—அவர் **மலைமகள் கணவர்** என்பதையும் நோக்க—அக்கடவுள் பழைய கற்காலத்திலும், புதிய கற்காலத்திலும் மக்களால் வழிபடப் பெற்று வந்தவராவர் என்று ஆராய்ச்சியாளர் கூறுகின்றார்கள்.[1]

---

1. P. T. Srinivasa Iyenger "*The Stone Age in India,*" Pp. 48-49.

**அயல் நாடுகளில்**

வட அமெரிக்காவில் கோலறடோ என்னும் ஆற்றின் பக்கத்தில் உள்ள குன்றின்மீது சிவன் கோயில் என்ற ஓர் இடம் இருக்கிறது. அவ்விடம் பதினாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டது என்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகிறார்கள்.

அமெரிக்காவின் பல பகுதிகளிலும் லிங்க வணக்கம் பண்டைக்காலம் முதலே இருந்துவந்தது. மேனாட்டார் அப்பகுதிகளை முதன் முதலில் பார்வையிடச் சென்றபோது, அங்குப் பல நகரங்கள் இருந்தன. அங்கு வாழ்ந்த மக்கள், செல்வ வளத்துடனும், நாகரிகத்துடனும் இருந்தனர். அவர்கள் கோயில்களைக் கட்டி, லிங்கங்களை வைத்து வழிபட்டு வந்தனர். லிங்கம் தனியாகவும், லிங்கமும் ஆவுடையாரும் சேர்ந்தும் பலவாறு வழிபடப்பட்டன என்று அமெரிக்க வரலாறு அறிவிக்கிறது.

மேனாட்டார், நடு அமெரிக்காவிலும் தென் அமெரிக்காவின் பல பகுதிகளிலும், மெக்சிகோவிலும் லிங்க வழிபாட்டினைக் கண்டு எழுதியுள்ளனர். மேனாட்டார் கண்டறியுமுன், அமெரிக்காவிற்கும் பிறகண்டங்களுக்கும் எவ்வகையில் தொடர்பு இருந்தது என்பதை நாம் உணரக்கூடவில்லை. அமெரிக்கா உள்பட, உலகம் முழுவதிலும்—பசிபிக் தீவுகளிலும் லிங்க வழிபாடு இருந்தது எனின், நமது சைவத்தின் பழைமையை என்னென்பது!

நடுத்தரைக் கடலிலுள்ள க்ரீட் என்னும் தீவில் வாழ்ந்த பண்டை மக்கள் 'மீனவர்' எனப்பட்டனர். அவர்கள் காலத்தில் இருந்த நகரங்களுள் ஒன்று சிவன் எனப் பெயர் பெற்றிருந்தது. அங்கு, நிலத்திற்கடியிலிருந்து எண்ணற்ற சிறிய சிவலிங்கங்கள் ஆராய்ச்சியாளரால் கண்டெடுக்கப் பட்டன.

சிறிய ஆசியாவும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிறந்த நாகரிக நாடாக இருந்தது. இடபத்தின்மீது வீற்றிருக்கும் தெய்வ வழிபாடும், இடப வழிபாடும் அங்கு இருந்தன என்பதை அங்குக் கிடைத்த புதைபொருள்கள் தெரிவிக்கின்றன. அங்கிருந்த பழைய நகரங்களுள் ஒன்றன் பெயர் சிவாஸ் என்பது. அந்நாட்டில் ஹிட்டைட் (Hittite)

என்பது ஒரு சிறு நாடு. அங்குக் கிடைத்த புதை பொருள் களுள் பழைய நாணயம் ஒன்றுகும். அதன்மீது சிங்க ஊர்தியில் வீற்றிருக்கும் அம்மையும், இடப ஊர்தியில் நிற்கும் அப்பனும் பொறிக்கப்பட்டுள்ளனர்[2]. இந்த அமைப்பு, நம் அம்மையப்பரை நினைவூட்டுகின்றதன்றோ?

வட ஆப்பிரிக்காவிலுள்ள லிபியாவின் பெரும் பகுதி, பாலைவனமாகும். அப்பாலை நிலத்தில் பசுந்தரையொன்று உண்டு. அதன் பெயர் சிவன் என்பது.

ஏறத்தாழ 6,000 ஆண்டுகளுக்கு முற்பட்ட நாகரிகம் கொண்ட நாடு, வட அரேபியாவில் யூப்ரடீஸ், டைகிரிஸ் என்னும் இரண்டு பேரியாறுகளுக்கு இடைப்பட்ட நிலப் பகுதியாகும். அப்பகுதியில் வாழ்ந்த மக்கள் மிகச்சிறந்த நாகரிகத்தைப் பெற்றிருந்தனர். அவர்கள் களிமண் ஏடுகளில் தங்கள் செய்திகளைக் குறித்துச் சூளையில் சுட்டுப் பாதுகாத்தனர். இன்று அவையும், அக்காலக் கோவில்களும், மட்பாண்டங்களும், பல் வேறு பொருள்களும் கிடைத்துள்ளன. அக்களிமண் ஏடுகளில், சிவன் தொடர்புடைய இடப்பெயர்கள் காணப்படுகின்றன; சிவன் மாதமும் குறிக்கப்பட்டுள்ளது. மோசே என்பவர் ஏகோவா அருளிய 'பத்துக் கட்டளைகளை'யும் சிவன் என்னும் மாதத்தில், ஆறும் நாள் சினய் மலைமீது நின்று, மக்களுக்கு எடுத்துக் கூறினர் என்று கிறித்தவ மறையின் பழைய ஏற்பாடு தெரிவிக்கிறது.[3]

மோசேயின் காலம் ஏறத்தாழக் கி. மு. 1500 என்னலாம். அப்பண்டைக்காலத்திலேயே சிவன் என்பது ஒரு மாதத்தின் பெயராய் இருந்ததாயின் அப்பெயர், அதற்கு முன்பு எவ்வளவு பழமையுடையதாய் இருந்திருத்தல் வேண்டும் என்பதை நாம் ஒருவாறு உய்த்துணரலாம். இரண்டாம் கோஸ்ரோரஸ் என்னும் சுமேரிய அரசனது மனைவியின் பெயர் சிவன் என்பது.

---

2. This God is seated on the bull throne, and the Goddess wearing the mural crown sits on a lion throne, with staff and mace forming a pair".—J. Garstang: *The Hittite Empire*, p. 205.

3. "The events occurred on the 6th day of the third month *Sivan*"—*Analysis of Scripture Histroy*, p. 77.

மேலே சொன்ன பழைய ஏற்பாடு, சியன் (Chien) என்னும் கடவுளைப்பற்றிக் கூறுகின்றது. இக்கடவுளை நன்கு ஆராய்ந்த மேனாட்டு ஆராய்ச்சியாளர், "சியன் என்பது 'சிவன்' என்பதுவே; அது பழைய ஏற்பாட்டில் சிறிது வேறு பாட்டுடன் திரித்து வழங்கப்படடது," என்று குறித்துள்ளனர்.[4]

இன்றைய ஈரான், சிரியா, பாலஸ்தீனம், ஈராக், முதலிய நிலப்பகுதிகள் சுமேரியர் காலத்தில் நாகரிக நாடுகளாக விளங்கியவை. அவற்றுள் அக்கேடியா என்பது ஒன்று. அக்கேடிய மக்கள், ஏழு விண்மீன்களைச் சிறப்புடையனவாகக் கருதினர். அவற்றுள் மூன்றும் மீன் சிவன் எனப் பெயர் பெற்றிருந்தது.[5]

ஜப்பானிய மக்களின் பழைய கடவுளருள் சுவா (Suwa) என்பது ஒன்று. அது வேட்டுவர் கடவுளாம். இச் சுவா என்னும் வேட்டுவர் கடவுளும், யானை, புலி முதலியவற்றைக் கொன்ற நமது சிவனும் ஒன்றே யென்று ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர்.

**அயல் நாடுகளில் லிங்கங்கள்**

ரோமர், கிரேக்கர், எகிப்தியர், பிறியா பஸ் என்னும் லிங்கங்களை அமைத்து வழி பட்டனர்.

கி. மு. நான்காம் நூற்றுண்டில் வாழ்ந்த தியோபிரேசியஸ் (Theophrasius), "கிரேக்க நாட்டில், பொது விடங்களிலெல்லாம், வழிபாட்டுக் கற்கள் நடப்பெற்றிருந்தன. வழியில் நடந்து செல்லும் கிரேக்கர்கள் அவற்றிற்கு எண்ணெய் முழுக்குச் செய்து, முழங்காற்படியிட்டு வழிபட்டுச் செல்கின்றனர்," என்று கூறியுள்ளார்.[6] லிங்கத்திற்கு எண்ணெய் முழுக்குச் செய்தல் இன்றும் நம் நாட்டில் உண்டன்றே?

---

4. "In Ugro-Finnic and other Turanian dialects ZIVO or *Sivo* and *Siva* is protecting-deity among the Lapps. The Turkish sev-kind; Akkadian Se-favour; sub-heart."—*Faiths of Man*, p. 308.

5. "The Indian God Shiva or Shiba, father of Sebo, appears in the Ural Altaik astronomy of the Ackkadian, the third star of their seven parent stars."—J. F. Hewitt: *History of Chronology of the Myth-Making Age*, p. 85.

6. Theophrasius in the 4th century B. C., depicts the superstitious Greek passing the anointed stones in

இஸ்ரவேலரும் லிங்க வழி பாட்டினரே. அம் மக்கள், லிங்கத்திற்கு நரபலியிட்டனர். இஸ்ரவேலரும், எகிப்தியரும் இடபத்தையும் வழிபட்டனர்.

எகிப்திய சமாதிச் சுவர்களில் லிங்கங்கள் வெட்டப்பட்டுள்ளன. இங்கிலாந்திலும், ஸ்காட்லாந்திலும் பழம் பொருள் ஆராய்ச்சியாளர் பல லிங்கங்களைக் கண்டு பிடித்துள்ளனர். ஜெர்மனியிலும் இவ்வணக்கம் தழைத்திருந்தது. லிதுவேனியாவில் இவ்வணக்கம் கி. பி. 14-ஆம் நூற்றாண்டு வரையிலும் இருந்தது.

'ஷின்டோயிஸம்' என்னும் ஜப்பானிய சமயத்தில், லிங்கவணக்கம் முதன்மையானது. ஜப்பானில் இருந்த பொதுவிடங்களில் லிங்கங்கள் வைத்து வழிபடப்பட்டன. ஜப்பானிய அரசாங்க ஆணையால் சென்ற நூற்றாண்டில் அவை அகற்றப்பட்டன. ஆயினும், லிங்கவணக்கம் இன்றும் ஜப்பான் நாட்டின் சில பகுதிகளில் தொடர்ந்து இருந்து வருகிறது. [7]

லிங்கவணக்கம் உலக முழுவதும் ஒரு காலத்தில் பரவியிருந்தது—லிங்க வணக்கத்தை உயிர் நாடியாகக்கொண்ட சிவநெறி உலகம் முழுமையும் பரந்திருந்தது என்னும் உண்மை இதுகாறும் கூறப் பெற்ற சான்றுகளைக்கொண்டு நன்கு புலனாகிறதன்றோ? இந்த உண்மையை நன்கு அறிந்து தான் போலும், நமது மணிவாசகப் பெருமான்,

"தென்னாடுடைய சிவனே போற்றி
எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி"

என்று பாடியருளினார்!

## இந்தியாவில்

சுமேரியர் நாகரிகம் சிறப்புற்றிருந்த காலத்திலேயே, நமது இந்தியாவில் சிந்து வெளியில் மிகச் சிறந்த நாகரிகம்

---

the streets, taking out his phial and pouring oil on them, falling on his knees to adore and going his way—E. B. Tylor: *Primitive Culture*, part 2, p. 14.

7. "Dr. Kats says that, even now, in the secluded parts of the land, public Phallic wokrship is continued"—A. C. Underwood: *The Indigenous Religion of Japan*, p. 41.

விளங்கியிருந்தது என்பது, புதை பொருள் ஆராய்ச்சியால் அறியப்பட்ட உண்மையாகும். சிந்து வெளியில் கிடைத்த முத்திரை யொன்றில், சிவன்-பசுபதி என்பதை உணர்த்தும் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. மேலும், அங்கு லிங்கங்கள் கிடைத்துள்ளன. சிந்து வெளி நாகரிகம், வேதகால ஆரியர்க்கு முற்பட்டது. எனவே! இந்தியாவில் ஆரியர் வருகைக்கு முன்னரே லிங்க வணக்கம் இருந்தது என்பது தெளிவாகும். இப்புதை பொருள்களைக் கண்ட ஆராய்ச்சி அறிஞர் சர் ஜான் மார்ஷல், "சிந்து வெளியிற் கிடைத்த புதுமைகளுள் முதலிடம் பெறத் தக்கது சைவத்தின் பழைமையேயாகும். அது மாக்கல் காலம் அல்லது அதனினும் முற்பட்ட காலத்திற்கு நம்மை அழைத்துச் செல்கிறது. இன்றளவும் வழக்கிலுள்ள மிகப் பழைய சமயமாக இது விளங்குகிறது"[8] என்று வியந்து கூறியுள்ளார்.

## வேத காலத்தில்

இங்ஙனம், இந்நாட்டில் தொன்றுதொட்டு இருந்துவந்த லிங்க வழிபாடு வேத கால ஆரியரால் தொடக்கத்தில் வெறுக்கப்பட்டது. அவர்கள், தங்கள் தீ வழிபாட்டிற்கும், இந்திர வழிபாட்டிற்கும் வேறாக இருந்த லிங்க வழிபாட்டை வெறுத்த தில் வியப்பில்லையல்லவா? அவர்கள் வழிபாட்டிற்கும், லிங்க வழிபாட்டிற்கும் போர் நிகழ்ந்ததை ரிக்வேத சுலோகங்களே தெரிவிக்கின்றன. ஆரியர் ஒருபால் லிங்க வணக்கத்தையும் மற்றொரு பால் கண்ணன் வணக்கத்தையும் எதிர்த்துப் போரிட்டனர் என்பது அச் சுலோகங்களால் அறியக் கிடக்கும் உண்மையாகும். இறுதியில், லிங்க வணக்கமே வெற்றி பெற்றது. ஆரியர் தங்கள் வேதத்தில், தங்கள் கடவுளர்க்கும்

---

8. "Among the many revelations that Mohenjo-daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that *Saivism has a history going back to the Chalcolithic Age, or perhaps even further still* and it thus takes its place as *the most ancient living faith in the world.*"—Sir John Marshall, *Mohenjo-daro and the Indus civilization*, Vol. I., preface: p. vii.

மேம்பட்ட கடவுளாகச் சிவனை ஏற்றுக் கொண்டனர்; அக் கடவுளுக்கு மகாதேவன் என்றும் பெயரிட்டனர்.[9]

சிவன் என்னும் சொல் எதன் அடியாகப் பிறந்தது என்பதை வடமொழி இலக்கண ஆசிரியர்கள் பொருந்தும் முறையில் கூறக் கூடவில்லை.[10] அதை வடமொழி என்று கருதிச் 'சைவம்' என்று காலப் போக்கில் திருத்திவிட்டனர். ஆரியர் கலப்பினால் அவர்தம் ருத்திரன் நம் சிவனோடு ஒன்று படுத்தப்பட்டார். நமது அம்மை துர்க்கையானாள், நமது முருகன் சுப்பிரமணியனானார்.[11]

சிவன் என்பது சிவப்பு என்பதிலிருந்து வந்ததாகலாம். சிவப்பன்—சிவன். 'செம்மேனி யெம்மான்' என்பது நம்மவர் வாக்கு.

## பாரத காலம்

திருமாலின் அம்சமான கிருஷ்ணனும் சிவலிங்க பூசை செய்தார், அருச்சுனனை அழைத்துக்கொண்டு பாசுபதாஸ்திரம் பெறச் சிவனிடமே சென்றார். பாண்டவரும் சிவனையே வழிபட்டனர் என்னும் விவரங்கள் மாபாரத காலத்தில் சிவன் மகா தேவனாகக் கருதப்பட்டார் என்னும் உண்மையைத் தெரிவிப்பனவாகும்.

## இராமாயண காலம்

திருமாலின் அவதாரம் என்று கூறப்பட்ட இராமர், இராவணனைக் கொன்றபிறகு, இராமேசுவரத்தில் லிங்கத்தை வைத்து வழிபட்டார்—அதுவே இராமலிங்கம். (இராமரால் வழிபடப்பட்ட லிங்கம்) எனப்பட்டது என்பது இராமாயணத்தால் அறியப்படும் உண்மையாகும். இராமர் காலத்தில் வாழ்ந்த இராவணன் சிறந்த சிவபக்தன் என்பதை இராம காதையே எடுத்து இயம்புகிறது. அசுரர், இராக்கதர், முதலியோரும் சைவர்களே என்றும் இதிகாசங்களும், புராணங்களும் கூறுகின்றன.

---

9. T. R. Sesha Iyengar: *Dravidian India*, p. 102–106.
10. P. T. Srinivasa Iyengar: *The Stone Age in India*, p. 49.
11. T. R. Sesha Iyengar: *Dravidian India*, P. 110–116.

லிங்கம்

சிவன் என்னும் கடவுள் ஆரியர்க்கு உரியது அன்று என்பது முன்பு கூறப்பட்டதன்றோ? இங்ஙனமே ஆரியர்க்கு முற்பட இருந்த சிவலிங்கங்களும் அவர்களுக்கு உரியவை அல்ல. பொருள் அவர்களுக்கு உரியது அன்று என்று சொல்வதால், அப் பொருளுக்குரிய பெயரும் அவர்களுக்குரியது அன்று என்பது வெளிப்படை யன்றோ? இந்த உண்மையை உணராமல், 'லிங்கம்' என்னும் சொல் வடசொல் என்று கருதித் தமிழர் இகரம் சேர்த்து 'இலிங்கம்' என்று கூறுவாராயினர். 'லிங்கம்' என்னும் சொல் ஆசிய—ஆஸ்டிரேலிய மொழிகளில் காணப்படும் சொல்லாகும். எனவே, ஆசிய—ஆஸ்டிரேலிய மக்களிடமும், லிங்க வழிபாடு இருந்ததென்பது தெளிவு.[12]

முடிவுரை

இதுகாறும் கூறப்பெற்ற உண்மைகளால், நமது சைவ சமயம், உலகத்திலேயே மிகப் பழமை வாய்ந்தது என்பது நன்கு விளங்குகிறது அன்றோ? இத்தகைய பழமையும், பெருமையும் வாய்ந்த சமயத்தை இக்காலத்திற்கு ஏற்றவாறு போற்றிப் பாதுகாத்து வளர்த்தல் நமது தலையாய கடமையாகும்.

---

12. Pre-Aryan and Pre-Dravidian in India, p. 50.

# சங்க காலச் சைவம்



திரு. அ. மு. பரமசிவானந்தம் அவர்கள், M.A., M.Litt.
(பச்சையப்பன் கல்லூரி, சென்னை; இந்துமத
பாடசாலையின் பழைய மாணவர்.)

## சங்க காலம்

தமிழ் நாட்டு வரலாறும் காலம் கடந்தது; சைவ சமய வரலாறும் காலம் கடந்தது. இரண்டையும் இணைத்துக் காலந் தொறும் சைவம் வளர்ந்த வரலாற்றை விளக்கும் பேச்சு வரிசையில் நாம் தற்போது சங்க காலத்தில் நிற்கிறோம். சங்க காலம் என்பது திட்டமாக வரையறுக்க இயலாவிடினும் பெரும் பாலான அறிஞர்கள், கிருத்து பிறப்பதற்குப் பின்னும் முன்னு மாக ஒரு சில நூற்றாண்டுகளை அக்கால எல்லையுள் நிறுத்துவர். தமிழ் நாட்டுள் மூன்று சங்கங்கள் இருந்தன என அறிகிறோம். அவற்றுள் முதற் சங்கம் தென் மதுரையிலும், இடைச் சங்கம் கபாடபுரத்திலும் இருந்தனவாம். அந்த இரு இடங்களும் கட லால் கொள்ளப்பட்டன. கடைச்சங்கமே தற்காலத்திய மதுரை

யில் இருந்தது எனக் கொள்வர். நாம் இப்போது சங்ககாலம் எனக் கொள்வது அக்கடைச் சங்க காலத்தையேயாகும். அஃது இன்றைக்கு ஆயிரத்து எண்ணூறு ஆண்டுகளுக்குமுன் ஏறக் குறைய நான்கு அல்லது ஐந்து நூற்றாண்டுகளில் புலவர்கள் பரவி விரவி வளர்த்த ஒரு காலத்தையே குறிப்பதாகும். எனவே நாம் சங்ககாலம் எனக்கொண்டது இன்றைக்கு 1800 ஆண்டுகளுக்கு முற்பட்ட ஒன்றாகும். அத்துடன் சங்கம் மருவிய காலம் எனப் பெறும் சிலப்பதிகாரம் மணிமேகலை போன்ற காப்பியங்கள் தோன்றிய காலத்தையும் இதன் எல்லை யிலேதான் கொள்ளல் வேண்டும். இக்காலத்துக்கும், அடுத்துத் தெளிவாகக் காணும் பல்லவர் காலத்துக்கும் இடையே தமிழக வரலாற்றிலேயே ஓர் இருண்ட காலம் உருவாகிறது. அந்த இருண்ட காலத் தொடக்கம் மூன்றாம் நூற்றாண்டு என்பர். எனவே நமது கால எல்லை கி. மு. மூன்றாம் நூற்றாண்டு தொடங்கிக் கி. பி. மூன்றாம் நூற்றாண்டின் தொடக்கம் வரை அமைகின்றது எனக் கொள்ளலாம்.

## சைவம் என்பது யாது?

இனி, சைவம் என்பது என்ன எனக் காணல் வேண்டும். அறிஞர் பலர் அதுபற்றிக் கண்டும் காட்டியும் உள்ளனர். சிவ சம்பந்த முடையது சைவம். சிவம் யாது? எத்தகையது? சைவ சித்தாந்த சமாச அன்பர்களுக்கு அதுபற்றிய விளக்கம் தேவையில்லை. சிவனை இடையறாது எண்ணி எண்ணி உள் ளத்து உணர்வால் போற்றி வழிபடும் புண்ணிய வினையே வாழ் வின் பயன் எனப் பல ஆண்டுகளாகப் பல அரும்பெரும் புல வர்கள் காட்டிவரும் சிவனெறிச் சிறப்பினை எளியேனால் காட்ட முடியும் கொல்? இயலாது! எனினும் கொண்ட பொருளுக்கு ஏற்ப ஓரிரண்டு காட்டி அமைகின்றேன்.

'சிவம்' என்ற சொல்லுக்குப் பல பொருள்கள் உள்ளன. நன்மை என்பது ஒரு பொருள். முத்தி என்ற ஒரு பொருளும் உண்டு. செம்மை என்றும் சொல்லுவர். 'சிவன் எனும் நாமம் தனக்கே உரிய செம்மேனி அம்மான்' என்னும் இவனைப் பற்றிய அடியும் எண்ணத் தக்கது. எனவே, செம்மை என்பது எதுவோ—அனைத்துக்கும் அப்பாலாய் நின்று அனைத்தையும் ஆக்குவது எதுவோ—உலக உயிர்களுக்கு நன்மை தருவது

எதுவோ—எல்லாரும் இன்புற்றிருக்க நினைப்பது எதுவோ அது சிவம் எனப்படும். அச்சிவ சம்பந்தமுடையதே சைவ நெறி. இது பற்றி விளக்கிப் பேசின், வாழ்வின் எல்லை போதாது. எனவே, 'நாடெங்கும் நலம் பெற்று வாழ வழிகாட்டுவதே சிவநெறி' என்ற 'சைவம்' என்னும் அளவோடு அமைகின்றேன்.

## சங்ககாலச் சமயங்கள்

சங்ககாலத்திலே சைவமே தமிழ்நாட்டில் தலைசிறந்த சமயமாக இருந்தது. அதை அடுத்து வைணவம் சிறந்திருந்தது. பௌத்தமும் சமணமும் தமிழ்நாட்டில் அத்துணை விரிவடையவில்லை. சங்ககாலத்து இறுதியிலும் அதை ஒட்டிய காலத்திலுமே, பௌத்தமும் அதை அடுத்துச் சமணமும் தமிழ்நாட்டில் கால்கொள்ளத் தொடங்கின. எனவே, சங்ககாலத் தமிழ்நாட்டின் சமயம் சைவம் என்று திட்டமாகக் கூறலாம். சிவனைப் பற்றியும் திருமாலைப் பற்றியும் பலவகையான கதைகளும் தோற்ற விளக்கங்களும் அக்காலத்தில் தமிழ்நாட்டில் நிறைந்திருந்தன. சங்ககாலத்தில் சில சமயங்கள் வாழ்ந்தன என்றாலும், அவற்றுள் மாறுபாடு இல்லை. ஒற்றுமை அவற்றின் அடிப்படையில் சிறந்தது. எனவே, எந்தச் சமயத்தைச் சார்ந்து நின்றபோதிலும் அக்காலத்தில் அவர்கள் ஒற்றுமையாகவே வாழ்ந்தார்கள்.

## திருமுருகாற்றுப்படையும் பரிபாடலும்

சங்ககாலத்தில் சிவன் 'பிறவாயாக்கைப் பெரியோனாகி' முதலிடத்தில் வைத்துப் போற்றப்படுகிறான். அவனுடைய பல்வேறு சிறப்பியல்புகள் சங்க இலக்கியங்களில் நன்கு பேசப்படுகின்றன. ஆம். சங்ககாலத்தை அறிவதற்கு அக்கால இலக்கியங்களை அன்றி வேறு சான்றுகள் நமக்குக் கிடையா. எனவே, அச்சான்றுகள் கொண்டே நாம் சங்ககாலச் சைவத்தைக் காணமுடிகின்றது. அச் சங்ககாலத்தில், பிற்காலத்தே இறைவனை முன்னிறுத்திப் பாடியதாக உள்ள தோத்திரப் பாடல்களைப் போன்ற பாடல்கள் இல்லை. திருமுருகாற்றுப் படையும், பரிபாடலில் முருகன், திருமால் ஆகிய இருவரைக் குறித்த பாடல்களும்தாம் அவ்வாறு இறைவனை முன்னிறுத்திப்

பாடும் பாடல்களாக அமைகின்றன. அவற்றுள் முருகன் புகழும், திருமால் சிறப்பும் நன்கு விளக்கப்பெறுகின்றன. முருகன் தமிழ்நாட்டு ஆறுபடை வீடுகளில் தங்கியதோடன்றிக் குன்றுதோறுங் குமரனுய் 'அஞ்சல்' என்று அண்டிவருபவரை ஆதரிக்கும் வள்ளலாய்க் காட்சி தருகின்ருன். பரிபாடலில் அவன்முன்நின்று அடியவர் வேண்டும் வரம், வையத்தை வாழவைக்கும் வரமாக அமைந்துள்ளது. திருமால் பரிபாடலில் ஆதிமூலமாக அனைத்தையும் தோற்றிப் படைத்துத் துடைக்கும் செல்வனுகப் போற்றப்படுகின்ருன். இவ்விரு பெருங் கடவுளரையும் முன்னிறுத்தி அடியவர் வேண்டி விடுத்த விண்ணப்பங்கள் பல. நாம் ஈண்டு அவற்றையெல்லாம் ஆராயவேண்டா. திருமுருகாற்றுப்படை சைவ இலக்கியத் தொடர் வரிசையிலே பதினேராந் திருமுறையிலேயும் இடம் பெற்றுள்ளது. சைவ உலகம் அதை ஓதி உணர்ந்து உற்றதொரு பயன் கண்டுள்ளது. எனவே, இத்தகைய முன்னிறுத்திப்பாடும் இலக்கியங்களை விடுத்துப் பிறசங்க இலக்கியங்கள் வழி அக்காலச் சிவ வழிபாட்டைக் காண விழைகின்றேன்.

## பிள்ளையார்

சைவ சமயத்தைப் பற்றிப் போற்றுகின்ற அடியவர்கள் சிவன் அம்மை, முருகன், பிள்ளையார் ஆகியவர்களையே முக்கியமாகப் போற்றுவர். எனினும் பிள்ளையாரைப் பற்றிச் சங்க இலக்கியங்களில் எங்கும் குறிப்பே காணப்பெறவில்லை. ஏழாம் நூற்ருண்டில் பரஞ்சோதியாரின் வாதாபிப் படை எடுப்புக்குப் பின்பே அவர்வழிப் பிள்ளையார் வணக்கம் தமிழ் நாட்டில் நுழைந்தது என்பது ஆராய்ச்சியின் துணிபு. இலக்கியங்களிலும் முதன்முதல் ஞானசம்பந்தர் தேவாரமாகிய 'பிடியதன் உருஉமைகொள' என்ற பாட்டிலேதான் பிள்ளையார் பற்றிய குறிப்புக் காணப்படுகின்றது.

## முருகப்பெருமான்

சங்க இலக்கியங்களில் பிள்ளையார் பேசப்படவில்லையாயினும், முருகன் யாண்டும் நீக்கமற நிறைந்து காணப்படுகின்ருன். திணைநிலத் தெய்வங்களுள் ஒன்ருகக் குறிஞ்சிக்

கொற்றவனாக நின்று மிகப் பழங்காலத்திலேயே அவன் காட்சி வழங்குகின்றான். மஞ்சுசூழ் மலையின் இயற்கை எழில், அவன் காட்சியாக விளங்குகின்றது. மலைதோறும் மகிழ்ந் துறையும் நம் வள்ளி மணாளன் அன்றே 'நம் செந்தில் மேய வள்ளிமணாளனாக' அலைவாய்க் கடற்கரையில் காட்சி தருகின்றான். எனவே, திணைநிலத் தெய்வமாக நிற்பதோடு அன்பர் மனநிறை தெய்வமாகவும் அவன் காட்சி தருகின்றான். மணவாழ்வில் புகும் பெண்டிர் தாம் விரும்பும் கணவரைப் பெற அவனடி போற்றி வணங்கியதைக் காண்கின்றோம்.

முருகன் அலைகடல் நடுவுள் பேருருக்கொண்டு நின்ற சூரனைக் கொன்றவன் என்பதையும், அவனைப் பெற்றவள் ஒப்பற்ற அன்னையாகிய சக்தி என்பதையும், உருத்திரங் கண்ணனார் பெரும்பாணாற்றுப் படையில் அழகுபடக் காட்டு கின்றார். அந்த அன்னையைச் சூழ்ந்து பூதகணங்கள் ஆடிப் பாடி அவள் புகழ் போற்றுவதையும், அதைப்போன்றே அடுத்த காஞ்சியில் வாழ்ந்த மன்னன் இளந்திரையனைப்பாடின் பரிசு பெறலாம் எனவும் காட்டுகின்றார் அவர்.

இம்முருகன் சூரனைக் கொன்ற வரலாற்றைப் பதிற்றுப் பத்து காட்டுகின்றது. இம்முருகன் கரியமணமிக்க கடம்பமலர் அணிந்திருந்த சிறப்பைப்புறநானூறு எடுத்துக்காட்டுகின்றது. இம்முருகனைப் போற்றும் வழியறிந்து போற்றும் முறையே முருகாற்றுப் படையாகப் பின் உருப்பெற்றது என்ற உண்மையை அகநானூற்றில் 'வெறிபாடிய காமக் கண்ணியார்' அழகுபடக் காட்டுகின்றார். எனவே, முருகன் சங்ககாலத்தே கொற்றவையின் மைந்தனாக-வெற்றிவிளைக்கும் விறலோனாக விளங்கினான் என்பது நன்கு போதரும்.

## சிவனும் திருமாலும்

திருமால் வைணவ சமயத்து முதற்பெருந் தெய்வமாகப் போற்றப்படினும் சிவத்தொடு இயைத்தே சைவர்கள் வழிபடு கிறார்கள். 'அரியலால் தேவி இல்லை' எனப் பிற்காலத்தே அப்பர் பாடினார். திருமலையில் உள்ள இறைவனைப் பாடிய ஆழ்வார் 'திரண்டருவிபாயும் திருமலை மேல் எந்தைக்கு இரண்டுருவம் ஒன்றாய் இயைந்து' இருந்ததென நலம்

தோன்றக் காட்டுகின்றார். சைவர் கோயில்களில் திருமால் உருவமும் நிலைத்த இடம் பெற்றிருப்பதை இன்றும் காண்கிறோம். சங்க காலத்திலும் சிவனையும் திருமாலையும் சேர்த்துப் பிணைத்துப் பார்த்த பேரறிஞர்கள் வாழ்ந்திருக்கிறார்கள்.

மாலைக் காலம் மகிழ்ச்சிக்குரியது. செவ்வானம் கோடிட்டுக் கதிரவன் மறைந்த காட்சியை அழகு படக் காட்டுகிறது. அதே வேளையில் கடல் தன் கரிய அலைகளை வீசுகின்றது. குமரி முனையிலோ அன்றி மேலைக் கடலிலோ அமர்ந்து மாலையின் இன்பத் தோற்றத்தில் தன்னைப் பறி கொடுத்த புலவர் அதை நன்கு துய்த்து நிற்கின்றார். அப்போது அவர் உள்ளத்துச் சிவனும் திருமாலும் வந்து தோன்றுகின்றனர். செக்கர் வானம் சிவனுடைய தோற்றத்தை நினைப்பூட்டுகிறது. கரிய கடல் நீலமேக நெடும்பொற்குன்றமாகிய திருமாலை நினைப்பூட்டுகிறது. இருவரும் இணைந்து நிற்கும் காட்சியும் அவருக்குத் தெரிகின்றது. இருவரும் அருந்திறல் பெற்ற கடவுளர். இருவரும் இணைந்தே உலகு புரக்கின்றனர். இத்தனையும் எண்ணிப் பார்க்கின்றார் மதுரைக் கண்ணத்தனார் என்ற பெரும் புலவர். அவர் வாய் பாடுகின்றது.

‘வெருவரு கடுந்திறல் இருபெருந் தெய்வத்து
உருவுடன் இயைந்த தோற்றம் போல
அந்தி வானமொடு கடலணி கொளாஅ
வந்த மாலை’ (அகம் 360)

என்றது அவர்வாய். இவ்வாறு இருபெருந் தெய்வத்தையும் இணைத்து ஒன்றிய சமய உண்மையைக் கைக் கொண்டனர் சங்ககாலச் சைவர். இங்கு இருபெருந்தெய்வ நிலையைச் சத்தியும் சிவமும் இணைந்த நிலை என்று கொள்ளவும் இடமுண்டு, உமையும் கரிய நிறம் உடைமையின். எனினும் கரிய உருவைத் திருமாலாகவே கொண்டு ஆழ்வார் காட்டியபடி ‘இரண்டுருவம் ஒன்றாய் இயைந்து’ நின்ற காட்சியைக் கொள்வதே சிறப்புடையதாகும். இவ்வாறு சிவனும் திருமாலும் இயைந்த நெறி சங்ககால நெறி.

இத் திருமால் கிடக்கும் நிலைகண்டு மேலே செல்வோம். அண்மையில் உள்ள காஞ்சியில் திருவெஃகாவில் திருமால் பள்ளி கொண்டுள்ளான். அதைக் காண்கிறார் புலவர்.

இயற்கையொடு கடவுள் வாழ்வு பின்னப் பெறுவது புலப்படு கிறது. பாம்புப் பாயலில் திருமால் கண் வளரும் காட்சி புல வருக்குக் கரிய மலையையும் அதன் மேல் துயிலும் யானையை யும் நினைப்பூட்டுகிறது. மலைமீது காந்தள் நிறைந்துள்ளது. அந்த இயற்கை எழிலொடு திருவெஃகாவின் திருமால் காட்சி யைப் பிணைக்கின்றார். இதோ அவர் அடிகள் :

'காந்தளஞ் சிலம்பில் களிறு படிந்தாங்கு
பாம்பணைப் பள்ளியுள் அமர்ந்தோன்' (பெரும். 37-73)

இவ்வாறு பல இடங்களில் திருமால் போற்றப்படுகின்றார். நாம் இந்த அளவோடு அவர் பற்றிய குறிப்பை நிறுத்தி மேலே செல்வோம்.

## சக்தி வணக்கம்

உமை அம்மையார் சங்க இலக்கியங்களிலே சிவனோடு சார்த்தியே பேசப்படுகின்றார். அன்றித் தனியாகக் காணும் போது காடுறை தெய்வமாகத் துர்க்கையாகக் காட்டப் பெறு கின்றார். 'கானமர் செல்வி அருளலின்' (அகம் 345) என அக் கொற்றவையின் அருள் நலம் பாராட்டப் பெறுகின்றது. 'ஒரு குழை ஒருவன்' (கலி. 26) எனவும் 'ஈர்ஞ்சடை அந்த ணன் உமை அமர்ந்துயர்மலை இருந்தனன்' (கலி. 31) எனவும் அம்மை இறைவனோடு சேர்த்தே பேசப் பெறுவதையும் காண முடிகின்றது. சிவ வழிபாடே அன்றிச் சத்தியாகிய அம்மை வழிபாடும் அச் சங்க காலத்தில் இருந்தது என்பதும், அவ்வழி பாடு தனித்த முறையிலும் சிவனோடு சேர்த்தும் ஆற்றப் பெற்றது என்பதும் நன்கு தெரிகிறது. இச் சக்தி வழிபாடு சங்க காலத்தை அடுத்து எழுந்த சிலப்பதிகாரத்தில் நன்கு போற்றப்படுகிறது. 'கானமர் செல்வி அருளல்' என்ற அக நானூற்றுக்கு விளக்கமாக வேட்டுவவரியே அமைந்துள்ளது.

"சங்கமும் சக்கரமும் தாமரைக் கையேந்திச்
செங்கண் அரிமான் சினவிடைமேல் நின்றாயால்
கங்கைமுடிக் கணிந்த கண்ணுதலோன் பாகத்து
மங்கை உருவாய் மறைஏத்த வேநிற்பாய்"

என்று அச்சக்தியாகிய கொற்றவையை முன்னிறுத்திப் பாடி, அவளாடும் கூத்துட்படும் நிலையை இளங்கோவடிகள் விளக்கிக்

காட்டியுள்ளார். இவ்வாறு போற்றப்படும் அம்மையின் மகனே முருகன் என்பதைத்தான் நக்கீரர் 'மால்வரை மலைமகள் மகனே' (256-57) என்றும், 'வெற்றிவேல் போர்க் கொற்றவை சிறுவ' (258) என்றும், 'இழையணி சிறப்பிற் பழையோள் குழவி' (259) என்றும் பாராட்டுகின்றார். அவர் வாக்கின்வழி உமையம்மையார் இமவான் மகளாகிய வரலாறும், கொற்றவை யாகிச் சிறந்த பெருமையும் பிறவும் நன்கு விளங்குகின்றன வன்றோ!

## சங்க நூல்களில் சிவன்

இனிச் சிவபெருமான்பற்றிச் சங்ககாலத்தில் வந்த இடங் களைக் காணலாம். சிவபெருமானுக்கு உகந்தநாள் திருவா திரை. இம்மார்கழித் திங்களில்வரும் ஆதிரை நிறைமதிகூடிய நன்னாள் சிவனாரின் திருநாளாகக் கொண்டாடப்பெறுகின்றது. 'அத்தன் ஆரூர் ஆதிரை நாளால் அதுவண்ணம்' எனப் பாடுகின்றார் அப்பர். அந்த நாள் சிவனுடைய நாள் என்பதை, 'அரும்பெறல் ஆதிரையான்' (கலி. 150-70) என்று கலித் தொகை காட்டுகின்றது. இதே கலி சிவனைக் 'கொன்றை அலங்கல் அம் தெரியலான்' எனவும், 'பிறங்குநீர் சடைக் கரந் தான்' எனவும், 'ஏற்று ஊர்தியான்' எனவும், 'புதுத்திங்கட் கண்ணியான்' எனவும் பாராட்டுகின்றது. இவ்வாறு சிவ பிரானுக்கு இன்று நாம் அமைக்கின்ற அத்தனைச் சிறப்புக் களும் சங்ககாலத்திலேயே சிறந்திருந்தன என்பதை வெளிப் படையாக நன்கு அறியலாம். இன்னும் அச்சிவனார்பற்றிய பல வரலாறுகளும் சங்ககால இலக்கியங்களில் நன்கு பேசப் பெறுகின்றன.

## இராவணன் கயிலையைப் பெயர்த்தமை

இராவணனைப்பற்றிய வரலாறு நாடு அறிந்த ஒன்று. நாற்புறமும் சுற்றி வெற்றிமாலை சூடிவந்த இராவணன் இமய மலைப் பக்கம்வர, அது தடுத்ததாகவும், அதை அப்படியே பெயர்க்க நினைத்தான். மலை ஆட, உமை அஞ்சி நிற்க, சிவன் தன் விரலால் அழுத்த இராவணன் அம்மலையின்கீழ் நெடுநாள் உழந்தான். பின் நாரதர் காட்ட அருள்நிலை பெற்றுச் சாம வேதம் பாடிப் பிழைத்தான். இக்கதை நாடறிந்த ஒன்று.

இதையும் மற்றொன்றையும் சேர்த்துக் கலித்தொகைப் பாட்டு ஒன்று அழகுற நமக்குக் காட்டுகின்றது.

இராவணன் வரலாறு மட்டுமன்றிச் சிவன் இமயத்தை மேருவை வில்லாக வாங்கி வளைத்த வரலாறும் அப்பாட்டில் குறிப்பிடப் பெறுகின்றது.

## முப்புர எரிப்பு

மேருவை வளைத்த வரலாறு ஈண்டுக் குறிப்பாகக் காட்டப் பெறினும் மற்றொரு சங்கப் பாடலில் நன்கு விளக்கமாக எடுத்துக் காட்டப் பெறுகின்றது. திரிபுரங்களை வென்ற வரலாறே மலையை வில்லாக வளைத்த வரலாறு. அதற்கு ஒரு பெரு மலையே வில்லாக வளைந்தது. பெரும் பாம்பே நாணாக நின்றது. அவ்வில்லிடை நாணேற்றி ஓரம்பு விட்டு மூன்று புரங்களை எரித்தான் சிவபெருமான் என்பதை, மதுரை மருதன் இளநாகனார் நன்கு காட்டுகின்றார். இதில் மூவெயில் உடற்றிய வரலாறு மட்டுமன்றிச் சிவனைக் கறைமிடற்று அண்ணலாகவும், பிறை அணிந்தவனாகவும், நுதல்விழி நாட்டத்து இறையோனாகவும் காணும் வரலாறுகளும் அமைந்துள்ளன. மற்றும் இச்சிவன் மூவெயிலை உடற்றிய காரணத்தையும் அவனுடைய கணிச்சிப் படையையும் கலித்தொகை காட்டுகிறது.

பாலைக்கலியில் அவனது எயில்வென்ற முக்கண் சிறப்பும் பிறவும் பேசப்படுகின்றன. சடை முதலியன சிவனது தாழ்ந்த சடை, பிறை அணிந்த சடை, முக்கண், கறைமிடறு இவற்றைச் சங்கநூற்பாவடிகள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

கலித்தொகை அடிகளும் சிவனுடைய உடலிலமைந்த பல்வேறு தோற்றப் பொலிவுகளை நன்கு விளக்கிக் காட்டுகின்றன. இவையே அன்றிச் சிவனைப்பற்றிய வேறுசில குறிப்புக்களும் சங்ககால இலக்கியங்களில் இடம் பெற்றுள்ளன. அவற்றுள் ஒன்று அவன் 'ஆலமர் செல்வனாக' அமர்ந்த சிறப்பாகும்.

## ஆலமுற்றம்

கல்லாலின் புடை அமர்ந்து வல்லார்க்கு அறமுரைத்த பெருந்திறல் பிற்காலச் சமய இலக்கியங்களிலெல்லாம் நன்கு

பேசப்படுகின்றது. சங்க இலக்கியங்களும் சிவனுக்கு உரிய பல்வேறு சிறப்புக்களோடு இவ் ஆலமுற்றத்தையும் குறிப்பிடு கிறது. ஆலமுற்றம் சிவனுக்கே உரிய தென்பதை,

" ஞாலம் நாறும் நலங்கெழு நல்லிசை
நான்மறை முதுநூல் முக்கட் செல்வன்
ஆலமுற்றம் கவின்பெறத் தைஇய
பொய்கை சூழ்ந்த பொழின்மனை மகளிர் " (அகம். 181)

என அகநானூறு ஆலமுற்றத்தை அவனுக்கே உரியதாகக் காட்டுகின்றது. இதையே,

" ஆலமர் கடவுள் அன்னநின் செல்வம்
வேல்கெழு குரிசில் கண்டேன் ஆகலின் " (புற. 198)

என்று வடம வண்ணக்கன் பேரி சாத்தனாரும்,

" நீலநாகம் நல்கிய கலிங்கம்
ஆலமர் செல்வற்கு அமர்ந்தனன் கொடுத்த
.......... ஆயும் " (சிறுபாண். 96—99)

என்று நல்லூர் நத்தத்தனாரும் பாடியிருப்பதைக் காணலாம்.

## சூலம்—கொடி முதலியன

இவ்வாறு ஆலமர் செல்வனாய் அறமுரைத்த அண்ணலாய் அம்மையப்பராய் விளங்கிய சிவன் சூலம் பிடித்த சுடர்ப்படை உடையவனாக உள்ளான் என்பதை,

" சூலம் பிடித்த சுடர்ப்படைக் காலக் கடவுள் " (பதிற்.)

என்ற பதிற்றுப்பத்து அடி காட்டுகின்றது. இச்சிவபெருமான் உமையோர் பாகத்தன் ஆகி உள்ளமையின் ஒரு குழை அணிந்தவன் எனக் காட்டப்பெறுகின்றான். அத்துடன் அவனுக்கு ஏறு வாகனமாக இருப்பதோடு கொடியாகவும் இருக் கின்றது. இரண்டையும் பிணித்த பெருங்கடுங்கோ

" ஒருகுழை ஒருவன் போல் "

எனவும்,

" ஆனேற்றுக் கொடியோன் போல் "

எனவும் தனது பாலைக்கலியுள் (26) பொருள் பொதிந்து காட்டு கின்றார். இன்னும் கடவுள் வாழ்த்துப் பாடல்களுள் இவ்

வுண்மைகள் பேசப்பெறுகின்றன. அவை காலத்தால் பிந்தியது என்பவாகலின் அவற்றை விட்டு மேலே செல்வோம்.

இச்சிவபெருமான் சடையுள் கங்கையைக் கரந்த வரலாறு சங்க இலக்கியத்தில் காண முடியும். அக்கங்கை இமயத்து உச்சியிலிருந்து—இமையவர் வாழும் அப்பெருமலை உச்சியிலிருந்து கிழக்கிறங்கிப் பொன்கிழித்து ஓடிவரும் பேராறு என்பதையும் அன்றே காட்டியுள்ளனர் புலவர்.

"பிறங்கு நீர் சடைக்க ரந்தான்" (கலி. 150)

என்று சிவன் கங்கையைக் கரந்த வரலாறு கூறப்பெற்றுள்ளது. அக்கங்கை இழிதரும் சிறப்பினை,

"இமையவர் உறையும் சிமையச் செவ்வரை
வெண்திரை கிழித்த விளங்குசுடர் நெடுங்கோட்டுப்
பொன்பொழித்து இழிதரும் போக்கருங் கங்கைப்பெருநீர்"
(பெரும்பாண். 430-33)

என்ற பத்துப்பாட்டு அடிகள் காட்டுகின்றன.

## சிவனே தலைவன்

இவ்வாறு வேண்டுவார்க்கு வேண்டிய வகையிலே வடிவு காட்டி ஆலமர் செல்வனாய்—கறைமிடற் றண்ணலாய்—முக்கண் முதல்வனாய்—பிறைசூடிய பெம்மானாய் விளங்கி அணுவுக்கு அணுவாய் நின்ற அதே சிவன், அப்பாலுக் கப்பாலாய் நின்று பஞ்ச பூதங்களையும் தோற்றுவித்து இயக்கும் ஒப்பிலி அப்பனாகவும் விளங்குகின்றான். அடியவர்கள் பொருட்டு அவன் விரும்பிய வண்ணம் காட்சி வழங்கும் அதே ஆண்டவன் கல்லாதார் மனத்தணுகாக் கடவுளாக நிற்பதோடு, கற்றவரும் எளிமையில் காண முடியாது அப்பாலுக்கப்பால் நிற்கின்றான் என்பதை எச்சமய நூலோரும் உற்று உணர்ந்து ஓதி வைத்துள்ளார்கள். மற்றும் அம்முழுமுதற் பொருள் உலகம் அனைத்தும் தோன்றுதற்கு முதற் காரணமாய் ஐம்பெரும் பூதங்களை ஆக்கி அவற்றுடன் தானும் கலந்து அலகிலா விளையாடலைப் புரிகின்றான் எனக் காட்டுவர். இவற்றையெல்லாம் தொகுத்து,

"நீரும் நிலனும் தீயும் வளியும்
மாக விசும்பொடு ஐந்துஉடன் இயற்றிய
மழுவாள் நெடியோன் தலைவனாக" (மதுரை 453—55)

என்று மாங்குடி மருதனார் மழுவைத் தாங்கிய சிவனுடைய முடிவிலாற்றல் உடைமையை நன்கு காட்டுவது அறியற்பாலதாகும்.

## கடவுள் வழிபாடு

இவ்வாறு யாண்டும் நீக்கமற நிறைந்து நிற்கும் கடவுளை, உள்குார் உள்ளத்து உள்கும் வடிவாய்த் தோன்றி வரமளிக்கும் ஆண்டவனை, அடியவர்கள் ஒருங்கு கூடிப் பல விடங்களில் தொழுது வந்தனர். கடவுள் வழிபாட்டிற்கெனத் தனித்த இடங்கள் அமைக்கப் பெற்றிருந்தன. அவை இயற்கைச் சூழல்களோடு அமைந்து இருந்தன. மக்கள் அவ்விடம் காலமறிந்து கூடிப் பாடிப் பரவிப் போற்றிப் புகழ்ந்து வாழ்த்திச் சென்றார்கள் என்று உருத்திரங் கண்ணனார் நன்கு எடுத்துக் காட்டுகின்றார். அவருடைய பெயரே அவர் சிவனிடம் நீங்காத ஈடுபாடு உடையவர் என்பதைக் காட்டுகிறது. எனவே தான் அவருடைய பாடலில் சிவனைப் பற்றிய குறிப்புக்கள் காணல் முடிகிறது. இவ்வாறு கடவுள் தங்கும் இடங்களுக்கு அக்கடவுள் பெயரையே இடும் வழக்கம் உண்டு எனவும் காண்கின்றோம். பெருங்குன்றூர்க் கிழார் இவ்வாறு ஒரு காடு இருந்ததைக் 'கடவுள் பெயரிய கானம்' (பதிற். 9) என்றே காட்டுகின்றார். இவ்வாறு எல்லையற்ற ஆண்டவனைக் கற்றார் மட்டுமன்றிக் கல்லாரும் கண்டு உணர்ந்து போற்ற வேண்டி, எல்லையிட்ட இடத்திலே அமைத்து வழிபட அன்றைய தமிழ் மக்கள் தொடங்கி விட்டனர் என அறிகின்றோம். இனி அவர்கள் வழிபட்ட முறைகளுள் ஒன்றிரண்டு கண்டு மேலே செல்லாம்.

## வழிபாட்டு முறைகள்

கடவுளருக்குப் பலியிட்டுப் பணிகின்ற வழக்கம் இருந்தது என அறிகிறோம். முருகனுக்கு 'மறி' அறுத்தார்கள் எனத் திருமுருகாற்றுப் படையே குறிக்கின்றது. இவ்வாறு பலியிட்டுப் பரவிய வணக்கத்தையும், அவர்கள் அவ்வாறு பலியிட்டு ஆற்றிய வழிபாடு அச்சத்தின் பாற்பட்டது என்பதையும்,

> 'கணங்கெழு கடவுட்கு உயிர்ப்பலி தூஉய்ப்
> பரவினம் வருகம் சென்மோ தோழி' (நற். 380)

என்ற நற்றிணை அடிகள் நன்கு எடுத்துக் காட்டுகின்றன.

நன் மகப்பேறு எய்தற்குக் கடவுளை வணங்குவர் என்ப தையும் அவ்வணக்கத்தின்வழிப் பேறு பெற்றுச் சிறந்தார்கள் என்பதையும்,

“ குன்றக் குறவன் கடவுட் பேணி
இரந்தனன் பெற்ற எல்வளைக் குறுமகள் ”

என்ற ஐங்குறு நூற்று (253) அடிகள் எடுத்துக் காட்டுகின்றன. தலைவி தம் குலதெய்வத்துக்குச் சிறக்க ஆற்றும் வழிபாட்டு முறையை அதே நூல் நன்கு காட்டுகின்றது :

“ குன்றக் குறவன் காதன் மடமகள்
மன்ற வேங்கை மலர்சில கொண்டு
மலையுறை கடவுள் குலமுதல் வாழ்த்தி
தேம்பலிச் செய்த ஈர்நறுங் கையள் ” (ஐங்குறு. 259)

என்று அவர்கள் மலர்தூவி வழிபட்டதை இவ்வடிகள் காட்டு கின்றன.

சங்க காலத்தில் இறைவனைப் போற்றுவதற்கு மரபு நெறி - பழக்க வழக்க முறைகள் இருந்தன எனக் காண்கின்றோம். அவை எத்தகைய என்பது விளக்கமாகக் காணப் பெறுவிடினும் மேலே கண்ட குறுந்தொகைப் பாடல்களாலும், திருமுரு காற்றுப்படை போன்ற பிறவற்றாலும் ஓரளவு நன்கு தெரி கின்றது. அவையெல்லாம் ஈண்டு விரிப்பில் பெருகும். எனினும் இறைவழிபாடு மரபு வழிகெடாது நடைபெற்று வந்தது என்ற உண்மையை,

‘ தொன்றொழுகு மரபில் தம்இயல்பு வழாஅது
அருந்திறல் கடவுள் பழிச்சிய பின்றை ’
(மலைபடு. 537–38)

என்ற பெருங்கௌசிகனாரது அடிகள் நமக்கு அறிவுறுத்து கின்றன. மற்றும் அக்காலத்தில் வழிபடுமுறையில் கல் நட்டுப் பீலி சூட்டி, துடி எழுப்பி, கள்ளும் பலியும் கொடுக்கும் சாதாரண வழக்கம் உண்டு என்பதை,

‘ வல்லாண் பதுக்கைக் கடவுட் பேண்மார்
நடுகற் பீலி சூட்டித் துடிப்படுத்துத்
தோப்பிக் கள்ளொடு துரூஉப் பலிகொடுக்கும் ’
(அகம். 35)

என்ற அகநானூற்று அடிகள் நன்கு காட்டுகின்றன. அங்கி வேட்டு ஆண்டவனை வழிபடும் முறை உண்டு என்பதையும், அச்செயல் ஆற்றுகின்றவர் ஆன்றவிந்தடங்கிய முனிவர் என்பதையும்,

" அவிர்சடை முனிவர் அங்கி வேட்கும்
ஆவுதி நறும்புகை " (பட்டின. 55–56)

என்ற உருத்திரங் கண்ணனுர் வாய்ச் சொல் நமக்கு உணர்த்துகின்றது.

இம்மை வாழ்வு மட்டுமன்றித் துறக்க வாழ்வும் உண்டு என்பதை அன்றைய தமிழ் மக்கள் நன்கு அறிந்திருந்தனர். துறக்க வாழ்வு அல்லது தேவ உலக வாழ்வு சிறந்த ஒன்று அல்ல என்பதைச் சாத்தனுர் மணிமேகலையில் நன்கு காட்டுகிருர். என்ருலும் உலகில் அறமாற்றிச் சிறப்பார் அத்துறக்க வாழ்வு பெறுவார் என்பதும், அது இன்ப உலகம் என்பதும், அது பெறுதற்கரிது என்பதும் அவர்கள் கொண்ட கொள்கை என்பதை,

" பெறற்கரும் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்
பொய்யா மரபில் பூமலி பெருந்துறை "
(பெரும். 388–89)

என்ற அடிகள் நமக்குக் காட்டுகின்றன. எனவே, சங்க காலச் சைவ நெறியில் இன்று காணும் அத்தனை உண்மைகளும் அடங்கி இருந்தன என்பது தேற்றம்.

இன்னும் சிவனைப்பற்றியும் அவன் ஆடல், இடம் முதலியனபற்றியும் பலப்பல பாடல்கள் சிறக்கப் பாராட்டுகின்றன. அவன் சுடுகாட்டில் ஆடுவதுபற்றியும் கொடுகொட்டி ஆடுதல்பற்றியும், சூலப்படை உடைமைபற்றியும், பாண்டரங்கம் ஆடுதல்பற்றியும், புலித்தோலுடைபற்றியும், இவைபோன்ற எத்துணையோ செயல்கள் பற்றியும் பலப் பல இடங்கள் சங்க இலக்கியங்களில் குறிக்கின்றன. முருகனைப்பற்றியும் அவனது இரு மனைவியரைப்பற்றியும், அவன் படைவீடுகள் பற்றியும், பிறவரலாறுகள் பற்றியும் கூறும் பாடல்கள் பலப்பல. தெய்வத்திற்குக் கல் உருக் கொடுத்தல்பற்றியும், காணிக்கை அளித்தல்பற்றியும், தெய்வத்தினிடம் பொருள் வேண்டுதல் பற்றியும், தெய்வத்திற்குக் கையுறை கொடுத்தல் பற்றியும்,

நிலம் தானம் செய்தல்பற்றியும், உயிர்ப்பலியும் பூப்பலியும் செய்தல்பற்றியும், மஞ்சளும் பூவும் அணிதல்பற்றியும், தெய்வத்தைச் சுட்டிச் சபதம் செய்தல்பற்றியும், வணங்கி வஞ்சினம் உரைத்தல்பற்றியும், தெய்வத்தை வேண்டிக் குழந்தை பெறுதல்பற்றியும், தெய்வ வழிபாட்டு முறை பற்றியும், இவைபோன்ற பிறபற்றியும் பலப்பல சங்கப் பாடல் கள் எடுத்துக் காட்டுகின்றன. அவற்றையெல்லாம் அறிந்தோர் வாய்ப்பு உள்ள வேளையில் கற்று நலன்கண்டு சிறக்க எனக் கூறி மேலே செல்கின்றேன்.

## முதலிடம் சிவனுக்கே

நிற்க, இந்த இரு பெருங்காரியங்கள் உண்டான காலத்தில் நாட்டில் சமணமும் பௌத்தமும் கால்கொள்ளத் தொடங்கி வளரவும் பெற்றன என்றாலும் சைவசமயமே மேலோங்கி இருந்ததென்பதும், சிவனே அனைத்துக்கும் முதற்கடவு ளாகப் போற்றப்பட்டனன் என்பதும் நன்கு விளங்கும். சமண சமய இளங்கோவடிகள் புகாரில் உள்ள கோயில்களை வரிசைப்படுத்திக் காட்டும்போது சிவனை முதலிலும் அறுமுகனை அடுத்தும் வைத்துப் பிற தெய்வங்களைப் பின் வைத்துப் பேசுகிறார். அவர் சிவனைப் ‘பிறவாயாக்கைப் பெரியோன்’ என்கிறார். அவர் கருவிருந்து பிறவாத காரணத் தால்,

“ பிறவா யாக்கைப் பெரியோன் கோயிலும்
அறுமுகச் செவ்வேள் அணிதிகழ் கோயிலும்
வால்வளை மேனி வாலியோன் கோயிலும்
நீலமேனி நெடியோன் கோயிலும் ”

(சிலம்பு 5, 169-172)

என அவர் காட்டுகின்றார். மற்றும் பின் செங்குட்டுவனைக் கூறும் போது அவன் சிவன் அருளால் பிறந்தவன் என்றும், வடக்கு நோக்கிச் செல்லும்போது சிவனை முன் வழிபட்டுப் பின் திருமாலை வணங்கிச் சென்றான் என்றும் காட்டுகின்றார். எனவே, சங்கம் மருவிய சிலப்பதிகார காலத்திலும் அரசரும் பிறரும் தமிழ் நாட்டில் சிவனையே முதற்றெய்வமாகப் போற்றி வழிபட்டார்கள் என அறிகிறோம்.

மணிமேகலை ஆசிரியர் புகார் நகரிலுள்ள பல்வேறு தெய்வங்களைக் காட்டுகின்றார். வள்ளுவன் விழா அறை காதையில் அந்நகர மக்கள் செய்யும் விழாச் சிறப்புக்களைக் காட்டும்போது அவரவர் தெய்வங்களுக்கு ஆற்றும் சிறப்பைக் குறிக்கின்றார். அதில் தெய்வங்களைக் காட்டும்போது,

"நுதல் விழி நாட்டத்து இறையோன் முதலாப்
பதிவாழ் சதுக்கத்துத் தெய்வம் ஈறாக"

(மணிமே. 1, 54–55)

எனக் காட்டிச் சிவனுக்கே ஏற்றம் தந்து போற்றுகின்றார். எனவே, தமிழ் நாட்டில் சங்ககாலத்திலும் அதை ஒட்டிய காப்பிய காலத்திலும் சைவமே சிறந்த சமயமாகி நின்றது என்பதும், பல தெய்வங்கள் நாட்டில் இருந்தாலும் சிவனே முழு முதல் தெய்வமாகப் போற்றப்பட்டார் என்பதும் வெளிப்படை.

## முடிவுரை

இவ்வாறு சிறந்த பெயரால் போற்றப்படும் தெய்வநெறி சங்ககாலத்திய நெறி என்பதும், அத்தெய்வ வரிசையில் சிவனே முதல் இடம் பெற்றுப் போற்றப்பட்டான் என்பதும், அதனால் சங்ககாலத்தில் சைவமே தலைசிறந்து ஓங்கிய மெய்ச் சமயமாகி விளங்கியது என்பதும், தென்னாடுடைய சிவன் பின் எந்நாட்டவருக்கும் இறையாகத் தொடங்கிய காலம் அதுதான் என்பதும், சங்ககாலத் தமிழ் மக்கள் வாழ்வாங்கு வாழ்ந்து மெய்ம்மைநெறிச் சைவமாம் சமயம் சார்ந்து தழைத்தார்கள் என்பதும் அறியக் கிடக்கின்றது.

சங்ககாலத்தில் இவ்வாறு சிவனைப் போற்றிய அடியவர்கள் வெறும் புறத்தோற்றத்தால் மட்டும் வழிபாடு ஆற்றாது, அக நிலையிலேயே ஆண்டவனைக் கண்டு, அறமாற்றி, ஆன்ற விந்தடங்கிய கொள்கைச் சான்றோர்களாக வாழ்ந்தார் என்பதை நன்கு உணரவேண்டும். அதனாலேயே அக்காலத்தை ஒட்டி எழுந்த குறளில் வள்ளுவர்,

"மழித்தலும் நீண்டலும் வேண்டா உலகம்
பழித்தது ஒழித்து விடின்" என்றும்,

" மனத்துக் கண்மாசாக மாண்டார் நீராடி
மறைந்தொழுகும் மாந்தர் பலர்" என்றும்,

இன்னும் பலவகையிலும் எடுத்துக் காட்டுகின்றார். அன்பின் வழியது உயிர்நிலை எனக் காட்டி, அதன்வழி அன்பே இறை வன் என விளக்கி, மக்கள் அன்புகொண்டு வாழ்வதே மெய்ச் சமயநெறி என்பதை வள்ளுவரும் பிறரும் தெள்ளத் தெளிய விளக்குகின்றனர்.

எனவே சங்ககாலத்தில் சிவனை வழிபட்ட மெய்ச் சைவ மக்கள் உள்ளும் புறமும் ஒத்தவராய் - தனக்கென வாழாப் பிறர்க்குரியாளராய் - தாமின்புறுவது உலகின் புறக்காணும் தக்கோராய் - மனம் மொழி மெய் என்ற மூவிடத்தும் மெய் என்னும் தூய்மை உடையவராய் - எல்லாரும் இன்புற்றிருக்க நினைக்கும் பண்பாளராய் - நாடு வாழத் தாம் வாழும் நல்லவ ராய் - அவனன்றி ஓரணுவும் அசையாது என்ற திண்ணிய நம்பிக்கை கொண்டு அதனால் தன் முனைப்பு என்பது அற்ற சீலராய் - முயற்சியும் ஆக்கப் பணியும் மேற்கொண்டு தம் செயலில் வெற்றிபெறினும் செம்மாக்காது ஆருயிர் முறை வழிப்படும் என்ற உண்மை உணர்ந்து செம்மை நலம் சான்ற தக்கோராய் வாழ்ந்து வந்தார்கள் என்பதும் ஈண்டு நாம் நினைக்க வேண்டுவதாகும். இவற்றுக்கெல்லாம் எடுத்துக் காட்டுக்கள் பலப்பல எடுத்துக் காட்டிக்கொண்டே செல்லலாம். இவை அனைத்தும் நன்மக்கள் உணர்வராதலின் அவர் காட்டும் மெய்ந்நெறி வழி உலகும் சிறக்கும் என்ற நம்பிக்கையோடு அவற்றை ஈண்டு நான் காட்டாது அமைகின்றேன். சைவம் சங்ககால மெய்ச் சைவம் - உள்ளும் புறமும் ஒத்த சைவம் - உலகம் அனைத்தையும் ஓம்பும் சைவம் - ஓரறிவுயிரும் ஒத்தது என உணரும் சைவம் தரணியில் சிறக்க என வாழ்த்து கின்றேன். அச் சைவநெறி தழைத்தோங்க இச் சமாசமும் ஆவன செய்யும் என்ற நம்பிக்கையோடு என் பேச்சையும் முடித்துக்கொள்ளுகின்றேன்.

# பல்லவர் காலச் சைவம்



திரு. புலவர். முருகவேள் அவர்கள், M.A., M.O.L.
(கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்; இந்துமத பாடசாலையின்
பழைய மாணவர்.)

## பல்லவர் காலம்

சங்க காலம் தமிழ் மொழியின் பொற்காலம் என்றால், பல்லவர் காலம் சைவ சமயத்திற்குப் பொற்காலம் எனலாம். கி. பி. 300 முதல் 900 வரை பல்லவர் காலம் எனக் கொள்ளப்படும். அக்காலத்தில் தான்,

" திசையனைத்தின் பெருமையெலாம்
தென்றிசையே வென்றேற
மிசையுலகும் பிறவுலகும்
மேதினியே தனிவெல்ல
அசைவில்செழுந் தமிழ்வழக்கே
அயல்வழக்கின் துறைவெல்ல
இசைமுழுதும் மெய்யறிவும்
இடங்கொள்ளும் நிலைபெருக "

நாவுக்கரசரும் ஞானசம்பந்தரும் சுந்தரமூர்த்தி சுவாமிகளும் இந்நிலவுலகில் தோன்றியருளி,

"மேலொரு பொருளும் இல்லா
மெய்ப்பொருள் வில்லுந் தாங்கிக்
கால்தரை தோய நின்று
கட்புலக் குற்ற தம்மா!"

என்றாற்போல, இத் தென்றமிழ்நா டெங்கணும் 'கால்தரை தோய நின்று' சுற்றித் திருவுலாப் போந்து, சைவமும் தமிழும் தழைத்தினி தோங்கச் செய்தனர்.

## மகேந்திரவர்மன் I

வடமொழியிற் சிறந்த புலமையுடையவனும், இசைக்கலையில் வல்லவனும், சிற்பம் ஓவியம் நடனம் முதலிய கலைகளிற் பெரிதும் ஈடுபாடுடையவனும், போர்த்திறன் மிக்கவனும், பகாப் பிடுகு, லளிதாங்குரன், சத்துருமல்லன், சேத்தகாரி, அவனிபாஜனன், குணபரன் முதலிய சிறப்புப் பெயர்கள் பெற்றவனுமாகிய மகேந்திரவர்மன் (கி. பி. 600—630) என்னும் பல்லவ மன்னன், திருநாவுக்கரசரால் சமணசமயத்தினின்று நீங்கிச் சைவனாக மாறினான். "இலிங்கத்தை வழிபடும் குணபரன் என்னும் அரசன் புறச் சமயத்தில் இருந்து திரும்பிப் பெற்ற ஞானப் பேரொளியானது இந்த இலிங்கத்தின் வாயிலாக நெடுங்காலம் இவ்வுலகில் நின்று நிலவுவதாக!" என்பது திருச்சிராப்பள்ளிக் கல்வெட்டு. இப்பேரரசன் சைவனாக மாறிய நிகழ்ச்சியினைப் பெரியபுராணம்,

"வீடறியாச் சமணர்மொழி
பொய்யென்று மெய்யுணர்ந்த
காடவனும் திருவதிகை
நகரின்கண் கண்ணுதற்குப்
பாடலிபுத் திரத்தில்அமண்
பள்ளியொடு பாழிகளும்
கூடஇடித் துக்கொணர்ந்து
குணபரஈச் சுரம்எடுத்தான்"

எனக் கூறுதல் காணலாம். மகேந்திர வர்ம பல்லவன் நாவுக்கரசரால் சைவனாக மாறிய நிகழ்ச்சி, சைவ சமய வரலாற்றில்

ஒப்புயர்வற்ற பெருஞ் சிறப்புடைய நிகழ்ச்சியாகும். சீயமங்கலம், பல்லாவரம், வல்லம், தளவானூர், திருக்கழுக்குன்றம், திருச்சிராப்பள்ளி, திருமயம் என்னும் இடங்களில் இவ்வரசன் சிவபிரானுக்கு மலைகளை வெட்டிக் குடைந்து கோயில்கள் எடுப்பித்தான்.

## நரசிம்மவர்மன் I

இம் மகேந்திர வர்மனின் மகனாகிய நரசிம்மவர்மன் (கி. பி. 630—668) என்னும் பல்லவ மன்னனிடம் படைத் தலைவராக விளங்கியவரே, அறுபான்மும்மை நாயன்மார்களுள் ஒருவரான பரஞ்சோதியார் என்னும் சிறுத்தொண்டர். இச்சிறுத்தொண்ட நாயனார்தாம், இரண்டாம் புலிகேசி என்னும் சாளுக்கிய மன்னனை வாதாபிப் போரில் (கி. பி. 642) வெற்றி பெற்ற பெருவீரர் ஆவார்.

“ மன்னவற்குத் தண்டுபோய்
வடபுலத்து வாதாவித்
தொன்னகரம் துகளாகத்
துளைநெடுங்கை வரையுகைத்துப்
பன்மணியும் நிதிக்குவையும்
பகட்டினமும் பரித்தொகையும்
இன்னனஎண் ணிலகவர்ந்தே
இகலரசன் முன்கொணர்ந்தார் ”

என இவ்வரலாற்று நிகழ்ச்சியினைப் பெரிய புராணத்துட் சேக்கிழார் குறிப்பிட் டருளியிருத்தல் அறிந்தின்புறற் பாலது.

## பரமேசுவரவர்மன் I

பரமேசுவரவர்மன் (கி. பி. 670—685), இரண்டாம் புலிகேசியின் மகனான விக்கிரமாதித்தன் என்னும் சாளுக்கிய மன்னனைப் பெருவள நல்லூர்ப் போரில் வெற்றி பெற்றவன். கூன்பாண்டியன் என்னும் நின்றசீர் நெடுமாறர் நெல்வேலிப் போரில் வெற்றி கொண்டதும் இவ்விக்கிரமாதித்தச் சாளுக்கிய மன்னனையே ஆகும். நின்றசீர் நெடுமாறர் காலத்தவனான இப் பரமேசுவரவர்மன் மிகச் சிறந்த சிவபக்தன். உருத்திராக்க மணி கொண்டு சிவலிங்க வடிவமாகச் செய்யப் பெற்ற முடி

யினையே இவ்வரசன் அணிந்திருந்தான். கூரம் என்னும் ஊரில் இவன் எடுப்பித்த "வித்யா விநீத பல்லவ பரமேசுவரக் கிருகம்" என்னும் கோயிலே தமிழகத்தின் முதற் பெருங் கருங்கற்கோயில் எனக் கருதப்படுகின்றது.

## இராசசிம்மன்

இராசசிம்மன் என்னும் பல்லவ மன்னனே (கி. பி. 685—705) தென்னிந்தியாவிற் புகழ் பெற்று விளங்கும் கயிலாசநாதர் கோயிலைக் கட்டியவன். இவனைச் 'சைவ சித்தாந்தத்தில் பேரறிவுடையவன்' எனக் கல்வெட்டொன்று குறிப்பிடுகின்றது. ரிஷப லாஞ்சனன், ஸ்ரீ சங்கர பக்தன், ஸ்ரீ ஆகமப் பிரியன், சிவ சூடாமணி முதலிய பட்டப் பெயர்களால் இவனது சிவநெறி ஈடுபாட்டினை உணரலாம். இவ்வரசனின் காலத்திலேயே மனக் கோயில் கட்டிய மாதவர் ஆகிய திரு நின்றவூர்ப் பூசலார் நாயனார் விளங்கி யிருந்தார்.

## நந்திவர்மன் III

இங்ஙனமே, வரலாற்று நூல்கள் "தெள்ளாறு எறிந்தவன்" எனக் குறிப்பிடும் மூன்றும் நந்திவர்மனே (கி. பி. 825—850), பெரிய புராணத்திற் புகழப் பெறும் கழற்சிங்க நாயனார் ஆவார். இவ்வரசனையே,

"கடல்சூழ்ந்த உலகமெலாம் காக்கின்ற பெருமான்
காடவர்கோன் கழற்சிங்கன் அடியார்க்கும் அடியேன்"

எனச் சுந்தர மூர்த்திகள் போற்றினர். இவ்வரசன், முதலாம் அமோகவர்ஷன் (கி. பி. 814—880) என்னும் இராட்டிரகூட மன்னனை வெற்றி பெற்ற சிறப்பையே,

"ஆடக மேரு வில்லார் அருளினால் அமரிற் சென்று
கூடலர் முனைகள் சாய வடபுலம் கவர்ந்து கொண்டார்"

எனப் பெரியபுராணம் விளக்குகின்றது. இவ்வரசன், தனக்குத் திறை செலுத்த மறுத்த பாண்டியன் ஸ்ரீ மாறன் ஸ்ரீ வல்லபனையும், பிறரையும் வந்தவாசிக்கு அருகில் உள்ள தெள்ளாறு என்னும் இடத்தில் (கி. பி. 832) பெரும்போர் நிகழ்த்திப் பெரு வெற்றி பெற்று முற்றிலும் முறியடித்தான். இப்போர் நிகழ்ச்சியினையே,

"உரிமையாற் பல்லவர்க்குத் திறைகொடா
மன்னவரை மறுக்கஞ் செய்யும்
பெருமையார் புலியூர்ச்சிற் றம்பலத்தெம்
பெருமானைப் பெற்றும் அன்றே"

எனச் சுந்தரமூர்த்தி சுவாமிகள் தம் பாடலிற் குறிப்பிட்டுள்ளார். 'சிவனை முழுதும் மறவாத சிந்தையான்' என இம்மன்னனை நந்திக் கலம்பகம் போற்றுகின்றது. "சிவனது திருவடையாளம் (திருநீறு) நெற்றியிற் கொண்ட நந்திவர்மன் தன் கைகளைக் குவித்து, எனக்குப் பின்வரும் அரசர் இத் திருப்பணியைப் பாதுகாப்பாராக என்று வேண்டுகின்றான்" என வரும் வேலூர்ப் பாளையப் பட்டய வரிகள், இவனது சிவத்தொண்டின் சிறப்பைச் செவ்விதின் விளக்கும். **கோட்புலி நாயனார், சேரமான் பெருமாள் நாயனார்** முதலியோர் இவ்வரசனின் காலத்தவரே யாவர்.

## பல்லவரின் பண்பு

பல்லவர்கள் "வண்புகழ் மூவர் தண்பொழில் வரைப்பு" எனப் பெற்ற தமிழகத்திற் குரிய அரச மரபினர் அல்லர். அவர்கள் தமிழரின் வேறுபட்டவர்கள். தமிழைப் புறக்கணித்து வட மொழியையே பெரிதும் போற்றியவர்கள். பல்லவர்களின் பட்டயங்கள் பிராகிருதத்திலும் வட மொழியிலுமே பெரிதும் அமைந்திருக்கக் காண்கின்றோம். அவர்களுள், மகேந்திரவர்மன் இராசசிம்மன் போன்றவர்கள் வடமொழியிற் புலமை மிக்கு விளங்கியிருந்தனர். **லோகவிபாகம், கிராதார்ச்சுனீயம், அவந்திசுந்தரிகதா, மத்தவிலாசப் பிரகசனம், காவ்யாதர்சம்** போன்ற வடமொழி நூல்கள் பல, பல்லவர்களின் காலத்தில் தோன்றியனவேயாகும். பல்லவ மன்னர்களாற் **பாரவி, தண்டி** முதலிய வடமொழிப் புலவர்கள் பலர் பெரிதும் ஆதரிக்கப்பெற்றனர். பல்லவர்கள் காலத்தில் வடமொழிக் கல்லூரிகள் பல தமிழ்நாட்டில் விளங்கியிருந்தன. "கல்வியிற் கரையிலாத காஞ்சிமாநகர்" என நாவுக்கரசர் பாடியிருத்தற்கேற்ப, வடமொழிக் கல்விக்குக் காஞ்சிபுரம் புகழோங்கித் திகழ்ந்தது. கதம்பகுல அரசர்களின் முதல்வனை **மயூரசன்மன்** (கி. பி. 350–375) என்னும் மன்னன் காஞ்சிபுரம் போந்து மறைந்துறைந்தும் வடமொழிக் கல்வி

பெற முயன்ருன். நலாந்தா பல்கலைக் கழகத்திற் சிறந்த பேராசிரியர்களாக விளங்கிய தர்மபாலர், திக்நாகர் முதலியவர்கள் காஞ்சிபுரத்தைச் சேர்ந்தவர்கள். இங்ஙனமெல்லாம் பல்லாற்ருனும் தமிழ் மொழிக்கும் சிவ நெறிக்கும் பெரிதும் மாறுபட்டு நின்ற பல்லவ மன்னர்களைத் தமிழ் மொழியிலும் சிவநெறியிலும் மிகவும் ஈடுபட்டின்புறுமாறு திருத்தி, உய்யக் கொண்ட பெருஞ்சிறப்புக்கு உரியவர்கள் திருநாவுக்கரசரும் திருஞானசம்பந்தருமே யாவர். அவ்விரு பெருமக்களின் செயலாண்மைத் திறம் (Heroism) பெரிதும் வியக்கற்பாலது. அவ்விரு பெருமக்களையும் "பொருட் சமய முதற் சைவ நெறி தான் பெற்ற புண்ணியக் கண் இரண்டு" எனச் சேக்கிழார் பெருமான் புகழ்ந்து பாராட்டியதில் வியப்பொன்றுமில்லை.

"பாடிய செந்தமி ழாற்பழங் காசு பரிசில்பெற்ற
நீடிய சீர்த்திரு ஞானசம் பந்தன் நிறைபுகழான்
நேடிய பூந்திரு நாவுக் கரசோ டெழின்மிழலைக்
கூடிய கூட்டத்தி னல்உள தாய்த்திக் குவலயமே"

—நம்பியாண்டார் நம்பிகள்

### கோயில்கள்

பல்லவர் காலத்தில் சைவம் இதற்கு முன்னர் எப்போதும் இல்லாத பெருஞ் சிறப்பை எய்தியது. தேவார ஆசிரியர்கள் மூவரும் அக்காலத்திலேயே வாழ்ந்திருந்தனர். முதல் ஏழு சைவத் திருமுறைகளும், திருமூலர் திருமந்திரம், காரைக்காலம்மையார் பாடல்கள், ஐயடிகள் காடவர்கோன் சிவத்தளி வெண்பாக்கள், சேரமான் பெருமாள் நாயனர் பிரபந்தங்கள் முதலியனவும் பல்லவர்களின் காலத்திலேயே தோன்றின. மண், மரம், செங்கல், சுண்ணும்பு முதலியவற்றினுலன்றிப் பல்லவர்களின் காலத்திலேயே முதன்முதற் கருங்கல்லினுல் கோயில்கள் தமிழ்நாட்டில் அமைக்கப்பெற்றன. "செங்கல் சுண்ணும்பு மரம் உலோகம் என்பன இல்லாமல் மும்மூர்த்திகட்கு விசித்திரசித்தன் அமைத்த கோயில் இது" என வரும் மண்டபப்பட்டுக் கல்வெட்டால் இவ்வுண்மை புலனுகும். பல்லவர்களே தமிழ்நாட்டிற் பெருகி வளர்ந்துள்ள பல்லாயிரக் கணக்கான பிற்காலக்கோயில் அமைப்புகளுக்கெல்லாம் மூல காரணர்கள் ஆவர்.

## தமிழ்ப்பெருங் கிளர்ச்சி

பல்லவர் காலத்திலேயே தமிழுணர்ச்சியும், சைவவுணர்ச்சியும் ஒன்றினொன்று பிரிவற விரவிப் பரவத் தொடங்கியது! 'பல்வேறு கொள்கைகளாலும் சூழ்நிலைகளாலும் சிதறுண்டு கிடக்கும் ஒரு நாட்டின் மக்களை அவரவர்கள் பேசும் தாய்மொழியின் வாயிலாகவே ஒன்றுபடுத்திக் கிளர்ந்தெழச் செய்ய முடியும்'* என்னும் மனவியலுண்மையினை யுணர்ந்த நமது சமயாசிரியர்கள் 'நாளும் இன்னிசையால்' தமிழைப் பெரிதும் போற்றிப் பரப்பினர்! அதனால் முதலில் தமிழ்ப் பண்புக்கு மாறுபட்டிருந்த பல்லவர்களும் நாளடைவில் தமிழ்ப்பண்பு தழுவித் தமிழ்வண்ணமாயினர். இசையும் நடனமும் சிற்பமும் ஓவியமும் ஆகிய கலைகளெல்லாம் பல்லவர் காலத்திற் சமயச் சார்போடு பெரிதும் தழைத்தோங்கலாயின. தமிழர் வாழ்வில் இதற்கு முன் எப்போதும் இல்லாத நிலையில் ஒரு பெருங் கிளர்ச்சியும் புத்துணர்ச்சியும் பல்லவர் காலத்திலேயே ஏற்பட்டன.

திருமுறை நூல்களின் தெய்வநலஞ் சான்ற
பெருமைகள்தாம் எல்லையிலாப் பெற்றித்(து)—அருமைமிகும்
நல்ல மறுமலர்ச்சி நூல்களென நாம் அவற்றைச்
சொல்லலாம் உண்மை துணிந்து!

## சைவசித்தாந்த சாத்திரங்கள்

சமயங்கள் வெறும் அறிவாராய்ச்சிக்காரர்களால் உண்டாக்கப்படுவதில்லை. இறைவனிடமும் தம்மிடமும் மாறாத நம்பிக்கை வாய்ந்த அருள்ஞானப் பெருவீரர்களாலேயே சமய

* In any social group, whatever its nature and however large it may be, language plays a role of primary importance. It is the strongest of the bonds uniting the members of the group, and is at the same time the symbol and safeguard of their common life. What instrument can have greater efficacy than language in affirming the individuality of the group? It is their sign of recognition, and their badge of brotherhood. —*J. Vendryes.*

நெறிகள் வகுக்கப்படுகின்றன. அங்ஙனம் வகுக்கப்பெறும் சமய நெறிகளின் உண்மைகளையே பின்வரும் அறிஞர்களும் மெய்யுணர்வாளர்களும் தத்தம் நூல்களாலும் உரைகளாலும் விளக்கத் தலைப்படுகின்றனர். † இவ்வுண்மைக் கேற்ப, நமது சைவ சித்தாந்த சாத்திர நூல்கள் 12–13–14-ஆம் நூற்றுண்டு களில் செம்மையுறத் தோன்றுதற்கு, மூலமுதற் கருவாய் விளங்கித் திகழ்ந்தவை, பல்லவர் காலத்தில் நம் சமயாசிரியர் களால் அருளிச் செய்யப்பெற்ற திருமுறைகளேயாம் எனின், பல்லவர்காலச் சைவத்தின் சிறப்பு நிலை எத்தகையதென நாம் நன்கினிது எண்ணி யுணரலாம்.

**இந்து மதபாட சாலையினில் யான்பயின்றேன் !**
செந்தமிழில் நல்ல சிவநெறியில்—முந்துபெரும்
அன்பார்வம் ஊட்டி, எனை ஆளாக்கும் அப்பள்ளிக்
கென்றுமிக நன்றியுளேன் யான் !

—முருகவேள்.

† Forms of religion are founded, not by philosophers and theologians, with their interpretations and argumentations, but by heroic men of faith—who have faith in God and faith in themselves. The former come later on to justify and sanction what already exists, with their elaborate exegetics, written solely for the learned and thoughtful, not to say the sceptical.

—*Prof. P. Sundaram Pillai*, M.A.

# சோழர் காலச் சைவம்



திரு. ஜி. கலியாணம் அவர்கள், எம்.ஏ., டிப். எக்கான்.
(ஆசிரியர் 'திருக்கோயில்')

## சோழரும் சைவமும்

சுவாமிகள் திருவடிகட்கு வணக்கம். மெய்யன்பர்களே! சமாஜத்தார் எனக்குப் பேசக்கொடுத்த பொருள் 'சோழர்காலச் சைவம்' என்பது. யான் சோழ நாட்டினேன் ஆயினமையின் அப்பொருளைக் கொடுத்தனர் போலும்! அருந்தமிழ் மூதாட்டியான ஔவைப்பிராட்டி "தண்ணீரும் காவிரியே, தார்வேந்தன் சோழனே, மண்ணாவதும் சோழமண்டலமே" என்று போற்றிப் புகழ்ந்தார். இது மூர்த்தி, தலம், தீர்த்தம் என்ற முறையைக் குறிப்பதுபோல் ஒலிக்கிறது. சோழர்காலம் எது, அக்காலத்தே சைவ சமய நிலை எவ்வாறிருந்தது? என்பதைப் பற்றியே யான் உங்கள் முன் பேசவேண்டியது.

சங்ககாலத்திலும் அதற்குப் பின்னரும் சில சோழ மன்னர்கள் இருந்தனர். அவர்கள் காலத்திய சைவத்தைப் பற்றி எனக்கு முன்பேசியவர்கள் பேசிவிட்டார்கள். ஆதலின் அந்தக்காலப் பகுதியில் நான் ஆக்கிரமிப்புச் செய்ய விழைகிறேனில்லை. "மண்ணெலாம் நிகழ மன்னனாய் மன்னும் மணிமுடிச் சோழன் தன் மகளாம் பண்ணினேர் மொழியாள் பாண்டிமாதேவி பாங்கினாற்பணி செய்து" என்று சம்பந்தர் மொழிந்தருளியபடி பாண்டிய நாட்டில் சைவ சமயத்தை நிலைபெறச் செய்த மங்கையர்க்கரசியாரை ஈன்றெடுத்தது சோழநாடு அன்றோ? மணிமுடிச்சோழனின் திருமகளாரே அப்பெரும் பணியைச்செய்தார் என்றால் சோழநாடு சைவத்திற் காற்றிய திருத்தொண்டைப்பற்றிக் கூறவும் வேண்டுமோ? திருமங்கையாழ்வார் திருநறையூர்ப்பதிகத்தில் "எண்டோள் ஈசற்கு எழில் மாடம் எழுபது செய்து உலகாண்ட திருக் குலத்துவளச் சோழன் சேர்ந்த கோயில்" என்றும், "செம்பியன் கோச்செங்கணான் சேர்ந்த கோயில்" என்றும், அப்பர் சுவாமிகள் "பெருக்காறு சடைக்கணிந்த பெருமான் சேரும் பெருங்கோயில் எழுபதினோடெட்டும்" என்றும் கோச்செங்கட்சோழன் மாடக்கோயில்கள் கட்டியதைப் புகழ்ந்து கூறியுள்ளனர். ஆதலின் கோச்செங்கணான் தான் தமிழ் நாட்டில் சிவபெருமானுக்குக் கோயில்கள் பல எடுத்து வழிபடத் தொடங்கிய சோழமன்னன் என்று கூறலாம்.

## பிற்காலச் சோழர் பணியும் மூவர்காலக் கோயில்களும்

நான் பேச எடுத்துக்கொண்ட சோழர்காலம் கி. பி. 846 முதல் கி. பி. 1279 வரையுள்ள 533 ஆண்டுகளே. அக்காலத்தே விஜயாலயன் முதல் மூன்றாம் இராஜேந்திரன் வரையில் சுமார் 20 சோழமன்னர்கள் ஆட்சிபுரிந்தனர். இவர்களை வரலாற்று அறிஞர் பிற்காலச் சோழர்கள் என்று பெயரிட்டிருக்கின்றனர். இவர்களுக்கு முந்திய ஏழு, எட்டாவது நூற்றாண்டுகளிலே அப்பர், சம்பந்தர், சுந்தரர் ஆகியவர்களின் தேவாரத்திரு முறைகள் நாடெங்கிலும் பரவியிருந்தன. அவர்களால் பாடப் பெற்ற திருத்தலங்கள் 275 ஆகும்; வைப்புத்தலங்கள் பல; பல்லவர்கள் எடுத்த பாடல்பெறாத கோயில்கள் சில. எல்லா மாகச் சுமார் 400 சிவன்கோயில்கள் மூவர் காலத்திலே இருந்

திருக்க வேண்டுமென்றும் ஆராய்ச்சியாளர்கள் கூறுகின்றனர். அவைகள் மண், மரம், செங்கற்களால்தான் கட்டப் பெற்றிருந்தன. திருவாரூரிலிருக்கும் 'பரவையுண்மண்தளி' என்ற பாடல்பெற்ற கோயிலின் பெயரே இதற்கு ஒரு சான்ருகக் கூறலாம். குடைகோயில்கள், கற்கோயில்கள் இவைகள் பல்லவர் காலத்தேதான் தொடங்கப்பெற்றன. பின் வந்த சோழமன்னர் எண்ணிறந்த கோயில்களைக் கருங்கற்களைக் கொண்டு கட்டினர்.

சோழர் காலத்தில் சைவ சமய நிலையை நாம் அறிந்து கொள்ளப் பெரிதும் உறுதுணையாயிருப்பவை கோயில் திருப்பணிகள், அவைகளில் பொறித்து வைக்கப்பெற்ற கல்லெழுத்துக்கள், செப்பேடுகள், அக்காலத்தெழுந்த நூல்கள், நாடெங்கும் பரவியிருந்த திருமடங்கள் என்பனவே.

## சோழநாடே கோயில்கள் மிக்கது

இந்தச் சோழர்கள் ஆண்ட நாடு சற்றேறக்குறைய வடக்கே துங்கபத்திரை முதல் தெற்கே குமரிமுனை வரை இருந்த நாடாகக் கொள்ளலாம். உலகத்திலேயே கடவுளருக்குக் கோயில்கள் நிறைந்தது நம் பாரத நாடு; அதிலும் தென்ருட்டில் அதிகமான கோயில்கள் உள்ளன; அதிலும் சிறப்பாகச் சோழநாட்டைக் காட்டிலும் எண்ணிறந்த கோயில்கள் உள்ள தமிழ்நாட்டுப் பகுதி வேருென்றில்லை யென்று கூறினும் மிகையாகாது. சோழநாட்டில் மாத்திரம் சுமார் 3000 சிவாலயங்கள் இருக்கிறதென்ருல் சோழர்காலச் சைவ சமய நிலைமையின் பெருமை விளங்குகிறதல்லவா? சோழ மன்னர்கள், அரசிமார்கள், அவர்களின் இளவல்கள், அவர்களின் கீழிருந்த குறுநில மன்னர்கள், அமைச்சர்கள், சேனைத்தலைவர்கள், அரசாங்க அலுவலர்கள், வணிகக் குழுவினர், ஊர்ச்சபையார், தனித்தொண்டர்கள் இவர்கள் எல்லாம் கோயில் திருப்பணிகள் எண்ணிறந்தன செய்தார்கள். அரண்மனையில் அந்தப்புரத்தில் வேலைபார்த்த திருமஞ்சன வேளத்தார் (Bathing establishment) அடுக்களைப்பெண்டிர் இவர்கள்கூட பல திருப்பணிகளைச் செய்தார்கள் என்ருல், அக்காலத்தே மக்களிடம் சைவசமயப்பற்று எவ்வளவு ஓங்கி யிருந்தது என்று விளங்குகிறது. சோழமன்னர்கள் அனைவரும்

சிறந்த சிவபக்தியுடையவர்கள். சிவபெருமானிடம் அழுந்திய பேரன்பும், சைவ சமயப் பற்றும் மிகுதியுள்ளவர்களாயினும், பிற சமயங்களிடம் காழ்ப்பின்றி ஒப்ப நோக்கும் பெருந்தன்மை யுடையவர்கள். 'விரிவிலா அறிவினோர்கள் வேறொரு சமயஞ் செய்து எரிவினால் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்' என்ற அப்பர் பெருமான் திருவாக்கை மெய்ப்பித்தவர்கள். அவர்கள் பௌத்த சமண வைணவக் கோயில்களுக்குச் செய் திருக்கும் திருப்பணிகளே அதற்குச் சான்றாகும். இந்திய வரலாற்றுப் பேராசிரியரான வின்சென்ட் ஸ்மித் என்பார்: "சோழமன்னர்கள் எல்லாருமே சிறந்த சிவ பக்தர்கள்; என்றாலும் மற்ற சமயங்களிடத்துப் பொறையுடையவர்கள்" என்று கூறியிருக்கிறார். "The Chola Kings apparently without exception were votaries of the God Siva, but as a rule, were tolerant of the other sects in the normal Indian manner." (*Vincent Smith's History of India.*)

## விஜயாலயன் ஆதித்தன்

பிற்காலச் சோழர் ஆட்சியைச் சோழநாட்டில் முதல் முதலில் நிலைநாட்டியவன் விஜயாலயன். தஞ்சையைத் தலைநகராகக் கொண்டு அங்கே கொற்றவை (நிசும்ப சூதனி)க்கு ஒரு கோயில் கட்டினான் என்று திருவாலங்காட்டுச் செப்பேடு கூறுகிறது. நார்த்தாமலை விஜயாலயசோழேச்சுரம் அவன் கட்டியதே. அவனுடைய மகன் ஆதித்த சோழன் காவிரி யாற்றின் இரு கரையிலுமுள்ள பல சிவன் கோயில்களைக் கற்றளியாக்கினான் என்பது அன்பிற் செப்பேடுகளால் அறியக் கிடக்கின்றது. அவன் திருப்புறம்பயத்தில் எடுத்த 'ஆதித் தேச்சுரம்' முதன்மை வாய்ந்தது. திருவெறும்பியூர்க் கோயிலை யும் அவனே கற்றளியாக அமைத்தான்; தில்லைச் சிற்றம்பலத் தின் முகட்டைப் பொன்வேய்ந்தான்.

## பராந்தகன் முதலியோர்

ஆதித்தசோழன் மகன் பராந்தகன். அம்மன்னன் தில்லைக் கூத்தனிடம் எல்லையிலாப் பேரன்புடையவன். திருச்சிற்றம்பலத்தைப் பொன்வேய்ந்தான்; திருவிடை

மருதூர், திருவாவடுதுறை, திருச்செந்துறை, உறுமூர் முதலிய ஊர்க்கோயில்கள் கற்றளிகளாக்கப்பட்டன. பராந்தகன் மூத்த மகனுன இராஜாதித்தன் சுந்தரர் பிறந்த திருநாவலூரில் புதிய கோயிலைக் கட்டினுன். அது இராஜாதித்தேச்சுரம் என்று அழைக்கப்பெற்றது. அவனுடைய தம்பியே கண்டராதித்தர் என்ற சிறந்த சிவனடியார். திருப்பழனத் தருகே கண்டராதித்தச் சதுர்வேதி மங்கலம் என்ற ஊரை உண்டாக்கிக் கண்டராதித்தவிண்ணகரம் என்ற திருமால் கோயிலையும், தென் ஆர்க்காடு மாவட்டத்தில் பள்ளிச்சந்தல் என்ற ஊரில் கண்டராதித்தப் பெரும்பள்ளி என்ற சமணப் பள்ளியும் அமைத்தார் என்பதால் இவருடைய சமய சமரசப் பண்பு தெரிகிறது. இவர் சிவஞான கண்டராதித்தர் என்றே வழங்கப்பட்டார்.

## செம்பியன் மாதேவியார்

கண்டராதித்தர் மனைவியார் செம்பியன் மாதேவியார். தம்பியார் உளராகவேண்டுமென்ற தயவினுல் உயிர்வாழ்ந்த தூண்டுதவ விளக்கனைய திலகவதியாரை இந்த அரசியார் நினைவூட்டுகின்றனர். இளமையிலேயே கணவனுரைப் போரில் இழந்த இவ்வம்மையார் குழந்தையாக இருந்த தம் ஒரே அருமைச் சிறுமகன் உத்தமசோழனுக்காக உயிர்தாங்கி நின்ருர். தம் வாழ்நாள் முழுவதும் சிவப்பணியிலேயே செல விட்டார். இந்த அரசியார்போல அறச்செயல்கள் புரிந்த வேறெந்த மன்னன் மனைவியையும் இந்திய வரலாற்றில் காண்பதரிது. திருத்துருத்தி, திருக்கோடிகா, திருவாரூர், திரு அரநெறி, திருவக்கரை, திருமுதுகுன்றம், தென் குரங்காடு துறை, திருநாங்கூர், திருமணஞ்சேரி, திருநல்லம் இந்தக் கோயில்களைக் கற்றளிகளாக்கினுர். நாகைக்கருகில் செம்பியன் மாதேவி என்ற பெயரால் ஒரு ஊர் உண்டாக்கி அங்கே ஒரு கோயிலையும் கட்டினுர். கோனேரிராஜபுரம் என்று வழங்கும் திருநல்லத்தில் ‘கண்டராதித்தம்’ என்ற சிவன்கோயில் எடுப்பித்து அதில் தம் கணவனுர் சிவலிங்கத்தை வழிபடுவது போன்ற ஒரு படிமத்தை அமைத்திருப்பது அவருடைய பதி பக்தியைக் காட்டுகின்றது. அவ்வுருவத்தின் கீழே “கண்டராதித்ததேவர் தேவியார் மாதேவடிகளான செம்பியன் மாதேவி

யார் தம்முடைய திருமகனுர் உத்தமசோழர் திரு ராச்சியம் செய்தருளா நிற்க, தம்முடையார் கண்டராதித்த தேவர் திரு நாமத்தால் திருநல்லமுடையார்க்குத் திருக்கற்றளி எழுந் தருளுவித்து இத்திருக்கற்றளியிலேயே திருநல்லமுடையாரைத் திருவடி தொழுகின்முராக எழுந்தருளுவித்த ஸ்ரீ கண்டராதித்த தேவர் இவர்" என்ற கல்லெழுத்து காணப்படுகிறது. எவ்வளவு பணிவுடன் இது பொறிக்கப்பெற்றிருக்கிறது என்பதைக் காணுங்கால் நாமெல்லாம் இறும்பூதெய்துகிரேம். இந்த அரசியார் தன் மாமனுர் பராந்தகன், கணவன் கண்டராதித்தர், கொழுந்தன் அரிஞ்சயன், கொழுந்தன் மகன் சுந்தரசோழன், தம் மகன் உத்தமசோழன், சுந்தரசோழன் மகன் முதல் இராஜ ராஜன், அவன் மகன் முதல் இராஜேந்திரன் இவர்களுடைய ஆட்சிக் காலத்தில் சுமார் 60 ஆண்டுகட்குமேல் உயிர்வாழ்ந் தனர். கி. பி. 1001-ல் (அதாவது முதல் இராஜராஜன் ஆட்சி யில்) திருவக்கரைக்கோயிலைக் கற்றளியாக்கினுர் என்று கல் வெட்டு கூறுகிறது. கி. பி. 1020-ல் முதல் இராஜேந்திரன், இவர் உருவத்தைச் செம்பியன் மாதேவி கோயிலில் நிறுவினுன் என்றுல், அதற்கு 4, 5 ஆண்டுகள் முன் அவ்வரசியார் உலக வாழ்க்கை நீத்திருக்கவேண்டும். உத்தமசோழன் மனைவிமார் செம்பியன்மாதேவி கோயிலில் நாள் வழிபாட்டிற்கும், திங்கள் விழாக்களுக்கும் இவர்பேரால் நிபந்தங்கள் ஏற்படுத்தினுர் களென்று தெரிகிறபடியால், அவர்கள் கணவனுரைத் திருவயிறு வாய்த்த மாமியாரிடம் அவர்களுடைய பேரன்பு புலனுகிறது. முதலாம் இராஜராஜன் திருமுக்கூடலில் செம்பியன் மாதேவிப் பெருமண்டபம் எழுப்பினுன் என்பதிலிருந்து தன் பாட்டியா ரிடம் இவன் காட்டிய பேரன்பும் பெருமதிப்பும் தெரிகிறது. இந்த அரசியார் பார்வையில் வளர்ந்த இளவரசர்கள் சிவத் தொண்டில் ஈடுபட்டார்கள் என்று கூறுவதில் வியப்பொன்று மில்லையல்லவா? இந்த அரசியாரின் புகழ் தமிழ்நாட்டு வானத்தில் தாரகை நடுவே தண்மதியமெனக் குன்முப்பேரொளி பரப்பி என்றும் நின்றும் நிலவும் என்பதில் ஐயமுண்டோ?

## அரிஞ்சயன், சுந்தரசோழன்

இவருடைய தம்பி அரிஞ்சய சோழன் இவருக்குப் பின்னர் ஆட்சிக்கு வந்தான்? இவன் மனைவி பூதி ஆதித்தபிடாரி

யென்பவள் திருச்செந்துறைக் கோயிலைக் கற்றளியாக்கினாள். அரிஞ்சயனுக்குப் பிறகு அவன் மகன் இரண்டாம் பராந்தகனை சுந்தரசோழன் பட்டத்துக்கு வந்தான். வீர சோழியத்தில் வரும் மேற்கோள் பாடல்களால் இவன் சிவ பக்தன் என்றும், மற்ற சமயங்களை ஆதரித்தவன் என்றும் தெரிகிறது. இவன் ஆட்சிக் காலத்தில் மக்கள் துன்பத்தால் 'ஆ' என்று ஓலமிட்டு அரற்றினர் இல்லை. அதற்குமாறாக அவர்கள் சிவபெருமானை வணங்குங்கால் கூறிய 'அர' என்ற திருநாமத்தின் பெருமுழக்கம்தான் கேட்டது என்று திருவாலங்காட்டுச் செப்பேடு புகழ்ந்து கூறுகிறது.

செம்பியன் மாதேவியாரின் மைந்தன் உத்தம சோழன் காலத்தில் அதிகாரியாக இருந்த விக்கிரம சோழ மாராயன் என்பான் கோவந்த புத்தூரிலுள்ள திருவிசயமங்கைச் சிவன் கோயிலைக் கற்றளியாக்கினான்.

சுந்தரசோழன் மகனே முதலாம் இராஜராஜன். இவன் எடுப்பித்த தஞ்சைப் பெருவுடையார் திருக்கோயில் வானுற ஓங்கி அவன் புகழுக்கு நிலைக்களனாக விளங்கி நிற்கிறது. 'The Tamil races are the greatest temple builders in the world and the great pagoda at Tanjore is by far the grandest temple in India'.

## தஞ்சைப் பெரிய கோயில்

உலகத்திலேயே தமிழர்களே பெருங்கோயில்களைக் கட்டுவதில் சிறந்தவர்கள். தஞ்சைப் பெரிய கோயில் இந்தியாவிலேயே மிக அழகிய கோயில் என்று மேல் நாட்டார் பாராட்டியிருக்கின்றனர். அப்பர் திருவீழிமிழலைத் திருத்தாண்டகத்தில் கூறியிருக்கும் 'தஞ்சைத்தளிக்குளத்தார்' என்ற தளிக்குளம் இக்கோயில் கட்டப்பட்ட இடமென்பர். விமானம் 216 அடி உயரம்; அதன்மேல் உள்ள பிரமரந்திரக்கல் 25½ அடிச் சதுரம்; 80 டன் நிறை. அதன் உச்சியிலுள்ள செப்புக்கலசம் 3083 பலம் நிறையுடையது; அதன்மேற் பதித்துள்ள பொன் 2926½ கழஞ்சு எடை இருக்கிறது. கோயிலில் உள்ள பெரிய இலிங்கத்தைக் கருவூர்த்தேவர் துணைகொண்டு பிரதிஷ்டை செய்யப்பட்டது. ஒரே கல்லால் ஆன நந்தி 12 அடி உயரம், 19½ அடி நீளம், 8¼ அடி அகலம். நாகப்

பட்டினத்தில் கடாரத்தரசனுல் எடுக்கப்பெற்ற புத்தவிகாரத்திற்கு இராஜராஜப் பெரும்பள்ளி என்று பெயர். தஞ்சைக் கோயிலிலும் புத்தபடிமங்கள் உள்ளன. மணலூரில் ஜயங்கொண்ட சோழவிண்ணகரம், தலைக்காட்டுக்கருகில் இரவிகுல மாணிக்க விண்ணகரம் என்ற திருமால் கோயில்களை எடுப்பித்தான். இதிலிருந்து இவனுடைய சமயப்பொறை விளங்குகிறது. இவன் ஆட்சிக் காலத்தில் இவன் பட்டத்தரசி உலோகமாதேவி, திருவையாற்றில் உலோகமாதேவீச்சரம் என்ற கோயிலைக் கட்டினுர்; சேனுபதி கிருஷ்ணன் இராமன் என்பான் தஞ்சைப் பெரிய கோயில் திருச்சுற்றுமாளிகையை அமைத்தான்; தென்னவன் மூவேந்தவேளான் அக்கோயிலில் அப்பர், சம்பந்தர், சுந்தரர், பரவையார், மெய்ப்பொருள் நாயனுர் இவர்களுடைய திருவுருவங்களை எழுந்தருளுவித்தான். இராஜராஜன் தன் மூதாதையான அரிஞ்சயச் சோழன் நினைவுச் சின்னமாக மேல்பாடியில் 'அரிஞ்சயேச்சுரம்' என்ற கோயிலை எடுப்பித்தான். ஈழ மண்டலமும் இவன் ஆட்சிக்குட்பட்டிருந்தது. அவன் தலைவன் ஒருவனுல் மாதோட்டத்தில் இராஜராஜேச்சுரம் என்ற சிவாலயம் எடுப்பித்தான். இது தான் பாடல்பெற்ற பதியான திருக்கேதீச்சுரம் என்பது.

## கங்கை கொண்ட சோளேச்சுரம்

இராஜராஜனின் வீரப்பெருமகன் முதல் இராஜேந்திர சோழன். சோழ மன்னர் ஆட்சியிலேயே இவன் காலத்தில் தான் தமிழ்நாடு பலவகையாலும் மிகவும் உயர்ந்த நிலையில் இருந்தது. தஞ்சைத் தலைநகரைக் கங்கை கொண்ட சோழபுரத்திற்கு மாற்றினுன். கங்கைகொண்ட சோளேச்சுரம் என்ற பெரிய சிவன் கோயிலைக் கட்டினுன். அதன் அடிப்பாகம் 100 அடிச் சதுரம், உயரம் 170 அடி; 9 நிலைகளையுடையது; சிற்ப அமைப்பில் மிகச் சிறந்தது. அவனுடைய ஆட்சி கடல் கடந்து கடாரம் முதலிய நாடுகளில் சென்றது. அதனுல் அங்கேயெல்லாம் சைவ சமயம் பரவ ஏதுவாயிருந்தது. சயாம் தேசத்து மன்னர் முடிசூட்டு விழாவில் 'லோரிய்பாவாய்' என்று பாலிமொழியில் திருவெம்பாவை பாடப்பெறும் வழக்கம் ஏற்பட்டதை இங்கே நினைவூட்டுகிறேன்.

## இராஜேந்திரன் பரம்பரை

இராஜேந்திரன் மூத்த மகன் முதல் இராஜாதிராஜன். மன்னார்குடியில் ஐயங்கொண்ட சோழேச்சுரம், இராஜராஜேச்சுவரம் இவைகளைக் கட்டினான். குடந்தைக்காரோணம் கோயிலைப் புதுப்பித்தான். அவனுடைய தம்பி இரண்டாம் இராஜேந்திரன். இவன் காலத்தில் அரசாங்க அலுவலராயிருந்த செம்பியன் மூவேந்தவேளான் திருவாரூர்க் கோயில் கர்ப்பக்கிரகம், 'அர்த்தமண்டபம் இவைகளைப் பொன்வேய்ந்தான். முதல் இராஜேந்திரனின் மற்றொரு மகன் வீர ராஜேந்திரன். இவன் ஆட்சிக் காலத்தில் இராஜேந்திர மூவேந்த வேளான் என்ற அரசியல் அலுவலன் திருவொற்றியூர்ப் படம் பக்கநாதர் கோயிலைக் கற்றளியாக்கினான். வீரராஜேந்திரன் மகன் அதிராஜேந்திரன். திருவக்கரையிலுள்ள வரதராஜப் பெருமான் கோயிலைக் கற்றளியாக்கினான். இதனால் சமய சமரசப்போக்கு விளங்குகிறது.

## முதற் குலோத்துங்கன்

'இவனுக்குப் பின்னர் சோழப் பேரரசை ஏற்றவன் கங்கை கொண்ட சோழனான முதல் இராஜேந்திரன் மகள் அம்மங்கை தேவியின் புதல்வன் முதல் குலோத்துங்கன். 'திருநீற்றுச் சோழன்' என்ற சிறப்புப் பெயர் பெற்றவன். மற்ற சமயங்களிடம் வெறுப்பில்லாதவன் என்பது வைணவ, சமண, பௌத்த கோயில்கள் பலவற்றில் இவனுடைய கல்வெட்டுக்கள் காணப்படுவதால் அறியலாம். மேலும் மன்னார்குடி இராஜ கோபாலசுவாமி கோயில் இவன் காலத்ததே. இவனுக்குச் சப்தம விஷ்ணுவர்த்தனன் என்ற பெயரும் இருந்ததென்றால் இவனுடைய சமயப் பொறையைக்கூறவும் வேண்டுமோ! சூரியனார் கோயிலைக் கட்டினான். இவன் ஆட்சிக் காலத்தில் படைத்தலைவன் குலோத்துங்க சோழ கேரளராசன் என்பவன் கோட்டாற்றில் இராஜேந்திர சோழேச்சுரம் என்ற கோயிலை எடுப்பித்தான். மற்றொரு படைத்தலைவன் நரலோகவீரன் என்ற காலிங்கராயன் தில்லைப்பேரம்பலத்தில் செப்போடுவேய்ந்ததும், திருஞான சம்பந்தர் கோயிலுக்குப் பொன்வேய்ந்ததும், நூற்றுக்கால் மண்டபம், திருச்சுற்று மாளிகை, தேவார மண்டபம், சிவகாம கோட்டம் கட்டியதும், திருவதிகைத் திருக்கோயில்

பொன்வேய்ந்ததும், காமகோட்டம் எடுப்பித்ததும், நூற்றுக் கால் மண்டபம், நடராசப்பெருமானுக்கு ஆடரங்கு, அப்பரடி களுக்குத் தனிக்கோயில் இவைகள் அமைத்ததும் செயற்கரிய செயல்களாகும். மூவர் தேவாரத்தையும் செப்பேடுகளில் எழுது வித்துத் தில்லையம்பதியில் சேமித்துவைத்தது இப்பெரு வீரனின் சிவபக்தி மாண்பை விளக்குகிறது. இன்னும், அர சியல் அதிகாரியான இலங்கேசுவரன் என்பான் மேலப்பழுவூரி லிருந்த செங்கற் கோயிலைக் கற்றளியாக்கிக் குலோத்துங்க சோழேச்சுரம் என்று பெயரிட்டான்.

## குலோத்துங்கன் பரம்பரை

முதற் குலோத்துங்கன் மகன் **விக்கிரமசோழன்.** இவன் தில்லைச் சிற்றம்பலம் சூழ்ந்த திருச்சுற்றுமாளிகை, கோபுர வாயில் இவைகளைப் பொன்வேய்ந்தான். நூற்றுக்கால் மண்டபம் கட்டினான். திருவிக்கிரமன் திருவீதியும் அமைத் தான். விக்கிரமசோழன் மகன் **இரண்டாம் குலோத்துங்கன்** தந்தை தொடங்கிய தில்லைத்திருப்பணிகளைத் தொடர்ந்து முடித்தான். எழுநிலைக் கோபுரங்கள் எடுத்தான். பேரம்பலம் பொன்வேய்ந்தான். சிவகாமியம்மை கோயிலைப் பெரிதாக அமைத்தான். சிவகங்கை என்னும் திருக்குளத்தை வெட்டி னான். இவனைத் திருவாரூர்க் கல்வெட்டொன்று 'தில்லைக் கூத்தப்பிரான் திருவடித்தாமரையிலுள்ள அருளாகிய தேனை உண்ணும் வண்டு போன்றவன்' என்று கூறுவதிலிருந்து இவனது சிவனடிப் பேரன்பு விளங்குகிறது.

இரண்டாவது குலோத்துங்கன் மகன் **இரண்டாம் இராஜ ராஜன்.** கும்பகோணத்திற்கருகில் தாராசுரம் என்று இப் போது வழங்கும் இராஜராஜேச்சுரம் என்ற கோயிலை எடுப் பித்தவன். அது ஒப்பற்ற அற்புதச் சிற்பவேலைப்பாடுகள் நிறைந்தது. அறுபத்துமூன்று நாயன்மார் வரலாற்றுச் சிற்பங் களையும் 108 சைவாசாரியர் படிமங்களையும் அக்கோயிலில் அமைத்தான். இவன் தந்தை தில்லையில் திருமாலைக்கடலில் கிடத்தியமையால் மனம் புண்பட்ட வைணவர்களுக்கு ஆதர வளித்ததை 'விழுந்த அரிசமயத்தையும் மீள எடுத்தனன்' என்று இவன் மெய்க்கீர்த்தி கூறுகின்றது. மலையமலைப்பக்கத் தில் அடைப்புண்டு காவிரித் தண்ணீர் வராமல் தடைப்பட்ட

தைக் கண்டு மலையை வெட்டிக் காவிரிக்கு வழிசெய்தான். 'மலை கொன்று பொன்னிக்கு வழிகண்ட கண்டன்' என்று தக்கயாகப் பரணியிலும், 'சுழியிட்ட காவிரிக்குச் சோழநாடு வாழ வழி யிட்ட'வன் என்று இராஜராஜ சோழனுலாவிலும் புகழப்பட் டிருக்கின்றான்.

விக்கிரம சோழனின் பேரனை இரண்டாம் இராஜாதி ராஜன் காலத்தில் அவன் அதிகாரிகளில் ஒருவனை கண்டர் சூரியன் சம்புவராயன் என்பான் திருவக்கரையில் சூரியன் திருக்கோபுரம் என்ற கோபுரத்தைக் கட்டினான். இராஜாதி ராஜனுக்குப் பின் அரசேற்றவன் மூன்றும் குலோத்துங்கன். திருவிடைமருதூர்க் கருகிலுள்ள திரிபுவன வீரேச்சுரம் என்ற பெருங்கோயிலை எடுத்தான். காஞ்சி ஏகாம்பரநாதர் கோயில், மதுரைச் சிவன் கோயில், திருவிடைமருதூர்க் கோயில், தாராசுரம் ஐராவதேசுரர் கோயில், திருவாரூர்ப்பூங் கோயில், தில்லைமுகமண்டபம், கோபுரம், அம்மன் திருச்சுற்று முதலிய பல திருப்பணிகளைச் செய்தான். தில்லைச் சிற்றம்பல வாணனின் 'ஏகபத்தன்' என்றும், 'நம் தோழன் திரிபுவன வீரதேவன்' என்றும் இவனைச் சிவபெருமான் குறிப்பிட்டதாகக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன. மூன்றும் குலோத்துங்க னுக்குப் பிறகு அவன் மகன் மூன்றும் இராஜராஜனும், பின்னர் அவன் மகன் மூன்றும் இராஜேந்திரனும் சோழநாட்டை ஆண்டார்கள். சைவசமயப் பற்றும், சமயப்பொறையும் உடையவர்கள். மூன்றும் இராஜேந்திரனுடன் சோழர் ஆட்சி கி. பி. 1279-ல் வீழ்ச்சியுற்றது.

## சோழர்காலச் சைவ இலக்கியப் பணிகள்

### திருவிசைப்பா

இனி, சோழர் காலத்தில் எழுந்த நூல்களைப்பற்றி ஒருவாறு கூறலாம் என்று எண்ணுகிறேன். கண்டராதித்த சோழர் தில்லைப்பதியைப்பற்றித் திருவிசைப்பாவில் ஒரு பதிகம் பாடி யுள்ளார். ஒன்பதாம் திருமுறையில் அது இடம் பெற்றிருக் கிறது. 'ஆரா இன் சொல் கண்டராதித்தன் அருந்தமிழ் மாலை வல்லார் பேராவுலகிற் பெருமையோடும் பேரின்பம் எய்துவரே' என்று கூறுகிறார். தன் தந்தை சிற்றம்பலத்தைப் பொன் வேய்ந்ததையும் அதில் குறித்துள்ளார். சுந்தரசோழன்

காலத்திருந்த (பெயர் தெரியாத) ஒரு புலவர் இவன் சமயப் பற்றைச் சிறப்பித்துப் பாடியிருக்கிறார். இரண்டு பாடல்கள் வீரசோழியத்தில் மேற்கோளாக எடுத்துக் காட்டப்பட்டிருக் கின்றன.

## நம்பியாண்டார் நம்பிகளின் பிரபந்தங்கள்

முதலாம் இராஜராஜன் திருநாரையூர் நம்பியாண்டார் நம்பியைக்கொண்டு தில்லையில் அடைபட்டிருந்த மூவர் பாடிய தேவாரங்களை எடுத்து அவர் உதவியால் ஏழு திருமுறைகளாக வகுத்தான். அவைகளுக்குத் திருநீலகண்ட யாழ்ப்பாணர் மரபில் வந்த பெண் ஒருத்தியைக்கொண்டு பண்களையும் அமைக்கச் செய்தான். இவன் 'திருமுறைகண்ட சோழன்' என்றும் 'சிவபாத சேகரன்' என்றும் போற்றப்படுகிறான். நம்பியாண்டார் நம்பி பத்துச் சிறுநூல்களைப் பாடியுள்ளார். பின்னர்ச் சேக்கிழார் பெரியபுராணம் எழுத அடிப்படையாக இருந்த 'திருத்தொண்டர் திருவந்தாதி' அவைகளுள் ஒன்று. 'இராஜராஜ விஜயம்' என்ற வரலாற்று நூலும், 'இராஜ ராஜேசுவர நாடகம்' என்ற நாடக நூலும் இருந்தனவாகக் கல்லெழுத்துக்களில் காண்கிறோம். அவை இப்போது கிடைக்க வில்லை.

## கருவூர்த்தேவர் பாடல்கள்

இராஜராஜன் காலத்திலும் இராஜேந்திரன் காலத்திலும் வாழ்ந்த கருவூர்த்தேவர் திருவிசைப்பாவில் பத்து பதிகளைப் பத்து பதிகங்களால் பாடியுள்ளார். அவை இனிமையுடையன; பக்தியும் விளைப்பன. அவர் பாடிய தலங்களில் இரண்டு தஞ்சை இராஜராஜேச்சுரம், கங்கைகொண்ட சோழேச்சுரம் என்பன. கருவூர்த்தேவரின் திருவிசைப்பா ஒன்பதாம் திரு முறையில் இடம்பெற்றுள்ளது.

## கலிங்கத்துப்பரணியும் தில்லையுலாவும்

கலிங்கம் வென்று தரணிகொண்டு பரணி கொண்டவன் முதற் குலோத்துங்கன். 'ஜயங்கொண்டார்' என்ற புலவர் பெருமானார் அவன் படைத் தலைவனான கருணாகரத் தொண்ட மானின் வீரச்செயல்களைப் புகழ்ந்து பாடும் நூல் கலிங்கத்துப் பரணி என்னும் ஈடும் எடுப்புமில்லாத நூல். பரமமாகேசுவரன்

என்றும் குலோத்துங்கன் அழைக்கப்படுகிறன். ஆசிரியர் பெயர் தெரியாததனுல் தில்லையுலா என்ற நூல் ஒன்று இவன் காலத்ததாக இருக்கலாம். அதில் தில்லைக்கூத்தப்பெருமான் திருவீதிவலம்வரும்போது சமயகுரவர்களை முன் எழுந்தருளச் செய்து அதற்கு முன் அவன் குதிரைமேல் சென்றுன் என்று கூறப்படுகிறது. ஒருநாளில் மனிதன் விடும் 21000 மூச்சு களைக் குறிக்க அவ்வளவு பொன் ஓடுகள் இருப்பதாகவும், அவை ஒவ்வொன்றிலும் திருவைந்தெழுத்து பொறிக்கப்பெற்றிருப்ப தாகவும், மனித உடலின் 72000 நரம்புகளைக் குறிக்க 'ஓம்' என்ற எழுத்துக்களுடன் அவ்வளவு ஆணிகள் அறையப் பெற்றிருக்கின்றன என்றும் அந்நூல் கூறுகிறது. நெற்குன்ற வாணர் என்பார் திருப்புகலூர் அந்தாதியியற்றினுர். திருநாராயண பட்டர் என்பார் குலோத்துங்க சோழன் சரிதை என்பதை எழுதினுர். அது இப்போது கிடைக்கவில்லை. இன்னும் வீரைப் பரசமய கோளரி மாமுனிவர் என்பவர் கன்னி வன புராணம் (திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்), பூம்புலியூர் நாடகம் என்ற நூல்களை இயற்றினுர். அவைகளும் இப்போது கிடைக்கவில்லை. திருவல்லத்து ஈசன்பேரில் பாடப்பெற்ற வல்லை அந்தாதி இவன் காலத்ததே.

## ஒட்டக்கூத்தர் நூல்களும், சித்தாந்த நூல்களும்

விக்கிரமசோழன் அவைக்களப் புலவர் கவிஞர்பெருமான் ஒட்டக்கூத்தர் விக்கிரமசோழனுலா பாடினுர். தக்கயாகப்பரணி என்ற நூலையும் யாத்தார். இந்தக் கவிச்சக்கரவர்த்தியே இரண்டாங் குலோத்துங்கன் மீது பிள்ளைத்தமிழும், உலாவும், இரண்டாம் இராஜராஜன்மீது உலாவும் பாடியுள்ளார். இவன் காலத்தே கி. பி. 1147-ல் திருவியலூர் உய்யவந்த தேவ நாயனுர் திருவுந்தியார் என்ற சித்தாந்த நூலை இயற்றினுர் என்பர். இரண்டாம் இராஜாதிராஜன் காலத்தில் கி. பி 1177-ல் திருக்கடவூர் உய்யவந்த தேவநாயனுர் திருக்களிற்றுப் படியார் என்ற சைவ சித்தாந்த நூலை அருளினுர்.

## பெரியபுராணம்

இரண்டாம் குலோத்துங்கனே சேக்கிழாரடிகளைக் கொண்டு பெரியபுராணம் பாடச்செய்த பெருந்தகை. சைவ மெய்யடியார்கள் அறுபத்துமூவரின் அற்புதச் செயல்களைக்

கூறுவது இப்பெருநூல். இது கற்பனைக்களஞ்சியம்; வரலாற்றுக் கருவூலம்; காவியச்சோலை; ஓவியச்சாலை; பல்கலைக் கூடம்; பக்திப் பெருவெள்ளம்; இலக்கிய இன்பத்தேன்; தெய்வீகவைப்பு. இன்னும் என்னென்ன புகழ்மொழிகளால் கூறினாலும் பல்லாற்றானும் பொருந்தும்.

## மெய்கண்ட நூல்கள்

மூன்றாம் குலோத்துங்கன் காலத்தில் வத்சராஜன் என்பார் வடமொழியிலிருந்து பாரதத்தைத் தமிழில் மொழிபெயர்த்தார். மூன்றாம் இராஜராஜன் காலத்தில் சைவ சித்தாந்தத் தலைமணி நூலான சிவஞானபோதத்தை மெய்கண்டார் பாடியருளினார். திருவண்ணாமலைக் கோயில் கி. பி. 1232-ஆம் ஆண்டுக் கல்வெட்டொன்றில் மெய்கண்டதேவர் பெயர் காணப்படுகிறது. மெய்கண்டாரின் மாணவரான திருத்துறையூர் அருணந்தி சிவாசாரியார் சிவஞானசித்தியார், இருபா இருபஃது என்ற நூல்களையும், அவருடைய மற்றொரு மாணவரான திருவதிகை மனவாசகங் கடந்தார் உண்மை விளக்கம் என்ற நூலையும் இயற்றியது இக்காலத்தேதான்.

## சோழர்கால இலக்கியங்கள்

இன்னும் சிந்தாமணி, குண்டலகேசி, வளையாபதி என்ற பெருங் காப்பியங்களும், சூளாமணி, நீலகேசி, யசோதர காவியம், உதயணகுமாரகாவியம், நாககுமாரகாவியம் என்ற ஐந்து சிறு காப்பியங்களும், பாரத வெண்பா, கல்லாடம், இராமாயணம், ஈட்டியெழுபது, ஏரெழுபது, அம்பிகாபதிக் கோவை, சடகோபரந்தாதி, கலைமகள் அந்தாதி, குலோத்துங்கன் கோவை, நளவெண்பா, தஞ்சைவாணன் கோவை என்ற நூல்களும், திவாகரம், பிங்கலம் என்ற நிகண்டு நூல்களும், நன்னூல், நேமிநாதம், யாப்பருங்கலம், புறப்பொருள் வெண்பாமாலை, வெண்பாப்பாட்டியல், வச்சணந்திமாலை, வீரசோழியம், தண்டியலங்காரம் முதலிய இலக்கண நூல்களும் பிற்காலச் சோழர்காலத்தில் பல புலவர் பெருமக்களால் இயற்றப்பெற்றன. தொல்காப்பியத்திற்கு இளம்பூரணர் உரையும், சிலப்பதிகாரத்திற்கு அடியார்க்கு நல்லார் உரையும் இக்காலத்தேதான் வகுக்கப்பட்டன.

## சோழர்காலக் கல்வெட்டுக்களும் செப்பேடுகளும்

இனி, சோழர்காலத்திய கல்வெட்டுக்களைப் பற்றியும் அவர்கள் பொறித்துவைத்த செப்பேடுகளைப் பற்றியும் சில சொல்லலாம் என்றெண்ணுகிறேன். தமிழ்நாட்டுக் கோயில் களில் காணப்பெறும் பல்லாயிரக் கணக்கான கல்வெட்டுக்களில் பெரும்பாலானவை பிற்காலச் சோழர் காலத்தவையே. திருவாலங்காடு, ஆனைமங்கலம், அன்பில் முதலிய செப்பேடு களும் இவர்களால் எழுதிவைக்கப்பட்டனவே.

இவைகளில் அரசர்கள், அரசியர், குறுநிலமன்னர், படைத்தலைவர், அரசியல் அலுவலர், ஊர்ச்சபையார், வணிகக் குழு, பொதுமக்கள், அரண்மனைப் பணிப்பெண்கள் முதலியவர் கள் கோயிலில் நாள் பூசைக்கும், திருவிழாவுக்கும், திருப்பணி களுக்கும் நிலம், நெல், பொன், ஆடு மாடுகள் இவைகளை வழங்கியதைக் குறிக்கின்றன. அவைகளில் சிறப்பான சில வற்றைக் கூறுமல் விடமுடியவில்லை. தஞ்சை, திருவெறும்பூர், பழுவூர், திருவாவடுதுறை, நல்லூர், பிரமதேசம், திருவாலந் துறை, குகூர், திருவீழிமிழலை, திருநல்லம், திருவல்லம், கீழை யூர், திருவொற்றியூர், உடையாளூர், துக்காச்சி, திருப்புகலூர், திருவிடைவாய், எண்ணாயிரம் முதலிய ஊர்க்கோயில்களில் தேவாரத் திருப்பதிகம் ஓதுவார்க்கு நிலம், நெல், மனை, உடை முதலியவைகள் வழங்கப்பட்டிருக்கின்றன. இவர்களுடன் உடுக்கை, மத்தளம், தாளம், வீணை முதலிய இன்னிசைக் கருவிவாசிப்போருக்கும் தானங்கள் ஏற்படுத்தப் பெற்றிருக் கின்றன.

## கோயில்களில் நடந்த வியத்தகு பணிகள்

திருக்குகூர் அமரவனீசுவரர் கோயிலில் அரசர் உடல் நலத்திற்காகத் தேவாரம் பாடப்பெற்றதாக அதிராஜேந்திரன் கல்வெட்டு கூறுகிறது. திருவொற்றியூர்க் கோயிலில் திருப்பள்ளி யெழுச்சி பாடவும், திருவாதிரையில் திருவெம்பாவை ஓதவும், தேவாரத் திருப்பதிகம் பாடப் பதினறு தேவரடியார்களுக்கும் வீரராஜேந்திரன் நிலங்கள் வழங்கியிருக்கிருன். முதல் இராஜ ராஜன் தஞ்சைப் பெரிய கோயிலில் தேவாரம் பாடுவோர் 48 பேர்கள், உடுக்கை, கொட்டிமத்தளம் வாசிப்போர் இருவர் ஆக ஐம்பதின்மருக்கு நாள் ஒன்றுக்கு முக்குறுணி (6 படி) நெல்

கொடுப்பதற்கு நிவந்தம் ஏற்படுத்தினான். திருவாமாத்தூரில் திருப்பதிகம் விண்ணப்பிக்கக் குருடர் 16 பேர்களுக்கும், கண் காட்டுவார் இருவருக்கும் ஆகப் பதினறு பேர்களுக்கும் நெல்லுக்காக இரண்டாம் குலோத்துங்கன் காலத்தில் நிலங் களும், புடவை (உடை)க்காகக் காசுகளும் வழங்கப்பெற்றிருக் கின்றன. அக்காலத்திலேயே குருடர்களைப் பாதுகாக்க அரசாங்கம் செய்திருந்த ஏற்பாடு போற்றுதற்குரியது. திருவிடைவாயில் தேவாரத்தை அக்கோயிலிலேயே கல்லெழுத் தாகப் பொறிக்கப்பெற்றிருக்கிறது. அதுவே பாடல்பெற்ற சிவத்தலங்களில் 275-ஆவது சேர்க்கப்பட்டிருக்கிறது. இன்னும் தேவாரத் திருமுறைகளை நரலோகவீரன் செப்பேடுகளில் எழுதித் தில்லையில் சேமித்து வைத்தான். வேறு சில கோயில் களிலும் திருமுறைகளைப் பாதுகாக்கவும் படியெடுக்கவும் பூசை செய்யவும் ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன. கோயில்களில் தேவாரச் செல்வன்குகை, திருஞானசம்பந்தன்குகை என்ற பாதுகாப்பான இடங்களில் வைத்துப் போற்றப்பெற்றன. தேவாரம் கற்பிப்பாருக்குத் 'தமிழ் விரகர்' என்றும், திருமுறை ஓதும் மண்டபத்திற்குத் 'திருக்கைக்கோட்டி மண்டபம்' என்றும் கல்வெட்டுக்கள் பெயர்களை அறிவிக்கின்றன. எல்லா வற்றிற்கும் மேலாகத் தேவாரநாயகம் என்ற அரசியல் அதிகாரி யின் மேற்பார்வையில் இந்தத் துறை ஒப்புவிக்கப்பட்டிருந்த தென்பதை நோக்கத் தேவாரம் கோயில்களில் பாடப்படுவதற் குச் சிறந்த ஏற்பாடுகள் செய்யப்பட்டிருந்தன என்பதும் தெரிய வருகின்றது.

இன்னும் கோயில்களில் பாரதம், இராமாயணம், பிரபாகரம் புராணங்கள், சிவதருமம், சோமசித்தாந்தம் முதலிய நூல்கள் படித்து விளக்கப்பட்டன. இரண்டாம் இராஜராஜன் திரு வொற்றியூர் மகிழடியின் கீழிருந்து பங்குனி உத்தரம் ஆறும் திருநாளில் சுந்தரர் புராணம் கேட்டான். கோயில்கள் கல்விக் கூடங்களாகவும், நாடக அரங்குகளாகவும், நாட்டிய மன்றங் களாகவும், ஊராட்சி மன்றங்களாகவும், சிற்ப ஓவியக் காட்சிச் சாலைகளாகவும், மருத்துவ மனைகளாகவும், மாணவர் விடுதி களாகவும், ஆதுலர் சாலைகளாகவும் பயன்படுத்தப்பட்டன. திருபுவனம், எண்ணாயிரம், திருமுக்கூடல் என்ற ஊர்க்கோயில் களில் பல்கலைக்கழகங்கள் இருந்தன. இங்கே மாணவர்க்கு

உணவும், உறையுளும், தலைமுழுக்கு, விளக்கெரிக்க எண்ணெயும் அளிக்க அரசர்கள் ஏற்பாடு செய்திருந்தனர். திருமுக்கூடற்கோயிலில் இருந்த மருத்துவசாலையில் மருந்து வகைகள், மருத்துவன் (Physician), சல்லியக்கிரியை பண்ணுவான் (Surgeon), நோயாளிகளுக்குத் துணையாகப் பணிமகளிர் (Nurses), 15 படுக்கைகள் முதலியன இருந்ததென்று தெரிகிறது. இதுபோன்ற ஆதுலர்சாலையொன்று திருப்புகலூரில் இருந்ததற்கு மனதுக்கினியான் என்பான் நிலம் வழங்கியுள்ளான். அதே தலத்தில் இப்போது திலகவதியார் இலவசச் சித்த வைத்தியசாலை ஒன்றைக் கோயிலார் நடத்துவது மிகவும் மகிழ்ச்சியைத் தருகின்றது.

## திருமடங்கள்

தமிழ்நாட்டு மடங்களைப்பற்றிச் சில சொல்லிவிட்டு என் பேச்சை முடித்துக் கொள்கிறேன். சங்ககாலத் தமிழர் வாழ்க்கையில் மடங்கள் இடம் பெறவில்லை. அவர்கள் அகத்துறவையே பெரிதென மதித்தார்கள். வடநாட்டிலிருந்து சமணம், பௌத்தம் முதலியவைகள் தமிழ்நாட்டில் பரவியிருந்தன. இந்தப் புறச்சமயங்களோடு சைவம் போர் செய்யத் தொடங்கியது. அந்தப் போரை நிகழ்த்தியவர்கள் இலகுலீச பாசுபதர், காளாமுகர், காபாலிகர் என்ற வடநாட்டுத் தொடர்புடைய சைவத் துறவிகளேயாவர். கோமடம், கோளகி மடம், காபாலிகர் மடம், வீர சைவமடம், வாரணாசிக் கொல்லாமடம், பிட்சாமடம் என்பவை தமிழ் நாட்டில் இருந்தன. அம்மடங்களின் தலைவர்கள் மடபதி என்றழைக்கப்பட்டனர். அவர்கள் அரசர்களுக்குக் குருமார்களாகவும் இருந்தார்கள். இராஜராஜன் குரு ஈசானசிவ பண்டிதர். 'சித்தாந்தசாரம்' என்ற நூலை எழுதியவர். சர்வசிவ பண்டிதர் இராஜேந்திரனின் குரு. சுவாமி தேவர் ஸ்ரீ கண்டசிவன், விக்கிரம சோழனுடைய குருவாக இருந்திருக்கலாம். அவரே 'சிந்தாந்தரத்திணகரம்' என்ற நூலை இயற்றியவர். திரிலோசன சிவாசாரியர் 'சித்தாந்தசாராவளி' என்ற நூலை இயற்றியவர்.

மடங்கள் கல்விச்சாலைகளாகவும், அமுதளிக்கும் அறச்சாலைகளாகவும், அடியார்கள் உறைவிடங்களாகவும், மருத்துவசாலைகளாகவும் பயன்பட்டன. சோழநாட்டில் அக்காலத்தில் இறை

வன், நாயன்மார், அரசர், குறுநிலமன்னர், மற்றும் பல பெயர்களைக்கொண்ட எண்ணிறந்த மடங்கள் இருந்தன. தமிழ்ச் சைவமடங்களும் இருந்தன. திருச்சத்திமுற்றத்து முதலியார் சந்தானம், திருவிடைமருதூர் மாளிகை மடத்து முதலியார் சந்தானம், சென்னபக்குடி முதலியார் சந்தானம், மருதப் பெருமான் சந்தானம் என்ற மடங்களைச் சிறப்பாகச் சொல்லலாம். இந்த மடங்களேயல்லாமல் கோயில்களில் குகை கள் என்ற ஒருவகை மடங்கள் இருந்தன. சைவத்துறவியர் அங்கிருந்தனர். தவசிகள், ஆண்டார்கள், யாத்திரிகர்கள் முதலியவர்களுக்கு உணவளித்தார்கள். தலைவர்களும் அவர்கள் மாணவர்களும் தேவாரத்திருமுறைகளைப் பாடுவதில் வல்லவ ராகவும் இருந்தார்கள். மூன்றும் குலோத்துங்கன் ஆட்சியில், 'குகையிடிகலகம்' சில சுய நலக்காரர்களால் ஏற்பட்டது. ஆனால் அவ்வரசன் காலத்திற்குப் பின்னர்தான் குகைகள் அதிகமாயின என்று கல்வெட்டுக்களால் தெரிகிறது.

## சைவத்தின் பொற்காலம்

பிற்காலச் சோழர் காலத்தில்தான் ஆயிரக்கணக்கான கோயில்கள் கட்டப்பட்டன என்றும், சிறந்த தமிழ்ச்சைவ இலக்கிய நூல்களும், பிறநூல்களும் எழுந்தன என்றும், தமிழ் நாடுமுழுவதும் சைவமடங்கள் பரவியிருந்து சமயத் தொண் டாற்றின என்றும் கூறினேன். கங்கைகொண்ட சோழபுரத் தில் சோழகேரளம், பழையாறையருகில் சோழன் மாளிகை, காஞ்சியில் பொன்மாளிகை போன்ற பெரிய அரண்மனைகளில் சோழமன்னர்கள் வாழ்ந்தார்கள் என்று கல்வெட்டுக்களால் அறிகிறோம். தமக்கென்று கட்டிய அவைகள் எல்லாம் மறைந்து போயின. ஆனால் அவ்வரசர்கள் இறைவனுக்கு எழுப்பிய கோயில்கள் சமயச் சின்னங்களாகவும், மௌனமதப் பாதிரி களாகவும் (Silent missionaries) அன்றும், இன்றும், என்றும் நின்று நிலவுகின்றன. பிற்காலச் சோழர்காலமே சைவசமயத்தின் பொற்காலம். அக்காலம் எக்காலம் வருமோ அப்போதுதான் நம் நாட்டிற்கு நற்காலம். அது என்று வருமோ! இறையருளால் விரைவில் வருவதாக!

**மேன்மைகொள் சைவநெறி விளங்குக உலகமெலாம்.**

# சைவம் வளர வழிகள்



திரு. டாக்டர் மா. இராசமாணிக்கனுர் அவர்கள்,
எம்.ஏ., எல்.டி., எம்.ஓ.எல்., பி.எச்.டி.
(தமிழ்த்துறைத் துணைப் பேராசிரியர்,
சென்னைப் பல்கலைக் கழகம், சென்னை.)

## சிவநெறி

சிவத்தின் தொடர்புடையது அல்லது சிவம் பற்றியது சைவம் எனப்பட்டது. சிவம் என்பது யாது? திருமூலர், "அன்பே சிவம்" என்று அறைந்தனர். எனவே, அன்பை உயிர்நாடியாகக் கொண்ட நெறியே சிவநெறி ஆகும். சிவ பெருமான் நஞ்சினை வெளிப்படுத்தும் அரவங்களைத் தம் உடலிலும் முடியிலும் அணிந்திருத்தலும், நஞ்சினை உட் கொண்டதும் அப்பெருமான் அன்புருவானவன் என்பதையே

அறிவிக்கின்றன. அன்புருவாய அப்பெருமானை அடைவிக்கும் நெறியும் அன்பை அடிப்படையாகக் கொண்டுதானே அமைந் திருத்தல் வேண்டும்?

## சிவநெறியின் பழமை

இச்சிவநெறி காலங்கடந்தது; எப்பொழுது தோன்றியது என்று எடுத்துக்கூற இயலாத தொன்மையை உடையது. உலக வரலாற்றில் பல சமயங்களுக்குக் காலங்கூறல் இயலும். ஆயினும் சிவநெறிக்கு அங்ஙனம் காலங்கூறுதல் இயலவில்லை. சிந்து வெளியிற் கிடைத்த சிவலிங்கங்களை ஆராய்ச்சி செய்த அறிஞர் சர். ஜான். மார்ஷல் அவர்களும், சிவநெறி மிக்க தொன்மையுடையது என்றே கூறியுள்ளார்.[1] உலகம் முழுமை யும் சிவபிரானைக் குறிக்கும் தறிகளும் லிங்கங்களும் கிடைத் துள்ளன என்பது புதைபொருள் ஆராய்ச்சியால் போந்த உண்மையாகும்.

## வளர்ச்சி

அன்பை உயிர் நாடியாகக் கொண்ட சிவநெறி, நாயன்மார் காலத்தில் நன்கு வளர்ந்தது. அரசர்கள் ஆதரவும் அதற்கு நன்கு அமைந்திருந்தது. சிவநெறியில் சமுதாயத்தைப் பாழ் படுத்தும் சாதிவேறுபாடுகள் கவனிக்கப்பட்டில. அக்காலக் கோயில்கள் சைவர் அனைவரையும் வரவேற்றன. இக் காரணங் களால் நாயன்மார் காலத்துச் சைவம் வெள்ளம்போல் பெருக் கெடுத்து நாடு முழுமையும் பரவியது.

---

1 " Among the many revelations that Mohenjo-daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the chalcolithic age or perhaps even further still, and it thus takes its place as the most ancient living faith in the world."—Sir John Marshall in his preface to " Mohenjo-daro and the Indus civiliazation ', Vol. 1. p. vii.

**வளர்ச்சி குன்றல்**

சோழர் காலத்தில் சிவநெறி மேற்போக்கில் நன்கு வளர்ச்சி பெற்றது. ஆயினும் சமைய உயிர் நாடியாகிய அன்பு, சமுதாயத்தில் உண்டான சாதி வேறுபாடுகளாலும் பிறவற்ரு லும் குறைந்துகொண்டே வரத் தலைப்பட்டது. சோழர்க்குப் பின் அயலார் ஆட்சியில் சாதி வேறுபாடுகளும், சமைய வேறு பாடுகளும் வளர்ந்தனவே தவிரக் குறையவில்லை. நாட்டிலும் அமைதியான ஆட்சி இல்லை. இன்ன பிற காரணங்களால் சிவநெறி அன்பு நெறியினின்றும் பிறழத் தொடங்கியது. வட மொழி தமிழகத்தில் செல்வாக்குப் பெற்றது. அதன் பயனாகத் திருமுதுகுன்றம் விருத்தாஜலம் எனவும், திருமறைக்காடு வேதாரண்யம் எனவும் பெயர் மாற்றம் பெற்றன. இறைவன் இறைவி பெயர்களும் மாற்றம் பெற்றன. வழிபாட்டுச் சொற் களும் வடமொழியில் இயங்கலாயின. வடமொழியே புரியாத தமிழ்மக்கள் உள்ளம் அச்சொற்களின் பொருளை உணர்ந்து மன அமைதிபெற வழியில்லை. பின்னூற்ருண்டுகளில் ஓயாத அரசியற்போர்களால் நாட்டின் ஆட்சிமுறை கெட்டது. மக்கள் பல படை எடுப்புக்களுக்கு ஆளாயினர்.

இடித்தல், மழை பெய்தல் முதலிய நிகழ்ச்சிகளைத் தெய்வங்களின் செயல்களாகப் பண்டை மக்கள் நினைத்தனர்; தம்மனம் போனவாறு அவற்றிற்குக் கதைகள் கட்டினர். அக் கதைகள் நாளடைவில் சமையத்திற்குரிய கதைகளாக மாறி விட்டன. இந்நாட்டவர் எகிப்து, சுமேரியா முதலிய நாடுக ளோடு கடல் வாணிகத்தில் தொடர்பு கொண்ட காரணத்தால் அவ்வந்நாட்டுக் கதைகள் சில இங்கும் பரவத் தொடங்கின; இந்நாட்டுக் கதைகள் அந்நாடுகளிற் பரவ வழி ஏற்பட்டது. இதனால் சில கதைகள் பெயரளவில் வேறுபட்டும், பொரு ளளவில் ஒன்றுபட்டும் இம்மூன்று நாடுகளிலும் காணப்படு கின்றன. இத்தகைய பல கதைகள் இதிகாசங்களிலும் புராணங்களிலும் இடம் பெற்றுவிட்டன. அவற்றின் பயனாக, "அன்பே சிவம்" என்பதை அடிப்படையாகக் கொண்ட சைவ சமயம், பௌராணிக சமையமாக மாறிவிட்டது. இம்மாறுதல் நாயன்மார் காலத்தில் தொடங்கியது; ஆயினும், காலப் போக்கில் பல கதைகள் சமையத்துறையில் சேர்க்கப்பட்டு, நவக்

கிரக வழிபாடு போன்ற புதிய தெய்வ வழிபாடுகள் இணைக்கப்பட்டு, பௌராணிக சமையம் வளர்ச்சி பெற்றது. பாமர மக்கள் மிகுந்துள்ள இந்நாட்டில் இக்கதைகளே சமையத்தின் உயிர் நாடியாகக் கருதப்படுகின்றன.[2]

இவற்றைச் சொல்லிப் பிழைப்பவரும் பலராகி விட்டனர். இதனால் அன்பே சிவம் என்ற கொள்கை பாதாளத்திற் புதைக்கப்பட்டு, அதன்மீது அறிவுக்குப் பொருத்தமற்ற கதைகள் கட்டப்பட்டன. இக் கேட்டினால், பெரும்பாலான சைவமக்கள் திருநீறு அணிவதோடு அமைந்தனர்; தீய பழக்கவழக்கங்களைக் கைவிட்டிலர்; சமைய வரலாறும் அறிந்திலர்; திருநீற்றை அணிந்து கொண்டே அடாத செய்கைகளைச் செய்யும் சைவர்கள் பெருகிவிட்டனர்; தம் வீடுகளில் ஒரு மணி நேரம் முதல் மூன்று மணி நேரம் சிவபூசை செய்யும் சிலர் இருக்கின்றனர். இவர்களில் பலர் ஒழுக்கமற்றவர்களாகவும், தீய வழிகளில் பொருள் ஈட்டுபவர்களாகவும் காண்கின்றனர். சமையப் போர்வையில் பலர் செய்கின்ற தீய செயல்களுக்கு அளவில்லை.

ஒரு சைவன் பிற சைவனிடம் அன்பு காட்ட வேண்டும் என்பதையும் மனிதத் தன்மையோடு நடந்துகொள்ள வேண்டும் என்பதையுமே சைவருட் பலர் மறந்துவிட்டனர். கல்விச் செருக்காலும் செல்வச் செருக்காலும் பதவிச் செருக்காலும் சைவர் பலர் தம் சமையத்தைச் சேர்ந்த பிறருடன் பழகுவதும் இல்லை; மதிப்பதும் இல்லை. இத்தகைய பல காரணங்களால் சமுதாயத்தில் சைவர் ஒற்றுமையின்றி வலி குன்றிவிட்டனர்.

சைவ மடங்கள் சைவ சமயத்தை வளர்ப்பதற்கென்றே ஏற்பட்டவை. நாடாண்ட மன்னரும் பிறரும் இந்நன்னோக்கத்திற்கே செல்வத்தையும் பல வேலி நிலங்களையும் இம்மடங்களுக்கு உதவினர்; பல கோவில்களை இம்மடங்களின் ஆட்சியில் விட்டு வைத்தனர்; அறிவிலும் ஒழுக்கத்திலும் சமைய சாத்திரக் கல்வியிலும் முதிர்ந்த பெருமக்களை மடத்துத் தலைவர்

---

2 "In Babylonia, as elsewhere, the priests utilized the floating material from which all mythologies were framed and impressed upon it their doctrines."—Myths of Babylonia and Assyria, p. 189.

களாக வைத்தனர். பிற்காலத்தில் இந்நிலை மாறியது. மடாதிபதி ஜமீனை ஆட்சி புரியும் ஜமீன்தாரைப்போல, மடத்துக்குரிய வரவு செலவுகளிலும் வழக்குகளிலும் பெரும்பொழுதைப் போக்கத் தொடங்கினர். எனவே, கால வேறுபாட்டாலும் அரசியல் மாற்றத்தாலும் சைவ சமையப் பிரச்சாரம் இல்லாமையாலும் பொதுமக்களுக்கும் சைவ மடங்களுக்கும் தொடர்பு ஏற்படவில்லை. பொதுமக்களுக்குப் பொருள் விளங்காத நிலையில் சில நூல்களை அச்சிட்டு வெளிப்படுத்தலும், படித்த ஒரு சிலருக்குப் பொன்னுடை போர்த்தலும், ஆண்டு விழாக்களில் சமையச் சொற்பொழிவு செய்வோருக்குச் சிறிது பொருள் கொடுப்பதுமே மடங்கள் செய்யும் சைவப்பணிகளாக இருந்து வந்தன. இன்று இந்த நிலை மாறி, இவற்றோடு பொது மக்களுக்குப் பள்ளிக்கூடம் வைத்தல், மருத்துவ நிலையம் அமைத்தல், திருக்குறள் போன்ற அரிய நூல்களை வெளியிடுதல் முதலிய தொண்டுகளில் மடங்கள் இறங்கியுள்ளமை வரவேற்கத் தக்கது.

## சைவம் வளர வழிகள் : மடங்களின் திருப்பணி

1. பொதுமக்களுக்குப் புரியும் வகையில் எளிய வகையில் சைவ சமைய வரலாறு, சைவ சமையக் கொள்கைகள், சைவம் வாழ்க்கையோடு தொடர்பு கொண்டுள்ள தன்மை, திருக் கோவில்களின் சிறப்பு, அவற்றை மக்கள் பயன்படுத்தும் முறை, சைவ சித்தாந்தத்தின் தெளிவான கருத்து–இவற்றைச் சிறு சிறு நூல்களாக வெளியிட்டுப் பொதுமக்களுக்கு இலவசமாக வழங்க வேண்டும்.

2. பல சிற்றூர்களில் தொடக்கநிலைப் பள்ளிகளைத் தோற்றுவித்துச் சைவப் பிள்ளைகட்கு இலவசக் கல்வி அளிக்க வேண்டும். அப்பள்ளிகளில் சிறுவர்க்குச் சமைய அறிவு கற்பிக்கப்படல் வேண்டும். அச்சிற்றூர்களில் மருத்துவ மனைகள், படிப்பகங்கள், நூல்நிலையங்கள் முதலியவற்றை அமைத்துப் பொதுமக்களுக்கும் மடத்துக்கும் தொடர்பு உண்டாக்கல் வேண்டும். ஏழாயிரம் கற்களுக்கு அப்பாலிருந்து இந்நாட்டுக்கு வந்த கிறித்தவப் பாதிரிமார் இவற்றைச் செய்தமையாற்றான் தங்கள் சமையத்தை வளர்த்தனர் என்ற உண்மையை நாம் உணர்தல் வேண்டும்.

3. ஆங்கில அறிவும் தமிழ் அறிவும் பெற்ற சமையப் பிரசாரகரை நியமித்து ஒவ்வொரு மடமும் மக்களிடைச் சமையப் பிரசாரம் செய்தல் வேண்டும். வீணானவையும் வாழ்க்கைக்குப் பயன்படாதனவுமான கதைகளைச் சொல்லி மக்களை மேலும் மூடர்கள் ஆக்காமல் சமைய நெறியில் வாழ வழி அமைத்துத் தருதல் வேண்டும்.

4. "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல" என்ற முறைபற்றிப் பொதுமக்களுக்குச் சிறிதும் பயன்தராத விழாக்களையும், ஆரவாரங்களையும் ஒழித்து, அவற்றிற்குச் செலவாகும் பணத்தை ஏழைச் சைவ மக்களுக்கு உதவி, அவர்களைச் சிவநெறியில் வாழ்விக்க வழிசெய்தல் வேண்டும்.

## திருமுறை ஓதுதல்

கோவில்களில் காலை மாலை வழிபாட்டின்போது திருமுறைப் பாடல்கள் பாடப்படுதல் வேண்டும். மாலை நேரங்களில் ஒரு மணி நேரமாவது சிறந்த திருப்பதிகங்களைப் பாடி மக்கள் உள்ளங்களைச் சமையத்துறையில் திருப்பத் தக்கவாறு ஏற்பாடு செய்தல் வேண்டும். அருச்சனை முதலியன தமிழில் நடைபெற வேண்டும் என்னும் கிளர்ச்சி வலுத்து வருகிறது. அங்ஙனம் அவை தமிழில் நடைபெறுமாயின், தமிழ் மக்கள் மிகப்பலராகக் கோயிலுக்கு வருவர் என்பதில் ஐயமில்லை. சிறந்த ஓதுவார்கள் இசையோடு பொருள் உணர்ந்து பாடுவாராயின், பொதுமக்கள் கோயிற்செயல்களில் ஈடுபாடுகொள்வர் என்பது திண்ணம். சைவப் பெருமக்கள் இத்துறையில் முயலவேண்டுமென்பது எனது பணிவார்ந்த வேண்டுகோள்.

## பொதுமக்கள் தொண்டு

சைவ மக்கள் தங்கள் இல்லங்களிற் பிறக்கும் குழந்தைகளுக்குச் சைவப் பெயர்கள் வைப்பது நல்லது. சிவநெறிச் செல்வன், தேவாரச் செல்வன், நெடுமாறன், கோட்புலி, கண்ணப்பன், கழற்சிங்கன் என்றுற்போல நாயன்மார் பெயர்களையும், திருமுறைகளில் வரும் அரும் பெயர்களையும் வைத்து வழங்குதல் பழைமையைப் புதுப்பித்து நிலைக்கச் செய்வதாகும். இவ்வாறே பெண் பிள்ளைகளுக்கு மங்கையர்க்கரசி, சிவ அரசி, வெண்காட்டு நங்கை, சந்தன நங்கை முதலிய சைவப் பெயர்களை வைக்கலாம்.

சைவர் தம் ஊர்களில் ஏற்படும் புதிய தெருக்களுக்குச் சேக்கிழார் தெரு, சம்பந்தர் தெரு, ஆலால சுந்தரர் தெரு எனச் சைவப் பெயர்களை வைக்க ஏற்பாடு செய்யலாம். இவ்வாறே தம் வளமனைகளுக்குச் "சேக்கிழார் அகம்", "சுந்தரர் அகம்" எனப் பெயர்களைச் சூட்டலாம்.

சிவநெறிச் செல்வரும் சைவ சங்கங்களும் சைவ சமைய வரலாறு, சைவப் பெயர்கள், பாராயணத்திற்குரிய பதிகங்கள் போன்றவற்றைச் சிறு நூல்களாக எழுதச் செய்து இலவசமாகவோ, குறைந்த விலையிலோ பரப்புதல் வேண்டும்; அடிக்கடி தக்காரைக்கொண்டு, இக்காலத்திற்கு ஏற்ற முறையில், சொற்பொழிவுகளின் வாயிலாகச் சைவ சமயப்பற்றை ஊட்டுதல் வேண்டும். வாழ்க்கைக்கும் சமையத்திற்கும் உள்ள தொடர்பைத் தெரிவித்தலே, மிக்க பயனுடைய சொற்பொழிவாகும். அன்பை அடிப்படையாகக் கொண்டு நாயன்மார் பேணி வளர்த்த சமயத்தை, அதே அன்பு என்னும் அடிப்படையில் பேணி வளர்க்க நாம் கடமைப்பட்டுள்ளோம்.

அன்பே சிவம்!

# அருள் நூல்கள் ஓதுதலின் அரும்பயன்கள்



திருவாட்டி ஆர். இராசரத்தினம் அம்மையார் அவர்கள்
எம்.ஏ., எல்.டி.,
(வெல்லிங்டன் பெருமாட்டியார்
ஆசிரியப் பயிற்சிக் கல்லூரி, சென்னை)

## அருள்

அருள் என்ற பதத்திற்குக் கொடை, சக்தி, சாத்துவீகம் என்ற பல பொருள்கள் உண்டு. அருள் என்பது அன்பின் முதிர்ச்சியால் உண்டாவது. அதனுல்தான் 'அருளென்னும் அன்பீன்குழவி' என்றுர் வள்ளுவப் பெருந்தகை. அன்பு என்பது தொடர்புடையாரிடத்தும், அருள் என்பது தொடர் பில்லாதார் மாட்டும் தோன்றும் ஒருவகை உள்ள நெகிழ்ச்சி யாகும். இத்தகைய அருள் உள்ளம் படைத்த பெரியோர் களால் எழுதப்பட்ட நூல்கள் 'அருள் நூல்கள்' எனப்படும். இவற்றை, இறையருளைப் பெறுவதற்குக் காரணமாக அமைந்த

நூல்கள் என்றும் கூறலாம். அல்லது, அருளாகிய சாத்துவீக குணத்தை உண்டாக்குதற்கு ஏதுவான நூல்கள் எனவும் செப்பலாம்.

அப்படிப்பட்ட நூல்களைப் பன்முறை பயிலுவதாலும் அவற்றிலுள்ள சிறந்த கருத்துக்களைப் பிறருக்கு எடுத்துச் சொல்லுவதாலும் ஏற்படக்கூடிய பயனை அரும்பயன் எனலாம். ஏனெனில், அஃது இம்மைக்கும் மறுமைக்கும் பயனளிக்க வல்லது. இனி அத்தகைய விழுப் பயன்தரும் நூல்கள் எவை என்பதை ஆராய்வோம்.

## அருள் நூல்கள் எவை?

அருள்வள்ளல்களும் சமயகுரவர்களும் நமக்கு அளித்துச் சென்ற அழியாக்கருவூலமாகிய நூல்களே அருள் நூல்கள் எனப்படும். அவை, சமய நூல்களும், திருக்குறள் போன்ற நீதி நூல்களுமாகும். சமய நூல்களுள், வேதங்கள், ஆகமங்கள், பன்னிருதிருமுறைகள், பதினன்கு சாத்திரங்கள், பற்பல புராணங்கள் முதலியவை சைவ சமய நூல்களென்று கூறப்படும். அவ்வாறே, இராமாயணம், பாரதம், நாலாயிர திவ்யப் பிரபந்தம், பாகவதம், ஸ்ரீ வசன பூஷணம், பலவித வியாக்கியானங்கள் போன்றவை வைணவ நூல்கள் எனப்படும். பஞ்சசீலத்தை அடிப்படையாகக் கொண்ட புத்த பிரானின் உபதேச மொழிகளும் ஜாதகம், பீதகம் போன்ற கதைக் கோவைகளும் பௌத்த சமய நூல்களாகும். மகாவீரர் முதலிய இருபத்து நான்கு தீர்த்தங்கரர்களின் உபதேச மொழிகளை, சமணர், அருள்நூல் என்பர். விவிலிய நூலாகிய கிறித்தவ வேதம், அருள் நூல் என்று அழைக்கப்படுகிறது. அதில் மலைப் பொழிவைச் சிறந்த பகுதியாகக் கருதுகின்றனர். முகமதியர் தமது குரானை இம்மைக்கும் மறுமைக்கும் வழி காட்டும் தூயநூல் என்பர். சீனப் பெருமக்களோவெனில், மகான் கன்பூஷியசைக் காட்டிலும் சிறந்த அருள் வாக்குடையார் வேறு யாருமில்லையென்று கூறுவர். எல்லாவற்றையும் சீர்தூக்கிப்பார்க்குமிடத்து, சிறந்தது பகவத்கீதையே என்பர் காந்தியடிகளின் சீடர்கள். இவ்வாறு, உலகப் பெரியோர் அனைவரும் தத்தம் அருள் நூல்களில் உயர்ந்த கருத்துக்களைப் புகுத்தியுள்ளனர் என்பது புலனாகிறது.

### மனித அறிவின் குறை

எல்லாத் துறையிலும் முன்னேறும் மனிதன், ஆற்றல் மிக்கவனாக இருக்கிறான். ஆனால், அணுகுண்டைக்கூடக் கண்டுபிடித்த அவனது அறிவு ஆன்மாவைப்பற்றி மட்டும் அறியாமலே இருக்கிறது. உயிர் என்பது என்ன? அஃது எப்படியிருக்கும்? அஃது எங்கிருந்து வருகிறது? அது தன் வினை முடிந்த பின் எங்கே செல்லுகிறது? என்பனபோன்ற விஷயங்கள் மாத்திரம் தெரியவில்லை. அவை, எக்காலத்தும் யாருக்கும் தெரியலாகாது என்று எந்தச் சக்தி மறைத்து வைத்திருக்கிறதோ, அந்தச் சக்தியையே நாம் அருள் என்றும் கடவுள் என்றும் கூறுகிறோம். அச்சக்திக்கு மிக அண்மையில் நம்மைக் கொண்டு சேர்த்து, அதன் அருளுக்குப் பாத்திரமாவதற்கு வழி காட்டுவது தான் அருள் நூல்களின் பயன். அவை, கடவுளது பெருமையையும் புகழையும் விரித்துக் கூறும். மனம் என்னும் குரங்கைத் தன் விருப்பம்போல் செல்லவிடாது ஒரு நிலைப்படுத்துவது எல்லோருக்கும் இயலாது. அத்தகையோர், அருள் நூல்களைப் பயின்று வந்தால் சிந்தைக்கும் மனத்துக்கும் நல்ல பயிற்சி ஏற்படும். ஒருமைப்பாடுள்ள மனத்தின் துணையால் அரிய காரியங்களையும் சாதிக்க இயலும்.

### மனப்பழக்கமும் நாப்பழக்கமும்

மனமானது தான் சார்ந்ததன் வண்ணமாதலைப் போலவே, நாவும் பயின்றதன் வண்ணமாகவே பேசும். அதனால்தான் 'செந்தமிழும் நாப்பழக்கம்' என்று சொல்லப்படுகிறது. சிறந்த நாமாவளிகளையும் நூல்களையும் ஓதிப்பழக்கப்படுத்திக் கொண்டால், நம்மையும் அறியாது நமது நாவானது இறைவனது பெருமையையும் அரும்பெரும் செயல்களையும் பற்றியே பேசும். அதனாலேயே, 'நற்றவா உனை நான் மறக்கினும் சொல்லும் நா நமச்சிவாயவே' என்றும், 'நாராயணனைவென்னா நாவென்ன நாவே' என்றும் ஆன்றோர் கூறியுள்ளனர்.

### அருள் நூலறிவு

ஒரு தொழிலைத் திறம்படச் செய்து முடிக்க நல்ல பயிற்சி இன்றியமையாதது. அதைப்போலவே, ஒருவருடைய ஆன்ம

சக்தி வளர்வதற்கு அருள்நூல்களின் அறிவு இன்றியமை யாதது. அருள் நூல்களின் அறிவு உடல் நலத்திற்கும் அறிவின் தெளிவுக்கும் உகந்ததாகும். மேலும், நமது அமைதியான வாழ்வுக்கும் சமூக ஒற்றுமைக்கும் இவ்வறிவு வேண்டற்பாலது.

## தேவாரம் ஓதும் சுப்பராயர் பெற்றபேறு

முற்காலத்தில் அருள் நூல்களை ஓதி, அரும்பயன் பெற்றோர் பலர். இக்காலத்தில் சேலத்தில் வசித்துவரும் சுப்பராயலு செட்டியார் என்பவர், தமது எண்பதாவது வயதில் கீழே விழுந்து கால் எலும்பு முறியப்பெற்றார். இந்தத் தள்ளாத வயதில் முறிந்த எலும்பு கூடுவது கடினமென்று சிகிச்சை செய்யாமல் விட்டுவிட்டனர். அந்த நிலையில் தேவாரத்தில் கயிறு சாத்திப்பார்த்த செட்டியார் இந்தக் காலினால் நான் கோயிலுக்கன்றித் தகாத இடங்களுக்குச் சென்றதில்லை. ஆகையால் கடவுள் என்ன வழி விடுவாரோ பார்க்கலாம் என்று கூறி, தேவாரம் ஓதியவாறே, நகர்ந்து கொண்டு கோயில்தோறும் சென்று இறைவனை வணங்கினார். சிறிது காலத்திற்குப்பின் கால் எலும்பு தானாகவே கூடிவிட்டது. தொண்ணூறு வயதான அவர் இன்றும் தானே சமைத்து உண்டு கால்நடையாகவே பல ஸ்தலங்களுக்கும் சென்று வருகிறார். இது பலரும் கண்கூடாகக் கண்ட ஒரு நிகழ்ச்சி யாகும். "செந்தமிழ்ச் செல்வி" என்னும் பத்திரிகையிலும் இந்நிகழ்ச்சி வெளியாகியுள்ளது.

## பாம்பனடிகள் கால் முறிவு கூடிய விந்தை

சிறிது காலத்திற்குமுன் வாழ்ந்து வந்த பாம்பன் குமரகுருதாச சுவாமிகளுக்கும் இவ்வாறே வயதான காலத்தில் கால் எலும்பு முறிந்தது. சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் முறிந்த எலும்பு ஒன்று சேராது என்று மருத்துவர்கள் கைவிட்டபோது, ஒரு நாள் முருகப்பெருமான் அவரது கனவில் தோன்றித் தனது வேலாயுதத்தினால் அவரது எலும்பைக் கூட்டியது கண்டு மகிழ்ந்தார். மறுநாள் விழித் தெழுந்தபோது தன்னுடைய கால் எலும்பு உண்மையாகவே கூடியிருந்ததைக் கண்டு கழிபேருவகைகொண்டு இறைவனை

மனமார வழுத்தினர். இதைக் கண்ணால் கண்டவர்கள் இன்றும் இருக்கிறார்கள். இதற்கெல்லாம் காரணம் அருள் நூல்களை ஓதிக் கடவுள் அருளைப்பெற்றதேயாகும்.

## அருள் நூல்கள் உதவும் அரும்பயன்கள்

அருள் நூல்கள் மருந்தாக உதவுவதேயன்றிப் பொன்னும் போகமும் தரவல்லவையுமாகும். எப்படியெனில், வன் தொண்டப் பெருமான், தமிழால் பாட்டிசைத்தே இறைவனிடம் பொன்னும் பொருளும் வேண்டிப்பெற்றார் என்பது தேவாரத்தி னின்றும் புலனாகிறது. அருணகிரிநாதர் தொழுநோயினின்றும் விடுபட்டு, முருகனது புகழ்மாலையைப் பாடக்காரணமாக இருந்தவையும் அருள் நூல்களேயாகும். அத்தகைய நூல்களை இடையறாது ஓதுவதனால் நன்மையுண்டாகும் என்னும் நம்பிக்கை வேண்டும். அந்நம்பிக்கையுடன் கயிறு சாத்திப் பார்த்ததாலேயே மெய்கண்டாரது தந்தையாகிய அச்சுத களப்பாளர் திருவெண்காடு சென்று முக்குளத்தில் மூழ்கித் தவமிருந்து மெய்கண்டாரைப்பெற்று உலகுய்ய அளித்தார்.

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், நால்வர் நூல்களி லும், ஏனைய அருள் நூல்களிலும் ஊறித்திளைத்த காரணத்தி னாலேயே நால்வர் நான்மணிமாலை போன்ற சிறந்த நூல்களை இயற்றிப் புகழுடல் பெற்றார். அவ்வாறே, இராமலிங்க சுவாமி களும் சமயகுரவரது நூல்களில் திளைத்து, அவற்றிலுள்ள அரிய கருத்துக்களைத் தம் அருட்பாக்களாக வடித்துக் கொடுத்தார்.

## அருள் நூல்கள் வழி இக்கால மக்கள் கேட்பவை

இக்காலத்தில் ஆடவர் அருள்நூல்களை ஓதுகையில் தமது பதவி உயர்ந்து, வாணிகம் பெருகி, வருவாய் மிகவேண்டு மென்று கருதலாம். பெண்களோவெனில், தமக்கும் தமது குடும்பத்தினருக்கும், தமருக்கும் நண்பர்கட்கும் அரிய காரியங்கள் யாவும் கைகூடி நலம்பெருகவேண்டுமென விரும்புவர். மேலும், அவரது கணவன்மார் தம் வாழ்க்கை சிறந்து விளங்கவேண்டும் என்பதும், தாம் நல்லுலகம் செல்ல வேண்டும் என்பதும் அன்னாரது பெருவிருப்பமாகும். மணமாகாத பெண்கள், திருப்பாவை, திருவெம்பாவை

போன்ற நூல்களை ஓதி, இம்மையின்பத்தையும் நல்ல கணவன்மாரையும் பெறவேண்டுமென்று நோன்பு நோற்பர்.

## ஔவையார் நோன்பு

இன்னும் பெண்கள் ஔவையார் நோன்பு என்ற நோன்பினை இராக் காலத்தில் ஆடவரில்லாத இடத்தில் நோற்கின்றனர். அவ்வமயம் அரிய பாடல்களை ஓதி வழிபட்டால் குன்றாத செல்வம் கிட்டும் என்பது அன்னாரது அழியாத நம்பிக்கை. இன்னும் இந்த நோன்பு கிராமங்களில் நோற்கப்படுகிறது. அவர்களது திண்ணிய எண்ணத்தின் பயனாகவும், தூய விருப்பத்தின் காரணமாகவும் அத்தகைய செல்வம் கிடைக்கப் பெறுகின்றனர்.

## அருள் நூல்களை ஓதும் அறவோரும் துறவோரும்

கந்தர் அனுபூதி, கந்தர் அலங்காரம், ஷண்முக கவசம் போன்ற நூல்களை ஓதிப் பெரும்பயனடைந்து வரும் குடும்பங்கள் பலவாகும். இன்னும் நியமமாகச் சிவபூசை செய்து வருபவருடைய வாக்கானது பலிக்குமென்றும், அன்னார் திருநீறளித்தால் பெரும்பேறு கிட்டுமெனவும் அறிந்தோர் கூறுகின்றனர். நமது தம்பிரான் சுவாமிகள் போன்றவர்கள் தூய உள்ளத்தோடு நித்திய பூசைகளைச் செய்வதாலும், அருள் நூல்களை ஓதுவதாலும் அருள்வாக்குடையவராவார். மேலும் காசி முதலிய தூய ஸ்தலங்களை அடிக்கடி மன நிம்மதியோடு தரிசிக்கும் வாய்ப்பும் கிட்டப்பெற்றார். பெரும்பொருள் படைத்தவரும் ஓய்வும் ஆற்றலுமுடையோருங்கூட, தாம் எண்ணியாங்கு ஸ்தலயாத்திரை செய்ய முடிவதில்லை. அதற்குப் பல இடையூறுகள் ஏற்படுகின்றன.

## அருளும் சூழலும் அவசியம்

இறைவன் அருள் இருப்பின் அருள் நூல்களை ஓதி அந்த இன்பத்தில் திளைக்கலாம். அதன் பயனாக மூர்த்தி, தலம், தீர்த்தம், முதலியவற்றைக் காணும்பேறு எளிதில் கிட்டும். "சுடர்விளக்காயினும் நன்றாய் விளங்கிடத் தூண்டுகோலொன்று வேண்டும்", என்பதற்கிணங்க அருள்நூல்களை ஓதுவதன் மூலம் தூய சிந்தையும், நல்லாரிணக்கமும்

ஒருவருக்கு இருப்பின், அன்னாருக்குக் கிடைக்கவேண்டிய நன்மைகள் அவசியம் கிட்டும். இடையறாத பழக்கத்தினால் நமது சிந்தையும் சிறந்த குறிக்கோளில் லயித்து நிற்கும். மனத்தை ஒருநிலைப்படுத்த வேண்டுமென்பதே பெரியோர் புகன்ற வாசகமாகும். தவத்திற்கு ஒருவர் கல்விக்கு இருவர் என்பதும் இதுபற்றியேயாகும். இத்தகைய தூய தவவாழ்வை மேற்கொண்டதால்தான் சுவாமி விவேகானந்தர் இந்து சமயத்தின் மேன்மையை உலகமே அறியச் செய்தார்.

## அருட்பாடல்களை ஓதவேண்டிய முறை

பூசையின் அங்கமாக நாம் ஓதும் பாக்களைக் கூச்சமின்றி நமக்குத் தெரிந்த இசையில் பாடிப் பழக்கப்படுத்திக் கொண்டால் அவை எளிதில் மனப்பாடமாகும். சில பாடல்களைத் தாலாட்டாகவும், அபிநயப் பாட்டாகவும் கற்பிக்கலாம். இராகம், தாளம் முதலியவை சாஸ்திரப்படி சரியாக அமையவேண்டும் என்னும் நியதியும் இல்லை. உள்ளத்தை உருக்கும்படியும் பொருள் விளங்கும்படியும் பாடுதல் வேண்டும். புத்தகத்தைப் படிக்கத் தெரியாது கேள்வி வாயிலாகவே பல பாடல்களைக் கேட்டு மனப்பாடம் செய்தவர்களும் உண்டு. இப்படிப்பட்ட நல்ல பக்தியான சூழ்நிலை அமைந்த வீடுகளில் வீண்சண்டை, பூசல், மனப் போராட்டம் முதலியவை இரா.

திருவாசகம், திருவருட்பா, பட்டினத்துப் பிள்ளையார் பாடல்கள், தாயுமானவர் பாடல்கள், சித்தர் பாடல்கள், திருப்புகழ் முதலியவற்றில் நமக்கு விருப்பமானதும் எளிதில் பொருள் விளங்கக்கூடியதுமாகியவற்றைத் தேர்ந்தெடுத்து நாமும் ஓதி நமது குடும்பத்தினருக்கும் கற்பிக்கலாம். நம்முடைய குழந்தைகளுக்கு மத சம்பந்தமான அறிவு மிகவும் குறைவாக இருக்கிறது. அதற்குக் காரணம் நமது தெய்வங்கள் எண்ணிறந்தவை. அத்தெய்வங்களைப் பற்றிய புராணக் கதைகளோ பல்லாயிரமாகும். ஆகையால் குறிப்பிட்ட சில நூல்களை எடுத்துக்கொண்டு ஓதிவரலாம்.

## குழந்தைகளுக்குச் சமயப் பயிற்சி

முக்கியமாகச் சிறு குழந்தைகளுக்குத் தங்களைப் போன்ற குழந்தையாகிய முருகனது கதையைக் கூறி அவனது

புகழைச் சொல்லும் பாடல்களைக் கற்பிக்கலாம். வைஷ்ணவர்களானால் கண்ணனைப் பற்றி எடுத்துரைக்கலாம். சிறு பிராயத்திலேயே இப் பழக்கத்தை ஏற்படுத்திக் கொண்டால் மனத்தில் தெளிவும், வாக்கினில் ஒளியும் ஏற்படும். அப்படிப் பழகியவருடைய வாக்கு, செல்லும் வாக்கு அல்லது எல்லோரும் ஏற்றுக்கொள்ளும் வாக்காக அமையும். அத்தகையோர் வாக்குக்கு வியாதிகளும் விடதோஷமும் அடங்கும். அதனையே மந்திரம் என்றும் கூறுவார்கள். இக் கருத்தினை உணர்த்தவே

"நிறைமொழி மாந்தர் ஆணையிற் கிளந்த
மறைமொழி தானே மந்திரம் என்ப"

என்றார்கள் பண்டைப் புலவர்கள்.

சிறந்த நூல்களை ஓதுதல் ஓதுவித்தல் ஓதக்கேட்டல் ஆகியவற்றிற்கு அரிய பயனுண்டு. ஞானசம்பந்தர் தேவாரத்தில் பதிகந்தோறும் பயன் கூறியிருத்தலைக் காணலாம். உதாரணமாக,

"நறவங் கமழ்பூங்காழி ஞான சம்பந்தன்
பொறி கொளரவம் பூண்டாருண்ட புத்தூர் மேல்
செறி வண்டமிழ்செய் மாலை செப்ப வல்லார்கள்
அறவன் கழல்சேர்ந் தன்போ டின்பமடைவாரே".

இப்பாடலிலிருந்து அருள் நூலாகிய தேவாரத்தைச் சொல்ல வல்லவர்கள் அன்போடு இன்பம் அடைவார் என்று தெரிகிறது. அப்படியே,

"மல்குதண்பூம் புனல் வாய்ந் தொழுகும் வயற் காழியான்
நல்ல கேள்வித் தமிழ் ஞான சம்பந்தன் நல்லார்கள் முன்
வல்ல வாறே புனைந்தேத்துங் காரோணத்து வண்டமிழ்
சொல்லு வார்க்கும் இவைகேட்ப வர்க்குந் துயரில்லையே".

என்ற பாடலிலிருந்தும் பாடலை ஓதுவார்க்கும், ஓதக்கேட்பார்க்கும் துயரில்லை என்பது ஞான சம்பந்தப் பெருமான் வாக்கிலிருந்தே புலனாகின்றது.

இடையறாது சிவபூசை செய்து வந்த பெரியார் ஒருவர் தனது மனப் பழக்கத்தின் காரணமாக, கடைசி மூச்சு நிற்கும் போது,

" கல்லாப் பிழையுங் கருதாப் பிழையுங் கசிந்துருகி
நில்லாப் பிழையு நினையாப்பிழையு நின்னஞ் செழுத்தைச்
சொல்லாப் பிழையுந் துதியாப்பிழையுந் தொழாப்பிழையு
மெல்லாப் பிழையும் பொறுத்தருள்வாய் கச்சியேகம்பனே."

என்ற சிறந்த பாடலைப்பாடிய நிகழ்ச்சி நாம் எல்லோரும் நன்கு அறிந்த தொன்ருகும். அருள்நூல்களைப் பலகாலும் பயின்றதன் பயனுகவே அவர் "தனது பிழைகளையெல்லாம் பொறுக்க வேண்டும்" என்னும் கருத்தடங்கிய இச்சிறந்த பாடலைத் தெளிவாகப் பாடிப் பயனடைய முடிந்தது.

நாளும் நம்பன் புகழினைப்பாடி, நாமும் நல்வாழ்வு பெற்று மகிழ்வோமாக!

**வாழ்க அடியார்கள்! பரவுக அருள்நூல்கள்!**

# சைவத்தின் உயிர் நாடிகள்



திரு. பெ. திருஞான சம்பந்தன் அவர்கள், எம்.ஏ.
(வடமொழித்துறைத் தலைவர், மாநிலக் கல்லூரி, சென்னை.)

यंस्याहुरागमविद: परिपूर्णशक्ते:
अशोकियत्यपि विविष्टममुं प्रपञ्चम् ।
तस्मै तमालरुचिभासुरकन्धराय
नारायणिसहचराय नम: शिवाय ॥

இது சிவதத்துவ விவேகத்தில் வருகின்ற சுலோகம். இதன் பொருள்: "எவனொருவனுடைய நிரம்பிய ஆற்றலின் ஒரு கூற்றினுள் உலகனைத்தையும் அமைத்துள்ளானோ, அந்த நீலகண்டனின் உமையொருபங்கனின் அடியிணை போற்றுவாம்" என்பது.

## எல்லாம் அவனருள்

ஒரு நாள் எதிர்பாராத விதத்தில் பல்லாண்டுகள் ஆணை யாளராக இருந்த சிவநேசச் செல்வர் திரு. கீ. இராமலிங்க முதலியாரிடமிருந்து ஒரு ஆணை பிறந்தது. சைவசமாஜ ஆண்டுவிழாவில் பேசவேண்டுமென்பது அதன் கருத்து. 'ஆட்டுவித்தால் ஆரொருவர் ஆடாதாரே' என்ற திருத் தாண்டகப் பகுதி நினைவிற்கு வந்தது; ஒப்புக்கொண்டேன். ஆனால் அடுத்து உடல் நலிவு ஏற்பட்டது. கருத்துக்களைக் கோவைப் படுத்தி எழுத எண்ணியும், பேனா அசையவில்லை. 'அவனன்றி ஓரணுவும் அசையாது' என்னும் திருவாக்கை எண்ணிக்கொண்டேன். சில நாட்கள் கழித்துத் திருவருள் துணைபுரிய, உடல் நிலை சீர் பெற்றது. பிறகு 'அவனருளாலே அவன் தாள் வணங்கி' எழுதத்தலைப்பட்டேன். வாழ்வில் சைவம் பின்னிக்கிடப்பதற்கு இஃது ஓர் எடுத்துக்காட்டு.

## சைவ சமயம்

பொதுவாகச் சமயம் என்பது நம்மை யார் என உணர வைக்கின்றது; நமக்குள்ள துன்பங்கள் யாவை என்பதைப் புலப்படுத்துகிறது; அத்துன்பங்கள் ஏன் நேர்கின்றன என் பதைச் சுட்டுகிறது; அவற்றைக் களைவதற்கு வழிகள் யாவை என்றும் கூறுகிறது; அவ்வழியிலே இட்டுச் செல்லும் குருவை அடைவிக்கிறது; அவ்வழியிலே நம்மைச் செலுத்துகிறது; முடிவில் முடிவிலா இன்பத்தில் ஆழ்த்துகிறது. இத்தகைய ஒரு சமயம் சைவ சமயம். வேதாகமங்கள் பொதுவாகவும் சிறப்பாகவும் கூறும் எல்லாப் பொருள்களையும் தன்னகத்தே உடையதே சைவ சமயமாகும். சமயக்கருத்துக்களை நேர் முகமாகக் கூறும் நூல்கள் சமய சாத்திரங்கள். அவற்றை அநுபவ வாயிலாகத் தெளிவிக்கும் நூல்கள் தோத்திரங்கள்.

## சித்தாந்த சாத்திரம்

உலகில் எல்லோரும் துன்பத்தைத் தவிர்க்கவும் இன்பத் தைப் பெறவும் முயல்கின்றனர். ஆனால் உலகியல் இன்பத் தைக் காட்டிலும் மேலான பேரின்பம் ஒன்று உண்டு என்று சாத்திரம் கூறும்; அநுபூதிமான்களும் கூறுவர். அந்த மெய்யான இன்பவாழ்வு பெறுதற்காக நம்முடைய இயல்பும்,

அதனைப் பெறுவிக்கின்ற பெருமான் இயல்பும், அதனை இது வரை நாம் பெறுமலிருப்பதற்குத் தடையாயிருக்கும் பொருளின் இயல்பும், அத்தடையை நீக்கி அப்பேற்றைப் பெறுவிக்கும் சாதனத்தின் இயல்பும், அச்சாதனத்தைப் பெறும் வழியும், சாதிக்கும் முறையும், சாதித்ததனுல் வரும் இன்பத்தின் இயல்பும் யாவை எனக் கூறுவது நமது சித்தாந்த சாத்திரம், இதை உணர்வதற்கு இந்த மானிட உடல் அருளப்பெற்றது. இது எந்த நேரத்தில் அழியும் என்பது நம்மால் அறிய இயலாத ஒன்று. ஆதலின் பதி, பசு, பாசம் என்னும் முப் பொருள் உண்மையை அறிந்து, சிவஞானபோதக்கேள்வி-சிந்தனை முதலியவை செய்யத்தக்கன.

சுருங்கக் கூறுமிடத்து, இவற்றுள் உலகம் மாறிக் கொண்டே இருக்கும் உளதாகிய அறிவற்ற பொருள். உயிர் அறியாமை கலந்த அறிவு உளதாகிய பொருள். கடவுள் அறியாமையே இல்லாத பேரறிவு உளதாகிய பொருள். எங்கும் நீக்கமற நிறைந்திருக்கும் கடவுளின் வேருக உலகும் உயிரும் தனித்து இயங்கும் ஆற்றல் பெற்றவை அல்ல. உலகைக்கொண்டே கடவுள் உயிருக்கு நலனைச் செய்து பக்குவப்படுத்தித் தன் எண் குணங்களையும் பதியவைக் கின்முன். அந்த நிலையே முத்தி நிலை அல்லது இன்ப அநுபவம் என்று சொல்லப்படுகிறது.

## சிவன் எந்நாட்டவர்க்கும் இறைவன்

சைவ சமயத்தில் பதிப்பொருளுக்குக் கடவுள் என்ற பெயர் உண்டு. எல்லாப் பொருள்களையும் தன்னுள் அடக்கி யாவற்றை யும் கடந்திருப்பது கடவுளுடைய ஒரு தன்மை. புறத்தே விரிந் திருப்பதோடன்றி எல்லாப் பொருள்களின் உள்ளேயும் உறைந் திருத்தலால் கடந்திருத்தல்—உள்ளிருத்தல் என்ற இரண்டும் கடவுளின் இயல்புகள். சைவ சமயத்தில் முழுமுதற்கடவுள் அழித்தற்ருெழிலைச் செய்யும் ஒருவனே என்று சிவஞானபோதம் கூறும். அந்த ஒருவன் சிவபெருமானே என்று தோத்திர நூல்கள் பரக்கக்கூறும். அந்தச் சிவன் தென்னுட்டவருக்கு மட்டுமின்றி, எந்நாட்டவர்க்கும் இறைவன் என்பதை அநுபூதி மான்கள் கூறியிருப்பதை அறிவோம்.

## பற்றுவிடல் வேண்டும்

எல்லா உயிர்களும் சிவசம்பந்தம் உடையவையே. ஆயினும் இதை உணராததற்குக் காரணம் அவற்றுடன் இயல் பாகப் பற்றி நிற்கும் பாசம். இப்பாசம் விடுபடுதற்குக் கருவி யாகவே உடம்பும் நுகரத்தக்க பொருளும் படைக்கப்பட்டிருக் கின்றன. இறைவன் உள்நின்று உணர்த்த உயிர் உணர்கிறது; தொழில் புரிகிறது; ஆயினும் தான் உணர்வதாக, தொழில் புரிவதாக மயங்குகிறது. உயிர் எந்தப் பொருளைச் சார்ந்து நிற்கிறதோ அந்தப் பொருளின் வண்ணமாகக் காட்சியளிக் கிறது. யான்—எனது என்ற செருக்கு அறவேண்டும். இது அறுதற்கு இறைவன் திருவருள் துணை வேண்டும். திருவரு ளைப் பெறுதற்கு அவனைப்பற்ற வேண்டும். இதனை அழகாகக் குறளாசிரியர் கூறுகின்றார்.

"பற்றுக பற்றற்றான் பற்றினை, அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு"

என்று. இதற்கு இலக்காக விளங்கியவர் விறன்மிண்ட நாயனார்.

சேக்கிழார் கூறுகின்றார்:

'செப்பற் கரிய பெருஞ்சீர்த்திச் சிவனார் செய்ய கழல்பற்றி
எப்பற் றினையும் அறவெறிந்தார் எல்லை தெரிய ஒண்ணுதார்
மெய்ப்பத் தர்கள்பால் பரிவுடையார் எம்பி ரானார் விறன்
மிண்டர்.'

## அன்பும் அறனும்

உயிருக்கு இயல்பான பண்பு அன்பு. அதை நாம் குழந்தை யிடத்துக் காணலாம். பணக்கார வீட்டுக் குழந்தை ஏழை வீட்டுக் குழந்தையோடு அன்பு பாராட்டுகிறது. ஆனால் ஆணவம் மிக்க 'பெரியோர்கள்' அவ்வன்புக்குத் தளை பூட்டு கின்றார்கள். அப்பெரியோர்களோடு பழகப்பழக அன்பு சுருங்கு கிறது. அவ்வன்பு சுருங்காமல் பெருகுதற்கு நூலோர் அற நெறியைப் போதித்திருக்கிறார்கள். ஆகவே தான்

"அறத்திற்கே அன்பு சார்பென்ப அறியார்
மறத்திற்கும் அஃதே துணை"

என்று எந்த நிலையிலும் அன்பின் இன்றியமையாமையைக்

கூறி, அன்பும் அறமும் பண்பும் பயனுமெனப் பின்னிக் கிடப்பதை வள்ளுவர் வலியுறுத்தியுள்ளார் ;

" சிறப்பீனும் செல்வமும் ஈனும் அறத்தினூஉங்கு
ஆக்கம் எவனோ உயிர்க்கு "

என்று அறத்தின் திறத்தை விதந்தோதி யிருக்கின்றார். 'அறநெறி முதற்றே அரசின் கொற்றம்' எனச் சங்கமும், 'அறநெறி பிழைத்தார்க்கு அறம் கூற்றாதலை'ச் சிலம்பும், 'அருள் தரும் திறத்து அறனன்றி வலியதுண்டாமோ' எனக் கம்பரும், धर्मो रक्षति रक्षित: 'தர்மத்தை நாம் காப்பாற்றினால் தர்மம் தலைகாக்கும்' என்று வியாசரும், 'யாவர்க்குமாம் இறைவர்க்கொரு பச்சிலை, யாவர்க்குமாம் பசுவுக்கொரு வாயுறை, யாவர்க்குமாம் உண்ணும்போது ஒரு கைப்பிடி, யாவர்க்குமாம் பிறர்க்கு இன்னுரைதானே' என்று திருமூலரும், 'அறம் வளர்ந்திடுக தீமைகள் மாய்க' என்று பாரதியும் பலரும் அறத்தின் திறத்தை வலியுறுத்தியுள்ளார்கள். ஆகவே, சைவத்தின் உயிர்நாடிகளாக அன்பும் அறனும் இடம் பெற்றிருக்கின்றன.

இவ்வன்பு—பெற்றோர், உடன் பிறந்தோர், மனைவி. மக்கள், சுற்றம், அயலார், ஊரார், நாட்டார் என்று விரிந்து, மேலும் விலங்கு, பறவை, கொடி என்று மற்ற உயிர்களிடத்தும் படர்ந்து, உயிரினங்கள் அனைத்தினும் இறைமையை உணரத் தலைப்பட்ட காலத்து மெய்யுணர்வு தோன்றும். அம்மெய்யுணர்வு மேலிடவும், பாசபந்தம் நீங்க, மக்கள் பேரா இன்ப நிலை எய்தப் பெறுவர்.

## மெய்யன்பு

'பெறவே வேண்டும் மெய்யன்பு' என்கிறது திருவாசகம். மெய்ப்பொருளாகிற பரம்பொருளிடத்தே அன்பு செலுத்துவதே மெய்யன்பு. இம்மெய்யன்பே மெய்யின்பத்திற்கு வழிவகுக்கின்றது. இவ்வின்பத்தைப் 'பேரா, ஒழியா, பிரிவில்லா, மறவா, நினையா, அளவிலா, மாளா, இன்பமா கடல்' என்று வருணிக்கின்றார் மணிவாசகப் பெருமான். எதனாலும் தடைபடாத முடிவுறாத பேரன்புதான் மெய்யன்பு. மெய்யன்பின் உறைப்பை விளக்கக் காளிதாசனின் குமாரசம்பவத்தில் ஒரு பகுதியைக் காண்போம் :

இமவான் மகள், சிவபெருமானே தனது கணவனாக வேண்டும் எனக் கடுந்தவம் புரிகின்றாள்; யோக நிட்டையில் இருக்கும் சிவபெருமானுக்கே பணிபுரிகின்றாள். இறைவர் ஓர் பிரம்மச்சாரி கோலந்தாங்கிப் பார்வதியின் மெய்யன்பைச் சோதிக்க விரும்புகிறார். கேட்கின்றார் 'பார்வதியை—"இடு காட்டில் திரிகின்றவரையா அடைய விரும்புகிறாய்? அவருக்குக் குலம் கோத்திரம் உண்டா? சொத்து சுதந்திரம் உண்டா? பார்ப்பதற்கு அழகாகவாவது இருக்கிறாரா? பயங்கரமான மூன்றாவது கண்ணை உடையவர். அணிவதற்குப் பட்டு உண்டா? தோலாடைதான். அணிகலன்கள் உண்டா? பாம்பு கள்தான் அணிகள். செல்வதற்கு நல்ல ஊர்தி உண்டா? ஒரு கிழமாடுதான் உண்டு. சாம்பரை வேறு அள்ளிப் பூசிக்கொள் கிறார். இவரையா விரும்புகிறாய்?"

அப்பர் பெருமானைப்போல் 'சிவபெருமான் திருவடிக்கே பதித்த நெஞ்சம்' உடையவள் பார்வதி. ஆகவே, மெய்யன் பின் முதிர்ச்சியால் சிவநிந்தனை புரியும் அவரை நோக்கி உதடுகள் துடிக்க, கண்கள் சிவக்க, புருவம் நெரியச் சொற் களைக் கூறுகின்றாள்:

उवाच चैनं परमार्थतो हरं न
वेत्सि नूनं यत एवमात्थ माम् ।
अलोकसामान्यमचिन्त्यहेतुकं
द्विषन्ति मन्दाश्चरितं महात्मनाम् ॥

"அரனைப்பற்றிய உண்மையை நீர் அறியமாட்டீர். ஆகவேதான் இப்படிப் பிதற்றுகிறீர். உலகியலை ஒட்டி அவரை மதிப்பிடுதல் பொருந்தாது. மகாத்மாக்களின் செயலின் காரணத்தை நமது உள்ளத்தால் ஆராய்ந்து முடிவு கட்ட இயலாது," என்று கூறினாள். नैव वाचा न मनसा प्राप्तुं शक्यो न चक्षुषा என்று இறைவனை மனவாசகங்கடந்தவராக உபநிடதம் கூறுகின்றதன்றோ? சிவதத்துவத்தைப் பார்வதி தேவி விளக்குகின்றார். மங்கலப் பொருள்கள் தீமையைப் போக்குதற்கோ நன்மையைப் பெறுதற்கோ வேண்டியவை. வேண்டுதல் வேண்டாமை இலானாயும் உலகிற்கே புகலிடமாயும் உள்ள ஒருவனுக்கு மங்கலப் பொருள்களால் ஆகவேண்டியது

என்ன ? தனக்கென வாழாப் பிறர்க்குரியாளனை இறைவன் உலகின்கண் உள்ள செல்வமனைத்திற்கும் முதல் அன்றோ ? இடுகாட்டில் வசித்தாலும் மூவுலகிற்கும் முதல்வன் அவனே. அச்சந் தரும் தோற்றமுடையனாயினும் சிவன், சொக்கன், அழகன் என்றுதானே அழைக்கப்படுகின்றான். ஆதலின் சிவதத்துவத்தை உணர்ந்தார் யார் ? என்று வினவுகிறார் :

अकिंचनः सन्प्रभवः स सम्पदां
त्रिलोकनाथः पितृसद्मगोचरः ।
स भमिरूपः शिव इत्युर्दीयते न
सन्त याथार्थ्यविदः पिनाकिनः ॥

பிரம்மச்சாரி கூறிய கூற்றுக்கள் அனைத்தையும் மறுத்த பின்னர், "இனி விவாதம் வேண்டா. என்னுடைய உள்ளம் சிவன்பால் உள்ள காதலால் நிரம்பியிருக்கிறது. உம்முடைய புன்மொழிக்கு எனதுள்ளத்தில் இடமில்லை," என்று கூறி, மேலும் பேச முற்படும் பிரம்மச்சாரியின் பேச்சைக் கேட்கச் சகியாதவளாய், "சிவநிந்தை செய்கின்றவருக்கு மட்டும் பாபம் அன்று; அதைக் கேட்பவருக்கும் பாபம்" என்ற கருத்தை, 'न केवलं यो महतोऽपभाषते शृणोति तस्यादपि यः स पापभाक्' என்று கூறி முடிக்கின்றாள். இத்தகைய முறுகிய மெய்யன்புடையராக இருந்ததால்தான் பெருமானுடைய மெய்யில் பாதியைப் பெற்றுவிட்டார். இதனின்றும் நாம் அறிவது, சைவத்தின் உயிர்நாடி மெய்யன்பு என்பதும், மெய்யன்புடையாருக்குச் சிவப்பேறு சித்திக்கும் என்பதுமாகும்.

## மற்றோர் உயிர்நாடி

உயிரின் இயல்பான அன்பைக் கண்டோம். சித்தாந்த சைவத்தின் மற்றோர் உயிர்நாடியான உயிருக்கும் இறைவனுக்கும் உள்ள தொடர்பைக் காண்போம்.

உடல் அழியாமல் இருப்பதற்கு எப்படி உடல் வேறு தான் வேறு என்று இராமல், உயிர் அதனோடு கலந்து அவ்வுடலேயாக நிற்கின்றதோ, அப்படி உயிர் நிலைத்தற்காக இறைவன் உயிருடன் கலந்து உயிரேயாக நிற்பது ஒரு நிலை. இதனால் உயிர், முதல்வனாகவும் நில்லாது, அவனின்றித் தனித்தும் நில்லாது என்பது பெறப்பட்டது.

கண் எப்படி சூரியனின் ஒளியின்றித் தானே ஒரு பொருளைக் காண இயலாவிடினும், கண் வேறு—சூரியன் வேறு என்று எப்படி நாம் உணருகிறோமோ, அப்படி உயிர்கள் முதல்வன் அறிவித்தாலன்றித் தாமே அறிய இயலாவிடினும், முதல்வன் வேறு—உயிர் வேறு என்பதை உணரவேண்டும். இது ஒரு நிலை.

ஒரு பொருளைக் காணும்போது எப்படிக் கண்ணொளியும் உயிரறிவும் உடன் நின்று பொருளிடம் செல்லுகின்றனவோ, அப்படி இறைவன் உயிர்க்குயிராய் நின்று, உயிர் வேறு—தான் வேறு என்ற வேறுபாடின்றி, இன்ப துன்பங்களுக்குக் காரணமான விடயங்களில் செல்லுகின்ற நிலை மற்றொன்று. இது இறைவன் எங்கும் நிறைந்திருத்தலால், தான் செல்லாமல் நின்ற நிலையிலேயே ஆங்காங்குள்ள உயிர்களோடு பிரிப்பின்றி நிற்றலைக் குறிக்கும்.

இறைவன் உயிரோடு ஒன்றாய் நிற்றல்—வேறாய் நிற்றல்—உடனாய் நிற்றல் என்ற மூன்று நிலைகளையும் மெய்கண்டார் ஓர் எடுத்துக்காட்டின் மூலம் விளக்கியிருத்தல் போற்றி மகிழத்தக்கது. அதாவது, அரக்கை உருக்கி, உருக்கப்பட்ட அவ்வரக்குடன் கற்பொடியைச் சேர்த்தால் அக்கற் பொடியானது அரக்கோடு ஒன்றி நிற்கும். அதுபோல இறைவனும் உயிரோடு ஒன்றி நிற்பன். உருக்கப்பட்ட அரக்கினின்றும் கற்பொடியைப் பிரிக்க முடியாவிட்டாலும், கற்பொடி தனித்துக் காணப்படுகின்றது. அதுபோல் இறைவன் உயிரினின்றும் வேறாகக் காணப்படுகின்றான். அரக்கு முழுவதும் கற்பொடி காணப்படுதலால் அரக்கோடு கற்பொடி உடனாய் நிற்கிறது. அதுபோலவே இறைவனும் உயிரோடு உடனாய் நிற்கின்றான்.

## இறைபணி தேவை

அநாதியே உயிரோடு பற்றி நிற்கும் பாசத்தை விடுத்தலே துன்பத்தைக் களைவதற்கு வழி. அதுவே பாச நீக்கம் என்று கூறப்படும். பதியைச் சார இறைபணி நிற்றல் வேண்டும். அதுவே இன்பத்தைப் பயப்பது. இதுவே சிவப்பேற்றில் கொண்டு உய்விக்கும்; பாசத்தோடு சார்ந்த வழிச் சீவன் என்றும், பதியோடு சார்ந்த வழிச் சிவன் என்றும் கூறப்படும். உமியோடு ஒட்டிய நிலையில் நெல் என்றும், உமி நீங்கப்பெற

அரிசி என்றும் ஒரே பொருள் கூறப்பெறுதல் போல, சீவனும் சிவனும் சித்துப்பொருளாகும் என்னும் கருத்தை ஸ்கந்தோப நிஷத் கூறும் :

तुषेण बद्धो व्रीहिः स्यात् तुषाभावन तण्डुलः ।
पाशबद्धः तथा जीवः पाशमुक्तः सदाशिवः ॥

சிவனைச் சார்தல் என்பது சிவனிடத்து அன்பு செலுத்துவது ஆகும். இறைவனிடத்துச் செலுத்தப்படும் அன்பிற்குப் பக்தி என்பது பெயர். இறைவன் அனைத்திடத்தும் உறைவதால் உயிர்க் கூட்டம் அனைத்திடமும் செலுத்துகின்ற அன்பும் இறைபணி ஆகும். ஆதலால் தான் பசுக்களை மேய்ப்போன் இறந்தமையால் வருந்திய பசுக்களின் துயரைக் காணவொட்டாமல் சிவயோகியார் மூலனுடைய உடலிலே புகுந்து தோன்றித் திருமூலரானார்.

சிவமே இன்பம். இறைவனிடத்திலும் தொண்டரிடத்திலும் காட்டிய பக்தியினாலே சிவப்பேறு சித்திக்கப் பெறுவதைத் திருத்தொண்டர் புராணத்தினின்றும் காண்கிறோம். இச்சிவமே இன்பம் என்பதைச் 'சச்சிதானந்தம் பிரம்மம்' என்ற உபநிடதக் குறிப்பாலும், 'சச்சிதானந்த வெள்ளம்' என்ற குருஞான சம்பந்தர் அருள்வாக்காலும், 'பந்தமறுக்கும் ஆனந்த மாக்கடலே' என்ற மணி வாசகப்பெருமான் திருவாக்காலும், 'கனியினும் கட்டிபட்ட கரும்பினும் பனிமலர்க் குழற்பாவை நல்லாரினும் தனிமுடி கவித்தாளும் அரசினும் இனியன்' என்ற அப்பர் கூற்றாலும் அறியலாம்.

இத்தகைய இன்பம் பெறுதற்கு இன்றியமையாதது இறைவன் அருள் என்னும் கருத்தை, மணிவாசகப் பெருமான் 'கொம்பரில்லாக் கொடிபோல் அலமந்தனன் கோமளமே வெம்புகின்றேனை விடுதி கண்டாய்' என்ற வரிகளில் உணர்த்துகிறார். பண்டிதமணி அவர்கள் தமது உரையில் குறிப்பிடுகின்றார் : 'ஒரு கொடி தோன்றுதற்கு ஆதாரமாகவும் வெளிப்பட்டு வளர்வதற்கு இடமாகவும் உள்ளவை முறையே நிலமும் வெளியுமாகும். அம்முறையில் தாம் பிறத்தற்கும் உடலோடு கூடிப் போக்குவரத்துச் செய்தற்கும் இறைவன் ஆதாரமாகவும் இடமாகவும் இருத்தலின், 'நிலமே அம்பரமே' எனவும், அக் கொடி பற்றுக்கோடின்றிச் சுழலுதற்குக் காற்றும் வெம்புதற்குத்

தீயும் காரணமாதல் போல எஞ்சிய வினையால் திருவருட்சார்பு பெருமல் தாம் சுழலுதற்கும் வாடுதற்கும், அவ்வாட்டம் நீங்கப் பெற்றுத் திருவடி நீழலில் குளிர்ந்த இன்பம் பெறுதற்கும் காற்று தீ நீர் என்னும் பூதங்களின் வடிவமாக இறைவன் விளங்குதலின் 'காலொடு அனல் அப்பானவனே' எனவும் கூறியருளினர். மலவெப்பத்தால் வெம்பிக்கிடக்கும் அடியேனைக் குளிர்ந்த திருவருள் வெள்ளத்தில் மூழ்குவித்து இன்புறுத்துவதே நின் இயல்பாக இருக்க, அங்ஙனம் செய்யாமல், கைவிடுதல் தகுமா" என்று மாணிக்கவாசகர் கேட்கிருர்.

## திருவருட் சார்பு

சைவ சமயத்தில் திருவருட் சார்பு என்பது மற்ருேர் உயிர்நாடி. இதைக் காமிகாகமம் கூறும் :

न मोक्षं यान्ति पुरुषाः स्वसामर्थ्यात् कदाचन ।
मुक्ता प्रसादं देवस्य शिवस्याशिवहारिणः ॥

"தன்னுடைய சாமர்த்தியத்தினுல் முனைப்பினுல் மக்கள் முத்தியடைய இயலாது. தீயவற்றைக் களைகின்ற ஆற்றல் பெற்ற சிவனருளாலன்றி இயலாது" என்று ஆகமம் கூறுகின்றது.

தனதென்ற எண்ணம் இன்றி இறைவன்பால் உள்ளத்தைச் சமர்ப்பித்தலே சாலுமென ஆதிசங்கரர் கூறுகிருர் :

करस्थे हेमाद्रौ गिरिशनिकटस्थे धनपतौ
गृहस्थे स्वर्भूजामरसुरभिचिन्तामणिगणे ।
शिरःस्थे शीतांशौ चरणयुगलस्थेऽखिलशुभे
कमर्थं दास्येऽहं भवतु भवदर्थं मम मनः ॥

"இறைவன் கையிலே பொன்மயமான மேருவே உளது. குபேரனே நண்பன். இல்லத்தில் காமதேனு சிந்தாமணி போன்றவை உள. தலையிலே சந்திரன். பாதமலரில் அனைத்து மங்களமும் இருக்கிறது. இறைவனுக்கு அளிப்பதற்கென என்னிடம் யாதும் இல்லை. இறைவனுக்குத் தேவையுமில்லை. ஆனல் ஒன்றுண்டு. என் மனம் அவருக்கு உரித்தாகும்" என்கின்ருர் சங்கரர்.

நம்மனத்தில் இறைவன் திருக்கோலத்தை நட்டம் பயிலும் கூத்தனைக் காண்பது பொருத்தமுடைத்து. அவன் திருக் கூத்தின் பொருளை 'உண்மை விளக்க'மூலமாகக் காண்போம்.

“ மாயைதனை உதறி வல்வினையைச் சுட்டுமலம்
சாய அமுக்கிஅருள் தானெடுத்து—நேயத்தால்
ஆனந்த வாரிதியில் ஆன்மாவைத் தானமுத்தல்
தானெந்தை யார்பரதம் தான்.”

சைவத்தின் உயிர்நாடிகளைத் தன்னகத்தே அடக்கியுள்ள பேராசிரியர் சுந்தரம் பிள்ளையின் பாடலுடன் என் சிற்றுரையை முடிக்கின்றேன்.

ஆழி புடைசூழ் உலகம் யாவும் நலமேவ
அறத்துறை புகுந்துஉயிர்கள் அன்பு வெள்ளம் மூழ்கப்
பாழில் அலைவேனுடைய பந்தனைகள் சிந்தப்
பரிந்து அருள் சுரந்தஉமை நிரந்தரமும் வாழ்க !

# பிற்காலச் சைவம்



திரு. பூ. ஆலாலசுந்தரம் செட்டியார் அவர்கள், எம். ஏ.
(தமிழ்த்துறைத் தலைவர், கிறித்தவக் கல்லூரி, தாம்பரம்)

## சைவத்தின் பழைமை

சைவசமயம் மிகத் தொன்மை வாய்ந்த சமயமாகும். "முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம்பொருளே[1]" எனத் திருவாசகத்தைத் திருவாய்மலர்ந்தருளிய மணிவாசகப் பெருந்தகையாரின் திருவாக்கிற்கு ஏற்பச் சிவபெருமானைப் போன்று சைவசமயமும் கால எல்லையைக் கடந்துள்ளது. புதைபொருள் ஆராய்ச்சியின் பயனால் சிந்து மாகாணத்தி லுள்ள மோஹஞ்சோதாரோவிலும், பஞ்சாபிலுள்ள ஹாரப்பா விலும் பல நூற்றாண்டுகளாகப் பூமியில் புதைந்து கிடந்த நகரங்கள் 1922-ம் ஆண்டு வெளிப்படுத்தப்பட்டன. இந்த சிந்து சமவெளி நாகரிகத்தின் காலம் கி. மு. 3500 முதல் கி. மு. 2750

1. திருவெம்பாவை–9.

வரை இருக்கலாம் என ஆராய்ச்சியாளர் கருதுகின்றனர். அப்புதைபொருள் ஆராய்ச்சியில் சிவலிங்கம், நந்தி, நடராஜர், தக்ஷிணாமூர்த்தி முதலிய திருவுருவங்கள் கிடைத்தன. இவைகளைக் கண்ட சர். ஜான் மார்ஷல் என்பவர் "சைவ சமயம் மிகத் தொன்மையுடைய சமயம்[2]" எனக் கூறியுள்ளார். திருவாசகத்தினை ஆங்கிலத்தில் மொழிபெயர்த்த டாக்டர். ஜி. யூ. போப் என்ற அறிஞரும் சைவ சமயத்தின் தொன்மையினைப் பாராட்டியுள்ளார்[3]. எனவே மிகத் தொன்மைவாய்ந்த சைவ சமயத்தின் வரலாற்றினை ஆராய வேண்டின் சங்க காலத்திற்கு முற்பட்ட சைவம், சங்ககாலச் சைவம், பல்லவர் காலச் சைவம், சோழர் காலச் சைவம், பிற்காலச் சைவம், தற்காலச் சைவம் எனப் பல கூறுபடுத்தி ஆராய்தல் இன்றியமையாததாகும்.

## சோழர்க்குப் பின்பு

பிற்காலச் சைவம் என்ற தலைப்பு கி. பி. 14-ஆம் நூற்றாண்டு முதல் கி. பி. 19-ஆம் நூற்றாண்டு வரையிலுள்ள சைவசமய நிலையைக் குறிப்பதாகும். கி. பி. 13-ஆம் நூற்றாண்டில் சிறந்த நிலையில் இருந்த பாண்டிய மன்னரின் ஆட்சி 14-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் குன்றுவதாயிற்று. 14-ஆம் நூற்றாண்டில் தமிழ்நாடு வேற்றரசரின் படையெடுப்பால் எல்லையற்ற இன்னலுற்றது. முகமதிய மன்னர் பாண்டிய நாட்டினை வென்று தம் ஆட்சிக்கு உட்படுத்தினர். அதன் பின்னர்ப் பதினைன்காம் நூற்றாண்டின் பிற்பகுதியில் விஜயநகர வேந்தன் தமிழ் நாட்டினைக் கைப்பற்றித் தன்

---

2. "Saivism has a history going back to the chalcolithic age or perhaps even further still and it thus takes its place as the most ancient living faith in the world" (Sir. John Marshall—Mohenjo-Daro and Indus Civilization V.l. I. p. vii.)

3. "Saivism is the old pre-historic religion of South India, essentially existing from pre-Aryan times and holds sway over the hearts of Tamil people" (Translation of Thiruvasagam by Dr. G. U. Pope)

ஆட்சியின்கீழ்க் கொண்டுவந்தான்[4]. எனவே, இந்நூற்றுண்டில், அந்நியர் ஆட்சி நடைபெற்றதால் பொருளுடைமைத் துறையிலும், சமயத்துறையிலும் தமிழ் மக்கள் எல்லையற்ற துன்பம் உற்றனர். ஆதலின், இந்நூற்றுண்டில் சிறந்த தமிழ் நூல்கள் பெருமளவில் தோன்றுதற்கு இடமில்லாமல் போயிற்று. எனினும், சைவ நன்மக்கள் செய்த புண்ணியத்தின் பயனால் பல அரிய சைவ சித்தாந்த நூல்கள் கி. பி. 14-ஆம் நூற்றுண்டில் தோன்றின.

## உமாபதி சிவாசாரியார்

சந்தான குரவர் நால்வருள் ஒருவரான உமாபதி சிவாசாரியார் என்பவர் 14-ஆம் நூற்றுண்டின் முற்பகுதியில் விளங்கியவர் என்பது, அவர் இயற்றிய சங்கற்ப நிராகரணம் என்ற நூலின் பாயிரத்தில் வந்துள்ள

"ஏழுஞ் சிறுநூறு எடுத்த ஆயிரம்
வாழுநற் சகனம் மருவா நிற்ப[5]"

என்ற வரிகளால் அறியலாகும். இதனால் சாலிவாகன சகாப்தம் 1235-க்குச் சரியான கி. பி. 1313-ம் ஆண்டில் சங்கற்ப நிராகரணம் என்ற நூலை உமாபதி சிவாசாரியார் இயற்றியருளினார் என்பது போதரும். சைவ சித்தாந்த சாத்திரங்கள் பதினான்கில் உமாபதி சிவாசாரியார் சிவப்பிரகாசம், திருவருட்பயன், வினாவெண்பா, போற்றிப் பஃறொடை, கொடிக்கவி, நெஞ்சுவிடுதூது, உண்மைநெறி விளக்கம், சங்கற்ப நிராகரணம் என்ற எட்டு நூல்கள் இயற்றியுள்ளார். இந்த எட்டு நூல்களுக்கும் 'சித்தாந்த அஷ்டகம்' என்ற ஒரு பெயரும் வழங்குவதுண்டு. ஆனால் திருவாளர் S. அனவரத விநாயகம் பிள்ளை M.A., L.T. அவர்கள் தமது ஆராய்ச்சியால், "உண்மைநெறி விளக்கம்" என்ற நூல் உமாபதி சிவாசாரியார் இயற்றியதன்று என்றும், அந்நூல் பதினான்கு சாத்திரங்களுள் சேர்க்கப்படுதற்குப் பதிலாகத் 'துகளறுபோதம்' சேர்க்கப்பட வேண்டும்[6]" என்றும் கூறியுள்ளது சிந்திக்கத்தக்கது.

---

4. பாண்டியர் வரலாறு-பக்கம்-156.
5. சங்கற்ப நிராகரணம்—பாயிரம் : 26–27 வரிகள்.
6. சித்தாந்த சாத்திரம் மூலமும் உரையும்—சைவ சித்தாந்த சமாஜப் பதிப்பு. 1934. பதிப்புரை ; பக்கம்—5.

## சிவப்பிரகாசம்

முதல் நூலான சிவஞானபோதம் வழிநூலான சிவஞான சித்தியார் என்ற இரண்டு நூல்களின் பொருள் இனிது விளங்குதற்கு இதனைச் சார்பு நூலாய் எழுதினர் உமாபதி சிவாசாரியார். இந்நூல் 100 விருத்தங்களைக் கொண்டுள்ளது. இது "தன்னை ஓதியுணர்ந்த பக்குவர் அறிவில் சிவம் பிரகாசித்தலின் சிவப்பிரகாசம்" என்னும் பெயர்த்தாய் நிலவும் சித்தாந்த நூல்[7]. இந்த நூலுக்கு இரண்டு உரைகள் உள்ளன. அவற்றுள் ஒன்று மதுரைச் சிவப்பிரகாசர் இயற்றிய உரை. மற்றொன்று திருவாவடுதுறை மடத்தைச் சேர்ந்த நல்ல சிவதேவரின் சிந்தனை உரை. சிவப்பிரகாசத்தை இயற்றிய உமாபதி சிவாசாரியார் தில்லைவாழ் அந்தணருள் ஒருவராவர். இவர் வடமொழி, தமிழ் என்ற இரண்டு மொழிகளையும் நன்கு பயின்றவர். பழமை என்ற காரணத்தால் ஒரு நூல் நல்லதென்றும், புதுமை என்ற காரணத்தைக்கொண்டு ஒன்று தீது என்றும் கூறுதல் தவறு என்பதனை,

"தொன்மையவாம் எனும்எவையும் நன்றாகா இன்று
தோன்றியநூல் எனும்எவையும் தீதாகா[8]"

என்று ஆசிரியர் இந்நூலின் பாயிரத்தில் விளக்கியுள்ளார்.

## திருவருட்பயன்

இது நூறு குறள் வெண்பாக்களைத் தன்னகத்துக் கொண்டுள்ளது; பதிமுதுநிலை, உயிரவைநிலை, இருள்மலநிலை, அருளதுநிலை, அருளுருநிலை, அறியும்நெறி, உயிர் விளக்கம் இன்புறு நிலை, அஞ்செழுத்தருள்நிலை, அணைந்தோர் தன்மை ஆகிய பத்துப் பகுதிகளை உடையது. இதற்கு நிரம்ப வழகிய தேசிகர் உரையும் சிந்தனையுரையும் உண்டு. சிந்தனையுரை இயற்றியவர் பெயர், காலம் முதலியன அறிவதற்கு ஏது ஒன்றும் இல்லை எனத் திரு. S. அனவரத விநாயகம் பிள்ளை அவர்கள் குறிப்பிட்டுள்ளார்.

---

7. திராவிடப் பிரகாசிகை : பக்கம்–200.
8. சிவப்பிரகாசம் ; பாயிரம்-12.

## வினா வெண்பா

இது 13 நேரிசை வெண்பாக்களையுடையது. உமாபதி சிவாசாரியார் சாத்திரக் கருத்துக்களைத் தம் ஆசிரியர் மறைஞான சம்பந்தரைக் கேட்டுத் தெளியும் வகையில் இந்நூல் அமைந்துள்ளது. இந்நூலுக்குத் திருவாவடுதுறை ஆதீனம் நமச்சிவாயத் தம்பிரான் எழுதிய உரை உள்ளது. இந்த உரையின் காலம் கி. பி. 1677 என்பர் ஆராய்ச்சியாளர்[9].

## போற்றிப் பஃறொடை

உமாபதி சிவாசாரியார் தமது ஞான குருவாகிய மறை ஞான சம்பந்தரின் அருட்செயல்களை வியந்து அவரைத் துதிக்கும் வாயிலாகப் பல சித்தாந்தக் கருத்துக்களை இந்நூலில் விளக்கியுள்ளார். இது 190 அடிகளையுடைய ஒரு கலிவெண்பா வில் அமைந்துள்ளது. இந்நூலாசிரியர் தமது ஆசிரியரைப் போற்றுவதால் இந்நூல் போற்றிப் பஃறொடை என்ற பெயர் பெற்றது. இந்நூலுக்கு ஒரு பழைய உரை உண்டு. இந்த உரையாசிரியரின் பெயர், காலம் முதலியன அறிய முடிய வில்லை.

## கொடிக்கவி

இது ஒரு கட்டளைக் கலித்துறையும் மூன்று நேரிசை வெண்பாக்களையும் கொண்ட ஒரு சிறு நூலாகும். உமாபதி சிவாசாரியார் தில்லையில் கொடியேறும் பொருட்டுப் பாடிய நூலாதலின் இது கொடிக்கவி என்னும் பெயர் பெற்றது. இதற்கு ஒரு பழைய உரை உள்ளது.

## நெஞ்சுவிடு தூது

உமாபதி சிவாசாரியார் தம் ஞானகுரவரான மறைஞான சம்பந்தரிடத்துத் தம் நெஞ்சினைத் தூதுவிடும் முறையில் அமைந்துள்ளது இந்நூல். இது 258 அடிகளையுடைய கலிவெண்பாவால் ஆகியது. இதற்கு ஒரு பழைய உரை உண்டு.

---

9. சித்தாந்த சாத்திரம்—சமாஜப்பதிப்பு. பக்கம்-904

"தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
வலைப்பட்டார் மற்றையவ ரென்று—நிலைத்தமிழின்
தெய்வப் புலமைத் திருவள் ளுவருரைத்த
மெய்வைத்த சொல்லை விரும்பாமல் [10]"

என உமாபதி சிவாசாரியார் இந்நூலில் முன்னோர் மொழி பொருளான திருக்குறளைப் பொன்னே போல் போற்றிய முறை படித்து இன்புறுதற்குரியதாகும்.

### உண்மைநெறி விளக்கம்

தத்துவரூபம், தத்துவ தரிசனம், தத்துவ சுத்தி, ஆன்ம ரூபம், ஆன்ம தரிசனம், ஆன்ம சுத்தி, சிவரூபம், சிவ தரிசனம், சிவயோகம், சிவபோகம் என்ற பத்துக் காரியங்களையும் இந்நூல் விளக்குகின்றது. இந்நூலின் ஆசிரியர் உமாபதி சிவாசாரியார் என்பது பல அறிஞரின் கருத்தாகும். ஆனால் "எண்ணும் அருணூல்" என்ற பாடலை எடுத்துக் காட்டாகக் கொண்டு இந்நூலின் ஆசிரியர் நத்தநாதனார் எனச் சிலர் கூறுவர்.

### சங்கற்ப நிராகரணம்

இந்நூலில் ஆசிரியர் உமாபதி சிவாசாரியார் அகச்சமயங்கள் பலவற்றின் கொள்கைகளை எடுத்துக்காட்டி அவற்றிற்கும் சைவ சித்தாந்தத்திற்குமுள்ள வேறுபாட்டினை விளக்கியுள்ளார். இது 20 நேரிசை ஆசிரியப்பாக்களைக் கொண்டுள்ளது. இதற்கு ஞானப்பிரகாச தேசிகர் உரை இயற்றியுள்ளார்.

இவைகளேயன்றிச் சேக்கிழார் புராணம், திருமுறை கண்ட புராணம், கோயிற் புராணம், திருத்தொண்டர் புராணசாரம் ஆகிய நூல்களை உமாபதி சிவாசாரியார் இயற்றியுள்ளனர். 14-ம் நூற்றாண்டில் ஏகாம்பரநாதர் உலா, தில்லைக் கலம்பகம், திருவாமாத்தூர்க் கலம்பகம் என்ற நூல்கள் இரட்டைப் புலவர்களால் பாடப்பட்டன. திருவாமாத்தூர்க் கலம்பகத்தில் இரட்டையர் சிவனடியாரின் சிறப்பியல்புகளைப் பாராட்டி,

---

10. நெஞ்சு விடுதூது—24-25.

11. சித்தாந்த சாத்திரம்: சமாஜப் பதிப்பு—முதல் பதிப்பு—பக்கம். 928.

"மீளார் பிறப்பினில் வீழார் நரகினில் வேறெருநூல்
கேளார் உயிர்க்கொரு கேடுசெய் யார்கிளர் தீவினையின்
மூளார் திருநுதல் நீறிக ழார்பின்னை முத்தியல்ல
தாளார்தென் மாந்தை யழகிய நாதர் அடியவரே [12]"

எனப் பாடியுள்ளது படித்து இன்புறுதற்குரியதாகும்.

'அரி' என்ற சொல்—திருமால் அரனுர்க்குத் தேவி என்பதைத் தெரிவிக்கின்றது என்ற கருத்தினை,

"வருக்கைத் தடம்பொழின் மாமாதை
　　யையர்க்கு மாசொன்றில்லா
முருக்கொத்த மேனி யழகிய
　　நாதர்க்கு மூச்சரவத்
திருக்கைக் கமல அரனுர்க்
　　கரிதிருத் தேவியன்றேல்
அரிக்குப் பொருளுரை யீர்கெடு
　　வீர்நும் மறிவின்மையே [13]"

என்ற பாடலில் இரட்டையர் (இக்கலம்பகத்தில்) குறிப்பிட்டுள்ளனர். இதே கருத்தினைத் திருநாவுக்கரசர்,

"அரியலால் தேவியில்லை ஐயன் ஐயாறனுர்க்கே [14]"

எனப் பாடியுள்ளது ஈண்டு ஒப்பு நோக்கத் தக்கது. இந் நூற்றுண்டிலேயே உமாபதி சிவாசாரியாரின் முதன் மாணுக்கராகிய அருள் நமச்சிவாய தேசிகரும், அவரது மாணுக்கர் சித்தர் சிவப்பிரகாசரும், அவரது மாணுக்கராகிய நமச்சிவாய மூர்த்திகளும் விளங்கினர். இந்நமச்சிவாய மூர்த்திகளே திருவாவடுதுறை ஆதீனத்தை நிலைநாட்டினுர்.

திருமலைராயனுல் ஆதரிக்கப்பட்ட காளமேகப் புலவர் கி. பி. பதினைன்காம் நூற்றுண்டின் இடைப்பகுதியில் வாழ்ந்தவர் என்பர். இவர் திருவானைக்காவிலுள்ள சிவபெருமான் மீது திருவானைக்கா உலா பாடியுள்ளார்.

---

12. திருவாமாத்தூர்க் கலம்பகம்—14.
13. திருவாமாத்தூர்க் கலம்பகம் 64.
14. திரு ஐயாறு : திருநேரிசை 5.

## கி. பி. பதினைந்தாம் நூற்றாண்டு

இந்நூற்றாண்டில் தமிழ்நாடு விஜய நகர ஆட்சிக்கு உட்பட்டுச் சில மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டது. "விஜய நகர வேந்தர்களின் பிரதிநிதிகளான மண்டலாதிபதிகள் அம் மாகாணங்களில் இருந்துகொண்டு அவற்றைத் தாமே நேராக ஆட்சி புரிந்து வந்தனர்[15]" அன்னியர் ஆட்சியில் சிறந்த தமிழ் நூல் தோன்றுவதற்கு வாய்ப்பு இல்லை யெனினும், சில அடியவர் இறைவனைப் பாடித் தமிழ் மொழிப்பற்று குன்றாத வாறு பாதுகாத்தனர்.

## அருணகிரிநாதர்

"அருணகிரிநாதர் திருவண்ணாமலையில் இருந்தவர் என்பதும், கி. பி. 1450-ஆம் ஆண்டில் இருந்த பிரபுடதேவமாராஜர் காலத்தவர் என்பதும் தவிர, இவரது குலம், இவர் தாய் தந்தையர் இன்னார், இவரது இளமைப் பருவ நிகழ்ச்சிகள் இவை எனத் தெளிவுறச் சொல்லக்கூடிய விவரங்கள் ஒன்றும் தெரிய வில்லை[16]" இவர் பாடியனவாக இப்போது 1361 திருப் புகழ்ப் பாடல்கள் கிடைத்துள்ளன. திருப்புகழ் பெற்றுள்ள திருப்பதிகள் தமிழ் மக்களால் போற்றப்படுகின்றன. கந்தர் அந்தாதி, கந்தர் அலங்காரம், கந்தர் அநுபூதி, திருவகுப்பு, மயில் விருத்தம் முதலியன இவரால் பாடப்பட்டவை.

## கி. பி. பதினாறும் நூற்றாண்டு

விஜய நகரத்து அரசரான கிருஷ்ணதேவராயரும் அவருக்குப் பின் வந்தவர்களும், தமிழ் நாட்டினை நேர்முகமாகவும் பிரதிநிதிகள் மூலமாகவும் ஆண்டு வந்தனர். தஞ்சையில் ஆண்டு வந்த நாயக்க மன்னரும் மதுரையில் ஆண்டு வந்த நாயக்க அரசரும். கிருஷ்ணதேவராயரின் பிரதிநிதிகளுள் மிகவும் முக்கியமானவர்கள். இவர்கள் வடமொழியினையும் தமிழ் மொழியினையும் தெலுங்கு மொழியினையும் ஆதரித்து வந்தனர். இந்நூற்றாண்டில் திருநெல்வேலி மாவட்டத்தில் பழைய பாண்

---

15. தமிழ் இலக்கிய வரலாறு : T. V. சதாசிவப் பண்டாரத்தார். அண்ணாமலைப் பல்கலைக் கழக வெளியீடு—பக்கம் 91.

16. அருணகிரிநாதர் வரலாறும் நூலாராய்ச்சியும்—தணிகைமணி, ராவ்பகதூர் வ. சு. செங்கல்வராய பிள்ளை M. A. பக்கம் 1.

டிய அரசர்களின் மரபில் வந்த சிலர் ஆட்சி புரிந்து வந்தனர். இவர்களுள் முக்கியமானவர் அதிவீரராம பாண்டியன், வரதுங்க பாண்டியன் முதலியோராவர். கூர்ம புராணம், காசி கண்டம் இலிங்க புராணம், நைடதம், திருக்கருவைப் பதிற்றுப் பத்தந் தாதி என்னும் நூல்கள் அதிவீரராம பாண்டியர் இயற்றி யனவாகும்.

இந்நூற்ருண்டிலேயே மறைஞான சம்பந்தர், மறைஞான தேசிகர், சிவாக்கிரயோகிகள், கமலைஞானப்பிரகாசர், குரு ஞான சம்பந்தர், நிரம்ப அழகிய தேசிகர் முதலிய சைவ சமயச் சான்ருேர்கள் பலரும் வாழ்ந்து வந்தனர். சிவதருமோத்தரம், சிவஞான சித்தியார் உரைகள், சேது புராணம், திருவாரூர்ப் புராணம், திருமழுவாடிப் புராணம், சிவ போகசாரம், முத்தி நிச்சயம் முதலிய சைவ நூல்கள் பலப் பல இக்காலத்தில் தோன்றின. இந்நூற்ருண்டிலேயே குருஞான சம் பந்தரால் தருமையாதீனம் தோற்றுவிக்கப்பட்டது. திருவிளை யாடற் புராணம் பாடிய பரஞ்சோதி முனிவர் இக்காலத்தைச் சேர்ந்தவர்.

## கி. பி. பதினேழாம் நூற்ருண்டு

இந்நூற்ருண்டின் முற்பகுதியில் மதுரையில் திருமலை நாயக்கர் (1636–1650) ஆண்டு வந்தார். குமரகுருபர அடிகள், சைவ எல்லப்ப நாவலர், அந்தகக்கவி வீரராகவ முதலியார், துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள், படிக் காசுப் புலவர் முதலிய சைவப் பெரும் புலவர்கள் இந்நூற்ருண் டில் வாழ்ந்து, அரிய பல நூல்களை இயற்றி யருளினர். கந்தர் கலிவெண்பா, கயிலைக் கலம்பகம், மீனட்சியம்மை பிள்ளைத் தமிழ், முத்துக்குமார சுவாமிபிள்ளைத் தமிழ், சிதம்பர மும் மணிக் கோவை, பண்டார மும்மணிக்கோவை முதலிய பல நூல்களைக் குமரகுருபர அடிகள் இயற்றினர். இவரால் நிறுவப் பெற்ற காசி மடத்தின் கிளைமடமாகவே திருப்பனந்தாள் ஆதீனம் தோன்றுவதாயிற்று. அருணசல புராணம், திரு வருணைக் கலம்பகம், திருவாரூர்க் கோவை முதலியன சைவ எல்லப்ப நாவலர் பாடியவை. அந்தகக்கவி வீரராகவர் திருக் கழுக்குன்றப் புராணம் பாடினர். பிரபுலிங்கலீலை துறைமங் கலம் சிவப்பிரகாச சுவாமிகள் பாடிய நூல்களுள் சிறந்ததொன்

ருகும். சோணசைலமாலை, நால்வர் நான்மணிமாலை என்பன வும் துறைமங்கலம் சிவப்பிரகாசரால் பாடப்பெற்று, அனைவரா லும் பெரிதும் பாராட்டப்படுபவை.

## பதினெட்டாம் நூற்றாண்டு

இந்நூற்றாண்டில் சாந்தலிங்க சுவாமிகள், திருப்போரூர்ச் சிதம்பர சுவாமிகள், தாயுமான அடிகள், திரிகூட ராசப்பக் கவி ராயர் முதலிய சைவப் பெரும்புலவர்கள் வாழ்ந்திருந்தனர். வைராக்கிய சதகம், வைராக்கிய தீபம், அவிரோதவுந்தியார் கொலைமறுத்தல், நெஞ்சுவிடுதூது முதலிய நூல்கள் சாந்த லிங்க அடிகள் இயற்றியனவாகும். இவர்தம் மாணுக்கரே திருப்போரூர்ச் சந்நிதிமுறை பாடிய சிதம்பரசுவாமிகள். திரி சிரபுரத்தில் விசய ரகுநாத சொக்கலிங்க நாயக்கரின் காலத்தில் வாழ்ந்தவர் தாயுமான அடிகள் (1706–1744). இவரது பாடல்கள் எளிமை, இனிமை, தெளிவு, உலகியல் அனுபவம் முதலியன நிறைந்து, வேதாந்த சித்தாந்த சமரச ஞானத்தை விளக்குவனவாகும். திரிகூடராசப்பக் கவிராயரின் குற்றாலக் குறவஞ்சியும், குற்றாலத் தலபுராணமும் சொற்பொருட்சுவை நலங்கள் சிறந்து, தமிழன்பர்கள் அனைவராலும் பெரிதும் பாராட்டப்படுவன ஆகும். திருக்கடவூர் அபிராமி யந்தாதி பாடிய அபிராமி பட்டரும் இக்காலத்தவரே யாவர். திருச் செந்தூர்ப் பிள்ளைத் தமிழ் பாடிய பகழிக்கூத்தர் வதிந்த கால மும் இதுவே. வாதவூரர் புராணம் பாடிய கடவுள்மா முனிவர், திருப்பாதிரிப்புலியூர்ப் புராணம்பாடிய சிதம்பரநாத முனிவர், திருத்தணிகைப் புராணம், பூவாளூர்ப் புராணம் பேரூர்ப் புராணம், விநாயக புராணம் முதலிய நூல்கள் பாடிய கச்சியப்ப முனிவர் முதலிய பலரும் இந்நூற்றாண்டின் பிற்பகுதியில் விளங்கினர். சைவ சித்தாந்தத்துக்குப் பெருந் தொண்டாற்றிய புலவரேறாகிய சிவஞான சுவாமிகளின் சிவஞானபோதப் பேருரை, சிற்றுரை, சிவஞான சித்தியார் உரை, சிவ சமவாத வுரை மறுப்பு, காஞ்சிப் புராணம் போன்ற பல அரிய பெரிய நூல்களும் இந்நூற்றாண்டிலேயே தோன்றின.

## பத்தொன்பதாம் நூற்ருண்டு

இந்நூற்ருண்டில் விளங்கியவர்களுள் மிகவும் சிறப்பாகக் குறிப்பிடத் தக்கவர்கள், இராமலிங்க அடிகள் (1823–1874), மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள், யாழ்ப் பாணத்து நல்லூர் ஆறுமுகநாவலர் (1823–1879) என்பவர் களாவர். இராமலிங்க அடிகளின் திருவருட்பா எளிமை இனிமை முதலியன நிறைந்து யாவர் உள்ளத்தையும் கவர்ந்து உருக்கம் விளைப்பதாகும். மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம்பிள்ளை அவர்கள் 16 தலபுராணங்களும், பல பிள்ளைத் தமிழ்களும் கோவை அந்தாதிகளும் பாடினர். இவர் பாடியயனவற்றுள் சேக்கிழார் பிள்ளைத் தமிழ் சிறந்ததொன்ருக அறிஞர்களாற் பெரிதும் பாராட்டப்படுகின்றது. சைவ சமயத்திற்குப் புத் துணர்ச்சியும் புத்துயிர்ப்பும் ஊட்டுதற்குப் பெருந்தொண்டாற் றியவர் யாழ்ப்பாணத்து நல்லூர் ஆறுமுக நாவலர் அவர்கள் ஆவர். பெரிய புராணம், திருவிளையாடற் புராணம், கந்த புராணம், திருக்கோவையார் உரை, சேது புராணம் முதலிய அரிய சைவ நூல்களைப் பிழையற ஆராய்ந்து பதிப்பித்தவர் இவரேயாம். இவர் தம் அரிய சைவத் தொண்டுகள் பெரிதும் பாராட்டற்பாலன.

# இக்காலச் சைவம்



மதுரை ஆதீனச் செஞ்சொல் மாமணி
திரு. ச. சிவகுமாரன் அவர்கள், M.A.
(பின்னி வணிக உயர் அலுவலர்)

## முன்னுரை

'சைவம்' என்பதற்கு விளக்கம் தேவை இல்லை. 'இக்காலம்' என்பதற்கு மட்டும் கால வரையறையாகக் கடந்த 150 ஆண்டுகளைக் கருத்தில் கொள்ளலாம். இந்த 150 ஆண்டுகள் உலகத்தின் விஞ்ஞான வளர்ச்சிக் காலமாகும். பொறியியல் புரட்சி (Industrial Revolution), மின்சார இயக்கம் (Electrification), நீராவிக் கப்பல் (Steam Ship), புகை வண்டி (Steam engine-locomotives), வான விமானம்

(Aeroplanes) முதலான விஞ்ஞான வளர்ச்சிகளினால், மனிதன் நேரத்தையும் தூரத்தையும் வென்றுவிட்டான். அதன் பயனாக உலக நாடுகள் ஒன்றோடொன்று அன்றாடம் உறவாடிப் 'பண்பாட்டுக் கலவை' (Fusion of cultures) ஏற்பட்டிருக்கிறது. உலகத்தில் விஞ்ஞான வளர்ச்சியில் மெய்ஞ்ஞான ஆராய்ச்சி குன்றி வருகிறது; அன்பு சுருங்கி அறிவு வளர்கிறது. மனிதன் பறவையைப்போல் பறக்கிறான்; மீனைப்போல் நீந்துகிறான்; ஆனால் மனிதன் மனிதனைப்போல் வாழவில்லை. இஃது இன்றைய உலகப் பொது நிலை.

## ஆங்கில ஆட்சியில் இந்தியா

இந்தியா இந்த 150 ஆண்டுகளில் ஆங்கிலேயர் ஆளுகையில் அரசியல் துறையில் அடிமை வாழ்வு வாழ்ந்ததோடல்லாமல், ஆங்கிலேயர் கல்வித் திட்டத்தின் பயனாகவும், ஆங்கில அரசாங்க சேவையின்மேல் வைத்த ஆசையாலும், தனது நெடுங்காலப் பண்பாட்டையே கைசோரவிட்டு, ஆங்கிலேயப் பழக்க வழக்கங்களை மேற்கொண்டும், ஆங்கில மொழியில் ஆர்வம் கொண்டும் தாய்மொழியைப் புறக்கணித்தது.

இருபதாம் நூற்றாண்டின் தொடக்க முதலே இந்தியர்களில் பலருக்கு உரிமைப் போராட்டத்தில் ஈடுபாடு ஏற்பட்டது. இராஜா ராம்மோஹன்ராய், தயானந்த சரசுவதி போன்ற பெருமக்கள் சமய வாழ்வில் தீவிர சீர்திருத்தக் கொள்கைகளைப் பரப்பினர். தென்னிந்தியாவில் இராமலிங்க சுவாமிகள் சமரச சன்மார்க்க நெறியைப் போதித்தார். பிராம்மணர்கள் ஆங்கிலக் கல்வியில் தேர்ந்து அரசாங்க சேவையில் உயர்ந்தும், வழக்குரைஞர் தொழிலில் பட்டம் பதவி பெற்றும் தமிழ் மொழியைப் புறக்கணித்து ஜாதிப் பெருமை கொண்டு திரிந்து வந்ததால், சுயமரியாதை இயக்கம் தோன்றி முறுகி வளரலாயிற்று. இயந்திரத் தொழில் வளர்ச்சியால் முதலாளி—தொழிலாளிப் பிரச்சினைகள் பெருகின. இரண்டு உலகப் போர்கள் காரணமாக வெளிநாடு சென்று திரும்பி வந்த பல்லாயிரக் கணக்கான தமிழர்கள் புத்துலகக் கருத்தைப் பரப்பும் தீவிரத்தில் சமய நம்பிக்கைகளையும் வழக்காறுகளையும் கைவிட்டனர்.

## உரிமை ஆட்சியில்

இரண்டாம் உலகப் போர் முடிந்தது; இந்தியா உரிமை பெற்றது. எல்லாரும் இந்நாட்டு மன்னர்களாயினர். மகத்தான 'தேர்தல் தெய்வம்' தாண்டவம் புரியத் தொடங்கியது. பொருளாதாரத் துறையில் விலைவாசிகள் விஷம் தலைக்கேறும் வேகத்தைக் காட்டிலும் ஏறிக்கொண்டே போகின்றன. ஏக குடும்பங்கள் (Joint Family) என்ற நிலை மாறித் தனிக் குடித்தனங்கள் ஏற்பட்டுக் குடும்பத் தொல்லைகள் பெருகிவிட்டன. மக்கள் தொகையும் பயங்கரமாகப் பெருகி வருகிறது. ஆட்சியாளர்களின் நிர்வாகத்தில் பல குற்றங் குறைகள் கூறப்பட்டுப் பொது மக்கள் மனத்தில் தாம் அநுபவிக்கும் சிறு சிறு இன்னல்களால் ஒரு கசப்புத் தட்டிவிட்டது. கோலத்தில் கேலியும், சீலத்தில் ஐயமும் தட்டுகின்றன. இந்தச் சூழ்நிலையில் சைவ மக்களுக்குச் சைவ சமயத்தைப் பற்றிச் சிந்திக்கவும் அக்கறை இல்லை; நேரமும் இல்லை.

இவ்வளவு கஷ்டத்திலும் ஒரு சில நன்மைகள் ஏற்பட்டிருக்கின்றன. அரசியல் உரிமையால் நமக்குத் தமிழே ஆட்சி மொழியாகி வருகிறது. தமிழில் சொற்கலை ஓங்கி வளர்கிறது. தெருவெல்லாம் தமிழ் முழக்கம் கேட்கிறது. தமிழ் கற்கும் ஆர்வம் பொங்குகிறது. ஆனால் சங்க இலக்கியம் கடினமாக இருக்கிறது. சமய இலக்கியமோ இன்சுவையாக இல்லை; அறிவுக்குப் பொருத்தமாக இல்லை. சினிமாப் பேச்சும் படமும் பத்திரிகையுமாகத் தமிழ் வளர்கிறது.

இப்பொழுது இருக்கும் நாற்பது வயதிற்கு மேற்பட்டவர்கள் ஒருவாறு இன்னும் சமய வாழ்வில் ஈடுபட்டு வருகிறார்கள். மற்றுள்ள இளைஞர்களுக்குச் சமயத்தைப் பற்றிய கவலையே இல்லை. பற்றுக்குறைக்கு வெளிநாட்டுப் பணம் பொதி பொதியாக வந்திறங்கிக் கிறித்தவக் கோயில்களாகவும், கிறித்தவ மருத்துவமனைகளாகவும், கிறித்தவக் கான்வென்ட் பள்ளிக்கூடங்களாகவும், கிறித்தவ சேவா சங்கங்களாகவும் எதிர்ப் பிரசாரம் செய்து வருகிறது. இன்னும் சில ஆண்டுகளில் அறநிலையப் பாதுகாப்பு முறை மாறி, இருக்கிற சில நல்ல திருக் கோயில்களும் மடாலயங்களும் பொருளாதாரத்தில் பாதிக்கப்பட்டுச் சைவ சமயமே இருப்பதா—இறப்பதா என்ற நிலைக்கு வரக்

கூடும். அரசாங்கமோ சமயச் சார்பு அற்றது. பள்ளிச் சிறுர்களுக்குச் சமய போதனை கூடாது; சினிமா போதனை தானுக நிகழ்ந்துவிடுகிறது.

இத்தகைய நெருக்கடியில் எவ்வாறு சைவம் தழைக்கும்? முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளாய்ப் பின்னைப் புதுமைக்கும் பேர்த்தும் அப் பெற்றியனுய் அல்லவா இருக்கிருன் சிவபரம் பொருள். எனவே, சைவ சமயிகள் காலத்தை அநுசரித்துக் குறிப்பிட்ட சில பழங்கருத்துக்களில் புது நாட்டம் வைக்கவேண்டும்; பழைய நகைகளுக்குப் புது மெருகு போடவேண்டும்.

### செய்யவேண்டுவன

கடவுள் ஒருவரே. அவர் ஒளி வடிவமானவர்; ஞான மயமானவர்; எண் குணத்தார். தமக்கென ஒரு பெயரோ உருவமோ இல்லாதவர்; ஆனுல் அன்புக்குக் கட்டுப்பட்டு நமக்கு ஏற்பத் தோற்றம் அளிக்கக் கூடியவர். அவரது ஐந்தொழில் அருமையை நடராச மூர்த்தம் குறிக்கிறது. திருவைந்தெழுத்தும் அதனையே மந்திரமாகத் தெரிவிக்கிறது. திருநீறு மந்திர சக்தி வாய்ந்தது. இத்தகைய சில அடிப்படை உண்மைகளை நிறுவி நீறு பூசிப் பஞ்சாட்சரம் ஓதி, மக்களிடம் ஜாதி-மத பேதமின்றி அன்பாகப் பழகி வருதல்வேண்டும்; திருக்கோயில்கள்—திருவிழாக்களின் பொருள்களைத் தெரிந்து அவற்றின் பயனை உணரவேண்டும்; சைவ சமய அடிப்படைக் கோட்பாடுகளை நமது குடும்ப வாழ்வில் வழுவாது நடை முறையில் காப்பாற்றி வருதல் வேண்டும்.

இம் முயற்சிக்குச் சாதனமாக மூன்று முறைகளைக் கையாளவேண்டும்:—

1. கந்த புராணம், திருவிளையாடற் புராணம், பெரிய புராணம் ஆகிய அருள் நூல்களையும்—வில்லி பாரதம், கம்ப ராமாயணம் ஆகிய இதிகாசங்களையும் இக்காலத்திற்கு ஏற்ற ஒழுகலாறுடன் படித்துப் பிரசங்கித்துப் பிரசாரம் செய்ய வேண்டும். இஃது எளிய இனிய சிறந்த முறை.

2. பன்னிரு திருமுறைகளில் இக்காலத்திற்கு மிகவும் பொருத்தமான பாடல்களைப் பலமாகப் பிரசாரம் செய்யவேண்டும். காலத்தால் திருமூலர் திருமந்திரம் முதல் பெரிய

புராணம் வரை உள்ள பொறுக்குமணி உருக்குப்பாக்களைப் பண்ணிசையோடு ஓதிப் பொருள் விளக்கவேண்டும். இம் முயற்சியில் திருநாவுக்கரசர் தேவாரம் பெரிதும் பயன்படும். விரிவஞ்சி மேற்கோள் காட்டாது விடுக்கிறேன்.

3. சைவ சித்தாந்த சாத்திர நூல்களை விஞ்ஞானக் கண்ணுடி வழியாகக் காட்டிப், பின் மனோதத்துவ முறையில் விளக்கிக், கடைசியில் சிவ தத்துவமும் பொருள் உண்மையில் உறைத்து நிற்கச் செய்யலாம். இதற்காகக் கோடை விடு முறையில், சைவ இளைஞர்களுக்கு—முக்கியமாகக் கல்லூரி மாணவர்களுக்கு—போக்குவரத்து உணவு உறையுள் வசதிகள் தந்து சைவசித்தாந்த வகுப்புக்கள் நடத்தலாம்.

மங்கையர்க்கரசியார், குலச்சிறையார் காலத்தில் சுருங்கி விட்ட அளவைவிட, இக்காலத்தில் சைவம் மோசமாகிவிட வில்லை. எச்சரிக்கையாக இருந்து எதிர் காலத்திலும் சைவம் தழைத்தோங்கச் செய்யவேண்டுவதே நமது முன்னணி வேலை.

# அறிவியலும் சைவமும்



சித்தாந்த சிகாமணி

திரு. க. வச்சிரவேல் முதலியார் அவர்கள், பி.ஏ., எல்.டி.

## அறிவியல்

உலகப் பொருள்களை நன்கு ஆராய்ந்து, அவற்றின் இயல்புகளை உடன்பாட்டு முகத்தால் உணரும் முறையைப் பின்பற்றுவதே அறிவியல்முறை எனப்படும். இவ்வாராய்ச்சி முறையில் உள் நோக்கி உணர்தல் (introspection), கற்பனை (speculation) என்பவற்றுக்கு இடம் இல்லை. இவ்வாறு ஆராய்ந்து காணும் முடிவுகள் சரி பார்க்கத் தக்கவையாய், பிறர்க்கு எடுத்துரைத்து மெய்ப்பித்தற்குரியவையாய் இருத்தல் வேண்டும். இத்தகைய முடிவுகளின் ஒழுங்கு அமைப்பே அறிவியல் எனப்படும். இது பூதவியல், பூத மாற்றவியல், உயிருடைப் பொருளியல் முதலாகப் பலப்பல பிரிவுகளாகி வளர்ந்து, மக்களுக்குக் கவர்ச்சி தரும் நாகரிகத்தை வளர்த்துக்

கொடுத்துள்ளது. இதனோடு உடன் எண்ணப்படுவது தொழில் நுட்பக்கலை. உண்மையில் இன்ஞான்று அறிவியலும் தொழில் நுட்பக்கலையும் (science and technology) உலகத்தில் பெரியதொரு மாற்றத்தைச் செய்து வந்துள்ளது. மேலும் செய்யும். இவற்றால் எல்லா நாடுகளும் எல்லா மக்களும் நன்மை பெறவேண்டும் என்பதில் யாதும் ஐயுறவு இல்லை.

## அறிவியலின் குறைகள்

ஆயினும், இவற்றில் ஒரு குறை உள்ளது. இவை மனிதனின் கையில் ஒரு பேராற்றலுள்ள கருவியைத் தருகின்றன. அக் கருவி நல்லதையும் விளைக்கவல்லது; தீயதையும் விளைக்க வல்லது. ஆனால், இவை அக்கருவியை எந்தத் திசையில் பயன்படுத்துவது என்பதைக் குறிப்பிடவில்லை. மேலும் அக்கருவியைப் பயன்படுத்தும் மனிதனைப்பற்றிய ஆழ்ந்த உண்மைகளை ஆராயக் கூறுகின்றது. அவன் தன்னை எப்படிக் கட்டுப்படுத்திக்கொண்டு நடக்கவேண்டும் என்று இவை கூறவில்லை. மக்கள் வாழ்க்கையின் முடிந்த குறிக்கோள் யாது என்னும் ஆராய்ச்சியை அறிவியல் தன் ஆட்சி வரம்புக்கு அப்பாற்பட்டதாகக் கூறித் தள்ளிவிடுகின்றது.

## அறிவியற் குறையின் விளைவுகள்

இக் குறைவால் நேர்ந்துள்ள விளைவு யாது? மனிதன் இயற்கைப் பொருள்களை அடக்கி ஆள்கின்றான்; ஆனால், தனக்குள் பலதலைப்பட்ட உணர்வுகளை ஒழுங்குபடுத்தி ஆள வலி இல்லாதவனாகி விட்டான். நாகரிகத்தின் உச்சவரம்பில் ஏறி நிற்கின்றான். ஆனால், தன்னை அறியாமையால் அந்த நாகரிகத்தோடு தன்னையும் ஒருங்கே அழித்துக்கொள்வானோ என எண்ணி நடுங்கும் நிலையில் இருக்கின்றான்.

> “ நுனிக்கொம்பர் ஏறினார் அஃதிறந்து ஊக்கின்
> உயிர்க்கிறுதி ஆகி விடும் ”

என்னும் பொய்யாமொழிக்கு எடுத்துக் காட்டாகும் அளவிற்கு, அறிவியலும் தொழில் நுட்பக் கலையும் மனிதனை உயர்த்தி உள்ளது எனக் கூறிவிடலாம் போல உள்ளது.

அறிவியல் உண்மை ஒன்றனையே குறிக்கோளாகக் கொள்ளுகிறது; அதுவும் புறப்பொருள் பற்றியதே ஆகும். ஆனால், மக்கள் வாழ்க்கை உண்மை - நன்மை - அழகு என்னும் முப்பொருளையும் அடிநிலையாகக் கொண்டு நடைபெறக் காண்கின்றோம். அறிவியல், மனிதன் இயற்கையை எதிர்த்துப் போர் புரிந்து அதைத் தனக்குப் பயன்படுவதாக்கிக் கொள்ள உதவுகின்றது. ஆனால், பிறமக்களோடு பழகி அமைதி வாழ்வு வாழவும், தனக்குள்ளே நிகழும் தீய உணர்ச்சி நல்ல உணர்ச்சி என்பவற்றின் போரில் வெற்றி காணவும் உதவவில்லை.

## அறிவியலை நிறைவு செய்வன

இவ்வாறு ஆராய்ந்து காணும்போது, அறிவியல் துறை மக்களுக்கு இன்றியமையாததாகவும், அருட்கொடையாகவும் அமைந்தபோதிலும், அது மக்கள் வாழ்க்கையின் ஒரு சார்பு பற்றியதாகவே நின்றுவிடுகிறது. அதன் நிறைவு நிலையைக் கருதி, இணைப்பான பேருண்மைகளை வெளிப்படுத்தவில்லை. இந்த வகையில் அறிவியலில் உள்ள குறைகளை நீக்கவல்லனவாய் இருப்பவை, இலக்கியம் - தத்துவக் கொள்கை - நுண்கலைகள் முதலியனவே ஆகும்.

## சிவநெறிச் சிறப்பு

இனி சைவம் எனப்படும் தொன்றுதொட்டு வரும் மெய்ந்நெறியை உளங்கொண்டு ஆராய்ந்தால், அது வாழ்க்கையின் முடிந்த குறிக்கோள் இன்னதெனத் தெளிவுபட விளக்கி, மனிதன் தன் சூழ்நிலைக்குத் தக நன்மையைக் கடைப்பிடித்து வாழும் வாழ்க்கை முறையை இலக்கியங்களாலும், தத்துவக் கொள்கையாலும், நுண் கலையாலும் புலப்படுத்தி வந்துள்ளது என்பதை உணரலாம்.

சைவம் என்பது பிறபல சமயங்கள் போல, உணர்ச்சியைப் பற்றி நிகழும் சமயம் என்னும் அளவில் அமைந்து விடாமல், ஆராய்ச்சியை உறுதுணையாகக் கொள்ளும் உயரிய தத்துவக் கொள்கையாகவும் உள்ளது. இதன் சாரம் :

> " எவ்வுயிரும் நீங்கா துறையும் இறைசிவனென்(று)
> எவ்வுயிர்க்கும் அன்பாயிரு "

என்னும் விதியில் உள்ளது. இதன் விரிந்த போக்கையும் நோக்கையும், இஃது உண்மைக்குக் கொடுக்கும் மதிப்பையும்

"அன்னிய நூலின் விதியவி ரோதமேல்
உன்னேல் பழுதென் றுளத்து"

என்னும் மற்ருெரு விதியால் உணரலாம்.

## சிவநெறித் தலைவர்கள்

சைவம் வேதகாலத்துக்கும் முற்பட்ட பழமை உடையது என்பதை அறிவோம். ஐயாயிரம் ஆண்டுகளுக்கு முன் இச் சிவநெறியைக் கைக்கொண்டு ஒழுகிய மக்கள் அறிவியலுக்கு ஒத்த மிகவுயர்ந்த பண்பாடும் நாகரிகமும் உடையராய் வாழ்ந்த வர்கள் என்பது தெளிவு. இஞ்ஞான்று நம்மிடையே உள்ள இலக்கியம், நுண்கலை, சிற்பம், பண்பாடு முதலியவற்றிற்கு அடிப்படை கோலியவர்கள் சைவத்தின் இரு கண்கள் எனப் போற்றப்படும் ஞானசம்பந்தரும், நாவுக்கரசரும் தான் என்பது வரலாற்று உண்மை.

## அறிவியலும் சித்தாந்தமும்

இனி இதன்கண் கூறப்படும் பொருள் உண்மை, பொரு ளியல்பு, சாதனம், பயன் என்பவை-அளவை முறைக்கு முற்றி லும் பொருந்தியவை என்பதைச் சிவஞான போதம் என்னும் ஒரு நூல் கொண்டே துணிதல் கூடும். சைவம் உலகத்தை உள்பொருள் எனவும், காரண காரிய நியதிக்கு உட்பட்ட தெனவும், உயிரின் அறிவு வளர்ச்சிக்குத் துணை புரிவதெனவும் கொள்வது; இவை அறிவியல் முறைக்கு நூற்றுக்கு நூறு பாகம் பொருந்துவன. உலகத்தின் முடிநிலைக் காரணநிலையை ஆற்றலுருவ அருநிலை வியாபகப் பொருள் என்னும் சைவத் தின் கொள்கை ஐன்ஸ்டீன் (Albert Einstein) முடிபுக்கு ஒத்ததாக உள்ளது. இன்னும், காலத்தைப் பொருட்பெற்றி யாகக் கொள்வதும், காலமும் இடமும் எல்லைக்குட்பட்டவை என்பதும் போன்ற பல நுண்ணிய கருத்துக்கள் அறிவியலின் இஞ்ஞான்றைய துணிவுகளுக்கு ஒத்துள்ளன.

இச்சிவநெறியை ஆராய்ந்து மேனுட்டினருக்குத் தெரி வித்தல், தமிழ் மக்களின் பண்பாட்டின் உயர்வை அவர்கள் தெரிந்து மகிழ ஏதுவாகும்.

# வைப்புத் தலங்கள்



'தமிழ்ச் சைவத் தாளாண்மையாளர்'
திரு. தி. கி. நாராயணசாமி நாயடு, கடலூர்

## சமய குரவர் காலநிலை

உலகம் நெறி தவறி உண்மை காணுது மயங்கும் காலங்களிலெல்லாம் அருட்பெருஞ் செல்வர்கள் பலர் ஆண்டவன் அருளால் தோன்றி, உலகுக்கு உண்மையுணர்த்தி உய்யும் நெறி காட்டிச் செல்கின்றனர் என்பதனை, வரலாற்று நூல்களின் வாயிலாக நாம் உணர்ந்து மகிழ்கின்றோம். ஏறத்தாழ 1300 ஆண்டுகட்கு முன்னர், நமது தமிழ் நாட்டில் தமிழ் மக்களின் வாழ்வு பல்லாற்ருலும் சிதைந்து சீரழிய நேர்ந்தது. தமிழ் மூவேந்தர்களின் அரசாட்சி நிலைதடுமாறியது. தமிழ்ச் சங்கம் நிலைகுலைந்தது. தமிழ்நாட்டில் களப்பிரர் பல்லவர் முதலிய வேற்று நாட்டு அரசர்களின் ஆட்சியும், வேற்று மொழிகளும் பரவத் தலைப்பட்டன. நயத்தக்க நாக

ரிகம் மிக்க பழந் தமிழ்ப் பண்பாடுகளும் கலைகளும் பிறவும் மங்கி மறையத் தலைப்பட்டன. தமிழர்கள் பல துறைகளிலும் இழிநிலை எய்திச் செய்வதறியாது திகைத்தனர். தமிழ் மக்களுக்குத் தமது மொழி தமிழ் என்றும், தாம் தமிழர் என்றும், தமது இனம் தமிழினம் என்றும், தமது உயரிய பழக்க வழக்கப் பண்பாடுகள் இவை என்றும், தமது சமய நெறியும் கோட்பாடுகளும் இன்னவை என்றும் கூட, உணர முடியாத இருள் அடர்ந்த சூழ்நிலைகள் ஏற்படலாயின.

## சமயக் கிளர்ச்சி

இத்தகைய தொரு கொடிய சூழ்நிலையிலேயே தமிழகப் பண்பாட்டின் காவலர்களாகத் திருநாவுக்கரசரும், திருஞான சம்பந்தரும் தோன்றியருளினர். "நாமார்க்கும் குடியல்லோம்! நமனை அஞ்சோம்!" என்ற அருட்பெரும் வீர முழக்கத்தினை எழுப்பினர். மிகப் பெருங்கிளர்ச்சி இயக்கம் ஒன்றினைத் தோற்றுவித்தனர். "பற்பல ஆயிரம் தொண்டர்கள்" தம்மைச் சூழ்ந்து பின்பற்றி நிற்க, இனிது தலைமை தாங்கி "நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பினர்". "தமிழன் என்று சொல்லடா! தலை நிமிர்ந்து நில்லடா!" "தமிழுக்கு அமிழ் தென்று பேர்! இன்பத் தமிழ் எங்கள் உயிருக்கு நேர்!"

"யாமறிந்த மொழிகளிலே தமிழ்மொழிபோல்
இனிதாவ தெங்கும் காணோம்!
பாமரராய் விலங்குகளாய் உலகனைத்தும்
இகழ்ச்சிசொலப் பான்மை கெட்டு,
நாமமது தமிழரெனக் கொண்டிங்கு
வாழ்ந்திடுதல் நன்றோ? சொல்வீர்!
சேமமுற வேண்டுமெனில் தெருவெல்லாம்
தமிழ்முழக்கம் செழிக்கச் செய்வீர்!

என்றெல்லாம் இந்நாளிற் பாடி நாம் வீறுகொண்டெழுதல் போல, இற்றைக்கு 1300 ஆண்டுகட்கு முன்னர் நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும், அவர்கள் வழிப் போந்த சான்றோர்கள் பலரும், தமிழ் மக்களின் இடையே மொழியுணர்ச்சியும் சமய வுணர்ச்சியும் கிளர்ந்தெழச் செய்தனர். "ஞாலம் நின் புகழே மிகவேண்டும் தென் ஆலவாயில் உறையும் எம் ஆதியே"

என்பது நம் சமயாசிரியர்களின் பெருவிருப்பாக இருந்தது. நாவுக்கரசரும், ஞானசம்பந்தரும் தமிழ்நாட்டில் மொழிப் புரட்சியும் சமயப் புரட்சியும் அவைகளை ஒட்டிய பிற புரட்சிகளும் அறவழியில் - அருள்நெறியில் நிகழுமாறு செய்தனர்.

## சமய குரவர் தொண்டுகள்

இத்தகைய பெரும் புரட்சிகளை மக்களிடையே நிகழ்த்துதற்காக, அவர்கள் தமிழ்நாட்டின் மூலை முடுக்குகளி லெல்லாம் சென்று சென்று இசைநலங் கனிந்த இறையருட் பாடல்களைப் பாடி, அவற்றின் வாயிலாகத் தமது உயரிய கொள்கைகளை யெல்லாம் உலகுக்கு உணர்த்தி, தமிழ்மக்கள் உணர்வைத் தட்டி எழுப்பினர். மொழிப்பற்றும் சமயப் பற்றும் இனப் பற்றும் பிறவும் கொள்ளச் செய்தனர்.

" மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் வைகலும்
எண்ணில் நல்ல கதிக்கு யாதுமோர் குறைவிலை"
" இன்பமே எந்நாளும் துன்பம் இல்லை"

என்பன போன்ற தன்னம்பிக்கை யூட்டும் கொள்கைகளைத் தமிழ் மக்களுக்கு அறிவுறுத்தினர். மக்களுக்கு இயற்கையினு லும் பிற காரணங்களாலும் இடர்கள் நேர்ந்தபோதெல்லாம் உறுதுணையாக இருந்து, அவ் விடர்களைக் களைந்து பெருநலம் புரிந்து, தமது அருளியக்கத்திற்கு ஆக்கம் தேடினர். சைவ சமய ஆசிரியர்கள் நிகழ்த்தியருளிய சமுதாயத் தொண்டு (Social service)களின் பெற்றி இனையதென்பதனை,

" அல்லார் கண்டத் தண்டர்பிரான்
அருளாற் பெற்ற படிக்காசு
பல்லா றியன்ற வளம்பெருகப்
பரமன் அடியார் ஆனுர்கள்,
எல்லாம் எய்தி உண்கவென
இரண்டு பொழுதும் பறைநிகழ்த்திச்
சொல்லாற் சாற்றிச் சோறிட்டார் !
துயர்கூர் வறுமை தொலைத்திட்டார் !"

எனச் சேக்கிழார் பெருமான் தமது பெரிய புராணத்தின்கண் விளக்கி யிருத்தல் ஈண்டு அறிந்தின்புறற்பாலது !

### சமயகுரவர் செயலாற்றல்

இங்ஙனமெல்லாம், நமது சைவசமய ஆசிரியப் பெருமக்கள் செய்தருளிய அரும்பெருஞ் செயல்களினாலே யன்றோ,

" மன்னன்நீ றணிந்தான் என்று
மற்றவன் மதுரை வாழ்வார்
துன்னிநின் றார்கள் எல்லாம்
தூயநீ றணிந்து கொண்டார்."
" ஞானசம் பந்தர் வாய்மை
ஞாலத்திற் பெருகி ஓங்கத்
தேனலர் கொன்றை யார்தம்
திருநெறி நடந்த தன்றே"

எனச் சேக்கிழார் பெருமான் சிறந்தெடுத்துப் பாடுமாறு போல, தமிழ்நாடு முழுதும் ஒரு பெரும் புரட்சியும் மறுமலர்ச்சியும் தமிழ்மக்களின் வாழ்வில் நிகழ்வனவாயின. அவ் வியக்கத்தின் அருமை பெருமைகளினாலன்றோ, "சைவ சமயம்" புத்துயிர்ப்பும் புத்துணர்ச்சியும் பெற்று இன்றுகாறும் ஆற்றலோடு நின்று நிலவிப் போதருகின்றது!

" நல்ல நந்தன வனப்பணி செய்பவர்
நறுந்துணர் மலர்கொய்வோர்
பல்ப ணித்தொடை புனைபவர் கொணர்திரு
மஞ்சனப் பணிக்குள்ளோர்
அல்லும் நண்ப லும்திரு அலகிட்டுத்
திருமெழுக்கு அமைப்போர்கள்
எல்லை யில்விளக் கெரிப்பவர் திருமுறை
எழுதுவோர் வாசிப்போர்"

முதலிய சைவப் பெருந்தொண்டுகள் புரிவோர் பலரும் இத்துணை நூற்றாண்டுகள் கழிந்தும், இன்னும் வழிவழியே இருந்து பெருகிக்கொண்டு வருவது, 1300 ஆண்டுகட்குமுன் நம் சைவ சமய ஆசிரியர்கள் நிகழ்த்திய அரும்பெருஞ் செயல்களின் விளைவே யன்றோ?

### வைப்புத் தலங்கள்

இத்தகைய அரும்பெருஞ் செயல்களை ஆற்றிய நம் சமய ஆசிரியர்கள், தம் கொள்கைகளை நாட்டு மக்களிடையே பரப்பு

தற்காக, தமிழகத்தின் பல பகுதிகளிலும் உள்ள பல்வேறு இடங்களுக்கும் தாமே நேரிற் சென்று, இசைநலமெலாம் கனிந்த தெய்வத் திருப்பாடல்களை ஓதி அருளினார்கள். அங்ஙனம் சமயாசிரியர்கள் தாமே நேரிற் போந்து தனித்தனியே பதிகம் பாடிய இடங்களும் ஊர்களுமே, " பாடல் பெற்ற தலங்கள் " என நம்மனோரால் பெரிதும் புகழ்ந்து பாராட்டப் படுகின்றன. அவ்வாறு தனித்தனிப் பதிகங்கள் பாடப் பெறாமல், சமயாசிரியர்களால் தம்து பாடல்களில் இடையிடையே குறித்து வைக்கப்பெற்ற இடங்களும் ஊர்களுமே "வைப்புத் தலங்கள்" என்னப்படுகின்றன. இந்நாளில் அரசியற் கட்சிகளின் கிளை அமைப்புகளும், கிளைக்கழகங்களும், தலைமை நிலையங்களும் நாடெங்கணும் பரவியிருத்தல்போல, பாடல்பெற்ற தலங்களும், வைப்புத் தலங்களும் நமது சமய ஆசிரியர்கள் பரப்பிய கொள்கைகளைத் தழுவி, அவர்தம் இயக்கத்திற்குத் துணை நின்ற மக்கள், அந்நாளில் மிகுதியாக வாழ்ந்த இடங்களாக இருந்திருத்தல் கூடும். எனவே, சமயாசிரியர்களைப் போற்றுகின்ற நாம், அப் பெருமக்களால் திருப்பதிகம் பாடப்பெற்ற சிவத்தலங்களையும், இடையிடையே தமது பாடல்களில் குறித்து வைக்கப்பெற்ற வைப்புத் தலங்களையும், அறிந்துணர்ந்துகொண்டு போற்றக் கடமைப்பட்டுள்ளனம் அல்லமோ ? அங்ஙனம் அறிந்துகொண்டு போற்றுதல், வரலாறு-மொழி-சமயம் முதலிய பலதிற ஆராய்ச்சிகளுக்கும் இந்நாளிற் பெரிதும் பயன்படும்.

# சுந்தரர் வழக்கும் சேக்கிழார் வாக்கும்



திரு. இரத்தினவேல் சதாசிவம் அவர்கள், பி.ஏ., எம்.எல்.
(மாநில முதன்மை நீதிபதி)

## சேக்கிழார் செய்கை

இன்று நேற்றல்ல; மனித சமுதாயம் இவ்வுலகில் தோன்றியதுமே வழக்கென்பதும் தோன்றியதோ என எண்ணும்படியாக, மிகப் பழங்காலந் தொட்டே நம் சமுதாயத்தில் வழக்கு காணப்படுகின்றது. இக்காலத்தும், பூசல்களும் அவற்றால் விளைகின்ற வழக்குகளும் மலிந்து கிடக்கின்றன. எதிர் காலத்தும், இத்தகைய வழக்குகள் மிகப்பல இருக்கு மென்பதில் ஐயமொன்றுமில்லை. சுந்தரர் காலத்தில் (கி. பி. 9-ம் நூற்றாண்டில்) மக்களுக்கிடையே எவ்வாறு வழக்கு உண்டாயிற்று; அது எவ்வாறு தீர்த்து வைக்கப்பட்டது என்பதைச் சேக்கிழார் தாமியற்றிய திருத்தொண்டர் புராண வாயிலாக நமக்கு நன்கு

விளக்குகிறார். சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள வேண்டி இறைவன் கொண்டுவந்த வழக்கு ஓர் அருட்பெரு வழக்காகும். உலகியலில் மக்களிடை ஏற்படுகின்ற வழக்கு உலகியல் வழக்கு. ஆண்டானாகிய இறைவனுக்கும் அடியவராகிய சுந்தரருக்கும் இடையே ஏற்பட்ட வழக்கு ஒரு தெய்வீக வழக்கு. உலகியல் வழக்குக் கேற்ற சட்ட நுணுக்கங்கள் தெய்வீக வழக்கிற்குப் பொருந்தா. ஆனால் அநபாய சோழனுக்கு முதன் மந்திரியாக விளங்கிய சேக்கிழார், தம் அரசியல் சட்ட நியாய அனுபவத் தால், இறைவன் கொணர்ந்த அருள் வழக்கிற்கும் உலகியல் நியாயங் காட்ட முயல்கின்றார்.

## சுந்தரர் வழக்கின் அடிப்படை

சுந்தரர் வரலாறு திருக்கைலையிலே தொடங்கித் திருக் கைலையிலேயே முடிவடைகிறது. அதில் தடுத்தாட்கொண்ட பகுதியில், சுந்தரர் வழக்கைச் சேக்கிழாரடிகள், திருப்பாட்டு களின் மூலம் திறமையாக விளக்கியிருப்பதைச் சுருங்கச் சொல்வது மிகக் கடினம். எனினும், மேற்கூறிய வழக்கு சுந்தரர் வாழ்க்கையில் எவ்விதம் புகுந்ததென்று, சேக்கிழார் வாக்கு மூலம் நோக்குவோம்.

திருக்கைலாயத்தில், சிவபெருமானுக்கு அணுக்கத் தொண் டராய்ப் பணியாற்றி வந்த ஆலாலசுந்தரமும், உமாதேவிக்குச் சேடியர்களாய்த் திகழ்ந்த அநிந்திதை கமலினி எனப் பெயர் கொண்ட இரு பெண்களும், திருநந்தவனத்தில் ஒரு நாள் மலர் கொய்யுந் தொண்டாற்றுகையில் சந்தித்தனர். இருதிறத் தாரும் காதலால் மனத்தே ஒருவயப்பட்டனர். பூப்பறித்து மீண்டார்கள். சுந்தரர் மீண்டு இறைவன் திருமுன் நின்றார். எல்லாம் வல்ல இறைவன் இதனையறிந்து,

“ ..................................................
மாதர்மேல் மனம் வைத்தனை, தென்புவி
மீதுதோன்றி அம்மெல்லியலாருடன்
காதலின்பங் கலந் தணைவாய் ”.

என்று சிவபெருமான் கட்டளையிட்டார். அதைக் கேட்ட சுந்தரர் மனங்கலங்கி, இறைவனது சேவடியை நீங்குமாறு சிறுமை செய்த தன்னை, நிலவுலகில் மனிதனாய்ப் பிறந்து

தீர்ன் மயங்கும் பொழுது தடுத்தாட்கொள்ள வேண்டுமென்று விண்ணப்பிக்க, இறைவனும் அவ்வாறே அருள் புரிந்தார்.

## சுந்தரர் பிறப்பும், மணமும் வழக்குவிவரமும்

திருமலை அல்லது கைலையில் ஏற்பட்ட காதலின் விளைவாக ஆலால சுந்தரர், தென் திசையில், திருமுனைப்பாடி நாட்டில், திருநாவலூரில், ஆதிசைவ அந்தணர் குலத்தில், சடையனுர்க்கு இசை ஞானியார் பால், மகனுகப் பிறந்தார். அக் காலத்தில் திருமுனைப்பாடி நாட்டை ஆண்டு வந்த நரசிங்க முனையர் என்ற சிற்றரசருக்கு மகவின்மையால், நம்பியாரூரர் என்ற பிள்ளைத் திருநாமத்தையுடைய சுந்தரரை அபிமான புத்திரராக ஏற்று வளர்த்து வந்தார். திருமணப் பருவத்தை அடைந்த நம்பிக்குப் புத்தூர்ச் சடங்கவி சிவாச்சாரியார் மகளைத் திருமணஞ்செய்ய நிச்சயித்துப் பெண் வீடாகிய புத்தூரில் திருமணம் ஏற்பாடாயிற்று.

இறைவன், கைலையில் வரமளித்தபடியே, சுந்தரரைத் தடுத்தாட்கொள்ள,

"மொய்த்துவளர் பேரழகு மூத்த வடிவேயோ
அத்தகைய மூப்பென்னும் அதன்படிவ மேயோ".

இவ்வடிவம் என்று, கண்டவர்கள் ஐயுறும்படி ஒரு கிழ அந்தணர் வேடங்கொண்டு திருமணப் பந்தலில் வந்து சேர்ந்தார். அவர் தம் வரவை அங்கிருந்தோர் முதலில் நல்வரவாகக் கொண்டு மகிழ்ந்தனர். வந்தவர் சிவபெருமானென்று, நம்பியாரூரர் உட்பட அங்கிருந்த யாருக்குந் தெரியாது. கிழவராக வந்த இறைவன் மணமகனுகிய நம்பியைப் பார்த்து "எனக்கும் உனக்குமிடையே ஒரு பெரு வழக்கு உள்ளது. அதனை முடித்த பிறகே, நீ உன் மணவேள்வியை முடிக்க வேண்டும்" என்று கூறினுர். நம்பியாரூரரும் அதற்கிணங்க, வந்த முதியோர் அங்குக் குழுமியோரைப் பார்த்து "இம்மண மகன், நாவல் நகர் ஊரன் எனக்கு அடியான்" என்ருர். இத்திடுக்கிடும் செய்திகேட்டு அனைவரும் அதிசயித்தனர்; சிலர் கோபித்தார்கள். சுந்தரரும் மற்றுஞ் சிலரும் சிரித்தார்கள். சிவனும் சினத்தால் முடுக்கப் பெற்று "ஏடா! நீ யாதுகுறித்துச் சிரித்தாய்? உன் தந்தை, தன் தந்தை, நீ அடிமை

என்றெழுதிக் கொடுத்த ஆள் ஓலை என்னிடம் உள்ளது" என்றார். அதைக் கேட்ட நம்பியாரூரர் சிரிப்பு நீங்கி, அவரை நோக்கி "அந்தணர்கள் வேறோர் அந்தணருக்கு அடிமையாதலை இன்றுதான் நீர் சொல்ல நான் கேட்டேன்; நீர் ஒரு பித்தன் போலும் என்றார்." "என்னைப் பித்தனென்றும், பேயனென்றும் நீ எவ்வளவு தான் தீங்கு சொல்லினும், நான் உன்னை விடப்போவதில்லை. நீ வித்தகம் பேசவேண்டாம்; பணிசெய்ய வேண்டும்" என்று இறைவன் விடை பகர்ந்தார். இம்மறையவரது தோற்றத்தைக் கண்டபொழுதே தன் முற்பிறப்பின் பயனால் அவர் மேல் அன்பு பொங்கினும், "அடிமை செய்" என்ற சொல்லால் அடங்காச் சினங் கொண்டு "அப்படியானால் நீர் குறித்த ஆள் ஓலையைக் காட்டும்" என்றார். இறைவன் நம்பியாரூரரை நோக்கி "நீ ஓலையைக் காணும் தகுதி உடையையோ? அதை நான் அவை முன் காட்ட, நீ பணிசெயக் கடவை" என்று சொல்லி அவ்விடத்தை விட்டு அகல்வதற்கு முற்பட, அதைக் கண்ட நம்பி அவரைத் தொடர்ந்து சென்று அவர் கையிலிருந்த ஓலையை வாங்கிக் கிழித்தார். கிழவர் "இது முறையோ?" என்று ஓலமிட்டு நம்பியைப் பற்ற, அங்கிருந்தோர் அவரை விலக்கி, "உமது இருப்பிடம் எங்கே?" என்று கேட்டார்கள். "எமது உறைவிடமும் வெகு தூரத்திலில்லை. இதோ தெரிகிற திருவெண்ணெ நல்லூர் தான்! இந்நம்பி நேர்மைக்கு மாறாக என் கையிலிருந்த ஆவணத்தை வலிய வாங்கிக் கிழித்தமையால் இவன் எனக்கு அடிமை என்பதைத் தானே காட்டிவிட்டான்" என்றார். ஆரூரர் இறைவனைப் 'பழையமன்றாடி போலும்' இவன் என நினைந்து "உம்மூர் திருவெண்ணெ நல்லூராகில், உமது 'பிழைநெறி வழக்'கைப் பற்றிப் பேச அங்கே போகலாம் வாரும்" என அழைத்தார்.

## வழக்கு விசாரணை

கிழவராய் வந்த இறைவன் முன் செல்ல, அவரைப் பின்பற்றி நம்பியாரூரரும், அவர்தம் சுற்றத்தாரும் "இவ்வழக்கு என்னுமோ!" என வியந்து, அந்தணர் வாழும் திருவெண்ணெ நல்லூரை அடைந்தார்கள். அங்கு மறையோர் அவை முன் சென்று "நம்பியாரூரன் எனக்கடிமை யென்று நான் காட்டிய

ஓலையைக் கிழித்தெறிந்தான். இதுவே என் முறைப்பாடு" என்றார். அவர் சொல்லைக் கேட்ட அவையோர் "மறையவர் அடிமையாதல் இந்த மாநிலத்தில் இல்லை; நீர் சொல்வது யாது" என்றனர். அதற்கு அவ்வேதியர் "நான் உம்மிடம் முறையிட வந்த 'வழக்கு வந்தவாறு இசைவேயன்றோ?' இவன் கிழித்த ஓலை எனக்கு இவன் பாட்டன் எழுதிக் கொடுத்தது. இவன் முன்பே நான் காட்டிய ஆள் ஓலையைக் கிழித்தெறிந்ததால், இவன் தன்மை விளங்கவில்லையோ!" என்று வழக்கினைப் பொருத்தமாக எடுத்துச் சொன்னார். அவையோர் நம்பியாரூரரை "உமது கருத்து என்ன?" என்று கேட்டனர். நம்பியாரூரர் சபையோரைப் பார்த்து "நான் ஆதி சைவன் என்று அறிவீர். நான் வேறொருவருக்கு அடிமை யென்று இக்கிழவர் சாதித்தால், அவர் மாய வழக்கைப் புரிந்து கொள்ள என்னால் இயலாது" என்று விடை பகர்ந்தார். அது கேட்ட அவையோர் அந்தணராக வந்த கிழவரை நோக்கி "இவ்வுலகின்கண் நீர் இன்று இவரை, நும் அடிமை என்ற வெவ்வுரையை எம்முன்பு ஏற்ற வேண்டும்" என்று மீண்டும் உரைத்தனர்.

கிழவர் காட்டிய ஓலை நம்பியாரூரரால் கிழித்தெறியப் பட்டது. நம்பி தனக்கு வழியடிமை என்று சிவபெருமான் தம் உரையால் வாதிக்கிறார். ஒரு அந்தணருக்கு மற்றோர் அந்தணர் அடிமையாதல் உலகியலில் இல்லை என்று நம்பியாரூரர் எதிர் வாதம் செய்கிறார். இந்நிலையில், குறித்த வழக்கு தீர்மானிக்கப் படவேண்டும். எனவே அவையோர் கிழவரைப் பார்த்து,

> "ஆட்சியில் ஆவணத்தில் அன்றி மற்றயலார் தங்கள்
> காட்சியில் மூன்றில் ஒன்று காட்டுவாய்"

என்று கேட்டார்கள். "ஆட்சியாவது, நடைமுறையில் காணப் படும் சட்டம், வழக்கம் அல்லது அனுபவம் ஆகும். ஆவண மாவது, எழுத்தோலைகள். இவையிரண்டுமில்லையானால் அயலார் தங்கள் காட்சி (சாட்சி) யால் வழக்கை முடிவுசெய்ய வேண்டும். இம்மூன்றனுள் எந்த ஒருவகையால் உம்மால் சான்று பகர முடியும்?" என்று, கிழவரை அவையோர் கேட்டார்கள். அதைக் கேட்ட கிழவர் "நம்பியால் கிழித்தெறியப்பட்ட ஓலை ஒரு படி ஓலை. அதற்கு மூல ஓலை என்னிடமிருக்கிறது" என்றார்.

"அப்படியாயின் அதைக் காட்டும்" என்று அவையோர் பணிக்க "முன்புபோலிவன் இதைக் கிழிக்காமலிருப்பானுகில் யான் மூல ஓலையைக் காட்டுகிறேன்" என்ருர் முதியவர். அவையினர் "அதற்குத் தீங்கு நேராதவாறு நாங்கள் பார்த்துக் கொள்கிரேம்" என்று உறுதி கூற, முதியவர் ஓலையை எடுத்துக் கொடுத்தார். அந்தணரது கட்டளைப்படி நியாய அவையிலிருந்த 'கரணத்தான்' அதை வாங்கித் "திருநாவலூரில் இருக்கும் அந்தணராகிய நானும் எங்கள் வழியோரும் திருவெண்ணெய்நல்லூர் முனிவனுகிய பித்தனுக்கு அடிமை செய்ய, அகமும் புறமும் ஒப்ப எழுதியது; என் கைச்சாத்து நாவலூரன்" எனப்படித்து முடித்தான். அந்த ஓலையைக் கண்ட அவையிலுள்ள சிலர் அதிலுள்ள மேலெழுத்து தங்களதேயென ஒத்துக்கொண்டனர். அவையோர் நம்பியை நோக்கி "இதில் காணப்படுங் கையெழுத்து உங்கள் பாட்டனுருடையதா என்று நீங்கள் பார்த்துச் சொல்லுங்கள்" என்ருர்கள். கிழவேதியர் குறுக்கிட்டு "இவன் பாட்டனுரின் கையெழுத்தைப் பற்றி இவனுக்கென்ன தெரியும். இவன் பாட்டனுர் எழுதிவைத்த கைச்சாத்து வேறுண்டாகில் அதை இந்த ஆவணத்தோடு ஒப்பிட்டுப் பாரும்" என்ருர். அவர்கள் அவ்வாறே செய்தனர். இரண்டு கையெழுத்தும் ஒத்திருந்ததைக் கண்ட அவையோர் சுந்தரரைப் பார்த்து "தோற்றீர் பான்மையில், ஏவல் செய்தல் கடன்" என்று தீர்ப்பளித்தார்கள். "விதிமுறை இதுவேயாகில் நான் முடியாதென்று மறுக்க முடியுமோ!" என்ருர் நம்பியார். உடனே மறையவர் "உங்களது இல்லமும் செல்வ நிலையும் எங்கட்குக் காட்டின் நலம் விளையும்" எனக் கிழவேதியரை வினவ, அவரும் "என்னை நீவிர் யாரும் அறிந்திலீராயின் வாருங்கள் காட்டுகின்றேன்" எனக் கூறி, அவர்களை அவ்வூர்க் கோயிற்கு அழைத்துச் சென்று மறைந்தருளினுர்.

இது கண்ட சுந்தரர் மறையவர் வேடத்தில் தன்னைத் தடுத்தாட்கொள்ளவே பரமன் வந்தாரென்ற உண்மையை அறிந்து அவரை உளமுருகி அழைத்தார். அவரும் பார்வதி சமேதராய் அவருக்குக் காட்சியளித்து "வன்றெண்டர்" என்ற பெயரையும் அருளி மறைந்தார். இதுவே இறைவன் சுந்தரரைத் தடுத்தாட் கொண்ட வரலாறு.

## சுந்தரர்கால வழக்கும் இக்கால வழக்கும்

பண்டைக் காலத்தில் ஒருவன் தன்னையும் தனது சந்ததி யாரையும் அடிமையாக்கிக் கொள்ளும் வழக்கம் பல தேசத்திலு மிருந்தது என்பதில் சந்தேகமில்லை. சுந்தரர் காலத்தில் அந்தணர் அந்தணர்க்கு அடிமையாகும் வழக்கமில்லையென்பது அவர் வழக்கிலிருந்து தெரிகிறது. அதனால்தான் கிழவேதியரின் வழக்கைக் கேட்டு ஊரார் நகைத்தனர். சுந்தரரும் அவரைப் பித்தனென்றார்; அவர்தம் வழக்கைப் 'பிழைநெறி வழக்' கென்றார். உலகியலில் காணப்படாத, கேட்கப்படாத, ஒரு உரிமையைக் குறித்த வழக்காதலின் 'பிழைநெறி வழக்கு' எனப்பட்டது. திருவெண்ணெய்நல்லூர் அந்தணர் மன்றத்தில் இவ்வித வழக்கு எவ்விதம் கொண்டு வரமுடியும் என்ற பொழுது, கிழவேதியர் "வழக்கு வந்தவாறு இசைவேயன்றோ" என்றார். அதாவது ஒப்பந்தப்படி வரும் வழக்கு பொருத்த மான வழக்கு என்று மன்றாடினார். இவ்விதம் வாதிக்கத் தற்காலச் சட்டம் இடங் கொடாது. இது நமக்கு வியப்பைத் தருகிறது.

இவ்வழக்கின் வரலாற்றினைச் சேக்கிழார் வாயிலாக நாம் ஆராய்கின்றபொழுது, இக்கால வழக்கின் சட்ட நியாய நுணுக் கங்கள் அக்காலத்திலுமிருந்தன என்று நமக்குப் புலனா கின்றது. சுந்தரர் சிவனைப் 'பழைய மன்றாடி போலும்' என்றார். இங்கு மன்றம் என்றது மரத்தடியைக் குறிக்கும். முற்காலத்தில் நியாய அவை மரத்தடியில் கூடியதென்றும், வழக்கினை அவையோர் முன் கொண்டு வருதல், வாதித்தல், பிரதிவாதித்தல், அதைத் தீரவிசாரித்துத் தீர்ப்புச் சொல்லும் முறை இவை அக்காலத்திலுமிருந்ததாகத் தெரிகிறது. இது மட்டுமன்றி ஒரு வழக்குச் செவ்வனே தீர்க்கப்பட, ஆட்சி, ஆவணம், அயலார் காட்சி (சாட்சி) ஆகிய மூன்றிலொன்றைத் துணையாகக் கொண்டார்கள் என்பதும் புலனாகின்றது.

நமது இந்திய தேச சாட்சிச் சட்டத்தில், ஒரு வழக்கைத் தீர்ப்பதற்கு வேண்டிய சாதனங்கள் இவையே என்று தொகுத் துக் கூறப்பட்டுள்ளது. இந்து தேசச் சாட்சிச் சட்டத்தின் 114-வது பிரிவின்படி, சாதாரணமாய் நடந்து வருகிற தோரணையைக் கோர்ட்டார் யோசித்து, சில நிகழ்ச்சிகள்

உண்டாகி இருந்தனவா என்பதை நிச்சயித்துக் கொள்ளலாம். இந்த விதியைக் கிழவேதியர் பொருத்தமாகத் தன் வழக்கிற்குப் பயன்படுத்திக் கொண்டார் என்பதைச் சேக்கிழார் தம் வாக்கால் நமக்குத் திறம்படத் தெரிவிக்கிருர். ஆனுல் இந்த விதி, மூல ஓலை யிருக்கும்பொழுது படி ஓலைக்குப் பொருத்தமாகாது. முற்காலத்தில், தற்பொழுது காணப்படும் பிரதம சாட்சியம், உபசாட்சியம் என்ற வேற்றுமை யில்லை யென்று சொல்வதற் கில்லை. சுந்தரர் வழக்கின் முற்பகுதியில் கிழிபட்ட ஓலையைப் பற்றி வாதிக்கும்பொழுது, கிழவேதியர், அது படி ஓலை என்று நாம் சந்தேகப்படுவதற்குக்கூட இடங்கொடுக்கவில்லை.

தாவா பத்திரத்தை, நியாய மன்றத்தில் குமாஸ்தா படிப் பதுபோல், முற்காலத்தில் காரணத்தார் ஓலையை வாங்கிச் சபையோர் கேட்க வாசிக்கும் முறை இருந்ததாகத் தெரிகிறது. ஆவணம் எப்படி எழுதப்படவேண்டும், அது எப்படி நிரூபிக்கப் பட வேண்டும் என்பவற்றைக் கவனிக்கும்பொழுது, அக் காலத்து நடைமுறைக்கும் இக்காலத்திய நடைமுறைக்கும், அதிசயப்படத்தக்க ஒற்றுமைகள் காணப்படுகின்றன. சுந்தர ரின் பாட்டனர் ஆள் ஓலையில் “இருமையால் எழுதி நேர்ந் தேன், இதற்கிவை என்னெழுத்து” என்று கையொப்பமிட்ட தாகத் தெரிகிறது. மனமும் வாக்கும் ஒன்றுபட்டு எழுதின பத்திரமே செல்லு மென்பது நமக்கு நன்ருகத் தெரிந்த விஷயம். அந்த ஓலையில் மேலெழுத்து போடப்பட்டதாகத் தெரிகிறது. மேலெழுத்திட்டவர்கள் மூலம் ஒரு பத்திரத்தை ஓரளவு நிரூபிக்கலாம். ஆனுல் அவர்களுக்குப் பத்திரம் எழுதிக் கொடுத்ததாக ஞாபகமில்லாவிட்டால், எழுதிக்கொடுத்தவரின் கையெழுத்தை அவருடைய வேருெரு கைச்சாத்திலுள்ள கையெழுத்தை ஒப்புநோக்கித் தீர்ப்புக் கூறவேண்டும். இதே முறைதான் சுந்தரர் வழக்கிலும் காணப்படுகின்றது. இது போன்ற பல காரணங்களால் நாகரிகம் மிகுந்து காணப்படும் இக்கால வழக்கினைப் போன்றே சுந்தரர் காலத்திலும் வழக்கு கள் நடைபெற்றன என்பது தெரிகிறது.

# அழுதால் உன்னைப் பெறலாமே!



ஓய்வுபெற்ற மாவட்ட நடுவர்
திரு. P. H. சுந்தரம் அவர்கள், B.A., B.L.

**முன்னுரை**

இது மணிவாசகப் பெருமானின் திருவாக்கு. இஃது, அவர் பாடியுள்ள திருச்சதகத்தில்,

"யானே பொய்யென் னெஞ்சம்
பொய்யென் அன்பும்பொய்
ஆனால் வினையேன் அழுதால்
உன்னைப் பெறலாமே
தேனே யமுதே கரும்பின்
தெளிவே தித்திக்கும்
மானே யருளா யடியே
னுனைவந் துறுமாறே."

என்று வரும் பாட்டின் ஓர்அடி. இதன் பொருள் எளிதாக

விளங்குகிறது. “நான் பொய் ஒழுக்கம் உடையவன்; எனது நெஞ்சமும் வஞ்சகமானது; எனது அன்பும் போலியானது; என்றாலும் இப்படிப்பட்ட தீவினையை உடைய நான் அழுதால் உன்னை அடையலாம்” என்பது இப்பாடலின் பொருளாகும். அடிகளார் சொல்வதைப் பார்த்தால், இறைவனை அடைவதற்கு இது ஒரு எளிய வழியாய் இருக்கிறதாகத் தெரிகிறது. இந்த அழுகையின் தத்துவத்தைச் சிறிது ஆராய்வோம்.

### முதற்படி

மனிதன் அழுவது இயல்பு; சர்வ சாதாரணம் என்றும் கூட சொல்லலாம். உடல் நோயுற்று வேதனைப்படும் பொழுதும், உற்றார் உறவினர் பிரிந்தபோதும், பிறர் துன்புறுத்தியதால் மனம் நொந்தபோதும், மனிதன் அழுகிறதை நாம் பார்க்கிறோம். இப்படிப்பட்ட அழுகையால் நாம் இறைவன் திருவடியை அடையமுடியுமா? முடியாது. ஒருவரும் அடைந்தது மில்லை. ஆகவே, எப்படிப்பட்ட அழுகைவேண்டும்?

சிலர் பக்திப் பெருக்கினால் இறைவனைப்பற்றிப் பேசும் போதும் அல்லது இறைவனைப்பற்றிய பேச்சைச் கேட்கும் போதும் அழுகிறார்கள். அப்படியே பக்தி ததும்பிய பாடல்களைப் பாடும்பொழுதும் கேட்கும்பொழுதும் அழுகிறார்கள்; ஆனால் அந்தச் சூழ்நிலை மாறியபொழுது, பழைய மனிதர்களாகவே காட்சி அளிக்கிறார்கள். இந்த நிலையைத்தான் தாயுமானவர்,

“ கண்ணார நீர்மல்கி யுள்ளநெக் குருகாத
  கள்ளனே னானுமோ
கைகுவித் தாடியும் பாடியும் விடாமலே
  கண்பனித் தாரை காட்டி
அண்ணா! பரஞ்சோதி! அப்பா! உனக்கடிமை
  யானென மேலெழுந்த
அன்பாகி நாடகம் நடித்ததோ குறைவில்லை ”

என்கிறார்.

எப்படி நாடகத்தில் நடிப்பவன்நிலை வேடம் கலைந்தவுடன் மாறுகிறதோ, அப்படி இந்தநிலை மாறிக்கொண்டிருப்பதால், தாயுமானார் இந்த நிலையைக் கேவலம் ஒரு நடிப்பு என்று தள்ளி

விடுகிருர். உண்மையிலே அது அவ்வளவு கேவலநிலை அன்று. சிறந்த அநுபவத்தையும் நிலைத்த முக்தி நிலையையும் சகச நிலையையும் நாடிய தாயுமானுர்க்கு, இஃது ஒரு தாழ்ந்தபடியாகவே தோன்றிற்று. வழக்கமாக, அவர் தன்னை 'நாய்' என்றும், 'பேய்' என்றும், 'கடையேன்' என்றும் 'பொல்லேன்' என்றும் சொல்லிக்கொள்வது, அவர் பாடல்களைப் படித்தவர்களுக்குத் தெரியும். இது பெருந்தகையின் தாழ்மையைக் குறிக்கிறதே தவிர வேறென்றுமில்லை. இந்தநிலை இறைவனை அடைவதற்கு முதல்படி என்றே சொல்லவேண்டும்.

**இரண்டாம் படி :**

இந்த மேற்சொன்ன நிலையை நாம் கடைப்பிடித்து ஆண்டவனின் திருநாமத்தை அடிக்கடி சொல்லிக் கொண்டிருப் போமேயானல், சம்பந்தப் பெருமான் அருளிய 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் நிலை'தானே வந்து எய்தும். கண்ணுர நீர் மல்கி உள்ளம் நெக்குருகாத 'கள்ளன்' என்ற அபவாதச் சொல்லும் நம்மைவிட்டு நீங்கும். இந்த நிலையைத்தான் மணிவாசகர்,

"மெய்தா னரும்பி விதிர்விதிர்த்
துன்விரை யார்கழற்கென்
கைதான் தலைவைத்துக் கண்ணீர்
ததும்பி வெதும்பியுள்ளம்
பொய்தான் தவிர்ந்துன்னைப் போற்றி
சயசய போற்றியென்னுங்
கைதான் நெகிழ விடேனுடை
யாயென்னைக் கண்டுகொள்ளே."

என்ற பாடலில் குறிப்பிடுகிருர்.

வான்கலந்த மாணிக்க வாசகரின் வாசகத்தில் தோய்ந்து அநுபவித்த இராமலிங்க வள்ளலார், மேற்சொன்ன பாடலுக்கு விரிவுரை ஆற்றுவதுபோல்,

"நினைந்துநினைந் துணர்ந்துணர்ந்து நெகிழ்ந்துநெகிழ்ந் தன்பே
நிறைந்துநிறைந் தூற்றெழுங்கண் ணீரதனு லுடம்பு
நனைந்துநனைந் தருளமுதே நன்னிதியே ஞான
நடத்தரசே யென்னுரிமை நாயகனே யென்று

வனைந்துவனைந் தேத்துதும்நாம் வம்மினுல கியலீர்
மரணமிலாப் பெருவாழ்வில் வாழ்ந்திடலாங் கண்டீர்
புனைந்துரையேன் பொய்புகலேன் சத்தியஞ்சொல் கின்றேன்
பொற்சபையிற் சிற்சபையிற் புகுந்தருண மிதுவே.”

என்ற பாடலைப் பாடிப் போந்தார்.

## அழுகை பாவங்களை அகற்றும் :

இந்தநிலை அழுகையின் தத்துவத்தின் இரண்டாம் படியாகும். இந்த நிலையை அடைந்தவர்கள் நிச்சயமாக இறைவனை அடைவார்கள் என்பது இராமகிருஷ்ண பரமஹம்சர் போன்ற பெரியார்களின் துணிபு.

இப்படி, காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கிய பின்னர், மணிவாசகர் சொல்லியபடி, எல்லாம் பொய்யாகத்தான் தோன்றும்.

“யானே பொய், என் நெஞ்சும் பொய், என் அன்பும் பொய்” என்று அடிகளார் சொல்லும்பொழுது தமக்குமுன் திரைபோல் ஆண்டவனை மறைத்த ஆணவம், கன்மம், மாயை என்ற மும்மலங்களும் தன்னைவிட்டு அகன்றன என்பதைப் பார்க்கிறோம். மும்மலங்களும் தன்னைவிட்டு அகன்றபோது மனிதன் மாசற்று விளங்குகிறான். கறைபட்ட மனம் கண்ணீரால் கழுவப்பட்டுத் தூய்மை அடைந்து, நல்ல கண்ணாடியில் காண்பதுபோலத் தன்மனக் கண்ணில், தன் உண்மைச் சாயலையும் இறைவடிவையும் காண்கிறான். மனம் மாசு படிந்திருப்பதைத் தான் பாவம் நிறைந்த உள்ளம் என்று வேறு விதமாகச் சொல்லுகிறார்கள். பாவத்திற்குச் சரியான இலக்கணம் கூறுவது சிறிது கடினம்தான். ஏனெனில், ஒரு சாரார் பாவம் என்று கருதுவதை இன்னொரு சாரார் பாவம் என்று கருதுவதில்லை யாதலின் என்க. அதைப் புண்ணியம் என்றுகூடச் சொல்லுவார்கள். நாட்டுக்கு நாடு பாவத்தின் இலக்கணம் விதவிதமாகத்தான் இருக்கும் என்றாலும், கடவுள் நம்பிக்கை உள்ள எல்லோரும் ஒப்புக்கொள்ள வேண்டும் இலக்கணம் ஒன்று உண்டு. அஃது எந்தக் காரியங்கள் இறைவனை நாம் அணுக வொட்டாது தடுக்கின்றனவோ, அவைகளெல்லாம் பாவம் என்பதாகும். ஆகவே, பாவத்தையும் மும்மலங்களையும் அகற்றுவதற்கு அழுகை தேவையென்று மணிவாசகர்

திட்டவட்டமாகத் தெளிந்து, 'அழுதால் உன்னைப் பெறலாமே' என்று உருக்கமாகப் பாடியுள்ளார்.

## அழுகையின் தத்துவம் :

மேலே குறிப்பிட்டுள்ளதைப் பார்த்துச் சிலர், மனத்தில், 'என்ன இது! அவ்வளவு எளிய முறையாகத் தோன்றவில்லையே?' என்று ஐயப்படலாம். ஞானம் யோகம் கருமம் என்று சொல்லப்படுகிற வழிகளைவிட இது இறைவனை அடைவதற்கு எளியவழி என்று அநுபூதிமான்கள் சொல்லியிருக்கின்றனர். இந்த அழுகையின் தத்துவத்தை இன்னொரு கண்கொண்டு கூடப் பார்க்கலாம்.

உண்மையாக இறைவனை அடையவேண்டும் என்று ஒருவன் மனங்கசிந்து அழுவானேயானல், நிச்சயமாக இறைவன் கன்றின் குரலைக் கேட்டுக் கதறும் பசுவைப்போல ஓடிவருகிறன் என்று அநுபூதிமான்கள் சொல்லுகிறார்கள். பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, பாவிகளை ஈடேற்ற எப்பொழுதும் காத்துக்கொண்டிருக்கிறன் என்பதும் பெரியோர்களின் வாக்கு. பூனைக்குட்டி கத்தியவுடன் எப்படி தாய்ப்பூனை எங்கிருந்தாலும் வந்து தன் குட்டியைக் கவ்விக்கொண்டு செல்லுகிறதோ, அவ்வாறு இறைவன் தன் அளவற்ற கருணையால் காப்பாற்றுகிறன் என்பதும், அநுபூதிமான்கள் கண்ட உண்மை. குழந்தையின் கரத்தைப் பிடித்துக் கரடு முரடான பாதையில் ஒரு தகப்பன் நடத்திக் கூட்டிக்கொண்டு போவது போல, இறைவன் நம்மையும் நடத்துகிறன். வேண்டுவது எல்லாம் அவனைக் காணவேண்டும், அவன் திருவடியை அடைய வேண்டும் என்ற அவா; அந்த அவா நிறைவேருததால் எழுகின்றது அழுகை. மனைவி மக்கள் மாண்டபோது ஆற்றுப் பெருக்காக மனிதன் கண்ணீர் விடுகிறன். ஆனால், இறைவனை அடையவேண்டும் என்று அவன் கண்ணீர் விடுவதில்லையே!

உண்மையான அழுகைக்கு எல்லாச் சமயங்களிலும் சமய குரவர்கள் தனிச் சிறப்பிடம் அளித்திருக்கிறர்கள். குறிப்பாகக் கிறித்துவ சமயத்தில் ஒரு பாவி தன் பாவத்தை நினைந்து அழுவானேயானல், அவன் பரிசுத்தமாக்கப்பட்டு இறை நிழலில் வாழ்கிறன் என்பது அவர்களுடைய சித்தாந்தம். பிற சமயங்களும் அவ்வாறே கருதுகின்றன.

# திருமுறைப் பண்கள்



**சங்கீத வித்துவான் திரு. ப. சுந்தரேசன் அவர்கள்**
**(தமிழ்ப்பண் ஆராய்ச்சி வல்லுநர், குடந்தை)**

சிவநெறிச் செல்வர்களாய யாவருக்கும் வணக்கம்!

உலகின் எல்லா நாடுகளிலும், ஆங்காங்கு வாழும் மக்களின் வழியே மொழியும், மொழிவழித் தோன்றிய கலைகளும் இருந்து வருவதை நாம் அறிகின்றோம். அம் மொழிகளும், கலைகளும் ஒரு நாட்டின் பாகுபாட்டிற் கேற்ப, தொன்மையும் பற்பல வான வேறுபாடும் கொண்டு திகழ்கின்றன என்பதையும் அறிகின்றோம். நம் இந்திய நாட்டிலும் பல மொழிகளும் அவற்றிற் கேற்ற கலைகளும் மிகப் பழங்காலத்திலிருந்தே மக்களால் கண்டுணர்ந்து பயிலப் பெற்றும் வளர்க்கப்பெற்றும் வருவதை நன்றாக நாம் அறிந்தே வருகின்றோம். இம்முறையில், நம் நாட்டின் இசைக்கலையும் மிகத் தொன்மை வாய்ந்ததாய், **பண்முறையில்** (இராகத் துறையில்) நன்கு பேணப்படுவ

தாய், கீழ்நாடுகளின் நாகரிகத்திற்கே ஓர் எடுத்துக் காட்டாகத் திகழ்வதாய் விளங்கி வருவதை நன்கு அறியலாம். பொதுவாக இந்திய இசைக்கலையின் பண்பு, பிறநாட்டவர்களால் சிறப்பாகக் கருதப் பெற்று வருவதும் ஆராய்ச்சியாளர்கள் அறிந்ததே.

நம் இந்திய நாட்டின் இசைக்கலை இருவகைப்படும். ஒன்று தென்னிந்திய இசைக்கலை, மற்றொன்று வட இந்திய இசைக்கலை.

இவற்றுள் தென்னிந்திய இசைக்கலையைக் கருநாடக சங்கீதம் எனவும், வட இந்திய இசைக்கலையை இந்துத்தானி சங்கீதம் எனவும் கூறுவது வழக்கு. இவ்வாறு பாகுபாடு செய்து கூறியவர், கி. பி. பதினான்காம் நூற்றாண்டினராய அரிபாலதேவர் ஆவார். 'சங்கீத சுதாகரம்' எனும் இசைநூல் (வடமொழியில்) இவரால் எழுதப்பட்டது. இவர் கூறிய இக் கருத்தினை, பேராசிரியர் திரு. P. சாம்பமூர்த்தி ஐயர் அவர்கள் தனது கருநாட்க சங்கீத இசைப் பயிற்சி நூல் முதல் புத்தகத்தில் நன்கு தெளிவாகக் குறித்துள்ளார்கள்.

தென்னிந்திய இசைக்கலை, மிகப் பழங்காலத்திலிருந்தே, தனக்கே உரிய ஒரு வகைப் பண்பாட்டோடு நடையையும் அமைதியையும் கொண்டதாகும்.

" கருநாடக சங்கீதம் எனக் கூறுவதைக் காட்டிலும் தென்னிந்திய சங்கீதம் எனக் கூறுவதே சாலச் சிறப்புடையதாகும் " எனக் கூறும் அறிஞர்களின் கருத்தும், இக்காலம் நன்கு வரவேற்கத் தக்கதாகவே அமைந்துவிட்டது. எந்த நாட்டிலும் ஏதேனும் ஒரு கலை, பழமை வாய்ந்ததாகத் திகழப்பெறுமானால், அக்கலை அந்த நாட்டில் தொன்று தொட்டு வழங்கி வந்ததும், மக்களிடத்தில் அன்றாட வழக்கு முறைகளில் வழங்கி வருவதுமான மொழிவழியேதான், திகழ்ந்து வந்திருக்கக் கூடும்.

தென்னிந்திய இசைக்கலை, மிகவும் தொன்மையானது. ஆனமையினாலே, தென்னிந்தியாவில் மிகவும் தொன்மையான தமிழ் மொழி வழியேதானே அது தோன்றியிருக்கக் கூடும்! இக்கருத்தில் எவ்வகையான ஐயப்பாடுகளுக்கும் இங்கு இடமில்லை. இயற்கையும் உண்மையும் இதுவேயாகும். பழந்தமிழர்களில் அரிய கருத்துக்களை அள்ளியள்ளி வீசித் திகழும்

நமது சங்க நூல்கள் யாவும் இவ்விசைக்கலை பற்றி நன்கு கூறுகின்றன. அவை, கலையை முறையாகப் பயின்று மொழிப் பயிற்சியும் உடையார்க்கன்றிப் பிறருக்கு எவ்வாறு விளங்கும்?

இக்காலத் தமிழ் மக்களில், கற்றறிந்த பலரும் இசைக்கலை பற்றிய வரலாற்று முறைமைகளை அறியாது விடுத்தாலும் இசையில் விருப்பமில்லாமல் யாருமே இருப்பதில்லை. இத் தகையவனுர்களாலேயே அறிந்துணரப்படும் இசைக்கலையின் பெருமை, இயல்பாகவே மொழிவழித் தோற்றமுடையதாய்த் திகழுமாயினன்றி, அஃதும் ஒரு வகையில் தனித்த பெருமை யோடு விளங்கினலன்றி, மற்ற வகையில் வழக்கில் எவ்வாறு பயனெய்தும்? நிற்க, முறையாகப் பயின்று இசைக்கலையையே தொழிலாகக் கொண்ட தமிழ் மக்களுக்கு, எக்காலத்தும் தங்கள் கலைத் தொழில்பற்றி ஆராய்ச்சியும் குழப்பங்களும் ஏற்படுவதே இல்லை. இதுவே இயற்கை.

ஒரு காலத்தில் இந்திய நாடு முழுவதுமே ஒரே வகையான இசைக்கலையமைதி இருந்தது என்பதை ஆராய்ச்சியாளர்கள் நன்கு அறிந்துள்ளனர். தென்னுட்டு இசைக் கலையின் இலக் கண வகைகளைக் கூறும் வடமொழியில் எழுதப்பட்ட இசை நூல்கள் யாவும் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டிற்குப் பிற் பட்டவையேயாகும். இக் காலத்திற்கு முற்பட்ட வடமொழி யிசை நூல்கள் எல்லாம் தென்னுட்டின் பழைய இசைக்கலைப் பண்பின் கருத்துகளுக்கு ஏற்றவை யல்லவேயல்ல. நம் சேக் கிழார் பெருமான் அருளிய திருத்தொண்டர் வரலாற்றிலிருந்து தொல்காப்பியம் வரை மேனேக்கிச் சென்று, சென்ற காலத்தின் பழுதிலாத் திறத்தினை இசைக்கலை வகையிலும் காண்போ மாளுல், இக்காலத் தென்னிந்திய இசைக் கலையின் தொன்மை யும் பண்டைய இசைத்தமிழின் நீர்மையும் நன்கு விளங்கவே செய்கின்றன.

இத்துறையில் ஆராய்ந்து சென்ற ஒரு சில பெரியோர் களில் மிகச் சிறந்தவராகக் கருதப்பட வேண்டியவர், அருட்டிரு விபுலாநந்த அடிகள் ஒருவரே. அப்பெருந்தகையார் தனது வாழ்நாள் வேலையாகச் செய்து இற்றை நாளில் அளித்துள்ள யாழ்நூல், நம்மனேர் யாவருக்கும் பழைய இசைத் தமிழின் கணித முறைகளைப் பிழையின்றி அறிவிப்பதோடு, நமது சிவ

நெறித் திருமுறைகளில் அமைந்து விளங்கும் பண்களின் தூய்மையான உருவினை இலக்கண வாயிலாக அறிந்து கொள் வதற்கும் நன்கு பயன்படுவதாக அமைந்துள்ளது. இம் முறையில் நமது திருமுறைப் பண்களில் உள்ள காந்தாரம், செந்துருத்தி, இந்தளம், நட்டபாடை, தக்கராகம், குறிஞ்சி, புறநீர்மை ஆகிய ஏழு பண்களைப் பற்றி ஒரு சில ஆதாரங்கள் மட்டுமே கூறி, அப்பண்களுக்குரிய திருமுறைப் பாடல்களைப் பாடும் முறையையும் பாடிக்காட்டி, எனது பணியை முடிக்க விரும்புகின்றேன்.

## 1. காந்தாரம்

இக்காலத்தவர்களால் மிகவும் பாராட்டப் பெறுகின்ற முறையில் நம் விபுலாநந்தர் கண்ட இசைத்தமிழ்ப் பேருண் மைகளில் ஒன்று, பண்டைய இசைத் தமிழாளர்கள், அவர் களால் கண்டுணர்ந்து கைக்கொள்ளப்பெற்ற இசைகளில் முதல் இசைக்கு இட்ட பெயர் தாரம் என்பது ஆகும்.

தாரம், குரல், துத்தம், உழை, இளி என்னும் ஐந்திசை களே முதன் முதற்றோன்றியவை என்னும் உண்மை, பரி பாடலிலே வரும் ஐம்புழைக் குழலமைதியினுல் நன்கு தெளிவு படுத்தப்பட்டது. தமிழ் நூல்கள் கூறும் முறையில் தண்டமிழ் நாட்டு முல்லை நிலத்து மக்கள் குழற் கருவியையும் யாழ்க் கருவியையும் கண்டுணர்ந்த காலம், இற்றைக்கு எத் துணையோ நூற்றாண்டுகளுக்கு முந்திய காலமாக இருப்பதை யும் அறியலாம். பழைய பெரும் பாணர்கள் பேரியாழ் எனுங் கருவியில் தாரம், குரல், துத்தம், கைக்கிளை, உழை, இளி, விளரி என்ற ஏழிசையமைதிகளைத்தான் கொண்டிருந்தனர் எனும் உண்மையை, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த நமது திருஞானசம்பந்தரும், "தாரம் உய்த்தது பாணர்க்கரு ளோடே" எனக் கூறியிருப்பது கொண்டும் உணரலாம். பின் னரும் தாரம் எனும் இசைக்குரிய குறியீட்டெழுத்தாகிய கா எனும் எழுத்து சேர்ந்து, கா + தாரம், காத்தாரம், காந்தாரம் என்றெல்லாம் வழங்கிய பெற்றிமை நமது பழைய இசைத் தமிழிற்கேயுரியதாகும்.

திருஞான சம்பந்தர் காலத்தில், திருவையாற்றில் வாழ்ந்த ஆடல் தமிழ் பயிலும் சேயிழையார்களுக்குப் பின்பாட்டுப்

பாடிய காரிகையார்கள், தங்கள் குரலுக்கும் பாடல்களுக்கும் ஏற்றவாறு அமைக்கத்தக்க ஆதார சுருதியாகப் பழைய காந்தாரத்தையே கொண்டிருந்தார்கள் எனும் உண்மையையும், முத்தமிழ் விரகரான அந்தச் சம்பந்தரே,

"காந்தாரம் இசையமைத்துக் காரிகையார் பண்பாடக்
கவினுர்வீதித் தேந்தாமென் றரங்கேறிச்
சேயிழையார் நடம்பயிலும் திருவையாறே"

எனக் கூறியிருக்கவில்லையா?

அத்தகைய காந்தார இசையைப் பற்றியும் காந்தாரப் பண்ணைப் பற்றியும் நன்கு சிந்தித்துப் பார்த்தோமானால், விபுலாநந்தரின் இசைக்கணித முறையும், அதற்குச் சான்ருகச் சில தமிழ் நூல்களின் சொற்களும் நமக்குப் பெரிதும் துணை புரிகின்றன. இசைத்தமிழில் முதலிசைக்குப் பெயர் தாரம். தாரம் எனும் சொல்லும் தார்+அம் எனப் பிரிவுபடுகிறது. தார் என்ருல் இக்காலம் பாமர மக்களின் நினைவிற்கு வருவது வேறு. படித்த மக்களின் நினைவில் தார் என்பது மாலை என்ற பொருளில் வரும். பழைய இலக்கியம் படித்த பெரியோர்கள், "தார் தாங்கிச் செல்வது தானை தலைவந்த போர்தாங்கும் தன்மையறிந்து" எனும் குறளாலும், "தமருள் தலையாதல் தார்தாங்கி நிற்றல்" என்று புறப்பொருளில் வரும் சொற்களாலும் 'தார்' என்பது முதற்படையைக் குறிக்கும் என உணர்வார்கள். இசைகளுக்குத் தலையாய இசை, தாரம் எனப்பட்டது. ஒரு நிரலிலே யமைந்த (வரிசை) முதற்பொருளுக்குத் தலை எனக் கூறுவதுண்டு. இராசராசனது கல்வெட்டிலும், தளிச்சேரிப் பெண்களுக்கு வீடுகள் வகைசெய்து கொடுத்த முறையில், "தெற்குத் தளிச்சேரி தென்சிறகு தலைவீடு" "இத்தளிச்சேரி வடசிறகு தலைவீடு" என அந்தந்தச் சிறகில் உள்ள முதல் வீட்டைக் குறிக்கின்றது அச் சொல். இக் கருத்தினுலன்ரே இசைத்தமிழில் முதலிசையாகிய தாரத்தை, "தலையின தாரஞ் செய்யுந்தாரம்" எனக் கூறப்பட்டது!

ஆக, தாரம் எனும் இசை முதலிசை. மிகப் பழங்காலத்தில் நம் தமிழ்நாட்டில் ஐந்துதுளையுடைய குழற்கருவிகளிலும், பத்து நரம்புகளுடைய வில்யாழ்க் கருவியிலும் தாரம், குரல், துத்தம், உழை, இளி என்ற ஐந்திசையமைதிகள் இருந்தன.

இவ்விசைத் தொகுதிக்கு ஏற்ற பெயரும், முதலிசையின் பெயரைக் கொண்டே தாரப்பண் எனக் கூறப்பட்டது. தாரம் எனும் இசை, கா என்ற குறியீட்டெழுத்தைக் கொண்டு காந்தாரம் ஆனகாலத்தில், தாரப்பண் என்ற பெயரும் மாறுபட்டு காந்தாரப்பண் எனக் கூறப்படுவதாயிற்று.

எத்துணையோ ஆதாரங்கள் இன்னும் பல இருக்க காந்தாரப்பண் அமைதி, பெயரளவில் இவ்வாறு திரிந்துவிட்டதெனவும், இத்தொகுதி ஐந்திசைகள் கொண்டது எனவும் தெரிகிறது. அன்றியும் சிலப்பதிகாரம் 'புறஞ்சேரியிறுத்த காதை' யில் வரும், "பாய்கலைப் பாவைப் பாடற்பாணி ஆசான் திறத்தின் அமைவரக்கேட்டு" எனும் அடியின் உரை "ஆசான் திறம் காந்தாரம்" எனக் கூறுவதால் காந்தாரப் பண்ணிற்கு இயல்பான பழைய பெயர், ஆசான்திறம் எனவும் நன்கறியக் கிடக்கின்றது. அதுமட்டுமன்று, அடியார்க்கு நல்லார் இதனை இன்னும் நன்கு தெளிவுபடுத்துகின்றார். என்ன ?

"ஆசான் சாதி நால்வகையாவன, ஆசானுக்கு அகச்சாதி காந்தாரம், புறச்சாதி-சிகண்டி, அருகுசாதி தசாக்கரி-பெருகு சாதி சுத்தகாந்தாரமெனக் கொள்க. பண் நூற்று மூன்று. அவை நால்வகைப்படும்; பண், பண்ணியம், திறம், திறத்திறம் என. அவற்றுள் இது திறங்கூறிற்று" என்பதே அவர் அரிய வுரை.

இவ்வுரையினால் பழைய 'ஆசான் திறம்' என்ற பண்ணே காந்தாரம் என வேறொரு இயற்கை முறையில் பெயரெய்திற்று என நாம் நன்றாக அறியலாம். மேலும் அப்பண்ணிற்குரிய இசைகள் ஐந்து எனவும் நன்கு உணரலாம். இப் பண்ணினை அலகு முறைகளோடு அட்டவணைப் படுத்தலாம். 'திறம்' என்பது ஐந்திசைகளைக் கொண்டதாகும். இதனமைதி,

| இசைகள் | தாரம் | குரல் | துத்தம் | உழை | இளி |
|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ௪ | ௮ | ௧௩ | ௧௭ |

என இவ்வாறு அமையும் இவ்வலகுகளை இக்காலப் பெயர் வகைகளிற் கூறலாம். அதாவது, தாரம் தொடங்கும் இசை

யாக இருப்பதால் அதனை ஷட்ஜம் எனக் கூறி, அடுத்த குரலுக்குரிய நான்கு அலகுகளை சதுச்ருதி ருஷபம் எனவும், அடுத்த துத்தத்திற்குரிய எட்டு அலகுகளை அந்தர காந்தாரம் எனவும், அடுத்த உழைக்குரிய பதின்மூன்று அலகுகளைப் பஞ்சமம் எனவும், அடுத்த இளிக்குரிய அலகுகளை (பதினேழு) சதுச்ருதி தைவதம் எனவும் கூறவேண்டும். இவ்வாறு இயல்பாகவே அமைந்த இவ்வமைதி, இக்காலம் நம் தென்னாட்டில் மோகன ராகமாக வழக்கில் அழியாது இருந்தே வருகின்றது.

இத்தகைய காந்தாரப் பண்ணில் நம் திருமுறைகளில் திருஞான சம்பந்தர் அருளிய பதிகங்கள், இருபத்தொன்பதும் (29), திருநாவுக்கரசர் பாடியருளிய பதிகங்கள் ஆறும் (6), திருநாவலூரர் (சுந்தரர்) பாடியருளிய பதிகங்கள் ஐந்தும் (5), திருவிசைப்பாக்களில் இரண்டும் ஆகப் பதிகங்கள் முப்பத்து நான்களவில் இக்காலம் உள்ளன. இவற்றிற்குயாப்பு அமைதிகள் யாவும் ‘ கட்டளைகள் ’ என்ற முறையில் சிறக்க அமையப் பெற்றனவாகும். மூன்று பாடல்களை இங்கே பாடுகின்றேன். நேரங்குறித்து ஓரளவே இங்கு பாடலாமெனக் கருதுகிறேன்.

பவனமாய்ச் சோடையாய் நாவெழாப்
பஞ்சுதோய்ச் சட்டவுண்டு
சிவனதாள் சிந்தியாப் பேதைமார்
போலநீ வெள்கினையே
கவனமாய்ப் பாய்வதோர் ஏறுகந்து
ஏறிய காளகண்டன்
அவனதாரூர் தொழுது உய்யலாம்
மையல்கொண்டு அஞ்சல்நெஞ்சே

—திருஞானசம்பந்தர்

வனபவள வாய்திறந்து வானவர்க்கும்
தானவனே என்கின்றாளால்
சினபவளத் திண்தோள்மேல் சேர்ந்திலங்கு
வெண்ணீற்றன் என்கின்றாளால்
அனபவள மேகலையோடு அப்பாலைக்
காப்பாலான் என்கின்றாளால்
கனபவளஞ் சிந்தும் கழிப்பாலைச்
சேர்வானைக் கண்டாள்கொல்லோ

—திருநாவுக்கரசர்

எனக்கினித் தினைத்தனைப் புகலிடம் அறிந்தேன்
பனைக்கனி பழம்படும் பரவையின் கரைமேல்
எனக்கினி யவன்தமர்க் கினியவன் எழுமையும்
மனக்கினி யவன்தன(து) இடம்வலம் புரமே —சுந்தரர்

## 2. செந்துருத்தி

இப்பண்ணிற்குப் பழைய பெயர் செந்திறம் என்பதே. இப்பண்ணமைந்த யாழ், செங்கோட்டியாழ் ஆனமையினாலே 'செந்திறம் புரிந்த செங்கோட்டியாழ்' எனக் கூறப்பெற்றது. அதற்கு அடியார்க்கு நல்லாரால், "செந்திறம் புரிந்த—தன் பண்ணியம் அத்திறமாய்த் தனக்கினமான செந்திறத் தோடு புரிந்த வென்க" எனவும்—"என்றது பண், பண்ணியல், திறம், திறத்திறம், என்னுமிவை சம்பூர்ணம், சாடவம், ஔடவம், சதுர்த்தம் என வடமொழிப் பெயராலும் வழங்கும் அவற்றுட் செந்திறமென்றவாறு" எனவும் உரை கூறப் பெற்றன. செந்திறம் - செந்துருத்தி என நிகண்டிலும் கூறியிருப்பதால், பண்டைய செந்திறப்பண்ணே பின்னர்ச் செந்துருத்தி எனப் பெயரெய்தியது. இப்பண் முன் கூறிய காந்தாரப் பண்ணில் குரல் முதலாகத் தோன்றுவதாகும். செந்திறம் என்பது செவ்விய திறம் எனவும், செம்பாலையின் திறம் எனவும் கூறப்படுமாம். இப்பண்ணும் ஐந்திசைகளைக் கொண்டதே. இதனை அட்டவணைப்படுத்தினால், கீழ்க்கண்டவாறு அமையும்.

| இசைகள் | குரல் | துத்தம் | உழை | இளி | தாரம் |
|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ச | கூ | கங | கஅ |

இவ்வலகு முறைகளையும் இக்காலப் பெயரில் கூற வேண்டுமானால், குரல் தொடங்குமிசையானதால் ஷட்ஜம் எனவும், அடுத்த துத்தத்திற்குரிய நான்கு அலகுகளைச் சதுச்ருதிருஷபம் எனவும், அடுத்த உழைக்குரிய ஒன்பது அலகுகளைச் சுத்த மத்திமம் எனவும், அடுத்த இளிக்குரிய பதின்மூன்று அலகுகளைப் பஞ்சமம் எனவும், அதற்கடுத்த பதினெட்டு அலகு

களைக் கைசிகி நிஷாதம் எனவும் கூற வேண்டும். இவ்வாறு கூறின், இக்காலத்து மத்யமாவதி இராக மாகிறது.

நம் திருமுறைகளில் சுந்தரர் பாடியருளிய **மீளாவடிமை** என்ற ஒரே பதிகந்தான் இப்பண்ணில் நமக்குக் கிடைத்துள்ளது. இப்பாடலை மட்டும் என்னவோ தெரியவில்லை பரம்பரையாக ஓதுவார்கள் மத்யமாவதி இராகத்திலேயே பாடி வருவது நன்கு வழக்கில் உள்ளது. ஆராய்ச்சி முறைக்கும் வழக்கு முறைக்கும் இப்பண் வழிகாட்டியாக இருப்பதை நாம் நன்கு உணரவேண்டும். இப்பாடலையும் பாடுகின்றேன்.

மீளா அடிமை உமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போல் உள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளாய் இருக்கும் அடியார் தங்கள் அல்லல் சொன்னக்கால்
வாளாங்கிருப்பீர் திருவா ரூரீர் வாழ்ந்து போதீரே

—சுந்தரர்

## 3. இந்தளம்

இப்பண், முற்கூறிய காந்தாரப்பண்ணின் மூன்றும் இசையாகிய துத்தம் முதலாகத் தோன்றுவதாகும். இப்பண்ணிலேயே நமது திருநாவலூரர் (சுந்தரர்) "பித்தா பிறை சூடி" என்ற பாடலைப் பாடியதால், அருள் வழி நின்ற சேக்கிழார் பெருமான் அப்பண்ணின் இலக்கண முறைமைகளையும் நன்கு கூறி வைத்தார். அப்பாடலின் பகுதி,

"முறையால் வரு மதுரத்துடன் மொழி **இந்தளம்** முதலில் குறையா நிலை மும்மைப்படி" என்பதாம். இதன் கருத்து தார முறையால் வருகின்ற இனிமை பொருந்திய மொழி போன்ற இந்தளம், அத்தார முறையிலேயே வந்த இசை நிலைகள் குறையாது வரும் மூன்றும் முறைப்படி என்பதாம். இதனையும் அட்டவணைப்படுத்தின், கீழே கண்டவாறேயமையும்.

| இசைகள் | துத்தம் | உழை | இளி | தாரம் | குரல் |
|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ० | ௬ | க | கச | கஅ |

இவ்விசைப் பெயர்களையும் தற்காலப் பெயரில் கூறவேண்டு

மாயின், துத்தம் தொடங்குமிடம், ஷட்ஜம். உழை, சாதாரண காந்தாரம். இளி, சுத்த மத்திமம். தாரம், சுத்ததைவதம். குரல், கைசிகிநிஷாதம் எனக் கூறவேண்டும். அவ்வாறு கூறப்பெறுவது இக்காலம் இந்தோளராகம் ஆகிவிடுகிறது. காரைக்காலம்மையார் இப்பண்ணிலும் பதிகம் அருளியுள்ளார். இப்பண்ணில் அமைந்த திருப்பதிகங்கள், திருஞானசம்பந்தர் அருளியவை முப்பத்தொன்பதும், திருநாவுக்கரசர் அருளியவை மூன்றும், சுந்தரர் அருளியவை பன்னிரண்டும் ஆகிய ஐம்பத்து நான்கு பதிகங்கள் நமக்குத் திருமுறைகளில் கிடைத்துள்ளன. இப்பண்ணிலும் மூன்று பாடல்களைப் பாடுகின்றேன். திரு விசைப்பாவிலும் இந்தளப் பண்ணில் ஒரு பதிகமுண்டு.

பரவக் கெடும் வல்வினை பாரிடம் சூழ
இரவிற் புறங்காட் டிடை நின்று எரியாடி
அரவச் சடை யந்தணன் மேயவழ கார்
குரவப் பொழில் சூழ் குரங்காடு துறையே

—திருஞானசம்பந்தர்

ஒன்று கொலாம் அவர் சிந்தை உயர் வரை
ஒன்று கொலாம் உயரும் மதி சூடுவர்
ஒன்று கொலாம் இடு வெண்தலை கையது
ஒன்று கொலாம் அவர் ஊர்வது தானே

—திருநாவுக்கரசர்

தலைக்குத் தலைமாலை அணிந்த தென்னே
சடைமேற் கங்கை வெள்ளம் தரித்த தென்னே
அலைக்கும் புலித்தோல் கொண்டு அசைத்த தென்னே
அதன்மேல் கதநாகக் கச்சார்த்த தென்னே
மலைக்கு நிகரொப் பனவன் திரைகள்
வலித் தெற்றி முழங்கி வலம் புரிகொண்டு
அலைக்கும் கடலங் கரைமேல் மகோதை
அணியார்பொழில் அஞ்சைக் களத்தப்பனே

—சுந்தரர்

## 4. நட்டபாடை

பிங்கலந்தை நிகண்டு நூலாசிரியர் "'நைவளமென்பது நட்டபாடை" எனக் கூறினர். இதனல் நட்டபாடை என்ற பண்ணின் பழைய பெயர் நைவளம் என நன்கு அறியலாம். இப்பண்ணினை "நைவளம் பூத்த நரம்பியை சீர்ப் பொய்வளம் பூத்தன பாணு நின்பாட்டு" எனவும், "நைவளம் பழுநிய பாலை வல்லோன்" எனவும் "நைவளம் பழுநிய நயந்தெரி பாலை" என்றும் பல இடங்களிற் பழைய இலக்கியங்கள் நன்கு பேசுகின்றன. நைவளப் பண்ணின் அகநிலை நட்டபாடை, புறநிலை அந்தாளி, அருகியல் மலகரி, பெருகியல் விபஞ்சி என நிகண்டு நூல் கூறுகிறது.

இப்பண் குறிஞ்சியாழ்த் திறங்களில் முதல் திறனுக நிற்கும் குறிஞ்சியாழ் என்பது, குறிஞ்சி நில மக்களிடத்திருந்த கருவியைக் குறிக்கும். அக்கருவியில் செம்பாலை என்ற பெரும் பண்ணிற்கே நரம்புகள் கட்டப் பெற்றிருந்தனவாம். செம்பாலை என்பது இக் காலத்தில் அரிகாம்போதி என்ற இராகமேயாகும். ஒரு பெரும் பண்ணின் முதல் திறன் கிளை நீங்கிய முறையில் ஏற்படுவதாகும். கிளை என்பது ஒரு நிரலில் ஐந்தாமிசையாகும். ஏழு இசைகளில் ஒரு இசை (கிளை)யை நீக்க எஞ்சியிருப்பது ஆறு இசைகளாகும். ஆறு இசைகள் கொண்ட பண்ணைப் பண்ணியம், பண்ணியல், அல்லது பண்ணியற்றிறம் என்பது பண்டைய தமிழ் வழக்கு. திருஞான சம்பந்தர் அருளிய பாடல்களில் (நட்டபாடை) 'புண்ணியர் பூதியர்' எனும் பாடலில் 'பண்ணியல் பாடலருத ஆவூர்' என வருகிறது. இது ஒன்று கொண்டே நட்டபாடைப் பண், பண்ணியற்றிறம்தான் என்பதை நன்கு வலியுறுத்தலாம்.

இப்பண்ணின் இசைநிலையறியச் செம்பாலையை அட்டவணைப் படுத்தியறியவேண்டும். குரல் குரலாயது செம்பாலை எனப்படும்.

செம்பாலை—(அரிகாம்போதி)

| இசைகள் | குரல் | துத்தம் | கைக் கிளை | உழை | இளி | விளரி | தாரம் |
|---|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ௪ | ௮ | ௯ | ௧௩ | ௧௭ | ௧௮ |

இப்பாலையில் ஐந்தாமிசை இளியாகும். இதனை விலக்க எஞ்சிய ஆறு இசைகளைக் குரல், துத்தம், கைக்கிளை, உழை, விளரி, தாரம் எனக் கூறவேண்டும். இவைகளே நைவளப் பண்ணிற்குரிய இசைகளாகும். இதனை அட்டவணைப் படுத்தினால் இவ்வாறு அமைவுறும்.

நைவளம் (நட்டபாடை)

| இசைகள் | குரல் | துத்தம் | கைக்கிளை | உழை | விளரி | தாரம் |
|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ௪ | ௮ | ௯ | ௧௭ | ௧௮ |

இந்த அமைதிகளை இக்காலப் பெயர் முறையில் கூற வேண்டுமாயின் குரல் தொடங்குமிசையானதால் ஷட்ஜம் எனக்கூறி, அடுத்த துத்தம் நான்கலகில் இருப்பதால் சதுச்ருதி ருஷபம் என்வும், கைக்கிளை எட்டாம் அலகில் நிற்பதால் அந்தரகாந்தாரம் எனவும், ஒன்பதாம் அலகில் உழை இருப்பதால் சுத்தமத்தியமம் எனவும், அடுத்த விளரி பதினேழாம் அலகில் நிற்பதால் சதுச்ருதி தைவதம் எனவும், அடுத்த தாரம் பதினெட்டாம் அலகில் நிற்பதால் கைசிகி நிஷாதம் எனவும், கூறவேண்டும். இவ்வாறு கூறினால் இந்தப்பண் இக்காலம் நாட்டைக் குறிஞ்சி இராகத்தை ஒத்ததாகி விடுகின்றது.

சோழநாட்டில் பரம்பரையாகத் தேவாரத் திருப்பதிகங்களை மிக நல்ல முறையில் பாடிவந்த பழைய ஓதுவார்களிற் பலர் நட்டபாடைப் பண்ணிலமைந்த பதிகங்களை நாட்டைக்குறிஞ்சியில் தான் பாடி வந்துள்ளனர் என நன்கு அறியக்கிடக்கின்றது. திருவாவடுதுறை ஆதீன எட்டுப் பிரதிகளில் நட்ட

பாடை, நாட்டைக் குறிஞ்சியென்றே திரு. பொன்னோதுவார் மூர்த்திகள் குறித்து வைத்திருந்ததை விபுலாநந்த அடிகளா ரும் யாழ் நூலில் காட்டியுள்ளார். இப்பண்ணில் திருஞான சம்பந்தர் அருளிய பதிகங்கள் இருபத்திரண்டும், சுந்தரர் அருளிய பதிகம் ஐந்தும், இக்காலம் நம் திருமுறைகளில் உள்ளன. இவற்றில் இரண்டு பாடல்களைப் பாடுகின்றேன். நம் காரைக்காலம்மையார் அருளிச்செய்த மூத்த திருப்பதிகப் பண்ணும் நட்ட பாடையே. பழைய பதிப்புக்களில் அம்மை யார் பதிகத்தை முன் வைத்தே, பின்னர் ஞான சம்பந்தர் பதி கங்களை அச்சிட்டு வந்தனர்.

மையாடிய கண்டன்மலை மகள்பாகம துடையான்
கையாடிய கேடில்கரி யுரிமூடிய ஒருவன்
செய்யாடிய குவளைம்மலர் நயனத்தவ ளோடும்
நெய்யாடிய பெருமானிடம் நெய்த்தான மெனீரே

—திருஞானசம்பந்தர்.

கொன்றுசெய்த கொடுமையாற் பல சொல்லவே
நின்ற பாவ வினைகள் தாம்பல நீங்கவே
சென்று சென்று தொழுமின் தேவர் பிரானிடம்
கன்றினோடு பிடிசூழ் தண்கழுக் குன்றமே.

—சுந்தரர்.

## 5. தக்கராகம்

இப்பண்ணும் பண்ணியற்றிறமாகும். இதன் பழைய பெயர் அராகம் என்பதாம். பாலையாழ்த் திறனில் முதல் திற மாக நிற்பது தக்கராகமாகும். அராகத்தின் அகநிலை தக்க ராகம், புறநிலை அந்தாளிபாடை, அருகியல் அந்தி, பெருகியல் மன்றல் என யாழ்நூலில் அட்டவணைப்படுத்தப் பட்டுளது.

பாலையாழ் என்பது கருவி. இக்கருவியில் அரும்பாலை என்ற பெரும்பண்ணிற்கே நரம்புகள் கட்டப்பெற்றிருந்தன. அரும்பாலை என்பது இக்காலச் சங்கராபரண ராகமேயாகும். பாலையாழின்கிளை நீங்கிய திறனே தக்கராகமாகும். ஆறிசை களோடு திகழ்ந்த இப்பண்ணையும் திருஞான சம்பந்தர், திரு வேட்களப்பதிகத்தின் இறுதிப் பாடலில், "வேட்களம் மேல்

மொழிந்த பண்ணியல் பாடல் வல்லார்கள்" எனக்கூறி அருளிச் செய்துள்ளார். மிகப் பழைய தாரமுறையில் உழை குரலாயது அரும்பாலையாகும். நைவளமென்னும் நட்டபாடை, குறிஞ்சியாழில் கிளை நீங்கியது. தக்கராகம், பாலையாழில் கிளை நீங்கியது. அதாவது இக்காலச் சங்கராபரணத்தில் பஞ்சம இசை இல்லாத இராகம் எதுவோ அதுவே பண்டைய தக்க ராகமாகும். இதனை இருமுறையிலும் அட்டவணைப் படுத்தி யறியலாம்.

அரும்பாலை

| இசைகள் | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக்கிளை |
|---|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ச | அ | கூ | கரு | கஎ | உகக |

இவ்வரும்பாலையில் கிளையிசை குரலாகும். இதனை நீக்கிக் காணத் தக்கராகம் தோன்றும். இதனையும் அட்டவணைப் படுத்துமிடத்து இவ்வாறேயமையும்.

| இசைகள் | உழை | இளி | விளரி | தாரம் | துத்தம் | கைக்கிளை |
|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ச | அ | கூ | கஎ | உகக |

இத்தகைய அமைதியின் அலகுமுறைகளைத் தற்காலப் பெயர் முறையில் கூறவேண்டுமானால், உழை தொடங்குமிசையானதால் ஷட்ஜம் எனக் கூறவேண்டும். அடுத்த நான்காமலகில் நிற்குமிளியை சதுச்ருதி ருஷபம் எனக் கூறவேண்டும். அடுத்த எட்டாம் அலகில் நிற்கும் விளரியை அந்தரகாந்தாரம் எனக் கூறவேண்டும். பின்னர் ஒன்பதாமலகில் நிற்கும் தாரத்தைச் சுத்தமத்திமம் எனக் கூறவேண்டும். பதினேழாமலகில் நிற்கும் துத்தத்தை சதுச்ருதி தைவதம் எனக் கூற வேண்டும். இருப்பத்தியோராமலகில் நிற்கும் கைக்கிளையைக் காகலிநிஷாதம் எனக் கூறவேண்டும். இவ்வாறு கூறப்பெறும்

இராகம் தற்காலத்தில் அம்சவிநோதினி எனப்படும். இப் பண்களைத் தெளிவாகப்பாட இயலாது எனக் கருதியவர்கள் காம்போதி ராகத்திலேயே தக்கராகப் பண்ணிலமைந்த திருப் பதிகங்களைப் பாடத்தொடங்கி விட்டனர். அதனாலேயே தக்க ராகமும் தக்கேசியும் ஆகிய இரண்டு பண்களையும் ஒரே இராகத்தில் பாடுகின்ற வழக்கம் ஏற்பட்டுவிட்டது.

இவ்வழக்கத்தால், பண்களின் பெயர் மட்டும் இரண்டாக இருக்க, இராகப் பெயர் ஒன்றாக ஏன் கூறவேண்டும் என்ற ஐயப்பாடும் அதற்கான கேள்வியும் ஏற்பட்டுவிட்டன. மேற் காட்டிய இசைகளின் நிலையிலேயே தக்கராகப் பதிகங்களைத் தனித்துப் பாடிக் காட்டக்கூடும் என்பது அடியேனது கருத் தாகும். தக்கராகம் வேறு தக்கேசி வேறு என்பதே உண்மையு மாகும். இவ்வாறான தக்கராகப் பண்ணில் திருஞான சம்பந்தர் அருளிய திருப்பதிகங்கள் இருபத்து நான்கும், சுந்தரர் அருளி யவை நான்கும் இக்காலம் நமக்குக் கிடைத்துள்ளன. இவற்றுள் ஒரு பாடலை மட்டுமே இங்குப் பாடுகின்றேன். அதுவும் தெரிந்து வழக்கில் பாடுகின்றதேதான்.

மடையில் வாளை பாய மாதரார்
குடையும் பொய்கைக் கோலக் காவுளான்
சடையும் பிறையும் சாம்பற் பூச்சுங்கீள்
உடையுங் கொண்ட உருவமென் கொலோ.

—திருஞான சம்பந்தர்

செம்பாலையின் கிளை நீங்கிய பண்ணியற்றிறமான நட்ட பாடையையும், அரும்பாலையின் கிளை நீங்கிய பண்ணியற்றிற மான தக்கராகத்தையும் அடுத்தடுத்துத் திருமுறைகளில் வைத்திருப்பதே போதிய சான்றாகத் திகழ்கின்றது. ஆக இக்கால முறையில் மிகவும் தெளிவாகவும் மிக்க எளிமை யாகவும் இந்த இரண்டு பண்களைப் பற்றிக் கூறவேண்டுமானால் நட்டபாடையின் எடுத்தல் (ஆரோகணம்) படுத்தல் (அவரோ கணம்) களில் ஒரு இசை மட்டுமே, தக்கராகத்தின் எடுத்தல் படுத்தல்களில் மாறுதல் அடைகின்றது. அதாவது ஒரே வகையான இசைகளை (சரிகமத நிச்சநிதமகரிச) ஆரோகண அவரோகணமாகக் கொண்ட வகையில் நட்டபாடை (நைவளம்)க்குக் கைசிகிநிஷாதம். தக்கராகத்திற்குக் (அராகம்)

காகலிநிஷாதம். இவ்வளவே இதன் நுட்பமான வேறுபாடு களாகும். இதனைப்பற்றி விரிவாக இங்குக் கூற நேரமில்லை.

## 6. குறிஞ்சிப்பண்

இப்பண்ணும் ஒரு வகையில் ஆறிசைகளையே கொண்டதாகும். முன்னரே குறிஞ்சியாழ் என்பது கருவியின் பெயர் எனக் கூறியுள்ளேன். பழந்தமிழ் நாட்டின் குறிஞ்சி நிலத்தில் (மலைகளும் மலைசார்ந்த இடங்களும்) வாழ்ந்த மக்களினம் கைக்கொண்ட சிறப்பான நரம்புக் கருவி குறிஞ்சியாழாகும். அக்கருவியில் எல்லாப் பண்களையும் இசைக்க வாய்ப்பும் இசைக்கும் வழக்கமும் இருந்த போழ்தினும், சிறப்பாக இசைத்து மகிழப்பெறுவது குறிஞ்சிப் பண்ணாகும். குறிஞ்சி யாழ் வேறு, குறிஞ்சிப்பண் வேறு. குறிஞ்சிக்குரிய பெரும் பொழுது கூதிர் காலமும் முன்பனிக் காலமுமாகும். சிறு பொழுது யாமப்பொழுதாகும்.

யாமப் பொழுதாகிய சிறுபொழுதிலும் முருகபூசை பண்ணும் போழ்தும் அந்நிலத்து மக்கள், குறிஞ்சிப் பண்ணைப் பாடுவதே பெரிய வழக்காகும் என இலக்கியங்கள் பேசுகின்றன. நம் திருஞான சம்பந்தரும் "கருகு குழல் மடவார் கடி குறிஞ்சியது பாடி முருகன்னது பெருமை பகர் முது குன்றடைவோமே" என்றார். அவர் பாடிய பதிகங்களில் இருபத்தொன்பது பதிகங்கள் குறிஞ்சிப் பண்ணில் அமைந்துள்ளன. அப்பதிகங்களைப் பெற்ற ஊர்களில் கிட்டத்தட்ட ஆறு ஏழு ஊர்கள் குறிஞ்சி நிலமாகவேவுள்ளன. திருவிருக்குக் குறட்பதிகம் பெரும்பாலும் குறிஞ்சிப் பண்ணிற்குரியதாகவே உள்ளன.

இனி இப்பண்ணின் இலக்கண அமைதியைக் காணலாம். குறிஞ்சியாழிலும் ஏனைய பிறயாழ்களிலும் இசைக் கணித முறையில் ஒரு வகையாகவும் பெரு வழக்காகவும் உழை முதல் கைக்கிளை யிறுவாயாக நரம்புகள் கட்டப்பெறுவதாகவே சங்க நூல்களும் காப்பியங்களும் பேசுகின்றன. அம்முறையில் "உழை முதல் கைக்கிளையறுவாயென்பது" உழை, இளி, விளரி, தாரம் குரல்—துத்தம்—கைக்கிளை என நிற்கும். இவற்றைக் குறியீட்டு எழுத்துக்களாலும் அலகு முறைகளாலும் அட்டவணைப் படுத்தி இக்காலப் பெயர் முறைகளையும்

அறியலாம். பண்டைய தார முறையில் உழை குரலாய அரும் பாலையே இந்நிரலாகும். பாலையாழிற் கட்டிய அரும்பாலையும் இதுவே.

குறிஞ்சிப்பண்

| இசைகள் | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் | கைக் கிளை |
|---|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | ௬ | ௮ | ௯ | ௧௩ | ௧௭ | ௨௧௧ |
| குறியீட் டெழுத்து | நி | ச | ரி | க | ம | ப | த |

இந்நிரலில் இளி முதலாக எடுத்துக் கைக்கிளை வரை ஆறிசைகளைக் கொண்டும், இசைத்துப் பின் முடிவு எனும் இசைப் பாகுபாட்டில் மெலிவு நிலையில் உழையைச் சேர்க்கப் படும். அன்றியும் இளியைத் தொடங்கும் போழ்தே உழையை இளியிசையாகவும் தொழில் செய்யும் முறையில் இசைப்ப துண்டு. மேலே அரும்பாலையின் அமைதியில் தற்காலப் பெயர் முறையைக் காணலாம். அவ்வாறிசைத்தோ, பாடியோ வந்தால் இக்காலமும் தென்னிந்திய சங்கீதத்தில் குறிஞ்சி ராகமாகவே அமைந்து விடுகிறது. குறிஞ்சி என்ற இராகம் தென்னாட்டிற்கேயுரியதாகும்.

இப்பண்ணில் திருநாவுக்கரசர் பாடிய பதிகம் ஒன்றும் உண்டு. சுந்தரர் அருளிய பதிகங்களும் நான்கு இருக்கின் றன. இவற்றில் ஞானசம்பந்தர் அருளிய 'திருவிருக்குக் குறள்' ஒன்றின் முதற் பாட்டும் அச்சிறு பாக்கத்துப் பதிகத்தில் உள்ள ஒரு பாட்டும் இங்கு பாடுகின்றேன்.

சித்தந் தெளிவீர்காள்
அத்தன் ஆரூரைப்
பத்தி மலர்தூவ
முத்தி யாகுமே.

தேனினும் இனியர் பாலன நீற்றர்
தீங்கரும் பனையர் தம் திருவடிதொழுவார்

ஊன் நயந்துருக உவகைகள் தருவார்
உச்சிமேலுறைபவர் ஒன்றலாதூரார்
வானகமிறந்து வையகம் வணங்க
வயங்கொள நிற்பதோர் வடிவினையுடையார்
ஆனையின் உரிவை போர்த்த எம்அடிகள்
அச்சிறு பாக்கமது ஆட்சிகொண்டாரே.

—ஞானசம்பந்தர்

இதுகாறும் கூறிய பண்டைய இசைத் தமிழ் பற்றிய அலகு முறைகளில் பாலைத் திரிபு பற்றிய கருத்துக்களையும் ஏனைய பிறவற்றையும் யான் இங்கு விரிவாகக் கூறவில்லை என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றேன். அவை முறையாகவும் தனித் தனித் தலைப்பிலும் பேச வேண்டியவை. அன்றியும் ஒரு கரும் பலகையில் எழுதியும் விளக்க வேண்டியவையாகும்.

## 7. புறநீர்மைப்பண்

இப்பண்ணிற்குப் பழைய பெயர் நோதிறம் என்பதே. இது செவ்வழி யாழ்த் திறனில் ஒன்றாகும். இது குறண்டி எனவும் கூறப்படுவதுண்டாம். பண், நோதிறம் எனக் கூறுங் கால் பண்ணோதிறம் எனப் புணர்ந்து வரும். இதுவே உண்மையுமாகும். இதுவன்றி நேர்திறம் என்ற ஒரு பண்ணும் உண்டு. நோதிறமும் நேர்திறமும் எழுத்தளவில் ஏட்டுச் சுவடிகளில் மயங்கித் திரிந்த நிலை எண்ணவும் கூறவும் இயலாது. அது பற்றி இங்குக் கூற எனக்கு விருப்பமில்லை.

நோதிறமே புறநீர்மையாகும். இதனைச் சிலப்பதிகாரம் அந்திமாலைச் சிறப்புச் செய்காதை அரும்பதவுரையில் "நோதிறம் பாட—புறநீர்மை என்கின்ற பண்ணைப் பாட" எனுமிடத்தும் காணலாம். ஏட்டில் இருந்த நோதிறம், நேர்திறம் எனக் கருதப்பட்டமையினால் ஏற்பட்ட வழுக்களும் பலவாம். செவ்வழியாழ் என்பது, நெய்தல் நில மக்களிடத்திருந்த ஒரு நரம்புக் கருவியாகிய யாழாகும். அவ்யாழில் செவ்வழிப்பாலைக் குரிய நரம்புகள் கட்டப் பெற்றிருந்தன. அவ்வமைதி வருமாறு: இது பழைய தார முறையில் கைக்கிளை குரலாய செவ்வழிப் பாலையாகும்.

செவ்வழிப்பாலை

| இசைகள் | கைக்கிளை | உழை | இளி | விளரி | தாரம் | குரல் | துத்தம் |
|---|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | க | ரு | கூ | க௦ | கச | கஅ |

இப்பாலையில் வரும் பத்தாமலகுள்ள கிளையிசை, இயல்பான கிளையிசைக்கு மூன்றலகு குறைந்துவிட்டதால், அம்மூன்றலகுகளைச் செவ்வையாகக் கொண்டால், விளரி குரலாய விளரிப் பாலையாகிவிடும். இவ்வாறும் நெய்தல் மக்கள் தங்கள் யாழ்க் கருவிகளில் கொண்டமையினாலேதான் அவர்கள் கருவி விளரியாழ் எனவும் கூறப்பட்டது. இவ்வமைதியில் நட்பு நீங்கிய திறனே நோதிறமான குறண்டி எனப்படும் புறநீர்மை ஆகும். நட்பு என்பது நான்காமிசையாகும். மேற்காட்டிய நிரலில் ஒன்பதாம் அலகுள்ள விளரியை நீக்கவேண்டும். அவ்வாறு நீக்கி அட்டவணைப்படுத்தக் கீழ்க் கண்டவாறு அமையும்.

| இசைகள் | கைக்கிளை | உழை | இளி | தாரம் | குரல் | துத்தம் |
|---|---|---|---|---|---|---|
| கூட்டு அலகுகள் | ௦ | க | ரு | (க௦) கங | கச | கஅ |

இவற்றை இக்காலப் பெயரில் கூற, கைக்கிளை தொடங்கு மிசையானதால் ஷட்ஜமாகும். பின்னர் ஓரலகுள்ள உழை சுத்த ருஷபமும், ஐந்து அலகுள்ள இளி சாதாரண காந்தாரமும், பதின்மூன்றலகுள்ள தாரம் பஞ்சமமாகவும், பதினான்கலகுள்ள குரல் சுத்ததைவதமும், பதினெட்டு அலகுள்ள துத்தம் கைசிகி நிஷாதமுமாக ஆவதால், இக்காலம் இப்பண் சாதாரண காந்தாரத்துடன் கூடிய பூபாள ராகமாயிற்று.

இப்பூபாள ராகம் (கைசிகி) நிஷாதத்தையும் விலக்கிக் கூறுவதுமுண்டு. எவ்வாறு இலக்கணங் கூறினும் பாடும் போழ்து நிஷாத ஒலி இல்லாமல் இருப்பதேயில்லை எனலாம். இப்பண்ணில் திருஞான சம்பந்தர் அருளிய பதிகங்கள் ஆறும்,

சுந்தரர் அருளிய பதிகங்கள் மூன்றும், திருவிசைப்பாப் பதிகங்கள் மூன்றுமாக இக்காலம் நமது திருமுறைகளில் உள்ளன. இவற்றுள் சுந்தரர் பாடிய ஒரு பதிகத்தின் ஒரு பாடலை மட்டும் பாடி நிறைவு செய்கின்றேன்.

அந்தியும் நண்பகலும் அஞ்சுப தஞ்சொல்லி
முந்தியெழும் பழைய வல்வினை மூடாமுன்
சிந்தை பராமரியாத் தென்திரு வாரூர் புக்கு
எந்தை பிரானுரை என்றுகொல் எய்துவதே.

—சுந்தரர்

நம் சிவநெறித் திருமுறைகளில் அமைந்திருக்கும் ஏழு பண்களைப் பற்றி, கருநாடக சங்கீதத்தை முறையாகப் பயின்றது கொண்டும் இதுவரை ஒரு சில ஆதாரங்களை நம் பழந் தமிழ் நூல்களிலிருந்தே கூடியவரையிற் காட்டி ஓரளவு பாடியும் விளக்கினேன். இத்தகைய வாய்ப்பினை அளித்த நம் சமாஜத்தினருக்கும் மற்ற பெரியோர்களுக்கும், பொறுமையுடன் கேட்டுக் கொண்டிருந்த அனைவருக்கும் மிகவும் பணிந்த வணக்கம்.

# உபநிடதங்களும் சித்தாந்த சைவமும்



திரு. ந. சந்திரகாந்த முதலியார் அவர்கள்
இந்திப் பேராசிரியர், மாநிலக் கல்லூரி, சென்னை.

[எம்.ஏ., வடமொழி, காசிப் பல்கலைக் கழகம்
ஸாஹித்ய சாஸ்திரி, வாரணசி சம்ஸ்கிருதப் பல்கலைக் கழகம்
ஸாஹித்ய சிரோமணி, காசிப் பண்டித சபை
வியாகரணசார்ய, வடமொழி, தயானந்த வித்யா பீடம், வாரணசி.
எம்.ஏ., இந்தி, காசிப் பல்கலைக் கழகம்
இந்தி ஆனர்ஸ், பஞ்சாப்
ஸாஹித்ய ரத்னம், அலாகாபாத்
ஸாஹித்யாலங்கார், பீகார் வித்தியா பீடம்]

மனித இனத்தின் நாகரிகத்தை அளக்கும் சிறந்த அளவு கோல் சமயம். சமயத்தின் மூலமே மனிதன் தனக்கும், தன்னைப் படைத்துக் காத்துவரும் கடவுளுக்குமுள்ள

தொடர்பை நன்கு அறிகிருன். இந்திய நாடு அறம், மொழி, இலக்கியம், தத்துவம், பண்பாடு ஆகியவைகளுக்கு இருப்பிட மாகக் கருதப்படுகிறது. மனித வாழ்க்கையைத் தூய்மைப் படுத்த மேற்கூறிய அறம் முதலியவைகள் பெரிதும் பயன்படு கின்றன.

## வேதம் முதலியன

பண்டைக்கால மக்களின் வாழ்க்கை வரலாறு பண்பாடு முதலியவைகளை நன்கறிய இன்று நமக்குத் துணையாக இருக்கும் நூல்களில் ரிக்வேதம், யசுர் வேதம், சாம வேதம் அதர்வ வேதம் இந்நான்கு வேதங்களின் விரிவுரையான ஐதரேயம், சதபதம், கோபதம், தாண்டியம்—என்னும் பிராம் மண நூல்கள், ஆரண்யக நூல்கள், ஈச, கேன, கட முதலிய உபநிடதங்கள் மிகவும் சிறப்பானவையாகும். இந்நூல்களையே வைதிக இலக்கியம் அல்லது வைதிக வாங்மயம்—என்று அறிஞர்கள் கூறுகிருர்கள். பழைய மக்களின் மனத்தில் தோன்றிய கருத்துக்களையும், அவர்கள் அறிந்த உண்மை களையும் இந்நூல்கள் வாயிலாக நாம் அறிகிருேம்.

ரிக்வேதத்தில் ஞானமும், யசுர் வேதத்தில் கர்மமும், சாம வேதத்தில் பக்தி அல்லது உபாசனையும் கூறப்பட்டுள்ளன. அதர்வ வேதத்தில் ஏனைய மூன்று வேதங்களில் கூறிய பொருள்களும், மந்திரங்களுமே பெரும்பாலும் கூறப்படு கின்றன. ஞானம் [அறிவு], கர்மம் [யாகத் தொழில்], உபாசனை [வாழ்த்து] என்னும் முப்பொருள்களைக் குறிப்பதால் வேதங்களை 'த்ரயீ'—மூன்று என்றும் அறிஞர்கள் வழங்குகிருர் கள். வேதங்களில் இருபதாயிரம் (20000) மந்திரங்கள் உள்ளன.

ரிக்வேதகாலத்தில் இயற்கையைக் கண்டுகளித்த ரிஷிகள் கடவுளின் பல்வேறு சக்திகளை உணர்ந்து, இந்திரன், மித்திரன், வருணன், அக்னி, யமன், மாதரிஷ்வன், சந்திரன், பிரம்மன், ப்ரஜாபதி, வாயு, சுக்கிரன், ஆப, சவிதா, பூஷன், விஷ்ணு, ருத்திரன், சோமன், உஷா என அவைகளுக்குத் திருப்பெயர்களைச் சூட்டிப் பக்தியுடன் துதிகளைப் பாடினர்கள். கடவுளுக்குப் பல பெயர்களைக் கற்பித்துத் துதிபாடின ரிஷிகள், (एकं सत् विप्रा बहुधावदन्ति—ऋग्वेद) "கடவுள் ஒன்றே

யாயினும், அறிஞர்கள் ஒரே தத்துவத்தைப் பல விதமாகக் கூறுகின்றனர்" என்று அன்றே விளக்கம் தந்தனர். "ஒருவனே தேவன்"—எனும் திருமூலரின் கொள்கை மிகப்பழைய வேதகாலத்திலேயே ஏற்றுக்கொள்ளப்பட்டது. வேதங்களின் விரிவுரைகளான பிராம்மண நூல்களும், ஆரண்யக நூல்களும் வளர்ந்த காலத்தில் துதிமுறை குறைந்து, யாகமுறைகள் வளர்ந்தன. பிராமண நூல்களை இயற்றிய புரோகிதர்கள் சகல சித்திகளையும் பெற யக்ஞயாகங்களையே சாதனமெனக் கூறி, யாகங்களின் பெருமையைப் பெருக்கினர். இக்காலத்தில் சடங்குகளும், பூசல்களும் அதிகரித்தன. வேதத்தின் பெயரால் பலிகள் இடப்பட்டன. "வைதிக இம்சா, இம்சா நபவதி"—வேதமந்திரங்களைக் கூறி இம்சித்தால் அது இம்சையாகாது—எனப் புரோகிதர்கள் விளக்கினர். இவ்விளக்கம் மக்களை வசீகரிக்கவில்லை. தத்துவ ஆராய்ச்சியில் ஈடுபட்ட ரிஷிகள் பிரம்மாண்டத்தை நோக்குவதை விட்டு, தமது அண்டத்தையே நோக்கினர். உடலெனும் பிண்டத்தில் குடி கொண்டிருக்கும் ஆண்டவனை ரிஷிகள் உணர்ந்தனர். அவர்கள் உணர்ந்த உணர்வே "உபநிடதம்" எனப்படுகிறது. உப - என்றால் அருகாமை, நி - என்றால் நிச்சயம், சத - என்றால் உட்காருவது. "கடவுளுக்கு அருகில் நிச்சயமாக உட்காருவது"—என்பதே "உபநிடதம்"—என்பதற்குப் பொருளாகும்.

## உபநிடதத்தின் பெருமை

வைதிக இலக்கியத்தில் இறுதியாக உபநிடதங்கள் தோன்றின ஆதலால், **வைதிக நூல்களின் சாரமே உபநிடதம்** என டாக்டர் இராதாகிருஷ்ணன், தமது, "இந்தியதத்துவம்" என்னும் நூலில் பகர்கிறார். தைத்திரீய உபநிடதத்தின் முன்னுரையில் உபநிடதங்களை "பிரம்ம ஞானம்" என ஆதி சங்கரர் போற்றுகிறார். வைதிக இலக்கியத்தின் சாரமாக உள்ளதால் உபநிடதங்களை வேதாந்தம், வேதத்தின் முடிவு அல்லது மறைமுடி - என்று நம் நாட்டுப் பேரறிஞர்கள் இயம்புகின்றனர். பிரம்ம வித்தை, பரா வித்தை, ஆத்மரகசியம், வேதசிரஸ், ஸ்ருதி சிரஸ் - என்ற பெயர்களாலும் உபநிடதங்கள் போற்றப்படுகின்றன.

மனித வாழ்க்கையின் குறிக்கோள் அறம், பொருள், இன்

பம், வீடு - என்னும் நான்கு புருஷார்த்தங்களைப் பெறுவதாகும். அறம், பொருள் இன்பம் - மண்ணுலகத்தைச் சார்ந்தவை. வீடு அல்லது மோட்சம் விண்ணுலகத்தைச் சேர்ந்தது. மோட்சம் - என்ருல் ஆத்யாத்மிக, ஆதிபௌதிக, ஆதிதைவிகமென்னும் மூன்று வித துக்கங்களிலிருந்து விடுதலை பெற்றுக் கடவுளுடன் இரண்டறக் கலத்தலாகும். இதுவே 'பரம புருஷார்த்தம்' அல்லது 'மேலான குறிக்கோள்' எனப் பேரறிஞர்களால் பகரப்படுகிறது. இக்குறிக்கோளை அடைவதற்கே உயிர்களுக்கு மனித உடல் கிடைக்கிறது. "காற்றுள்ள போதே தூற்றிக் கொள்"—என்னும் தமிழ் முதுமொழிக்கு ஒப்ப இம்மானிடப் பிறவியிலேயே கடவுளின் நிறை தன்மையை உணர்ந்து அவருடன் இரண்டறக்கலக்க வேண்டும். "Life on earth is the means of self-perfection'—என்று டாக்டர் இராதாகிருஷ்ணன் கூறுகிருர். இந்தப் பேருண்மையை உபநிடதங்களும் விளக்குகின்றன:

1. इह चेदवेदीदथ सत्यमस्ति न चेदिहावेदीन् महती विनष्टिः (இஹசேதவேதீததசத்யமஸ்தி ந சேதிஹாவேதின் மஹதீவிநஷ்டி. [கேஞேப நிடதம்]. "இப்பிறவியிலேயே கடவுளை நீ அறிந்து கொள், தவறிஞல் நீ பெருங் கேட்டுக்கு ஆளாவாய்"—என்று கேன உபநிடதத்திலும், (2) सम्भूत्यामृतमश्नुते (ஸம்பூத்யா அம்ரிதமஷ்நுதே.) "கடவுள் அறிவால் [பதிஞானத்தால்] அமுதம்[ சாவாநிலையை] பெறுவாய்"— என்று ஈசோப நிடதத்திலும் கூறப்படுகின்றன.

கடவுள் எனும் பரம்பொருளின் தன்மையை உணர நாட்டம் கொண்டவர்களின் உள்ளத்தில் எழுந்த பல்வேறு ஐயங்களுக்குக் கடவுளறிவை உபநிடத ரிஷிகள் புகட்டினர். ஆன்மீக விஷயமான கேள்விகளும் குருசிஷ்ய சம்வாதமுமாக உபநிடத மந்திரங்கள் அமைந்துள்ளன. "ஞான இந்திரியங்கள், கர்ம இந்திரியங்கள், ப்ராண வாயுக்கள், மனம், சித்தம், முதலியன அந்தக் கரணங்கள் யாரால் தூண்டப்பட்டுத் தம் கடமைகளைச் செய்கின்றன"—என்று கேஞேப நிடதத்தில்—

3. केनेषितं पतति प्रेषितं मनः केन प्राणः प्रथमः प्रैति युक्तः। केनेषितां वाचमिमां वदन्ति चक्षुः श्रोत्रं क उ देवो युनक्ति ॥ (கேனேஷிதம் பததிப்ரேஷிதம்மன: கேனப்ராண:

ப்ரதம: ப்ரைதியுக்த: கேனேஷிதாம் வாசமிமாம் வதந்தி, சக்ஷு: ச்ரோத்ரம் க உதேவோ யுநக்தி:) என்று கேள்விகள் கேட்கப் படுகின்றன.

கடோப நிடதத்தில் நசிகேதர், யமாசாரியரிடம் சென்று மிக்க பணிவுடனும், பக்தியுடனும், "இறந்த பிறகு ஆத்மாவின் நிலை என்ன?"—எனும் கேள்வியைக் கேட்டு விடை பெற மன்றுடுகிறார்.

பிரச்ன உபநிடதத்தில் சுகேசர், சத்யகாமர், கார்கியர், கௌசல்யர், பார்க்கவர், கபந்தி—எனும் அறுவர் மகரிஷி பிப்பலாதரிடம் சென்று—

"1. மக்கள் எவ்வாறு பிறவி எடுக்கின்றனர்? 2. மக்களைக் காப்பாற்றும் தேவதைகளின் எண்ணிக்கை என்ன? 3. பிராணன் உண்டாகும் முறை என்ன? 4. அது புகுவதும், நிலைப்பதும், உடலிலிருந்து பிரிவதும் எவ்வாறு? 5. புருஷனுக்குள்ளிருந்து சுகத்தை அனுபவிப்பது எது? 6. பிரணவத்தின் உபாசனையால் யாது பயன்? 7. பதினாறு கலைகளுள்ள புருஷன் யார்?" இவை போன்ற கேள்விகளை அவர்கள் கேட்டுத் தெளிவு பெற்றனர்.

முண்டக உபநிடதத்தில் இல்லறத்தில் ஈடுபட்ட சௌனகர், மகரிஷி அங்கிரசிடம் சென்று, "எந்த ஒன்றை அறிந்தால் எல்லாம் அறிந்ததாகும்?" என்று கேட்கிறார்.

சைவசித்தாந்தக் கருத்துக்களை இருப்பிடமாகக் கொண்ட ஸ்வேதாஸ்வதர உபநிடதத்தில், "காரண பிரம்மம் என்பது எது?, நாம் எவ்வாறு தோன்றுகிறோம்? யார் நம்மைக் காப்பாற்றுவது? நமக்குத் தேவையான சகல ஏற்பாடுகளையும் செய்து இவ்வுலகில் நம்மைப் பிறப்பிப்பவர் யார்?" किंकारणंब्रह्म, कुत:स्मजाता, जीवेम केन क्वच संप्रतिष्ठा: என்பன போன்ற கேள்விகள், (கிம்காரணம் ப்ரம்ம, குத:ஸ்ம ஜாதா, ஜீவேமகேன க்வச சம்ப்ரதிஷ்டா: என்கிற மந்திரத்தில் கேட்கப்பட்டன.

சாதகர்கள் மூலமாகக் கேட்ட கேள்விகளுக்கு விடைகளாக அமைந்த உபநிடதமே கண்ணனின் திருவாக்கான பகவத் கீதைக்கு முதல் நூலாகும். உபநிடதத்தின் கேள்வி—சம்வாத முறையிலே கிருஷ்ணார்ச்சுன சம்வாதம் அமைந்திருக்கிறது. சாங்கியத்தின் ப்ரக்ருதி புருஷதத்துவமும், யோகத்

தின் அஷ்டாங்கயோக தத்துவமும், வேதாந்தத்தின் அத்வைத தத்துவம் கீதையில் விவரித்துக் கூறப்படுவதை அறிஞர்கள் அறிவார்கள். கீதையிலும், சாங்கியம், யோகம், வேதாந்தம் எனும் தத்துவ நூல்களிலும் உபநிடதக் கருத்துக்களே பரவிக் கிடக்கின்றன. தத்துவ நிபுணர் டாக்டர் இராதாகிருஷ்ணன் "உபநிடதத்தின் சாரமே கீதை"—எனக் கூறுகிறார். "வேதம் பசு—அதன்பால் மெய்யாகமம்"—எனும் தமிழ்த் திருவாக்கைப் போல உபநிடதம் பசு, அதன்பால் கீதை—என வட மொழியில் கூறியுள்ளது.

மிக முக்கியமான உபநிடதங்கள் சிலவேயாயினும், சற்று ஏறத்தாழ இருநூறு உபநிடதங்கள் இன்று உள்ளன— என்று சென்னைப் பல்கலைக் கழகத் தத்துவப் பேராசிரியர் டாக்டர் T. M. P. மகாதேவன் கூறுகிறார். 10, 11, 28, 108 உபநிடதங்களாக அச்சிடப்பட்டு நூல்களாக நமக்குக் கிடைக்கின்றன. உபநிடதத்தின் பெருமையை உணர்ந்த முஸ்லிம் களும், கிருத்துவர்களும், தம்தம் அறப் பெருமையை விளக்க, அல்லோபநிடதமும், க்ரீஷ்டோப நிடதமும் இயற்றினர். சங்கரபகவத்பாதர் முக்கிய உபநிடதங்கள் பத்து எனக்கருதி, அவைகளுக்கு மட்டும் விரிவுரை இயற்றினார்.

இப்பத்துடன் சிலர் கௌஷீதகி, மைத்ராயணி, ஸ்வேதாஸ் வதரம் எனும் மூன்று உபநிடதங்களையும் சேர்த்து முக்கிய உபநிடதங்கள் 13—என்று கூறுகின்றனர். உபநிடதங்களில் பிருகதாரண்யகமும், சாந்தோக்யமும் மிகப் பழைய உபநிட தங்களாகும். அவற்றுக்கு அடுத்தவை முறையாக ஈச, கேன, ஐதரேய, தைத்திரீய, கௌஷீதகி, கட, முண்டக, ஸ்வேதாஸ் வதர, பிரஷ்ண, மைத்ராயணி, மாண்டுக்யம்—எனும் உபநிடதங் கள்—என்று பேராசிரியர் R. D. ரானடே என்பவர் குறிப்பிடு கிறார். கால ஆராய்ச்சியில் ஈடுபட்ட வல்லுநர்கள் உபநிடதங் களின் காலத்தையும் ஆராய்ந்தனர். 3500 ஆண்டுகளுக்கு முன் உபநிடதங்கள் இயற்றப்பட்டன—எனப் பாலகங்காதர திலகர் கூறுகிறார். 2500 ஆண்டுகளுக்கு முன் உபநிடதங்கள் தோன்றி இருக்க வேண்டுமென டாக்டர் இராதாகிருஷ்ணன் யூகிக்கிறார்.

உபநிடதங்களை இயற்றியவர்களில் சாண்டில்யர், சனத் குமாரர், ஆருணி, யாக்ஞவல்கியர், உத்தாலகர், அஜாதசத்ரு

ஜனகர், பிப்பலாதர், வருணர், கார்க்கி, மைத்ரேயி, முக்கிய மானவர்கள். மொழியழகைக் காட்டிலும் உபநிடதங்களில் கருத்தழகே மிகவும் போற்றப்படுகிறது. மிகமிக உயர்ந்த ஆன்மீக தத்துவத்தைப் படாடோபமின்றி எளிய முறையில் ஈண்டுக் காணலாம். முகலாயப் பேரரசரான ஔரங்கசீப்பின் சகோதரர் 'தாராசிகோ' உபநிடதங்களின் சிறப்பை உணர்ந்து, அவைகளைப் பார்சி மொழியில் மொழி பெயர்த்தார். பார்சி மொழியிலிருந்து இலத்தீன் மொழியில் உபநிடதங்கள் மொழி பெயர்க்கப்பட்டு, ஐரோப்பிய நாடுகளில் பரவின. ஜெர்மன் நாட்டுத் தத்துவ நிபுணர் 'சோபன் ஹாவர்' தம் கடைநாள் வரை தவருமல், உறங்குவதற்கு முன் உபநிடதங்களைப் படித்து வந்தார். ரூவர், மேக்ஸ் முல்லர், டாக்டர் கங்கா நாத்ஜா—போன்ற அறிஞர்கள் உபநிடதங்களை ஆங்கிலத்தில் மொழி பெயர்த்தனர். இவ்விதப் பெருமை வாய்ந்த "உபநிடதமெனும் வேதாந்தத்தின் சாரமே சைவசித்தாந்தம்" என உமாபதி சிவாசாரியர் தமது சிவப்பிரகாசம் என்னும் நூலின் பாயிரத்தில் கூறுகிருர்.

## சித்தாந்த சைவம்

சிவனையும் சக்தியையும் பரம் பொருளாகக் கொண்டு வளர்ந்த சமயங்கள் சைவசித்தாந்தம், வீர சைவம், காஷ்மீர சைவம், சாக்தம்—என வழங்குகின்றன. சிவனை அடிப்படையாகக் கொண்டு தமிழகத்தில் வளர்ந்த சைவதர்மம் சித்தாந்த சைவம் அல்லது சைவ சித்தாந்தம் என வழங்கி வருகிறது. "சித்தாந்தம்"—என்ற பதத்திற்கு "முடிந்த முடிவு" என்பது தமிழாகும். சைவத்தின் கருத்துக்களை அறிந்து கொள்ள நமக்குச் சாதனமாக உள்ள நூல்கள் சைவ ஆகமங்களும், பன்னிரு திருமுறைகளும், பதினன்கு சைவசாத்திர நூல்களும், சிவபுராணங்களும் ஆகும். சிவபக்தியை நன்கு வளர்த்தவர்கள் அப்பர், சம்பந்தர், சுந்தரர், மாணிக்கவாசகர் போன்றவர் ஆவர். சித்தாந்த சைவ தத்துவங்களை முறையாக விளக்கினவர்கள் மெய்கண்ட தேவர், அருள்நந்தி சிவாசாரியர், மறைஞான சம்பந்தர், உமாபதி சிவாசாரியர் என்னும் நால்வர். மெய்கண்ட தேவர் 13-ஆம் நூற்றுண்டில் சிவஞான போதம் என்னும் தத்துவ நூலை 12 சூத்திரங்களில் இயற்றி

ஞர். இந்நூலில் பதி, பசு, பாசத்தின் இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளன. இந்நூலைப் பற்றித் தமிழகத்தில் இரண்டுவிதக் கருத்துக்கள் இன்றளவும் பரவி இருக்கின்றன. '28 சைவ ஆகமங்களில் ஒன்ருன ரௌரவ—ஆகமத்தின் பாசவிமோசன படலத்தின் மொழிபெயர்ப்புச் சிவஞான போதம்' எனப் பேராசிரியர் T. M. P. மகாதேவன் கூறுகிருர். சைவசித்தாந்தப் பேரறிஞரான திருவாளர் கா. சுப்பிரமணிய பிள்ளை அவர்களும், மற்றும் சில தமிழ்ப் புலவர்களும் சிவஞானபோதம் தமிழிலே இயற்றிய முதல் நூலெனக் கூறுகின்ருர்கள். சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் தலைவரான காலஞ்சென்ற திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் (பி.ஏ., பி.எல்.) அவர்கள் 120 காரணங்களைக் காட்டிச் சிவஞான போதம் முதல் தமிழ் நூலே என்பதை நிறுவியுள்ளார். சிவஞான போதத்திற்குச் சிவஞான சித்தியார் எனும் மிகச் சிறந்த உரை அருள்நந்தி சிவாசாரியர் இயற்றியுள்ளார். வேதாந்த சூத்திரத்தை விளக்கும் சங்கரரின் பிரம்ம சூத்திர உரைபோலச் சிவஞான சித்தியார் எனும் உரை சிவஞான போதத்திற்கு அமைந்துள்ளது. இந்நூலின் பரபட்சம்—எனும் முதல் பாகத்தில் புறப்புறச் சமயம், புறச்சமயம், அகப்புறச் சமயம், அகச்சமயம் என்பவைகளை விளக்கி அவைகளுக்கு மறுப்புக் கூறப்படுகிறது. சுபட்சத்தில் சித்தாந்த சைவத்தின் பதி, பசு, பாச மெனும் மூன்று அநாதி தத்துவங்களையும் பாசத்தின் உட்பிரிவான 36 தத்துவங்களையும் விளக்கிச் சித்தாந்த சமயத்தின் பல்வேறு கருத்துக்களைத் தர்க்க சாத்திர முறையில் விளக்கியுள்ளனர்.

## பதி, பசு, பாசம், அநாதி

சைவ சித்தாந்தம் பதி, பசு, பாசம் என்னும் மூன்றை அநாதி என்று கூறுகின்றது. பதி - என்பது கடவுள்; பசு - என்பது உயிர்; பாசம் - என்பது கட்டு கயிறு எனப் பொருள் படும். உயிர் எனும் ஆத்மா, பாசம் என்னும் மும்மலக் கயிற்ருல் கட்டப்படுவதால், சைவ சித்தாந்த நூல்கள் உயிரைப் 'பசு' என வழங்குகின்றன. கடவுளின் அருளால் கடவுளை வணங்கி, மாயை, கர்மம், ஆணவம்—எனும் மும்மலங்களிலிருந்து விடுதலை பெற்று ஆத்மா, கடவுளுடன் இரண்டறக் கலக்கிறது. இதையே வீடுபேறு அல்லது மோட்சம் எனச்

சித்தாந்த சைவம் கூறுகிறது. பாசவிமோசனம் பெற்று இரண்டறக் கலக்க ஆண்டவனின் அருள் இன்றியமையாத தாகும். முக்தி என்னும் பேரின்ப நிலையை அடையப் பதி ஞானம், பசு ஞானம், பாச ஞானம், ஆத்மாவுக்கு ஏற்பட வேண்டுமென்பது சித்தாந்த சைவத்தின் கொள்கையாகும். இக் கொள்கையை உபநிடதம் கீழ்க்கண்ட மந்திரத்தில் அங்கீ கரிக்கிறது.

एतज्ज्ञेयं नित्यमेवात्मसंस्थं नातः
परं वेदितव्यं हि किञ्चित् ।
भोक्ता भोग्यं प्रेरितारं च मत्वा
सर्वं प्रोक्तं त्रिविधं ब्रह्ममेतत् ॥

ஏதஜ்க்ஞேயம் நித்யமேவாத்மஸம்ஸ்தம் நாத:
பரம்வேதிதவ்யம் ஹி கிஞ்சித் ।
போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா
சர்வம் ப்ரோக்தம் திரிவிதம் ப்ரஹ்மமேதத் ॥

நித்தியப் பொருளான பிரம்மத்தை அறிய வேண்டும். அது ஆத்மாவுடன் உள்ளது. இவ்வுலகில் அறிய வேண்டுவது பிரம்ம தத்துவமேயாகும். போக்தா எனும் ஆத்மா, போக் கியம் எனும் ப்ரக்ருதி, ப்ரேரிதா எனும் கடவுள் ஆகிய மூன்று தத்துவங்களை அறிந்தே உயிர் வீடு பேறு அடைகிறது. நித்தியப் பொருள்களான இம்மூன்றும் மூன்றுவித ப்ரம்ம மாகும். கடவுள், உயிர், கட்டு மூன்றும் அநாதி எனும் சித்தாந்த சைவத்தின் கொள்கையை உபநிடதம் அங்கீகரிக் கிறது.

ஆன்மாக்களுக்கு முக்தி எனும் பேரானந்தப் பேற்றினை அருளுதற்கே சிவன் தன்னுள் இயற்கையாக அமைந்துள்ள சக்தியைக் கொண்டு உலகத்தைப் படைக்கிறார். சக்தியின்றிச் சிவனில்லை. உலகத்தைப் படைப்பதில் துணைக் காரணமான சிவனுடைய ஆத்ம சக்தி சிவனிடமே மறைந்திருக்கிறது. சிவனுடைய சக்தியைக் குறித்து உபநிடதம்

ते ध्यानयोगानुगता अपश्यन् देवात्म
शक्तिं स्वगुणै निगूढाम् ।

य: कारणानि निखिलानि तानि
कालात्मयुक्तानि अधितिष्टति एक: ॥
தே த்யானயோகாநுகதா அபஷ்யன்
தேவாத்ம சக்திம் ஸ்வகுணைர் நிகூடாம்
ய: காரணானி நிகிலானி தானி
காலாத்ம யுக்தானி அதிதிஷ்டத்யேக.

என்ற ஸ்வேதாஸ்வதர மந்திரத்தில் சிவனுக்குள் மறைந்திருக்கும் சக்தியை, த்யான யோகத்தில் ஈடுபட்ட மகரிஷிகள் கண்டனர். உலகத்தை உண்டாக்குவதில் ஒன்று கூடும் சகல காரணங்களுக்கும் கடவுளே நிமித்தக் காரணனாக உள்ளான் என்பது குறிப்பிடப்பட்டுள்ளது.

## உபநிடதங்களில் சைவதத்துவம்

சிவ பக்தியை வளர்க்கும் தர்மமே சைவ தர்மமாகும். சித்தாந்த சைவத்தில் சிவன் என்கிற பதமே சைவ சமயத்தின் அடிப்படையான பதமாகும். சைவர்கள் ஆழ்ந்த பக்தியுடன் ஜபிக்கும் "சிவாய நம", அல்லது "நமச்சிவாய" எனும் மந்திரம் என்பதைச் சைவ அறிஞர்கள் நன்கறிவார்கள். இத் திருவைந் தெழுத்தை நாம் வேதங்களில் காண்கிறோம். வேதத்களில் நடுநாயகமாக உள்ளது யசுர் வேதம். யசுர் வேதத்திலும் நடு மணியாக 'ருத்திராத்தியாயம்' அமைந்துள்ளது. ருத்திராத்தியாயத்தில்—கடவுள்—நமச்சிவாய என்றே துதிக்கப்படுகிறார். ரிக்வேத காலத்தில் ருத்திரனைப் போற்றப்பட்ட கடவுள் தனது கல்யாண குணங்களின் பொருட்டு ருத்திரனே சிவனாகவும், தேவனாகவும், மகாதேவனாகவும், ருத்திரசிவனாகவும் வாழ்த்தப்பட்டார். இதற்கு வைதிக இலக்கியத்தில் பல சான்றுகள் கிடைக்கின்றன.

மாண்டுக்கிய உபநிடதத்தில் சாந்தம், சிவம், அத்வைதம், ப்ரபஞ்சோபசமம்—என்று கடவுளின் நிர்க்குணநிலையை விளக்கும்போது, கடவுளைச் சிவன் என்று கூறுவதை நாம் காண்கிறோம். ஈசோப நிடதத்தின் முதல் மந்திரத்தில் (ईशावास्यमिदंसर्वम्) ஈசாவாஸ்யமிதம் சர்வம் கடவுளை ஈசன் எனக் குறிப்பிடப்படுகிறது. ஸ்வேதாஸ்வதர உபநிடதத்தில் (अमृताक्षरं हर:......ईशत देव एक:) (1–10) அம்ரிதாக்ஷரம் ஹர: ஈசதே

தேவஏக:—எனும் மந்திரத்தால் கடவுளை ஹரன் என்றும், சாவாநிலையிலுள்ளவன், அழிவற்றவன், சகல கல்யாண குணங்களையுடையவன், ஒருவன்—என்றும் சிவனுடைய பெருமையை அறிகிரேம்.

एको हि रुद्रः (श्वे० 3.12), रुद्रशिवा (3.15) शिवां गिरित्रा (3. 11), सर्वव्यापी स भगवास्तस्मात् सर्वगतः शिवः (3. 11) ईशानो ज्योतिरव्ययः (3. 2) ज्ञात्वा शिवं शान्तिमत्यन्तमेति (4. 14) विश्वतश्चक्षु रुतविश्वतोमुखः (3. 3) शिवाधिपोरुद्रो महर्षिः विश्वाधिपः भुवनस्यगोप्ता (4. 15) सर्वाधिपत्यं कुरुते महात्मा (6. 3), देवो भगवान् वरेण्यः (6. 4), रवितुल्यरूपः (5. 8) पतिं पतीनां परमं परस्तात् (6. 7)

ஏகோ ஹி ருத்ர (ஸ்வே. 3 - 2) ருத்ரசிவா (3 - 5) சிவாம் கிரித்ர (3 - 11) சர்வ வ்யாபி ஸ பகவாஸ்தஸ்மாத் ஸர்வகத: சிவ: (3 - 11) ஈசானோ ஜ்யோதிரவ்யய: (3 - 2) க்ஞாத்வா சிவம் சாந்திமத்யந்தமேதி (4 - 14) விஸ்வதஸ்சக்ஷுருத விஸ்வதோமுக: (3 - 3) சிவாதிபோ ருத்ரோ மஹரிஷி: விஸ்வாதிப: புவனஸ்ய கோப்தா (4 - 15) சர்வாதிபத்யம் குருதேமஹாத்மா (6 - 3) தேவோ பகவான் வரேண்ய: (6 - 4) ரவிதுல்யரூப: (5 - 8) பதிம்பதீனும் பரமம் பரஸ்தாத் (6 - 7).

போன்ற மந்திரங்களில் கடவுளைக் குறிக்கும், ஈசன் ஹரன், தேவன் ருத்திரன், விஸ்வசக்ஷு, விஸ்வமுகன், பகவான், ஈசானன், மகேஸ்வரன், சிவன், சிவாதிபன், விஸ்வாதிபன், மகாத்மா, சூரியரூபன், பதி—எனும் பதங்கள் நோக்கத் தக்கவை. சிவனுக்கு " விஸ்வரூபன், விஸ்வாதிகன் "—என்கிற அடை மொழிகள் உண்டு—என்று டாக்டர் மகாதேவன் " சைவ சித்தாந்தம் "—என்கிற கட்டுரையில் குறிப்பிட்டுச் சிவனை, சிவன்—சிவா—சிவம்—என மூன்று விதங்களிலும் குறிப்பிடலாம் எனக் கூறுகிருர். மேற்கூறிய மந்திரங்களில் கடவுளைச் சிவன்—சிவா என ஆணுகவும், பெண்ணுகவும் குறிப்பிடப்பட்டு இருப்பதை நாம் காண்கிரேம்.

(त्वंस्त्री त्वं पुमानसित्वं कुमार उतवा कुमारी)

த்வம்ஸ்த்ரீ த்வம் புமானிஸித்வம் குமார உதவா குமாரி

என்ற மந்திரத்திலும் சிவனை ஆணாகவும், பெண்ணாகவும், குமாரனாகவும், குமாரியாகவும் கூறப்படுகிறது.

## சிவனுடைய ஐந்து தொழில்கள்

உயிர் வர்க்கங்களை ஈடேற்றும் பொருட்டுக் கடவுள் ஐந்து தொழில்களைப் புரிகிறார். ஈசானம், தத்புருஷம், அகோரம், வாம தேவம்சத்யோசாதம்—எனும் ஐந்து மந்திரங்களைக் கொண்ட மந்திர உடலே சிவனுடைய உடல்—என மிருகேந்திர ஆகமம் கூறுகிறது. இம்மந்திர உடலில் ஐந்துவிதச் சக்திகள் உள்ளன. ஐந்துவிதச் சக்திகளைக் கொண்டே ஐந்து தொழில்—படைத்தல், காத்தல், அழித்தல், மறைத்தல், அருளல்—எனும் தொழில்களைச் சிவன் புரிகிறார்—எனச் சைவ ஆகமம் விளக்குகிறது.

तद्वपुः पञ्चभिर्मन्त्रैः पञ्चकृत्योपयोगिभिः ।
ईशतत्पुरुषाघोरवामजैर्मस्तकादिकम् ॥ (मृ० आ०)

தத்வபு: பஞ்சபிர்மந்த்ரை: பஞ்சக்ரித்யோபயோகிபி:
ஈசதத் புருஷாகோர வாமஜைர் மஸ்த்தகாதி:கம்

கடவுளுடைய ஐந்து தொழில்களை விஸ்வஸ்ய ஸ்ரஷ்டாரம் [4.14] எனப்படைத்தல், புவனஸ்ய கோப்தா [4.15] எனக் காத்தல், சம்ஹரித்யேஷதேவ [6.3] என அழித்தல். சர்வ பூதேஷுகூட [6.11] என மறைத்தல், ஜுஷ்டஸ்ததஸ் தேனும்ரிதத்வமேதி [1.6] தேவப்ரஸாதாத் [6.21] என அருளல் எனும் சிவனுடைய ஐந்து தொழில்களையும் உபநிடத மந்திரங்களில் சுருக்கமாகக் குறிப்பிடப்பட்டுள்ளதை மேற்கூறிய மந்திரங்களால் அறியலாம்.

## சிவனின் நிர்க்குண சகுண தத்துவம்

கடவுளை நிர்க்குணமாகவும், சகுணமாகவும் உபநிடதங்களில் கூறப்படுகின்றன. ஸ்வேதாஸ்வதர உபநிடதத்தில் கடவுளை ஒருவன், சகல கல்யாணகுணங்களையுடையவன், பிராணிகளுக்குள் மறைந்தும், நிறைந்தும், அந்தர்யாமியாகவும் இருப்பவன், வினைக்குத் தக்கவாறு பலனைத் தருபவன்,

சகல பிராணிகளுக்கும் இருப்பிடமானவன், சாட்சி ரூபத்தில் நிற்பவன், சைதன்யன், தனியன், நிர்க்குணன் என்று:

एको देवः सर्वभूतेषुगूढः सर्वव्यापी सर्वभूतान्तरात्मा
कर्माध्यक्षः सर्वभूताधिवासः साक्षीचेताकेवलो निर्गुणश्च ।

ஏகோதேவ: சர்வபூதேஷுகூட: சர்வப்யாபிசர்வ
பூதாந்தராத்மா, கர்மாத்யக்ஷ: சர்வபூதாதிவாச சாக்ஷி
சேதா கேவலோ நிர்குணஸ்ச.

குறிப்பிடப்பட்டதை நாம் பார்க்கிறோம். ஆதி சைவர் திருமூலர் கடவுளை முக்குண நிர்க்குணர் எனத் திருமந்திரத்தில் கூறுகிறார். உலகப் படைப்புக்கு உபாதான காரணமான மாயை அல்லது ப்ரக்ருதி, சத்துவ, ரஜ, தம எனும் மூன்று குணங்களுடையது. சாங்கிய தரிசனம் இயற்றிய கபிலமுனி

सत्त्वरजस्तमसां साम्यावस्था प्रकृतिः (सां० द० सू०)

சத்வரஜஸ்தமஸாம் ஸாம்யாவஸ்தா ப்ரக்ரிதி:

எனும் சூத்திரத்தில் மூலபிரக்ருதி முக்குணம் வாய்ந்ததெனக் கூறுகிறார். கடவுள் மேற்கூறிய முக்குணங்களுக்கும் அப்பாற்பட்டவர். எனவே, திருமூலர் கடவுளை முக்குண நிர்க்குணர் என்று குறிப்பிடுவது உபநிடதக் கருத்துக்கு முற்றிலும் ஏற்றதாக உள்ளது.

தமிழ் வேதமியற்றிய வள்ளுவர் கடவுளை எண்குணத்தான் எனச் சகுணமாகக் கூறி, அவன் தாள்வணங்க வலியுறுத்துகிறார்.

" கோளில் பொறியில் குணமிலவே எண்குணத்தான்
தாளை வணங்காத் தலை "

வள்ளுவர் கூறும் எண்குணங்கள் சைவாகமங்களில் குறிப்பிடப்பட்டுள்ளன. குறளின் உரையாசிரியர் பரிமேலழகர் சிவனுடைய எண் குணங்களைக் கீழ்க்கண்டவாறு குறிப்பிடுகிறார்: அவை—1. தன்வயத்தனாதல், 2. தூய உடம்பினனாதல், 3. இயற்கை உடம்பினனாதல், 4. முற்றுமுணர்தல், 5. இயல்பாகவே பாசங்களினின்று நீங்குதல், 6. பேரருளுடைமை, 7. முடிவிலாற்றலுடைமை, 8. வரம்பிலின்பமுடைமை - என்பனவாகும். மாணிக்கவாசகர் சிவனை எட்டு

வடிவத்தில் நிலம், நீர், நெருப்பு, காற்று, வெளி, ஞாயிறு, திங்கள், சைதன்யன் - என எட்டுவிதமாகக் கூறிப் பக்தியில் ஆழ்ந்து பாடுகிறார். சைவப் புலவர் மகாகவி காளிதாசர் உலகப் புகழ்பெற்ற சாகுந்தலம் என்னும் நாடகத்தில் சிவன் வணக்கமாக அமைந்த முதல்பாட்டில் மாணிக்கவாசகர் குறிப்பிட்ட எட்டுத் தத்துவங்களைக் குறிப்பிட்டுச் சிவனை அஷ்டமூர்த்தியென வணங்குகிறார். உபநிடதமும் சிவனுக்கு எட்டு வடிவங்களை,

तदेवाग्निस्तदादित्यस्तद्वायुस्तदु चन्द्रमाः ।
तदेव शुक्रं तद्ब्रह्म तदापस्तत् प्रजापतिः ॥

ததேவாக்னிஸ் ததாதித்யஸ் தத்வாயுஸ்தது சந்தரமா:
ததேவசுக்ரம் தத்ப்ரஹ்மததாபஸ்தத் ப்ரஜாபதி:

என்னும் மந்திரத்தில் கூறுகின்றது. பரமாத்மாவாகக் காட்சியளிக்கும் கண்ணன் என் உடலான ப்ரக்ருதி எட்டு வடிவத்தில் பிரிகிறது என்று:

भूमिरापोऽनलोवायुः खंमनो बुद्धिरेवच ।
अहंकार इतीयं मे भिन्नाप्रकृतिरष्टधा ॥

பூமிராபோ நிலோவாயு: கம்மனோ புத்திரேவச
அஹங்கார இதியம் மே பின்ன ப்ரக்ரிதிரஷ்டதா

கீதையில் கூறுகிறார்.

## சிவனே தலையான தெய்வம்

பிரம்மா, விஷ்ணு, ருத்திரன் - என்னும் மும்மூர்த்திகளைக் காட்டிலும் சிவனே மேலான கடவுள் என்பது சித்தாந்தத்தின் மிக முக்கிய கொள்கையாகும். மற்ற தேவதைகள் ஊழிக் காலத்தில் தோன்றாமல் மறைந்து விடுகின்றன. மக்களுக்கு அருள்புரியச் சிவன்மட்டும் ஊழிக்காலத்திற்குப் பிறகும் நிலைத்திருக்கிறார். இக்கருத்தை உபநிடதமும்,

एको हि रुद्रा नद्वितीयाय तस्थुर्य
इमान् लोकानीशत ईशनीभिः

ஏகோஹிருத்ரோ நத்விதீயாய தஸ்துர்ய
இமான் லோகானீசத ஈசனீபி:

என்ற மந்திரத்தால் அறியலாம். சிவனை மூர்த்தன், அமூர்த்தன், சகுணன், நிர்க்குணன், சத்யசங்கல்பன், ஆப்தகாமன் என்று பல நாமங்களால் நாம் நினைக்கிறோம். மிகக் குறைந்த அறிவு பெற்ற நாம், நிரம்ப அறிவு பெற்ற பரிபூரண புருஷனை அறிவது மிகக் கடினம். மனத்துக்கும், வாக்குக்கும் எட்டாதது பரமதத்துவம் என எண்ணியே பழந்தமிழர் சிவனைக் கடவுள் எனக் கூறினர். உபநிடதமும்,

यतो वाचा निवर्त्तन्ते ऽप्राप्यमनसा सह
आनन्दं ब्रह्मणो विद्वान्, तै० उ०

யதோவாசா நிவர்த்தந்தே அப்ராப்ய மனசாசஹ
ஆனந்தம் ப்ரஹ்மணோ வித்வான்—என்று

தமிழரின் உட்கருத்தை அங்கீகரிக்கிறது. எனவே, கடவுளுக்கு ஒரு குறிப்பிட்ட நாமமோ, ஒரு உருவமோ கற்பனை செய்வது இயலாத காரியம். எனினும், மனித வர்க்கத்தின் பக்தி உள்ளம் ஆயிரக்கணக்கான நாமங்களையும், உருவங்களையும் கற்பித்துக் கடவுளை வாழ்த்தி வருகிறது. இக்கருத்தைத் திருவாதவூரடிகள் மிக அழகாகக் கூறித் தெள்ளேணம் கொட்டிக் களிப்படைகிறார்.

" ஒரு நாமம் ஓர் உருவம் ஒன்றுமிலார்க்கு, ஆயிரம்
திருநாமம்பாடித் தெள்ளேணம் கொட்டாமோ "

என்பது அவரது திருவாக்கு. வைதிக இலக்கியத்தில் ஈஸ்வரனை ஒன்று என்று வலியுறுத்திப் பல நாமங்களைக் கூறி இருப்பதைப் பின் வரக்கூடிய மந்திரங்களால் நாம் அறியலாம்.

इन्द्रं मित्रं वरुणं अग्निमाहुरथो दिव्यः सुपर्णो गरुत्मान्
एकं सद्विप्रा बहुधा वदन्ति, अग्निं यमं मातरिश्वानमाहुः
ऋ० 1-164-37

यो नः पिताजनिता यो विधाता, धामानिवेद भुवनानि
विश्वा । यो देवानां नामधा एक एव
तं संप्रश्नं भुवना यन्त्यन्या ऋ. (10. 82. 3)
स ब्रह्मा: स शिव: सेन्द्र: सोऽक्षर: परमस्वराट् ।
स एव विष्णुः, स प्राण: स कालोऽग्नि: स चन्द्रमा: ॥
(कै० उ०)

இந்த்ரம் மித்ரம் வருணம் அக்னிமாஹுரதோ திவ்ய:
ஸுபர்ணோ கருத்மான் ஏகம் ஸத்விப்ராபஹுதா
வதந்தி, அக்னிம் யமம் மாதரிஷ்வானமாஹு:

ரிக் 1–164.37

யோ ந: பிதா ஜனிதர் யோவிதாதா, தாமானி வேத
புவனானி விஷ்வா, யோ தேவானும் நாமதா ஏக ஏவ
தம் ஸம்பரஷ்னம் புவனா யந்த்யன்யா ரிக் 10–82.3
ஸ ப்ரஹமா ஸ சிவ: ஸேந்த்ர: ஸோஅக்ஷர:
பரமஸ்வராட், ஸ ஏவ விஷ்ணு: ஸப்ராண:
ஸ காலோ அக்னி: ஸ சந்த்ரமா (கைவல்ய உபநிடதம்)

கடவுள் ஒன்று. ஏகம் ஸத் [एकं सत्] என்று ரிக்வேத காலத்திலேயே ரிஷிகள் குறிப்பிட்டனர். சாதாரண மக்களுக்குத் தெளிவாக விளங்குவதற்காகவே குணங்களை ஒட்டிக் கடவுளுக்குப் பல நாமங்களைத் தீட்டினர். பண்டைக்காலத்தில் கடவுளை ஞாயிறு, திங்கள், தீ, காற்று, நீர் - வடிவத்திலும் வாழ்த்தினர். தொல்காப்பியர் காலத்திலும்கூடப் பண்டைத் தமிழகத்தில் கடவுளை சூரிய, அக்கினி, சந்திர வடிவத்தில் வாழ்த்தினர் என்பதற்குத் தொல்காப்பிய சூத்திரம் சான்று பகர்கிறது.

" கொடிநிலை கந்தழி வள்ளி என்ற
வடுநீங்கு சிறப்பின் மன்னிய மூன்றும்
கடவுள் வாழ்த்தொடு கண்ணியவருமே."

[தொ. பொ. புற. 27]

மேற்கூறிய சூரிய, சந்திரப் பெயர்கள் கடவுளுக்கு உரியது என்பதை உபநிடதம் இங்ஙனம் கூறுகிறது.

(तदेवाग्निस्तदादित्यस्तद्वायुस्तदु चन्द्रमा) (श्वे० उ०)

ததேவாக்னிஸ்ததாதித்யஸ்தத்வாயுஸ்தது சந்த்ரமா:

## சிவன் முப்பாலற்றவன்

பல பெயர்களால் நினைக்கப்படும் கடவுளைத் திருமூலர், "ஆணல்ல பெண்ணல்ல அலியுமல்ல"—என்று குறிப்பிடுகிறார். அவன், அவள், அது—எனக் குறிப்பிடப்படும் கடவுள் உலகத்தில் அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்த பொருளாய் இருப்பதாலும், அவன், அவள், அது—எனும் வடிவத்தில் கடவுளை உணர்ந்து நாம் முப்பாலிலும் குறிப்பிடுகிறோம். தத்துவ

முறையில் சிவன் ஆண், பெண், அலி—எனும் முப்பாலுக்கு அப்பாற்பட்டவர் என்பதை உபநிடதம்

> नैवस्त्री न पुमानेष न चैवायं नपुंसकः ।
> यद्यच्छरीरमादत्ते तेन तेन स रक्ष्यते ॥ (श्वे० 5-10)
>
> நைவஸ்த்ரீ ந புமானேஷ ந சைவாயம் நபும்ஸக:
> யத்யச்சரீரமாதத்தே தேன தேன ஸ ரக்ஷ்யதே.

என்று கூறுகிறது.

## சிவனுடைய சங்கல்பமே தத்துவங்களுக்குக் காரணம்

சைவசித்தாந்தம் மாயையிலிருந்து விரிவடையும் 36 தத்துவங்களை அங்கீகரிக்கிறது. சாங்கிய தரிசனத்திலும், யோக தரிசனத்திலும் ஏற்றுக்கொண்ட 25 தத்துவங்களைச் சைவ சித்தாந்தம் ஏற்று அத்துடன் 11 தத்துவங்களைச் சேர்த்துத் தத்துவம் 36 எனப் பகர்கிறது. இந்தத் தத்துவங்கள் கடவுளுடைய தூண்டுதலாலே விரிவடைகின்றன. அணுக்களின் கூறுகளே உலகம்—அவனன்றி ஓரணுவும் அசையாது—என்று நாம் தினசரி வாழ்க்கையில் கூறி வருகிறோம். இக்கருத்தை வலிவுறுத்தும் மந்திரம் தைத்திரீய உபநிடதத்தில் உள்ளது.

> तस्माद्वा एतस्मादात्मन आकाशः संभूतः। आकाशाद्वायुः। वायोरग्निः। अग्नेरापः। अद्भ्यः पृथिवी पृथिव्या ओषधयः। ओषधीभ्योऽन्नम्। अन्नाद्रेतः। रेतसः पुरुषः। स वा एष पुरुषोऽन्नरसमयः। (तै० उ०)
>
> தஸ்மாத்வா ஏதஸ்மாதாத்மன ஆகாஷ: ஸம்பூத:
> ஆகாஷாத்வாயு: | வாயோரக்னி: | அக்னேராப:
> அத்ப்ய: ப்ரித்வி | ப்ரிதிவ்யா ஓஷதய: | ஓஷதீப்யோ
> அன்னம், அன்னாத்ரேத: | ரேதஸ: புருஷ: |
> ஸவா ஏஷ புருஷோ அன்னரஸமய: ||

பிரம்மனுடைய தூண்டுதலால் ஆகாசம் [வெளி] தோன்றிற்று. பிறகு காற்று, நெருப்பு, நீர், நிலம், வனஸ்பதிகள், உணவுப் பொருள்கள் தோன்றின. வெட்ட வெளியே முதல் தோன்றினதாகக் கூறுவது மிகமிகப் பொருத்தமாக உள்ளது, வெட்டவெளி இருந்தால்தான் மற்றவைகள் தோன்றி நடமாட

முடியும். இப்பேருண்மையை, "வானாகி மண்ணாகி வளியாகி யொளியாகி" — எனும் மாணிக்கவாசகரின் பாடலால் அறியலாம்.

### அருள்

கடவுளின் அருளை அடையச் சரியை, கிரியை, யோகம், ஞானம்—என நான்கு வழிகள் உள்ளன. இந்நான்கையே பக்தியோகம், கர்மயோகம், த்யானயோகம், ஞானயோகம்—என வடமொழியில் கூறுகின்றனர்.

கடவுளின் அருளையே பேரின்பமடையக் கருவியாக உபநிடதங்களும் கூறுகின்றன. கடோபநிடதத்தில்

तमक्रतुः पश्यति वीतशोको धातुप्रसादान्महिमानमात्मनः ।

தமக்ரது: பஷ்யதி வீதசோக:
தாதுப்ரசாதாத் மஹிமானமாத்மன:

என்பது காணப்படுகிறது.

கடவுளின் அருளாலேயே, ஞானி கடவுளைத் தரிசித்து அவன் பெருமையை உணருகிறான். சொற்பொழிவு, கூர்மை யான அறிவு, நீண்ட நேரம் செவிசாய்த்துச் சாத்திரங்களைக் கேட்பது—போன்றவைகளால் மட்டும் கடவுளைத் தரிசிக்க முடியாது.

சாதகனின் தகுதியைக் கண்டு கடவுள் சாதகனுக்குத் தன்னைப் பிரகாசித்து அருள் புரிகிறார்—எனும் கருத்தைக் கீழ் வரும் மந்திரத்தால் அறியலாம்.

नायमात्मा प्रवचनेन लभ्यो न मेधया न बहुनाश्रुतेन यमेवैष वृणुते तेन लभ्यः ।

நாயமாத்மா ப்ரவசனேன லப்யோ ந மேதயா ந பஹுனா
ச்ருதேன, யமைவேஷவ்ரிணுதே தேன லப்ய:

கடவுளின் அருள் ஸ்வேதாஸ்வதர உபநிடதத்திலும் குறிக் கப்படுகிறது.

जुष्टस्ततस्तेनामृतत्वमेति ।

ஜுஷ்டஸ்ததஸ்தேனாம்ரிதத்வமேதி

—கடவுளின் அருளாலே சாவாநிலை எனும் அமுதத்தை உயிர் அடைகிறது—என்பதே மேற்கூறிய மந்திரத்தின் கருத்தாகும்.

பேரின்பமடைய ஆத்மா, கடவுள், உயிர், கட்டு இவை களின் உண்மையை அறிவதுடன், ஆழ்ந்த பக்தியில் ஈடுபட வேண்டும். தன்னைக் கடவுளின் திருவடித் தாமரையில் சமர்ப் பணம் செய்யவேண்டும். இவ்விதச் சமர்ப்பணத்தையே சரணுகதி அல்லது அடைக்கலம் என்று அறிஞர் கூறுவர்—

(देवात्मबुद्धिप्रकाशं मुमुक्षुर्वै शरणमहं प्रपद्ये)

தேவாத்மபுத்திப்ரகாசம் முமுக்ஷுர்வைசரணமஹம் ப்ரபத்யே

—எனும் உபநிடத மந்திரத்தில், ஆண்டவன் அருள்பெறச் சரணுகதியையே நாடத் தூண்டப்படுகிறது. சாதகனுக்கு ஆண்டவனின் அடைக்கலம் புகுவதைத்தவிர வேறு சிறந்த முறை இல்லை—என்பதை ஏனைய பக்தி நூல்களாலும் அறிகிறோம். "அடியேன் உன் அடைக்கலமே" என்பது அப்பர் வாக்கு.

# பொதுமக்களுக்குச் சித்தாந்த உண்மைகள்



[சைவப் பெரியார் ச. சச்சிதானந்தம் பிள்ளையவர்கள், B.A. L.T.]

சைவ சித்தாந்த மகாசமாஜம் இவ்வாண்டு நடத்தும் மாநாடுகளில், அறிஞர் பலர், சைவம் எப்படி மக்களின் அன்றாட வாழ்க்கையிற் கலந்துள்ளது—கலந்திருத்தற்குரியது—என்பதுபற்றி அரிய சொற்பொழிவுகள் நிகழ்த்த ஏற்பாடு செய்யப் பட்டுள்ளது. இது வரவேற்கத்தக்கதொரு தனிச் சிறப்பாகும். சொற்பொழிவுப் பட்டியல்களின் இறுதியில், பொது மக்களுக்குச் சித்தாந்த உண்மைகள் என்னும் தலைப்பு அமைக்கப்பட்டுள்ளது. இதிலும் விஷயப் பொருத்தம் உள்ளது.

## சித்தாந்தம்

சித்தாந்தம் என்னும் சொல்லுக்கு முடிந்த முடிபு என்பது பொருள். எதை அல்லது எவைகளைப்பற்றிய முடிபு என்று கேட்டால், உலகு—உயிர்—கடவுள் என்னும் முப்பொருள்களைப் பற்றிய ஆராய்ச்சிகளிலும், அநுபூதியிலும் கண்ட முடிபுகள் என்று கூறலாம். இந்த முப்பொருள்களைப் பல சமயநூல்களும் தத்துவ சாத்திரங்களும் ஆராய்ந்து வெவ்வேறு முடிவுகளுக்கு வந்துள்ளன. ஒவ்வொரு வகை முடிவும் ஒவ்வொரு சித்தாந்தம் எனப்படும். சைவ சித்தாந்தமானது பிற மத சித்தாந்தங்களை எல்லாம் நியாய முறையில் ஆராய்ந்து, முப்பொருளைப்பற்றித் தானும் ஒரு முடிவிற்கு வந்துள்ளது. இச் சைவ சிந்தாந்தத்தைச் சிறப்பு வகையில் சித்தாந்தம் என்றே குறிப்பது சைவ மரபாகும். இந்த நுட்பமான ஆராய்ச்சிகளும் முடிபுகளும் எல்லா மக்களுக்கும் தெளிவாகத் தெரியக் கூடியனவல்ல. போதிய அளவு நுண்ணறிவும் நூலறிவும் படைத்தவர்கட்குத் தான் ஓரளவு விளக்கமாகத் தெரியலாம். அநுபூதி பெற்றவர் கட்குத்தான் முழு உண்மை அநுபவத்தில் விளங்கும். போதுமான அறிவுக் கூர்மையும் கல்வி கேள்வி வளமும் பெற வாய்ப்பில்லாத—ஆனால் நல்ல மனமுள்ள—மக்களைப் "பொது மக்கள்" என்னும் சொல் குறிக்கும்.

மக்களாட்சி முறை நிலவும் இக்காலத்தில் பொதுமக்களின் கல்வி யறிவையும், ஆராய்ச்சித் திறனையும் பிற நல்ல பண்புகளையும் கூடிய அளவு வளர்க்க அறிவுத் தொண்டாற்றுவது அறிஞர் கடமையாகும். அதனை மகா சமாஜம் தன்னாலியன்ற அளவு செய்ய முயன்று வந்துள்ளது. எனக்குத் தந்துள்ள பணியை யானும் மிகச் சுருக்கமான முறையில் செய்ய முயலுகின்றேன்.

## சைவமும் சித்தாந்தமும்

'சைவம்' என்பது "சிவம்" என்னும் சொல்லிலிருந்து தோன்றியது. சிவம் என்னும் சொல் நன்மை, மங்கலம், செம்மை என்று பொருள்படும். சைவம் என்பது சிவத்துடன் சம்பந்தம் என்று பொருள் தரும். அந்தச் சம்பந்தத்தை அறிந்து—உணர்ந்து அச்சிவத்தோடு சேர்ந்து, அதனால் மக்கள் மேல்நிலைக்கு உயர்வதற்காக ஆண்டவன் திருவுளம்

இருந்தபடி தோன்றிய சமயம் 'சைவ சமயம்', அல்லது 'சைவம்'' எனப்படும். அச்சமயம் ஒப்புக் கொள்ளும் முடிபே சைவர்கட்குச் சித்தாந்தம் ஆகும்.

### மக்கள் அறிய வேண்டுவன

மக்கள் ஆராய்தற்கு உரிய பொருள்கள் மூன்று. அவை, கடவுள், உயிர்கள், உலகம் என்பனவாகும். மக்களாகிய நாம் இம்மண்ணுலகை நேர் அநுபவத்தில் ஓரளவு காண்கின்றோம்; மிக்க தொலைவிலுள்ள சூரியன், சந்திரன், சில நட்சத்திரங்கள் இவற்றையும் சிறிதளவு காண்கின்றோம்; நாம் வாழும் இவ்வுலகில் அறிவுள்ள பொருள்கள், அறிவில்லாத பொருள்கள் என்னும் இருவகைப் பொருள்கள் இருப்பதை அறிகின்றோம். உயிர்கள் அறிவுள்ளவை. உலகம் அறிவில்லாதது. உலகிலுள்ள பொருள்களை உயிர்கள் ஓரளவு இயக்குவதைப் பார்க்கிறோம். ஆயினும், உயிர்களின் அறிவு மிகச் சுருக்கமானதேயாகும்; அந்தப் பொருள்களைத் தனித்தனியே சுட்டி யறியும் சிற்றறிவே யாகும். அப்படிச் சிறிது அறிவதும் கூட, முற்றறிவை—பூரண அறிவை—இயல்பாகப் படைத்துள்ள பரம்பொருள் ஒன்று அறிவிக்கத்தான் உயிர்கள் அறிகின்றன என்பதும் பெரியதோர் உண்மை. அறிவுடைப் பொருள்களைச் சித்து என்றும், அறிவிலாப் பொருள்களைச் சடம் என்றும் பெரியோர் கூறுவர். இவற்றையெல்லாம் இயக்கும் மேலான பொருள் கடவுள். கடவுளைப் பதி என்றும், உயிர்களைப் பசு என்றும், உலகத்தைப் பாசம் என்றும், சித்தாந்த சாத்திரங்கள் கூறும். எல்லா ஆராய்ச்சிகளும் இந்த மூன்றுக்குள் அடங்கும். இவை பற்றிய அறிவை வளர்த்தல், மக்கள் ஆன்ம நல முன்னேற்றத்திற்கு அவசியம்.

### தனிப்பெரும் முதல்வன்

நாம் காணும் மண்ணுலகில் பலவகை உடம்புகளில்—ஓரறிவுள்ள பிராணி முதல் ஆறறிவு படைத்த மக்கள் வரை—எண்ணில்லாத உயிர்கள் வாழ்கின்றன. இருப்பது இவ்வொரு உலகம் மட்டுமன்று. இது கடற்கரை மணலில் ஒரு சிறு மணல் போன்றதுதான். எண்ணிலடங்காத பற்பல உலகங்கள், அண்டங்கள் உள்ளன என்று வான நூல் உணர்த்துகின்றது. அங்

கெல்லாம் பல்வேறு உயிர்கள் வாழ்கின்றன என்று சமய நூல்கள் கூறுகின்றன. இந்த உலகங்கள் எல்லாம், பெரிய சட்ட திட்டங்கட்கு உட்பட்டு இயங்குகின்றன என்று விஞ்ஞானம் திட்டமாகக் கூறுகின்றது. இந்தச் சட்டதிட்டங்கள் யாவும், பேரறிவும் பேராற்றலும் பெருங்கருணையும் படைத்த ஒரு தனிப் பெரும் முதல்வனால் அமைக்கப்பட்டுள்ளன என்பதே மூதறிஞர் நமக்கு உணர்த்தியுள்ளனர். "அங்கிங் கெனாதபடி எங்கும் பிரகாசமாய்" எனத் தொடங்கும் "பரசிவ வணக்கம்" என்னும் தாயுமானார் அரும்பெரும் பாடலில், "அண்ட கோடிகள் எலாம் தங்கும்படிக்கு இச்சைவைத்து" என்னும் பகுதி இங்கே உணரத்தக்கது.

## கடவுள் (பதி)

எல்லாம் வல்ல இப் பரசிவப் பொருள், உலகங்களைத் தனது சங்கற்பத்தினாலேயே படைத்துத் தள்ளிவிட்டுத் தான் ஒதுங்கிவிடவில்லை. உலகத்தைப் படைத்தது எல்லாம், உயிர்களை மேல் நிலைக்கு உயர்த்துதற்காகவே. ஆகையால் அது உலகங்கட்குள்ளும், உயிர்கட்குள்ளும் பிரியாமல் நின்று, அவற்றை இயக்கி வருகின்றது. மேற்குறித்த பாடலில், "உயிர்க்கு உயிராய்த் தழைத்ததெது?" எனும் அமுத வாசகமும் வந்துள்ளது. "அவனன்றி ஓர் அணுவும் அசையாது எனும் பெரிய ஆப்தர் மொழி ஒன்று கண்டாய்" என்று அவரே நமக்கு அறிவுறுத்துகின்றார். 'கடவுள்' என்னும் பெயரே, பொருள் நிறைந்ததொன்று. அதனைக் கட + உள் எனப் பிரித்தால், பரம்பொருள் எல்லாவற்றையும் கடந்து உள்ளது என்னும் உண்மை புலனாகிறது. கடவு + உள் என்று பிரித்தால், எல்லாவற்றின் உள்ளிருந்தும் கடவுவது, செலுத்துவது என்னும் உண்மை புலனாகிறது. தானாக இயங்க மாட்டாத சடப் பிரபஞ்சத்தை ஒரு முறைப்படி ஏதோ ஒரு சக்தி இயக்குவதையும், அதனால் உயிர்கள் படிப்படியாய்த் தடைகளினின்றும் விடுபட்டுப் பேரானந்தப் பெருநிலை அடைவதையும் உணர்கின்றோம். இதுவே பரம்பொருள் ஒன்று உண்டென்னும் உண்மையை நாட்டப் போதிய சான்றாகும். இப்படியுள்ள பரம்பொருள் ஒன்றேதான்; "ஒருவனே தேவனும்" என்றார் திருமூலர். அப்பொருள், உருவம், அருவம், குணம், குறி

இவைகளை யெல்லாம் கடந்துள்ளது, நிர்மலமானது, நித்திய மானது, சலனமற்றது, அகண்டிதமாய் என்றும் எங்கும் வியாபித்திருப்பது; அணுவுக்கு அணுவாயும், மகத்துக்கு மகத்தாயுமுள்ளது. ஆனந்த உருவாய், பெருங்கருணைத் தடங்கடலாய், ஆன்மாக்கள் தமது வாக்கு, மன, முயற்சியாலே செல்லுதற்கு அரியதாய், ஆனால் அவை யாவும் முடிவிற் சென்று சேரும் கதியாய் உள்ள நுண்பொருளாயுள்ளது. அப்பரம்பொருளை, நம் குணங்களையும், அவஸ்தைகளையும், ஆசாபாசங்களையும், பிறப்பு இறப்புகளையும் உடைய ஒரு ஆன்மா போலக் கொள்வது பெருந்தவறான—பாவமான—காரியமாகும். அவ்விறைவன், "இன்ன தன்மையன் என்றறி யொண்ணு எம்மான்" என்று சுந்தரர் தேவாரம் உணர்த்துகிறது. "மூவரும் முப்பத்து மூவரும் மற்றைத் தேவரும் காணுச் சிவபெருமான்" என்று திருவாசகம் முழங்குகின்றது. இதனால் பதிப்பொருளின் இருப்பினையும் இலக்கணத்தையும் ஒருவாறு நினைப்பூட்டிக் கொள்ளலாம்.

### உயிர்கள் (பசு)

ஆன்மாக்களாகிய தமக்குப் பசுக்கள் என்றும் பெயருண்டு. பாசத்தால் கட்டுண்டிருக்கிறபடியால் நமக்கு இப்பெயர் கிடைத்துள்ளது. ஆன்மாவின் சொரூபம் அறிவு. அது சத்துப்பொருள்; ஆனால் பதியைப்போல் சுத்தசித்தன்று. ஆன்மாக்கள் எண்ணில்லாதவை; என்றும் உள்ளவை; எவராலும் படைக்காதவை; சிவத்திற்கும் பாசத்திற்கும் வேறானவை. எல்லா ஆன்மாக்களும் பொதுவான அடிப்படை இலக்கணத்தை உடையனவாயினும், ஒவ்வொன்றும் ஏதோ ஒரு நுண்ணிய முறையில் தனித்தனிப் பண்பும் உடையவை. அநாதியாகவே ஆணவம் என்னும் இருள்மலத்தில் அழுந்தி விருப்பம், அறிவு, தொழில் எதுவுமின்றி, சடம்போல அழுந்திக் கிடந்தவை; பரம்பொருளின் பெருங்கருணையால் உடம்புகளும் அவை உலவுதற்கு வேண்டிய உலகமும் போகப் பொருள்களும் தரப்பெற்றவை; இவற்றின் கூட்டுறவால் தமது அறிவு, இச்சை, செயல்கள் வளரப் பெற்றவை; இதனால் புண்ணியமும் பாவமும் புரிந்து, பிறப்பு இறப்பு அநுபவங்களையும் பெறுபவை; கல், புல், பூண்டு, புழு, பூச்சி, பறவை, விலங்கு முதலிய

உடம்புகளிலெல்லாம் புகுத்தப்பெற்று முன்னேற்றம் அடை பவை. இவைகள் முடிவில், பெறுதற்கரிய மானிடப்பிறவி அளிக்கப்பெறுகின்றன; விலங்குகட்கும், விலங்கின் தரத்தினை இன்னும் தாண்டாத மாக்களுக்கும் வாய்த்துள்ள ஐயறிவினோடு மனவுணர்வு என்னும் ஆறுவது அறிவையும் பெறுகின்றன. "நான் யார்?" "வந்தவாறு எங்ஙனே?" "போமாறு ஏதோ?" "மரணத்தின் பின்னும் எனக்குத் தொடர்ந்து வாழ்க்கையிருந்தால் யான் இப்போதே செய்யவேண்டியவை என்ன?" என்பன போன்ற நல்ல கேள்விகளைக் கேட்கத் தலைப் படுகின்றன; கேள்விகட்கு விடைகளையும் அறிந்து மேல்நிலை யடைகின்றன.

ஆன்மாக்கட்கெல்லாம் இரண்டு சிறப்பு இயல்புகள் உள்ளன: (1) பற்றுக்கோடின்றி நில்லாமை. பாசத்தை யாவது அல்லது பதியையாவது பற்றியே ஆன்மா நிற்கும். (2) சார்ந்ததன் வண்ணமாதல். எதைச் சார்ந்து நிற் கின்றதோ அதனோடு கலந்து, அதன் தன்மையைத் தான் பெற்று இலங்கும். "யாதொன்று பற்றின் அதன் இயல்பாய் நின்று" ஆண்டவனருளால், முடிவில் "பந்தம் அறும் பளிங் கனைய சித்து" சீவன். அதன் "பக்குவம் கண்டு அறிவிக்கும் பான்மை" யுடையவன் சிவன். இவ்வான்மாக்களின் வகை, இவைகள் வாழும் உலகங்கள், அடையும் நிலைகள், பெறும் போகங்கள், மேற்செல்லும் படிமுறைகள் இவை எல்லாம் சித்தாந்த சாத்திரங்களில் விரிவாகக் கூறப்பட்டுள்ளன. இந்த அளவில் பசுக்களின் இருப்பையும் இலக்கணத்தையும் சிறிது கண்டோம்.

## பாசம்

இனி, பாசத்தைப்பற்றி ஒரு சிறிது பார்ப்போம்: இது ஆணவம், மாயை, கன்மம் என்னும் மூன்று பிரிவினை யுடையது. இவற்றில் ஆணவந்தான் மூலமலம். இது சகஜ மலம் என்றும் சொல்லப்படும். இது செம்பில் களிம்புபோல் அநாதியாகவே யிருப்பது. இது ஒன்றாயிருந்துகொண்டே பல சக்திகளுடன் தன் வேலையைச் செய்யும்; ஆன்மா அறியாத படி அதன் அறிவு முழுமையும் மறைக்கும். செருக்கு, மோகம், பேராசை, லோபம் முதலிய தீயகுணங்களால் இது ஆன்மாக்

களைப்பற்றி அலைக்கும். இதன் ஆற்றலை இறைவன் தன் சக்தியின் மூலமாக ஒடுக்கி அடக்கி உயிர்கட்கு அருள்புரிவான். இருள் பிற பொருளை மறைத்தாலும் தன்னைக் காட்டும். ஆணவமோ தன்னையும் காட்டாது; பிறபொருளையும் காட்டாது. ஆகையால், இது இருளினும் கொடிய பேரிருளாகும்.

மாயை என்பதும் பாசத்தின் ஒரு பகுதியாகிய சடப் பொருள். இதுவும் உள்பொருளே. இது மிக நுட்பமான அருவ நிலையையும், பருமையான உருவ நிலையையும் உடையது; உயிரறிவை மறைத்து நிற்கும் ஆணவ இருளைச் சிறிது குறைக்கும் ஏகதேச ஒளிபோன்றது. ஆணவம் மறைக்கும். மாயை மயக்கும். மாயையிலிருந்துதான் 36 தத்துவங்கள் இறைவன் சக்தியால் தோற்றுவிக்கப்படுகின்றன. இந்த மாயை 'சுத்தமாயை', 'அசுத்தமாயை' என இரண்டாகவும், 'சுத்தமாயை' 'அசுத்த மாயை' 'பிரகிருதி மாயை' என மூன்றாகவும் பகுத்துச் சாத்திரங்கள் விளக்கிக் கூறும். மக்களாகிய நமக்கெல்லாம் பிரகிருதி மாயை என்னும் பகுதியிலிருந்து தனுகரணம், புவனம், போகம் என்பவை முக்கியமாய்க் கிடைக்கின்றன. மாயையின் துணைகொண்டே அதனையும் ஆணவமலத்தையும் தாண்டவேண்டும் என்பது இறைவன் வகுத்துள்ள உபாயம்.

கன்மம் என்பதும் பாசத்தின் ஒரு பகுதி. நாம் பெறும் பிறவிகளின் இயல்பை இது திடப்படுத்தி நானாவிதமான இன்ப துன்பங்களை விதிமுறைப்படி ஊட்டி வைக்கும். தேவர்களும் மற்ற சீவர்களும் இதற்குக் கட்டுப்பட்டவர்களே. நாம் நமது மனத்தாலும் வாக்காலும் காயத்தாலும் செய்யும் செயல்கள் யாவும் அவ்வவற்றின் தன்மைக்கு ஏற்றபடி நமக்கு இப்பிறப்பிலும் வரும் பிறவிகளிலும் இன்பத்தையும் துன்பத்தையும் தரும். "அடாது செய்பவர் படாது படுவர்". "புண்ணியம் மேல் நோக்குவிக்கும், பாவம் கீழ்த்தள்ளும்" புண்ணியம் பசு புண்ணியம், பதி புண்ணியம் என இருவகைப்படும். பசு புண்ணியம் என்பது உயிர்கட்கு இதம் செய்வதாகும். பதி புண்ணியம் என்பது இறைவன்பால் நன்றியுடனும் பண்புடனும் செய்யும் பூசைகளும், வந்தனை வழிபாடுகளும், அடியார் வழிபாடு, நோன்பு போன்ற பிற தொண்டுகளுமாகும். ஒவ்வொரு கன்மமும் தன்தன் பயனைத் தந்தே தீரும். ஒரு கர்மத்தின்

பலனை மற்றொரு கர்ம பலனைக்கொண்டு கழித்துவிட முடியாது என்பதைப் பக்தர்கள் ஊன்றிக் கவனிக்க வேண்டும்.

மனிதன் தனக்கு இறைவன் தர விரும்பும் பெருநிலையைப் பெறுதற்கு உரிமையுடையவன். நமக்கு உண்மையான அப்பனும் அம்மையும், 'அம்மையப்பர்' என்னும் திருநாமம் படைத்துள்ள உமா மகேசுவரரே யாவர். அவர் நாம் கேளாமல் அநாதியாகச் செய்துவரும் உபகாரத்தை மனிதன் சிறிது எண்ணுவானாகில், நன்றியுணர்வு ஊற்றெடுத்துப் பெருகும். அவன் உண்மையான பக்தனுவான்; ஞான நிலையடையான். நன்றியுணர்வு—அன்பு—தூய்மை—இவையில்லாத புறப்பூசை, பெரும்பயன் தராது. தொடக்கம் எப்படியிருந்தாலும் விரைவில் நன்றியுணர்வால் வரும் அன்பும், அது தரும் ஞானனுபூதியும், நமக்கு நாளடைவில் கிடைத்தற்கு நாம் இடைவிடாது முயலுதல் வேண்டும்.

## சமய ஒழுக்கம் தேவை

இதற்கெல்லாம் பொது ஒழுக்கத்தை நாள்தோறும் கருத்துடன் வளர்த்துவர வேண்டும். ஆத்திசூடி முதல் திருக்குறள் ஈருக உள்ள அரிய நீதி நூல்கள் இப் பொது அறத்தை விளக்கியுள்ளன. இப்பொழுது ஒழுக்கமாகிய அடிப்படைமீதுதான் சிறப் பொழுக்கமாகிய சமய ஒழுக்க மாளிகையை எழுப்ப வேண்டும். "ஒழுக்கம், அன்பு, அருள் ஆசாரம்" எனவரும் சிவஞான சித்தியார் பாடலில், 16 வகை அறங்கள் குறிக்கப் பட்டிருக்கின்றன. திருமூலதேவர், இயமம்—நியமம் இவை யென்று விரித்துரைத் தருளுகின்றூர். இவற்றை நாம் வளர்த்து வருதல் ஆன்ம லாப சித்திக்கு மிகவும் இன்றியமையாதது.

மானிடப் பிறவியின் இழிவைப் பெரியோர்கள் சிற்சில சமயங்களில் எடுத்து இடித்துரைத்ததுண்டு; உடம்பினுல் வரும் புலனின்பமே வாழ்க்கையின் பயன் என்னும் இழிந்த உணர்வுடைய லௌகிகர்களுக்கு நிலையாமைகளை உணர்த்தி, அவர்களை உயர்ந்த ஆனந்தத்தை நாடத் தூண்டுவதற்காக, அப்படி வற்புறுத்தியுள்ளார்கள். இதுவும் தேவையே யாகும். அவர்களே மனிதப் பிறவியின் மாண்பையும் நாவாரப் புகழ்ந்துள்ளார்கள். "வாய்த்தது நந்தமக்கு ஈதோர் பிறவி மதித்திடுமின்" என்பது அவர்கள் அறிவுரைகளுள் ஒன்று. "ஒரு

நாமம் ஒருருவம் ஒன்றுமில் ''லாத இறைவன், உயிர்களை ஆட்கொள்ளுதற்காகப் பல்வேறு திருமேனி தாங்கி வருகின்ருன். அவன் கொள்ளும் திருமேனி திருவைந்தெழுத்தின் வடிவாயுள்ளது. நடராஜர் திருவுருவத்தில் பஞ்சாக்கரங்கள் அமைந்துள்ள பான்மையைச் சித்தாந்த சாத்திரங்கள் இனிது விளக்கியுள்ளன.

அற்ப உயிர்களாகிய எம்போல்வாருக்கும் இறைவன் அப்பஞ்சாக்கரத்தின் சாடையிலேயே உடம்பு அமைத்துத் தந்துள்ள கருணைப் பெருமையை எப்படிப் பாராட்டுவது? "நவ்விரண்டுகாலதாய் நவின்ற மவ்வு வயிறதாய், சிவ்விரண்டு தோலதாய்ச் சிறந்த வவ்வு வாயதாய், யவ்விரண்டு கண்ணதாய்" ஐந்தெழுத்து மானிடயாக்கையில் அமைந்துள்ளதென்று இவ்வாக்கில் சித்தர் அறிவுறுத்தியுள்ளதை நாம் ஒவ்வொருவரும் உணரவேண்டும். பஞ்சாக்கர முறையில் அமைத்துத்தரப்பட்டுள்ள இந்த யாக்கையின் உதவி கொண்டு, பஞ்சாக்கரப் பொருளாயுள்ள பரமன் திருவடி ஞானம் பெற்று அவனேடு இரண்டறக் கலந்து பேரானந்தப் பெருவாழ்வினை நாம் எய்த வேண்டுமல்லவா? அதற்கான சாதனங்களை நாடொறும் சிரத்தையுடன் பயிலவேண்டும் அல்லவா?

பொது ஒழுக்கம் தனி மனிதன் வாழ்க்கையிலும், குடும்ப வாழ்க்கையிலும், சமுதாய வாழ்க்கையிலும் பலமாக வேரூன்றி வளர்ந்தாலல்லது, உலகத்தில் தீமையும் துன்பமுந்தான் பெருகும். இப்போது ஒழுக்கம் நிலைபெற்று ஓங்குவதற்கு, "ஒன்றென்றிரு, தெய்வம் உண்டென்றிரு" என்ற பட்டினத்தடிகளார் உபதேச உண்மையை நன்ருக உணர்ந்து, அவ்வுணர்ச்சியின் வழியே இயங்கி, வாழ்க்கையின் எல்லாத் துறைகளையும் புனிதப்படுத்திக் கொள்ளல்வேண்டும். தெய்வக் கொள்கை இல்லாவிடத்து நல்லொழுக்கமும் சீவகருணையும் நிலைபெரு என்பது ஆன்ருேர்கள் அறிந்து அறிவித்துள்ள உண்மையாகும். எனவே, இதனை ஊன்றிக் கவனிக்க வாய்ப்பில்லாதிருந்த சகோதரர்களும், "தெய்வமென்பதோர் சித்தமுண்டாதற்கு" வேண்டும் நல்ல கல்வி, கேள்வி, சிந்தனை, சன்மார்க்கர் தொடர்பு இவைகளை வளர்த்துக் கொண்டால் விரைவில் பெருநன்மை எய்துவர். தக்ஷிண

மூர்த்தியின் சின்முத்திரை, மனிதப் பிறப்பின் குறிக்கோளை எவ்வளவு அற்புதமாகக் குறிக்கின்றது! சொல்லாமற் சொல்லுகின்றது!

பொதுவொழுக்கத்தோடு சைவ ஒழுக்கத்தை வளர்த்து வருவதற்குச் சைவர்கள்—இருபாலாரும்—சிவதீக்கை பெற்றுக் கொள்ளுதல் முதல் அவசியம். சுத்த உணவின் முக்கியத்தைத் தமிழகத்தில் மட்டுமன்றிப் பிற நாடுகளிலும் பேரறிஞர்கள் காரணங்காட்டி விளக்கியுள்ளனர். பழக்கங் காரணமாகவோ, பிறர் கட்டாயத்தினாலோ இக்குறைபாடுடையவர்கள், வாரத்தில் குறைந்தது இத்தனை நாட்கள் அசைவம் உண்பதில்லை, விரத நாட்கள் முதலிய புனித நாட்களில் உண்பதில்லை என்று ஒரு வரம்பை ஏற்படுத்திக்கொள்ளலாம். பின்பு நல்ல அறிவை மதிப்பிற்குரிய ஆசாரியரிடம் தத்தம் மரபின்முறைப்படி தீக்கை பெற்றுக்கொண்டு, நாள்தோறும் பஞ்சாக்கர (சடாக்ஷர) செபம் செய்யத் தொடங்கவேண்டும். பஞ்சாக்கர ஜெபத்தின் மேன்மைகளை வடமொழி வேதத்திலும், தமிழ் வேதங்களாகிய தேவார திருவாசகங்களிலும் சித்தாந்த நூல்களிலும் விரிவாகக் காணலாம். இந்த ஜெபங்களும், இவற்றையொட்டிப் பழகும் தியானங்களும் ஆன்ம சுத்தியை வளர்க்கும். "நமச்சிவாயவே ஞானமும் கல்வியும், நமச்சிவாயவே நன்னெறி காட்டுமே" என்ற தமிழ் மறைத் திருவாக்கு ஆழ்ந்த பொருளை உடையது. "கொல்வாரேனும் குணம் பல நன்மைகள், இல்லாரேனும் இயம்புவராயிடில், எல்லாத் தீங்கினும் நீங்குவர் என்பரால், நல்லார் நாமம் நமச்சிவாயவே" என்பது சம்பந்த பரமாசிரியர் திருவாக்கு; சீலத்திற் குறைந்துபோமே என்று வருந்திச் சிவதீட்சைபெற அஞ்சுகின்ற சகோதர சகோதரிகட்கு ஊக்கமும் ஆக்கமும் அளிக்கும். "ஆலமே அமுதமாக உண்டு" வானவரைக்காத்த நம் அப்பன், தன்னை நாடும் தன் குழந்தைகளின் மாசினைத்துடைத்து வரவேற்பான். ஆதலால் 'சீலமில்லையே' என்று, சிவபத்தி பண்ணவும் சிவ தீட்சை பெறவும் தயங்கவேண்டுவதில்லை. சிவமும் சிவபத்தியும் பெற உண்மையான அவாவிருத்தல் போதும்.

## நான்கு நெறிகள்

இப்படிச் சிவ தீட்சை பெற்றுக்கொண்டு, முதலில் சரியா

மார்க்கத்தில் நடக்கவேண்டும். இது தாச மார்க்கம் என்றும் கூறப்படும். இது, இறைவனை எஜமானனாகவும் தன்னை அடிமையாகவும் கொண்டு, திருக்கோயில்களில் முக்கரணத்தாலும் பல பணிகள் புரிதலும், மெய்யடியார்கட்கும், சிவ வேடங்கட்கும் மதிப்புத்தருதலும் ஆகும். இதில் நடக்கும் பூசை புறப்பூசை.

அடுத்தபடியில் இருப்பது கிரியாமார்க்கம். இது புத்திர மார்க்கம் எனப்படும். இதில் ஆண்டவனைத் தந்தையாகவும், தன்னை மைந்தனாகவும் பாவித்துப் புறப்பூசையோடு அகப் பூசையும் செய்தல்.

மூன்றும் படியில் இருப்பது யோகமார்க்கம். இது சகமார்க்கம் அல்லது தோழமைநெறி என்றும் கூறப்படும். இதில் ஆசனம், பிராணயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி எனச் சாதனம் பலவகைப்படும். இது ஆசனப் பூசையாகும்.

முடிந்த படியாகிய நான்காம் படியில் இருப்பது ஞானமார்க்கம். இது சன்மார்க்கம் எனப்படும். இதில், கற்கவேண்டிய சமய நூல்களையெல்லாம் கசடறக் கற்று, முப்பொருள்களின் இயல்பையும் தொடர்பையும் உணர்ந்து, சிவத்தோடு அத்துவிதமாகக் கலந்து நிற்கும் அநுபூதி விளையும். இவர்கள் எங்கும் சிவத்தையே காண்பர். "பரத்தையே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்". இவர்கள் ஞானபூசை செய்வர். இதில் ஞான நூல்களை ஓதுதல், ஓதுவித்தல், நற்பொருளை அநுபூதிமான்களைக் கொண்டு கேட்பித்தல், தான் கேட்டல், இவற்றைச் சிந்தித்தல் என்னும் பகுதிகள் உள்ளன. இவற்றைச் சமயத் திருமடங்கள் நெடுங்காலமாகச் செய்துவந்தன. இம்மகாசமாஜமும் இத் துறையில் அவ்வப்போது சிறு சிறு நன்முயற்சி செய்து வந்துள்ளது. பெரிய அளவில் இப்பூசை நிகழுமேல் பெருநலம் விளையும். சிவஞானிகளாகிய சீவன் முத்தர்கள் பெருங்கருணையும் உடையவர்கள். தன்முனைப்பு சிறிதுமின்றி இறைவன் திருவருட் சிறப்பின்படி பிறவுயிர்கட்குத் தொண்டு செய்வர். "கள்ளத்தலைவர் துயர்கருதித் தங்கருணை வெள்ளத்தலைவர்" என்ற திருவருட்பயன் கடைசிக் குறட்பாவை இங்கே கருதலாம்.

சைவத்திருவேடங்களாகிய திருநீறும் கண்டிகையும்

சிறந்த பொருள்க்ளாகச் சைவர் யாவரும் போற்றத்தக்கவை. நீதியறிவும் பசு மலத்தை நீக்கும் ஒரு நற்குறிகாட்டி நிற்பது திருவெண்ணீறு என்று உணர்த்தியருளுகின்றுர் சிதம்பர சுவாமிகள். ஆணவாதி மும்மலங்களையும் சிவஞான நெருப்பாற் சுட்டெரித்து, புனித வெண்ணிலையை ஆன்மா அடைவதே மானிடவாழ்கையின் முடிந்த பெரும்பயன் என்பதை இது நினைவூட்டுகிறது (மூன்று விரல்களால் பூசுவது மும்மல நாசம் குறிப்பது). "பூசும் நீறுபோல் உள்ளும் புனிதர்கள்" என்ற சேக்கிழார் திருவாக்கும் இங்குக் கருதத் தக்கது.

## கோவில்—வழிபாடு—விழா முதலியன

உருத்திராக்கமானது உருத்திரர் அக்ஷத்தில் (கண்ணில்= கண்ணீர்த் துளிகளில்) இருந்து பிறந்தது. தேவர்கள் அசுரர் களாலடைந்த துன்பத்தைத்தாங்கமுடியாது, சிவபெருமானிடம் சென்று முறையிட்ட காலத்து, அப்பெருமான் இரக்கத்தால் திருவுளம் நைந்துதான் கண்ணீர் பெருகிற்று. அத்துளிகளே உருத்திராக்ஷ மரங்களாக முளைக்கச் சங்கற்பித்தருளினுன். அப்படியே ஆயிற்று. உருத்திராக்கமணிகள் பிறவுயிர்களின் துன்பத்தைக் கண்டபோது நாம் இரங்கி இயன்ற துணைபுரிந்து துன்பந்துடைத்தல் வேண்டும் என்பதைக் குறிக்கும். சிவாலயங்களும், அவற்றின் அமைப்புக்களும், அங்குள்ள மூர்த்தங்களும் அருமையான உட்பொருள்களைக் காட்டுவன வாகும். அங்ஙனமே சிவாகம விதிப்படி செய்யும் பூசைகளும், பிரமோற்சவங்களும் உட்பொருள்களைக் கொண்டனவே யாகும். இவ்வுண்மையை ஞானத் தந்தையாகிய அப்பர் பெருமான்,

"குறிகளும், அடையாள மும், கோயிலும்,
நெறிகளும், அவர் நின்றதோர் நேர்மையும்,
அறிய, ஆயிரம் ஆரணம் ஓதிலும்,
பொறியிலீர்! மனம் என்கொல் புகாததே!"

என்னும் திருக்குறுந்தொகையால் நமக்கு இடித்துரைக்கின்றுர்.

நல்ல முறையில் நித்திய நைமித்திகங்கள் நடக்கும் ஆலயங்களில், மந்திர சக்தியாலும், அடியவர் செய்யும் வந்தனை

வழிபாட்டாலும் அன்பர்களுக்கு ஆன்ம சுத்தி பெருக்கவல்ல சுத்தச் சூழ்நிலை ஏற்படும். புனிதர் உள்ளத்தில் எழும் எண்ண அலைகள்—உணர்ச்சி அலைகள்—பிறர் அறிவையும் உணர்வையும் புனிதப்படுத்தும். ஆகவே சிவாலயங்களைச் சிவனெனவே பாவிக்கவேண்டும் என்று ஆன்றோர் பணித்தனர். இவற்றை எல்லாம் புனிதங்கெடாமல் பாதுகாத்து வருவது இந்து மக்கள் அனைவர்தம் பெரிய கடமைகளுள் ஒன்றாகும்.

## சைவத்தின் சமரசம்

சைவ சமயமானது தொன்மை வாய்ந்த பெருமைகள் பற்பல உடையது. இங்கு விரித்துரைக்க வசதியில்லை. அப்பெருமைகளுள் ஒன்று, அது பிற சமயங்களை அன்புடன் நோக்கித் தன் அங்கமாகச் சேர்த்துப் போற்றும் பான்மையாகும். "சைவம் முதலாம் அளவில் சமயமும் வகுத்து மேல் சமயங் கடந்த மோன சமரசம் வகுத்த நீ" என்று இறைவனைத் தாயுமானார் குறிக்கின்றார். "விரிவிலா அறிவினார்கள் வேறொரு சமயஞ் செய்தே எரிவினாற் சொன்னாரேனும் எம்பிராற் கேற்றதாகும்" என்றார் திருநாவுக்கரசர். இவை போன்ற சைவ தோத்திர சாத்திரப் பிரமாணங்கள் இன்னும் பல உள. "ஓது சமயங்கள் பொருள் உணரும் நூல்கள்" எனத் தொடங்கும் சித்தியார் திருப்பாடலும், தாயுமானாரின் 'ஆகார புவனம் சிதம்பர ரகசியம்' என்னும் தம் பாடற் பகுதியாலும், சைவத்தின் பரந்த நோக்கமும் சித்தாந்தச் சிறப்பும் அருமையாக விளக்கப்பட்டுள்ளமை அனைவரும் நினைவு கூர்ந்து இன்புறத் தகுந்த பகுதிகளாம்.

## சமயாசாரியரும் சந்தானாசாரியரும்

எல்லாச் சமயங்களும் நீதியினால் ஓரிடத்தே காண நிற்கும் இச் சைவத்தை 1300 ஆண்டுகட்கு முன்பு, புறமதத்தார்கள் தாக்கி வாதிட்டுப் பழித்து அழித்தபோது, நம் சமயாசாரியர்கள் அவதரித்து, அவர்கள் தெய்வீக வாழ்க்கையாலும், ஆண்டவன் நிகழ்வித்த அற்புதங்களாலும், தல யாத்திரைகளாலும், அன்பர்கள் திருக்கூட்டத் திரட்டினாலும், அற்புதத் தெய்வப் பாடல்களினாலும் எதிர்த்து நின்று சைவசமயத்தைப் பாதுகாத்துப் புத்துயிர் அளித்தனர். சந்தானாசாரியர்களும், புற

மத சித்தாந்தங்களின் கோட்பாடுகளை எடுத்துக் கூறி, நியாய வாயிலாக மறுத்துச் சைவ சித்தாந்த உண்மைகளைச் சாத்திர முறையில் நிலைநாட்டினார்கள்.

## பொதுமக்கள் கடமை

சைவ சித்தாந்தம், அறிவளவில், பேச்சளவில் நின்றுவிடுவதில் பெரும்பயன் இல்லை. அன்றாட வாழ்க்கையில் சைவ சித்தாந்த உண்மைகள் புகுந்து, அதனைப் புனிதப் படுத்திச், சிவத்தின் மங்கள குணங்களின் முத்திரையோடு விளங்குகின்றனவா என்பதுதான், சைவர்கள் கவலையோடு நாள் தோறும் தற்சோதனையால் கேட்டுக்கொள்ள வேண்டும் கேள்வி. ஒத்த மனமுடைய அன்பர்களுடன் தம் அநுபவங்களையும் மேல் நெறித் தேவைகளையும் தெரிவித்து அளவளாவி, அனைவரும் மேற்படிகளில் ஏறிச் சிவபுர யாத்திரையைச் செம்மையாகச் செய்யவேண்டும்; சிவபுரத்தை அடைந்துய்ய வேண்டும்.

சைவப் பொதுமக்கள் தமது அன்றாட வாழ்க்கையில் கவனிக்க வேண்டிய முக்கிய விஷயங்கள் சிலவற்றைச் சுட்டி, இப்பணியை நிறைவு செய்ய முற்படுகிறேன். (1) மேற்கூறியபடி சிவதீட்சை பெற்று நித்திய வழிபாடு செய்யவேண்டும். (2) குடும்பம் ஒன்றுகூடி வாரத்திற் கொருமுறை வீட்டிற் பூசை அறையில் வழிபடவேண்டும். (3) தாம் வாழும் பேட்டையிலுள்ள புனித சிவாலயத்தில் சைவர் யாவரும் தவறாது வாரம் ஒரு முறை பயபக்தியுடன் ஒன்று சேர்ந்து, ஆறு அங்கங்களுடன் கூடிய வார வழிபாட்டைக் கால எல்லை மாறாது நடத்தி வரவேண்டும். (4) அடியார் திருக்கூட்டத்துடன் தலயாத்திரை செய்யவேண்டும். (5) உள்ளூர்ச் சமய சபை, மாவட்டச் சைவ சபை, மாநிலப் பெருஞ் சபையாகிய சைவ சித்தாந்த மகா சமாஜம் இவற்றிலெல்லாம் உறுப்பினராய்ச் சேரவேண்டும். (6) ஒவ்வொரு குடும்பமும் நாள்தோறும் ஒரு முறை பிடியரிசி போடவேண்டும். (7) வாரத்திற் கொருமுறை சமயக் காணிக்கையாகச் சில புதுக்காசுகளையேனும் உண்டியிற் சேர்த்து வைக்க வேண்டும். குறிப்பிட்டதோர் முறையில் இவ்விரு பொருள்களையும் தக்கார் நடத்தும் சைவ சபையில் சேர்த்துச் சமயப் பிரசாரத்துக்கும் சீவகாருணியத் தொண்டிற்கும் இவற்

றைப் பயன்படுத்தவேண்டும். (8) சைவ சமயாசாரியர்கள், பிற நாயன்மார்கள், பெருஞ் சிவஞானிகள் இவர்கள் சரித்திரங்களை யும், இவர்கள் திருப்பாவைகளின் திரட்டுகளையும் இந்திய மொழிகள் எல்லாவற்றிலும் ஆங்கிலத்திலும் கிடைக்கும்படி செய்யவேண்டும். (9) சைவப் பிரசாரம் எல்லாக் கோயில்களி லும் சேரிகளிலும் குப்பங்களிலும் தக்கவர்களால் நன்முறையில் நடைபெறுவதற்கான எல்லாம் செய்யவேண்டும். (10) கல்வி நிலையங்கள் எல்லாவற்றிலும் இந்து மாணவ மாணவியர்க் கெல்லாம் நல்லொழுக்கத்தையும் இந்து மத முறையில் தெய்வ பத்தியையும் அடியார்களின் பெருமைகளில் பற்றையும் மன் னுயிர்த் தொண்டில் ஆர்வத்தையும் வளர்த்தற்குப் பாடதிட்டத் தில் இடம் வகுத்தாக வேண்டும் என்று மேலிடங்களில் வற்புறுத்தவேண்டும். (11) தேர்தல்களில் வாக்களிக்கும்போது, மக்கள் சத்தியத்தினின்றும் சன்மார்க்க ஒழுக்கத்தினின்றும் சிறிதும் வழுவலாகாது—வழுவினுற் பெரும்பாவம் விளையும் என்னும் உண்மையை இன்சொற்களால் அன்புரிமையுடன் யாண்டும் நினைப்பூட்ட வேண்டும். (12) சைவர்கள் 54 ஆண்டு கள் சைவப் பணி பல புரிந்துள்ள இச்சைவ சித்தாந்த மகா சமாஜத்துக்குப் பல ஆயிரக் கணக்கில் அங்கத்தவர்களாகச் சேர்ந்து, இக்காலத்தின் தேவைக் கேற்பப் பெரிய அளவில் பல நாடுகளில் சமரச சைவ நன்னெறியை மக்களுக்கு எடுத் துரைக்கப் பெருமுயற்சி தொடங்கவேண்டும்.

“ வந்தித்து நின்னை மறவாக் கடனுகச்
சிந்தைசெய நின்னதருள் செய்யாய் பராபரமே ! ”
“ எவ்வுயிரும் என்னுயிர்போல் எண்ணி இரங்கவும்நின்
தெய்வ அருட்கருணை செய்யாய் பராபரமே ”

# தலைமையுரை



சிவத்திரு. சோமசுந்தரத் தம்பிரான் சுவாமிகள்
(தருமையாதீன சமயப் பிரசார நிலையம், சென்னை.)

ஞாலம் நின்புக ழேமிக வேண்டுந்தென்
ஆல வாயில் உறையும்எம் ஆதியே.

—திருஞானசம்பந்தர்

என்னைஇப் பவத்திற் சேரா வகையெடுத்(து) என்சித் தத்தே
தன்னைவைத்(து) அருளி னாலே தாளிணை தலைமேற் சூட்டி
மின்னமர் தருமை மேவி மெய்கண்டான் மரபில் வந்த
மன்னவ சுப்ர மண்ய ஞானதே சிகனே போற்றி.

சிவநெறிச் செல்வர்களே, பெரியோர்களே, தாய்மார்களே!

## சமாஜத் தொண்டும், தலைமையும்

சைவமும் தமிழும் தழைத்தினித்தோங்க ஐம்பத்து நான்கு ஆண்டுகளாக அரிய பணிகளை ஆற்றி வருவது நமது

**சைவ சித்தாந்த மகா சமாஜம்.** இஃது ஆற்றிவரும் தொண்டினைத் தமிழ் நாடும், தமிழ் வழங்கும் புறநாடும் நன்கு அறியும். சென்ற ஐம்பத்து மூன்று ஆண்டுகளில் இச்சமாஜ ஆண்டு விழாப் பேரவைக்குச் சிறந்த பேரறிஞர் பலர் தலைமை வகித்துப் பேருரை நிகழ்த்தியுள்ளனர். நிகழாண்டில் நடைபெறும் ஐம்பத்து நான்காவது ஆண்டு நிறைவு விழாவிற்குத் தலைமையுரை நிகழ்த்துமாறு அறிவிலும் ஆண்டிலும், அநுபவத் திறத்திலும் சிவஞானத் தெளிவிலும் இளையனாகிய என்னைச் சமாஜத்தார் அழைத்து அரங்கேற்றி வைத்துள்ளனர். இந்நிலை எனக்கே வியப்பைத் தருகிறது. "**இறைநிலம் எழுதுமுன் இளைய பாலகன், முறைவரைவேன் என முயல்வது ஒக்கும்**" என்ற கந்தபுராண அவையடக்கச் செய்யுட் பகுதி இப்பொழுது நினைவிற்கு வருகின்றது. மேலும், இதில் ஒரு புதிய மறுமலர்ச்சியைக் காணலாம். இதுவரை சைவ சித்தாந்தத்தின் நிலைக்களனாக விளங்கும் ஆதீனங்களின் அடியார்கள் சமாஜ ஆண்டுவிழாப் பேரவைக்குத் தலைமை வகித்ததாகத் தெரியவில்லை. இச்சிறப்பு முதன் முதலாக எளியேனுக்கே வாய்த்துள்ளது என்று எண்ணுகிறேன். அதிலும் சென்ற ஆண்டு நமது ஆதீனப் புலவர் திரு. க. வச்சிரவேல் முதலியார் B.A. L.T., அவர்களைத் தலைமை வகிக்கச் செய்து, நிகழ் ஆண்டில் ஆதீனத்தின் அடியனாகிய எளியேனைத் தலைமை வகிக்கச் செய்திருப்பது, சமாஜம், ஆதீனங்களுடன் தொடர்பு கொண்டு பணியாற்ற முற்பட்டிருப்பதைப் புலப்படுத்துகின்றது. இது குறித்துப் பெருமகிழ்வு எய்துகின்றேன்.

## இந்துமத பாடசாலை

சமய வாழ்வு, மக்களிடையே மலரவேண்டுமென்பதைக் குறிக்கோளாக் கொண்டு 44 ஆண்டுகளாக அருந் தொண்டாற்றி வருவது வாலாஜாபாத் இந்துமத பாடசாலை. இது சான்றோர் பலரை ஈன்றளித்த தொண்டை—நன்னாட்டிலே, "பிள்ளை தைவரப் பெருகு பால்சொரி மூலைத்தாய் போல்" தன்னைச் சார்ந்தாருக்கு நீரைச் சுரந்துட்டிச் சீரைப் பெருக்கும் பாலாற்றங் கரையிலே, வாலாஜாபாத் என வழங்கும் இச்சிவ புரத்திலே, குருகுலமாகித் திகழ்கின்றது. குருகுலத்திற்கும் சித்தாந்த சைவச் செந்நெறிக்கும் மிக்க தொடர்பு உண்டல்

லவா? எனவே, இக்குருகுலத்தில் சிவநெறித் தொண்டாற்றி வரும் சைவ சித்தாந்த மகா சமாஜத்தின் ஆண்டுவிழாக் கொண்டாடுவது மிகப் பொருத்தமானதே. இவ்வமைப்பினை ஏற்படுத்தியுள்ள திருவருளைப் போற்றிக் குருகுலத்தாரையும், சமாஜத்தாரையும் பாராட்டுகிறேன்.

### சைவ சித்தாந்தம்

உலகில் உள்ள எல்லோரும் நலமாக வாழ வேண்டுமானால் ஒழுங்கும் கட்டுப்பாடும் மிகவும் இன்றியமையாது வேண்டப்படும். ஒழுங்கு அகத்தொழுங்கு, புறத்தொழுங்கு என இரு வகைப்படும். அவற்றுள் அகத்தொழுங்கைப் பெறுதல் சமயத்தினால்தான் இயலும். புறத்தொழுங்கு காக்கப் பெறுதல் ஆட்சி முறையால் இயலும். அகத்தொழுங்கு காக்கும் முறை நிறை காக்கும் காப்பாகும். புறத்தொழுங்கு காக்கும் முறை சிறை காக்கும் காப்பாகும். அகத்தொழுங்கைக் கடவுள் உணர்வால் காத்து வரும் சமயம், புறத்தொழுங்கை மனிதன் ஆற்றலால் காத்து வரும் அரசியல் ஆட்சி முறைக்குப் பலவகையிலும் துணை செய்கிறது. உதாரணமாகக் களவு செய்வோனது கையையும் காலையும், சிறைகாக்கும் காப்பினால் திருத்துவது அரசியல் ஆட்சி முறை. ஆனால் களவு செய்யப் புகுவோனது நெஞ்சைத் திருத்தி, அதன் வழியாகக் கை கால்களையும் நிறை காக்கும் காப்பினால் திருத்துவது சமய முறை. எனவே, எல்லா உயிர்களையும் வையத்துள் வாழ்வாங்கு வாழ வைப்பது சமய வாழ்வு என்பது தெளிவாகின்றது. இச்சமயம் ஒன்றாய் அரும்பிப் பலவாய்க் கிளைத்துள்ளது. இவ்வரிய சமயங்கள் பலவற்றையும் ஈன்றெடுத்த பெருமை நமது ஆசியக் கண்டத்திற்கே உரித்தானது. ஒவ்வொரு சமயமும் சிலவும் பலவுமான உண்மைகளை அறிவிப்பனவே. எனினும் இச்சமயங்கள் கூறிய உண்மைகளோடு இவை கூறாத பல உண்மைகளையும் கூறி, முழு முதலாக விளங்குவது சைவ சித்தாந்தம். இது சிவ பரம்பொருளின் முழு முதற்றன்மையைக் குறித்த சித்தாந்தங்களை நன்கு விளக்குவது.

### வேதத்திற் சைவம்

இனி இச்சிவ நெறியின் பழமையையும் பெருமையையும் காணலாம்: மிகப் பழமையாக விளங்குவன இருக்கு, யஜுர்,

சாமம், அதர்வணம் என்ற நால் வேதங்களும், அவற்றின் முடி மணியாக விளங்கும் உபநிடதங்களும் ஆகும். இவற்றுள் இருக்கு வேதம் சிவமுழுமுதலை "ஏகன்" என்ற சொல்லா லும், "சத்" என்ற சொல்லாலும் குறிப்பிடுகின்றது. சுவே தாசுவதரம் என்ற உபநிடதம் "ஏகம்" என்று குறிக்கப் பட்ட சொல்லின் பொருளாக விளங்குபவர் உருத்திரரே என்று உறுதியாகக் கூறுகிறது. ஏகன் அல்லது ஒருவன் என்ற சொல் சிவபெருமானைத் தான் குறிக்கும் என்ப தைத் தமிழ்மறை அருளிச் செய்துள்ள திருநாவுக்கரசர் "ஒருவனாய் உலகேத்த நின்ற நாளோ" என்று குறிப் பிடுவதாலும், மாணிக்கவாசகர் "ஒருவன் என்னும் ஒரு வன் காண்க" என்று குறிப்பிடுவதாலும், வைணவப் பெரியாராகிய நம்மாழ்வாரும் கண்ணபிரானைப் போற்றிப் பரவும் திருப்பாடலில் "ஒருவன் என்றேத்திநின்ற நளிர் மதிச் சடையன் என்கோ" என்று குறிப்பிடுவதாலும் நன்கு தெளிய லாம். மந்திர பாகமாக உள்ள அதர்வண வேதத்தை நீக்கி வேதம் மூன்றெனவே கொள்வர் பெரியோர். அவற்றுள் நடுவில் உள்ளது யஜுர் வேதம். அதன் நடுவில் இருதய ஸ்தானத்தில் "நமசிவாயச சிவதராயச" என்ற தொடரில் ஐந்தெழுத்து அமைந்துள்ளது. இதனாலும் வேதம் சிவபரம் பொருளைப் போற்றும் முறை நன்கு உணரலாம்.

### புதைபொருளிற் சைவம்

அடுத்துப் பழமை தெளிவதற்கு ஆதாரமாக இருப்பது புதைபொருள் ஆராய்ச்சியாகும். பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளுக்கு முன்னர்ப் புதையுண்ட நகரங்களும், அவற்றில் கிடைத்துள்ள பொருள்களும், சிவலிங்கம், நடராஜர் போன்ற உருவங்களும் நமது சிவநெறியின் தொன்மையை வன்மையாக எடுத்துரைக்கின்றன. இற்றைக்கு 6,000 ஆண்டு கட்கு முன்னரே சிறந்த நாகரிகம் படைத்த நாடாக விளங்கிய சிந்துவெளிப் பிரதேசத்தை இதற்கு உதாரணமாகக் காண லாம். இதில் புதையுண்டிருக்கும் மொகஞ்சதாரோ, ஹாரப்பா முதலிய நகரங்களில் பெரியனவும், சிறியனவுமான சிவ லிங்கங்கள் ஆயிரக்கணக்கில் கிடைத்துள்ளன என்றும், ஹாரப்பாவில் மட்டும் 600-க்கு மேற்பட்ட சிவலிங்கங்கள்

கிடைத்துள்ளன என்றும் தெரியவருகின்றன. "இவ்வாராய்ச்சியால் அறியப்படும் உண்மை ஒன்றுண்டு. அஃதாவது, சைவ சமயம் சிந்துவெளி நாகரிகத்துக்கும் (கி. மு. 4000-க்கும்) முற்பட்ட பழமையுடையது என்பதேயாகும். அஃது இன்னும் எவ்வளவு பழைமையுடையது என்பதை வரையறுக்கக்கூடவில்லை. அச்சமயம் உலகத்திலேயே மிக்க பழைமை வாய்ந்தது" என்று, டாக்டர் திரு. மா. இராசமாணிக்கனுர் அவர்கள் தாம் எழுதியுள்ள, மொகஞ்சதாரோ அல்லது சிந்து வெளி நாகரிகம், என்ற நூலில் குறிப்பிட்டுள்ளார்கள். ஹீராஸ் பாதிரியார் (Father Heras) அவர்களும் இக் கருத்தை வெளியிட்டுள்ளார். ஐரோப்பியர் தென் அமெரிக்காவிற்குச் செல்வதற்கு முன்னரே அங்குத் தென்னுட்டிலுள்ளவற்றைப்போல் கோயில்கள் கட்டப்பட்டு இருந்தன என்பதற்கும், அங்குச் சிவலிங்க வழிபாடு இருந்தமைக்கும் புதைபொருள் ஆராய்ச்சியாளர் சான்று பகர்கின்றனர். மேற்கே அமெரிக்கா, மெக்சிக்கோ, மேற்கு இந்தியத் தீவுகள் முதலிய தீவுகளிலும் மேற்கு ஆப்ரிக்கா, எகிப்து, அரேபியா முதலிய நாடுகளிலும், கிழக்கே ஜாவா, சுமத்திரா, இந்தோனேஷியா, ஆஸ்திரேலியா முதலிய நாடுகளிலும் தமிழ் நாட்டுக்கோயில் அமைப்புகளும், சிவலிங்கங்களும் இருப்பதாக ஆராய்ச்சி அறிஞர்கள் கூறுகின்றனர். இவற்றால் தமிழர்களின் சமயம் சிவநெறி என்பதும், அச் சிவநெறி உலகம் முழுவதும் பழங்காலத்தில் பரவி இருந்தது என்பதும் தெளிவாக அறியலாம்.

## சங்க இலக்கியங்களிற் சைவம்

இனி, சங்ககாலத்து இலக்கியங்களாலும், பிறமத இலக்கியங்களாலும் சிவநெறியின் பழைமையும் பெருமையும் உணரலாம். சங்க இலக்கியங்கள் பத்துப் பாட்டு, எட்டுத்தொகை, பதினெண்கீழ்க்கணக்கு என மூன்று தொகுப்பாக வகை செய்யப்பட்டுள்ளன. அவற்றுள் பெரும்பான்மையான நூல்கள் பல புலவர்களால் பல்வேறு காலத்தினர்களால் பாடப் பெற்றவை. அவை மக்களுக்குப் பயன்படும் பண்பு நோக்கிப் பிற்காலத்தவர்களால் தொகுக்கப்பெற்றவை. இவையன்றிக் கடல்கோளுக்கு இரையான நூல்களோ எண்ணிறந்தன. எனவே தான் கடவுளைப் பற்றிப் பேசப்படும் முழுநூலைச் சங்க கால

இலக்கியங்களில் காண்டல் அரிதாயிற்று. அப்படி இருந்தும் பத்துப்பாட்டினுள் முதற் பாட்டாகிய திருமுருகாற்றுப் படையும், எட்டுத் தொகையுள் ஒன்ருகிய பரிபாடலும் தெய்வத்தைப் பற்றிய நூல்களாகத் திகழ்கின்றன. மற்றைய சங்க இலக்கியங்களில் உலகியலைப் பேசவந்த இடங்களில் இலைமறைகாய்போல், உவமை முதலிய வடிவங்களால் கடவுள் நிலை பேசப்பெற்றுள்ளது. அவற்றுள் சிலவற்றைக் காணலாம்.

சாவா மருந்தாகிய நெல்லிக்கனி பெற்ற அவ்வையார் அக்கனியளித்த அதியமானை வாழ்த்தும் பொழுது, "நீலமணி மிடற்று ஒருவன் போல, மன்னுக பெரும நீயே" என்று இறைவன் நஞ்சுண்ட நிகழ்ச்சியை நினைவூட்டி, 'நஞ்சினும் இறவாதிருப்பவன் சிவபிரான்' என்பதையும் உணர்த்துகிருர். சிவபிரான் முப்புரம் எரித்த நிகழ்ச்சி "கடந்தடு முன்பொடு முக்கணுன் மூவெயிலும் உடன்றக்கால் முகம்போல" என்ற கலித்தொகை அடிகளால் பேசப்படுகின்றது. 'முனிவர்களால் வழிபடப் பெறும் முக்கட் செல்வன் திருக்கோயிலை வலம் வருங் காலத்து உனது குடை தாழ்வதாக' என்று கூறும் பகுதியைப் "பணியியர் அத்தை நின்குடையே முனிவர், முக்கட் செல்வர் நகர்வலம் செயற்கே" என்ற அடிகளாலும்; நீண்ட சடையுடையனுய் பழைமைக்கெல்லாம் பழைமையாய் உள்ளான் என்பதை "நன்ருய்ந்த நீள்நிமிர் சடைமுது முதல்வன்" என்ற அடிகளாலும் புறநானூறு குறிப்பிடுகின்றது. சிவபிரான் பஞ்சபூதங்களைப் படைத்தவனுய், மழுவேந்தியவனுய் உள்ளான் என்பதை "நீரும் நிலனும், தீயும் வளியும் மாக விசும்போடைந்துட னியற்றிய, மழுவாள் நெடியோன்" என்ற அடிகளால் மதுரைக்காஞ்சி அறிவிக்கின்றது. இராவணன் கைலையைப் பெயர்க்க முயன்றமையையும், அது முற்றுப் பெருமையினையும்,

"இமையவில் வாங்கிய ஈர்ஞ்சடை அந்தணன்
உமையமர்ந் துயர்மலை யிருந்தன ஞக
ஐயிரு தலையின் அரக்கர் கோமான்
தொடிப்பொலி தடக்கையிற் கீழ்புகுத் தம்மலை
எடுக்கல் செல்லா துழப்பவன் போல"

என்ற கலித்தொகை அடிகளால் நன்கறியலாம். திருவா

திரைக்கு உரியவன் சிவபிரான் என்பதையும் கலித்தொகை "அரும்பெறல் ஆதிரையான்" என்று குறிக்கின்றது. 'மிகப் பழமையான நான்மறைகளை அருளிய முக்கட் செல்வனது ஆலமரத்தின் முற்றம் அழகுபெறப் பொருந்தியுள்ள பொழில்" என்பதை அகநானூறு "நான்மறை முதுநூல் முக்கட் செல்வன், ஆல முற்றம் கவின் பெறத் தைஇ" என்ற அடிகளால் அறிவிக்கின்றது. முருகப் பெருமானின் தந்தை சிவபிரான் என்பதை "ஆல்கெழு கடவுட் புதல்வன்" என்றும், முப்புரம் எரித்ததையும், உமையொரு பாகன் ஆதலையும், முக்கண்ணனுதலையும் "வலவயின் உயரிய பலர்புகழ் திணிதோள், உமையமர்ந்து விளங்கும் இமையா முக்கண், மூவெயில் முருக்கிய முரண்மிகு செல்வன்," என்றும் திருமுருகாற்றுப் படை வரிகள் அறிவிக்கின்றன.

"விண்ணோர் அமுதுண்டும் சாவ, ஒருவரும்
உண்ணாத நஞ்சுண்டு இருந்தருள் செய்குவாய்"

என்று வேட்டுவவரியிலும், "பிறவாயாக்கைப் பெரியோன்" என்று இந்திர விழாவூர் எடுத்த காதையிலும், "செஞ்சடை வானவன் அருளினில் விளங்க, வஞ்சித் தோன்றிய வானவ கேளாய்" "தெண்ணீர் கரந்த செஞ்சடைக் கடவுள் வண்ணச் சேவடி மணிமுடி வைத்தலின்", என்று கால்கோட் காதையிலும் சிலப்பதிகாரம் பேசுவது கொண்டு, சிவபிரானின் பழமையும் பெருமையும், அவனது சக்தியின் சிறப்பும் செங்குட்டுவன் சிவபக்தியும் தெளிய உணரலாம்.

### இயற்கை அமைப்பில் சைவம்

இறைவனால் படைக்கப்பெற்ற இயற்கை அமைப்பும், சிவ வழிபாட்டினையே வற்புறுத்துகின்றது. வான மண்டலம் சிவலிங்க சொரூபமாகக் கவிந்திருக்கின்றது. இலிங்கத்தின் மீது நாகாபரணம் சார்த்தியுள்ளது போல் நாகலிங்கப் பூ அமைந்துள்ளது. அமரநாதத்தில் பனிக்கட்டி இயற்கையாகவே சிவலிங்கமாகத் தோன்றுகிறது. சிவத் தலங்களுக்குள் முதன்மை பெற்றிலங்கும் திருக் கயிலைமலை இலிங்க சொரூபமாக விளங்குவதோடு, தென்னாட்டுக் கோயில் அமைப்பு முறை முதலியனவும் அம்மலையில் காணப்படுகின்றன. சிவபெரு

மானுக்கு உகந்ததும், அடையாள மலராக உள்ளதுமான கொன்றை மலர் பிரணவ சொரூபத்துடனும், ஐந்து இதழ்களுடனும் விளங்குகின்றது. இது பிரணவத்தோடு உச்சரிக்கின்ற ஐந்தெழுத்தை நினைவூட்டுகிறது. இறைவனுக்குச் சூட்டப்படும் பெரும்பான்மையான மலர்கள் ஐந்து இதழ்கள் உடையனவாகவே விளங்குகின்றன. நமது கையிலும் பெரும் பகுதி ஐந்து விரல்களே உள்ளன என்பதையும் நோக்குக. இதனைத் திருஞானசம்பந்தர் "அங்கையில் ஐவிரல் அஞ்செழுத்துமே" என்று அருளியுள்ளார். ஐந்து விரல்களுள் கட்டைவிரல் கடவுளைக் குறிப்பது. தனித்திருப்பதனாலும், இதன் துணை இன்றி ஏனைய விரல்களால் சிறந்த செயல் செய்ய இயலாமையாலும், இது கடவுளின் அடையாளம் என்பதை உணரலாம். சுட்டுவிரல் உயிரைக் குறிப்பது. இஃது ஆளைக் காட்டுவதற்கும் பிறபொருளைக் காட்டுவதற்கும் பயன்படுத்தப் படுவதனால் உயிரின் பிரதிநிதியாக உள்ளது என்பதை உணரலாம். நடுவிரல் ஆணவத்தின் அடையாளமாக இலங்குவது. இயல்பாகவே உயிரைக் கடவுளுடன் சேர வொட்டாமல் தன் வயப்படுத்தி இருக்கும் நிலையைக் கையின் அமைப்பிலேயே காணலாம். மோதிர விரல் என்று குறிக்கப்படும் விரல் கர்ம மலத்தின் பிரதிநிதியாக உள்ளது. சடங்குகளைச் செய்யும் பொழுது இவ்விரலில் பவித்திரம் அணிந்து செய்வதே இதனை அறிவிக்கும். சுண்டுவிரல் மாயையின் அடையாளமாக விளங்குவது. திருமணம் ஆகுங் காலத்தில் மணப்பெண் சுண்டு விரலைப் பற்றுவதால் இதனை உணரலாம். இதுபோன்ற இன்னும் பல இயற்கை அமைப்பினாலும் சிவநெறி வழிபாட்டின் உண்மை துலங்குவது காண்க.

## வழக்காற்றில் சைவம்

வேலை செய்யாமல், செய்வோரையும் குறுக்கே நின்று தடை செய்வோரைச் 'சக்தி இருந்தால் செய், இல்லையானால் சிவனே என்றிரு' என்று கூறும் வழக்கம் இன்றும் இருக்கிறது. பணிவும் பண்பும் இன்றித் திரிபவனை ஆணவம் பிடித்துத் திரிகிறான் என்றும், பிணி முதலியவற்றால் துன்புறும் ஒருவனைப்பற்றிப் பேசும் பொழுது அவன் கர்மத்தை அவன் அநுபவிக்கின்றான் என்றும், ஒரு பொருளில் ஈடுபட்டு மயங்குபவனைக் குறிப்பிடும்பொழுது

அவன் அம்மாயையில் மூழ்கிவிட்டான் என்றும் கூறுவதை இன்றும் செவிகைப்பக் கேட்கலாம். பிற உயிர்களிடத்து இரக்கமும் அன்பும் கொண்டவனே சைவனுவான். புலால் உணவு மேற்கொள்ளாது மரக்கறியுணவு மேற்கொள்பவனைச் சைவன் என்றும், அவ்வுணவைச் சைவ உணவு என்றும் வழங்கி வருதல் இங்கு நினைவு கூரத் தக்கது. இவற்ருல் கடவுள் – உயிர் – தளை என்ற முப்பொருள்களின் தன்மை வழக்காற்றில் பேசப்பெறுவதை உணரலாம்.

## டாக்டர் ஜி. யு. போப்பின் கருத்து

"சைவ சித்தாந்தம் என்னும் தத்துவக் கொள்கையானது மிக விரிந்ததும், பெருஞ் செல்வாக்குடையதும், ஐயத்திற்கு இடமின்றி உண்மையிலேயே பெருமதிப்பிற்கு உரியதும், இந்திய நாட்டிலுள்ள சமயக் கொள்கைக்களுக் கெல்லாம் தலை சிறந்ததுமாகும். தென்னிந்திய மக்களின் மிகச் சிறந்த பேரறிவின் பெருவிளைவே சைவ சித்தாந்தமாகும். இறை – உயிர் – மக்கள்தன்மை – உலகியற்கை – அறியாமை – துன்பம் – காணப்படாத மறுமை நிலைகள் என்பனவற்றைக் குறித்த, சிக்கலான பொருள்களைத் தெளிந்து கொள்ளும் இத்தகைய சிறந்த முயற்சிபற்றி, இது காறும் ஆங்கிலத்தில் முற்றிலும் எடுத்து விளக்கப் படவேயில்லை." (மொழி பெயர்த்தவர் முருகவேள்).

## ரெவரண்ட் கௌடியின் கருத்து

மேலும் இதன் சிறப்பைக் கௌடி (Rev. Mr. Goudie) என்பவர் கூறுவனவற்றையும் காண்க: "பிற எல்லா ஆராய்ச்சி வகைகளையும் கொள்கை அல்லது வழிபாட்டு முறைகளையும்விட மேலானதாகச் சைவசித்தாந்தம் சில சிறப்பியற் பண்புகளைத் தன்னகத்தே கொண்டு ஒளிர்கின்றது. மிகவும் பழமை வாய்ந்த தாய், அப் பழமையினுலாகிய பெருமைகளைப் பெற்று விளங்குகின்றது. சமய உலகில் தென்னிந்தியாவில் உள்ள மிகப் பெரும்பான்மையான சிறந்த கருத்துக்களுக்கெல்லாம், சைவ சமயமே நேரிதின் உரிமைத் தொடர்புடையதாகும். தமிழ் மக்களின் சமயமாகிய இதனை நோக்க, அடுத்துள்ள ஏனைய பிற எல்லாம் ஒப்பியல் முறையில் அயலவர்க்கு உரியனவும்,

அண்மையில் தோன்றியனவுமேயாகும். சமய ஆராய்ச்சித் துறையிலும், கொள்கை—வாழ்க்கை என்பனவற்றின் வெளிப் பாட்டு முறையிலும், மிகமிகச் சிறந்த தொன்ருகத் தென் னிந்தியா பெற்றிருப்பது சைவ சித்தாந்தமேயாகும்." இவ் வாறு கூறும் இவ்விரு அயல்நாட்டு அறிஞர்களின் கருத்துரை கொண்டே சைவசித்தாந்தத்தின் மேன்மையை ஓரளவு தெளிய லாம். (மொழி பெயர்த்தவர் : முருகவேள்)

## சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை

பதி (கடவுள்), பசு (உயிர்), பாசம் (தளை) என்னும் மூன்று பொருள்களும் ஒன்ருல் ஒன்று தோற்றுவிக்கப்படாமல் என்றும் உள்ள உண்மைப் பொருள்கள் என்பது சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கருத்தாகும். மூன்று பொருள்களும் என்றும் உள்ளனவேனும், தகுதியால் வெவ்வேறு இயல்புடையனவே யாம். அவற்றுள் கடவுள் ஒளிவண்ணராய், அறிவுருவாய், பிற உதவியின்றித் தாமே அறிபவராய், பேரின்பவுருவராய், அறிவித்தால் அறியும் உயிர்களிடத்துக் கருணைகொண்டு படைத்தல் முதலிய ஐந்தொழில்களைச் செய்து உயிர்களைத் தளையினின்றும் விடுவிப்பவராய், ஒருவராய், ஆயினும் தாமும் தம் சத்தியும் என இருதிறப்பட்டு, மலரும் மணமும்போல இயைந்து நிற்பவராய் விளங்குபவர்.

உயிர்கள், பலவாகவுள்ளன. அவை தாமே அறியும் தகுதியில்லாதனவாய், சிற்றறிவு உடையனவாய், இயல்பாகவே பாசத்தால் கட்டுண்டனவாய், சூரிய ஒளிகொண்டு பொருள் களைக்காணும் கண்களைப்போல் இறைஒளி உணர்த்த உணரும் இயல்புடையனவாய், சார்ந்ததன் வண்ணமாகிற படிகம் போன்று இறைவனைச் சார்ந்து அறிவையும் பேரின்பத்தையும் பெறத்தக்கனவாய், பாசத்தைச் சார்ந்து அறியாமையையும் பெருந்துன்பத்தையும் அடையும் இயல்பினவாய் இருப்பன.

பாசம் (தளை), ஆணவம்–மாயை–கன்மம் என மூவகைப் படும். இவற்றை மும்மலம் எனவும் கூறுவர். இவற்றுள் ஆணவம், தான் ஒன்றேயாய் அனேக சக்திகளையுடையதா யிருப்பது. உயிர்களின் அறிவினை விளங்கவொட்டாமல் அதற்குத் தடையாயிருப்பது; தன்னையும் காட்டாமல் பிற பொருளையும் காணவொட்டாமல் மறைத்து நிற்பது; மோகம்,

மதம், அராகம், கவலை, தாபம், வாட்டம், விசித்திரம் என்னும் ஏழு செயல்களையும் உயிர்களிடத்தே விளைவிப்பது.

மாயை என்பது, உலகம் தன்னிடம் ஒடுங்குதற்கும், தோன்றுதற்கும் காரணமாயிருப்பது. இம்மாயை இறைவனருளால் உலகத் தோற்றத்திற்கு முதற்காரணமாய் நின்று, ஆணவத்தால் கட்டுண்டு இயக்கமற்றிருக்கும் உயிர்களை இயங்கத் துணைசெய்து அவற்றை உயர்த்துவது. மாயையின் காரியமே தனு (உடம்பு), கரணம், புவனம், போகம் எல்லாம். தனு கரண புவன போகங்களாகிய முப்பத்தாறு தத்துவங்களின் துணைகொண்டே, உயிர்கள் சிற்றறிவு விளக்கம் பெறுகின்றன. இதனால் மாயையினை 'விளக்கு' என்றருளிச் செய்தார் நம் மெய்கண்ட தேவர்.

கன்மம் என்பது, உயிர்கள் ஆணவமலத் தொடர்பால் செய்யும் வினைகளின் தொகுப்பாகும். இது நல்வினை தீவினை வடிவாய் இன்ப துன்பங்கட்கும், பிறப்பு இறப்புகட்கும் காரணமாயிருப்பது. அது மூவகைப்படும். அவையாவன, உயிர்கள் முற்பிறவியில் நல்வினை தீவினை வாயிலாகத் தேடி வைத்தது சஞ்சித வினையாம். அதனை இப்பிறவியால் அநுபவிப்பது பிராரப்த வினையாம். அநுபவிக்கும்போதே உண்டாக்கிக்கொள்வது ஆகாமிய வினையாம் என்க.

"பதிபசு பாசம் எனப்பகர் மூன்றில்
பதியினைப் போல்பசு பாசம் அநாதி
பதியினைச் சென்றணு காப்பசு பாசம்
பதியணு கிற்பசு பாசம்நில் லாவே."

என்ற திருமூலர் திருமந்திரத்தாலும்

"என்னை அறிவென்றான்! என்னறிவில் ஆனந்தம்
தன்னைச் சிவமென்றான்! சந்ததமும்—என்னை உன்னைப்
பாரா மறைத்ததுவே பாசமென்றான் இம்மூன்றும்
ஆராய்ந் தவர்முத்த ராம்."

என்ற நமது ஆதீன முதல்வர் குருஞானசம்பந்தர் திருவாக்காலும் இதுகாறும் கூறிய முப்பொருள் உண்மையைச் சுருக்கமாக உணரலாம்.

## சமயத்தால் வரும் நன்மைகள்

ஒவ்வொரு சமயமும் குறிப்பிட்ட காலங்களில் விரதம் இருக்கவேண்டும் என்பதை வற்புறுத்துகிறது. ‘நல்லவை செய்வேன் அல்லவை தவிர்ப்பேன்’ என்று சங்கற்பம் செய்து கொண்டு அவற்றைக் காப்பதே விரதமாகும். கூடியவரை உணவைக் குறைத்துக் கடவுட் சிந்தனையுடன் அருள்நூல்களைப் பாராயணம் செய்வதும், நற்செயல்களில் ஈடுபடுவதும் விரதத்தின் முக்கிய அம்சமாகும். விரதத்தை உபவாசமென்றும் குறிப்பிடுவர். உப-சமீபத்தில் வாசம்-வசித்தல். அதாவது, இறைவனுக்குச் சமீபத்தில் வசித்தல் என்பதே இதன் பொருள். உணவைக் குறைத்துத் தூய வாழ்க்கையை மேற்கொண்டால் இறைவன் சமீபத்தில் வசிக்கலாம் என்பது அநுபவ அறிவிற்குத் தெளிவாகப் புரியக்கூடும். எனவே, நமது சைவத்திலும் சிவ விரதங்களாகச் சோமவார விரதம், சிவராத்திரி விரதம், திருவாதிரை விரதம், பிரதோஷ விரதம் முதலியனவும்; முருகனைப்பற்றியனவாகச் சஷ்டிவிரதம், கிருத்திகை விரதம் முதலியனவும், இவற்றைப் போலவே தேவி விரதங்கள், விநாயகர் விரதங்கள் முதலியனவும் அமைந்துள்ளன. இவ் விரதங்களால் மக்கள் அடையும் பலன் அளப்பிலவாகும். முதலில் ஒருவனுக்கு ஆரோக்கிய வாழ்வு கிடைக்கிறது. நோய்த்துன்பம் இன்றி வாழ முடிகிறது. நீண்ட ஆயுள் பெற முடிகிறது. அறிவில் தெளிவும் நுட்பமும் உண்டாகின்றன. உணவைக் குறைப்பதால் ஆயுள் அதிகரிக்கும் என்பதைத் திருவள்ளுவர் “அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு பெற்றான் நெடிதுய்க்கு மாறு” என்ற திருக்குறளால் அறிவிக்கின்றார். ஆத்மா கடவுள் உணர்வுடன் நல்ல செயல்களில் ஈடுபடுவதால் அறவுணர்வு தலைப்பட்டு, வம்பு வழக்குச் செலவுகள் குறையும். உணவுப் பொருட்செலவு, மருத்துவத்துறையில் மருந்துப் பொருட்செலவு, பாதுகாப்புச் செலவு, சுகாதாரச் செலவு முதலியனவும் குறையும். எனவே பொருளாதாரப் பற்றாக்குறையும் நம்மைவிட்டு அகலும். ஆட்சியாளர்களும் நல்லுணர்வுபெற்று அறவாழ்வு நடத்தும் மக்களைச் சிரமமின்றி எளிமையாக ஆட்சி புரியலாம். ஒவ்வொருவரும் துன்பம் இன்றி இன்பமாக வாழலாம். இதனால் தனிமனிதனுக்கும்,

சமூகத்திற்கும், அரசாங்கத்திற்கும் நன்மை ஏற்படுகிறது. எனவே, சமயவாழ்வை ஒவ்வொருவரும் மேற்கொண்டு செயற்படுத்தினுல், உலக மக்கள் இம்மை மறுமை நலன்களைத் தவருது பெறுவதோடு, பேரின்பத்தையும் பெறுவர் என்பது ஒருதலை.

## சைவ சமய வளர்ச்சி

காலஞ் சென்ற ஐன்ஸ்டீன் போன்ற விஞ்ஞானிகளும், ஜி. யு. போப்பைப் போன்ற கிறிஸ்தவப் பாதிரியார்களும், ஜான்மார்ஷல் போன்ற மேலைநாட்டுச் சரித்திரப் பேராசிரியர்களும், பிறநாட்டுத் தத்துவ சாத்திரப் பேராசிரியர்களும், சைவசித்தாந்தத்தின் உயரிய தத்துவக் கொள்கைகளை மிகப் பெரிதும் பாராட்டியுள்ளார்கள். கொள்கை அளவோடு நில்லாமல் அநுபவத்திலும் நலம் பயப்பதாக உள்ளதை அறிந்து அறிஞர் பலரும் ஒப்புகின்றனர். இத்தகைய சமயம் வளர்ந்தும், தளர்ந்தும் வந்திருப்பதை வரலாறுணர்ந்தோர் நன்கறிவர். சைவம் பரவுவதால் அதற்கு ஒன்றும் பலனில்லை. ஆனுல் அதனை மேற்கொள்ளும் மக்கள் அதிகமான பலனை அடைவார்கள். இவ்வரிய தத்துவ வளம் நிறைந்த சைவம், இக்காலத்தில் உலகில் அதிகமாகப் பரவாததற்குக் காரணங்கள் பலவாகும். மிகவும் நுணுக்கமான பொருள்களை முன்னுக்குப் பின் முரணுதல் இன்றிச் சொல்லும்பொழுது சொல்நடை பொருள்நடை கடினமாயிருத்தல் இயல்பே. இது ஒரு காரணம் என்பர். சிவநெறியால் நலமடைந்து வரும் சைவர்கள், அந்நெறியைத் திருவருள்துணையால் விளக்கங் கண்ட சமயாசாரியர்களாகிய திருஞானசம்பந்தர், திருநாவுக்கரசர், சுந்தரர், மாணிக்கவாசகர் ஆகியோரையும், சந்தாநுசாரியர்களாகிய மெய்கண்ட தேவர், அருணந்திசிவம், மறைஞானசம்பந்தர், உமாபதிசிவம் ஆகியோரையும் உள்ளவாறு உணர்ந்து போற்றிப் பரவி வழிபடாது வாழ்வது சைவம் பரவாததற்கு முக்கிய காரணமாகும். இனியாகிலும் நாம் ஒவ்வொரு ஊரிலும் இவ்வாசாரியர்களின் பெயரால் கழகங்களும் மன்றங்களும் அமைத்தல் வேண்டும். ஒவ்வொரு சைவரும் அந்தந்த ஊரில் அவற்றில், அங்கத்தினராதலோடு, அவரவர் தகுதிக்கேற்பப் பொருளையும் உழைப்பையும் காணிக்கையாக வழங்குதல் வேண்டும். அக்

கழகங்களின் மூலம் வருங்கால மக்களாகிய இளைஞர்கட்குச் சமயப் பெரியார்களின் வரலாறுகளையும், சைவ சாத்திரத் தோத்திரக் கருத்துக்களையும் புகட்டல் வேண்டும். ஒவ்வொருவரும் நாள்தோறும் சைவக் கருத்துக்களைத் தெரிந்து கொள்ளுவதற்காக ஒருமணி நேரமாவது ஒதுக்கி வைத்தல் வேண்டும். சைவராய் உள்ளவர்கள் சமயவிசேட தீக்கை பெற்று இயன்ற அளவு அநுட்டானம், பூசை முதலியன செய்தல் வேண்டும். ஒவ்வொருவரும் தத்தம் பிள்ளைகட்கும் ஏழு வயது ஆனவுடன் முறைப்படி சமய தீக்கை செய்வித்து இளமையிலேயே சிவநெறியில் ஈடுபடச் செய்தல் வேண்டும். குடும்பத்திலும் சமூகத்திலும் நடைபெறும் மங்கல காரியங்களில் சமயக் காணிக்கை செலுத்துதல் என்ற முறையை மேற்கொள்ளுதல் வேண்டும். அநுட்டானம் பூசை முதலியன செய்ய இயலாதவர்கள் திருமுறைப் பாராயணத்தைத் தவறாது மேற்கொள்ள வேண்டும். குறைந்த அளவு வாரம் ஒரு முறையேனும் தவறாது திருக்கோயிலிற்குச் சென்று வழிபட வேண்டும். வாரவழிபாடு, கூட்டுவழிபாடு முதலியன நடைபெறச் செய்தல் வேண்டும். குருபக்திதான் நம்மையும், நாம் மேற்கொண்டு ஒழுகும் சமயத்தையும் வளர்ப்பது. எனவே எந்தச் செயலை மறந்தாலும், சமயகுரவர் சந்தான குரவர் படங்களைப் பூசை அறையில் எழுந்தருளச் செய்து பூசித்து வருவதை மறக்கலாகாது.

## சமய ஆசிரியர்கள் காட்டிய வழி

நம் சமயாசாரியர்கள், அவர்களுக்கு முன்னிருந்த நாயன்மார்களைக் குருவாகப் போற்றி வழிபட்டுள்ளார்கள். திருஞான சம்பந்தர் திருக்காளத்தி மலைக்குச் சென்றபோது கண்ணப்ப நாயனாரின் திருவுருவத்தைக் கண்டார்; கண்டவுடனே கும்பிட்ட பயனைக் காண்பார் போல், மெய்வேடர் பெருமானைக் கண்டு வீழ்ந்து வணங்கி வழிபட்டார்; திருவாலங்காட்டை அடைந்தபோது காரைக்காலம்மையார் வதியும் பதி என்பதை அறிந்து, அவரிடத்திலுள்ள பக்தியால் அத்தலத்தை மிதிக்க அஞ்சினார். சுந்தரமூர்த்தி சுவாமிகள் அப்பர் சுவாமிகட்குச் சூலை நீங்கிய தலமாகிய திருவதிகையை மிதிக்க அஞ்சிப் புறத்தே சித்தவட மடத்தில் தங்கினார்; அதனால் சிவஞான

தீக்கையாகிய திருவடி தீக்கையும் பெற்ருர்; அதேபோல் சீகாழிப் பதியை நெருங்கிய உடன் திருஞானசம்பந்தர் தோன்றி யருளியதும், அவருக்கு அம்மையார் ஞானப்பால் அருளியதுமான பெருமையை எண்ணி அத்தலத்தை மிதிக்க அஞ்சி வலமாக வந்தார். காழிநாதரும் காதில் வெண்குழைய னுகக் காட்சி நல்கினர். இதுபோன்ற பல நிகழ்ச்சிகளால் நாம் நம் சமய குரவர்களையும், சந்தான குரவர்களையும் அவர்கள் வழிவந்த ஆதீனங்களின் குருமகா சந்நிதானங்களையும் போற்றிப் பரவித் தொடர்பு கொள்ளுதல் வேண்டும். இது காறும் கூறிய கருத்துக்களைச் சமாசம் மேற்கொண்டு, மன்றங் கள் கழகங்கள் முதலிய சமய அமைப்புக்களை ஏற்படுத்தி, அவற்றைத் தமது உறுப்பாகக் கொண்டு செயற்படுத்த முன் வருமென்று நம்புகிறேன்.

## முடிவுரை

இதுவரை கூறிய்வற்ருல் 54 ஆண்டுகளாகச் சைவப்பணி புரிந்து வருவது சைவ சித்தாந்த மகா சமாஜம் என்பதும், வாலாஜாபாத் குருகுலமாகிய இந்துமத பாடசாலையில் ஆண்டு விழாக் கொண்டாடுவது பொருத்தமானது என்பதும், சமயத் தின் அவசியமும், சைவத்தின் சிறப்பும், வேதத்தில் சைவத் திறம் விளங்குவதும், புதைபொருள் ஆராய்ச்சியால் சைவத் தின் தொன்மை துலங்குவதும், சங்க இலக்கியங்களில் சிவ நெறிப் பழைமை சிறப்பதும், இயற்கை அமைப்பில் சிவ பெருமான் எழிலோடு காட்சி அளிப்பதும், உலகியல் வழக் கிலும் சைவம் உயர்ந்து வழங்குவதும், பிறநாட்டவரும் பிற மதத்தவருமான பாதிரிமார்கள் பைந்தமிழ்ச் சைவத்தைப் பாராட்டியுள்ளதும், சைவ சித்தாந்தத்தின் அடிப்படைக் கொள்கை முப்பொருள் உண்மை என்பதும், சமய விரதங் களால் வரும் நன்மைகளும், சமயாசாரியார்களையும், சந்தாரு சாரியார்களையும் போற்றி வழிபடுவதால்தான் சைவம் வளரும் என்பதும் தெரிந்தோம். இப்பணிக்கு என்னையும் ஆளாக்கிய திருவருளுக்கும் குருவருளுக்கும் பணிவார்ந்த வணக்கம் செலுத்தி, குருகுலத்தார்க்கும் சமாஜத்தார்க்கும் உளமார்ந்த நன்றியறிதலைத் தெரிவித்து, இத் தலைமை யுரையை நிறைவு செய்துகொள்ளுகிறேன். சைவ மெய்யன்பர்களும், சமய

வுணர்ச்சியுடன் சைவப்பணி புரிந்து நாளும் வளமாக வாழச் செந்தமிழ்ச் சொக்கலிங்கப் பெருமான் திருவருளைப் பிரார்த்திக்கின்றேன்.

**வாழிய சைவம்! வளர்க மெய் அன்பர்கள்!**

வான்முகில் வழாது பெய்க மலிவளம் சுரக்க மன்னன்
கோல்முறை அரசு செய்க குறைவிலாது உயிர்கள் வாழ்க
நான்மறை அறங்கள் ஓங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலக மெல்லாம்.

—கச்சியப்பர்

# திறப்புரை



திருவாட்டி நீலாவதி இராமசுப்பிரமணியம் அவர்கள்
"ராஜ்ய லக்ஷ்மி" மதிப்பாசிரியர், சென்னை.

## முன்னுரை

பேரன்புமிக்க பெரியோர்களே! சகோதரிகளே! சைவ மணம் பரப்பும் தகைசால் அன்பர்களே! இச்சைவ மங்கையர் மாநாட்டின் திறப்பாளர் பணிக்கு என்னைப் பணித்த சைவ சித்தாந்த மகா சமாஜத்தார்க்கு முதலில் என் மனமார்ந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். வாலாஜாபாத் இந்துமத பாடசாலையில் இச்சைவ மங்கையர் மாநாட்டைச் சிறப்புற நடத்தித் 'தரும் அப்பா திரு. வா. தி. மா. அவர்களுக்கும் என் வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்ளுகின்றேன்.

## பெண்ணின் பெருமை

"பெண்ணிற் பெருந்தக்க யாவுள?" என்ற ஒரு வியப்பு வினாவிலே பெண்ணின் பெருமை அனைத்தையும் காட்டாமல் காட்டினார், அறநூல் இயற்றிய அருங் கவிஞர் வள்ளுவர். "கடவுள் படைப்பில் பெண்ணைப் போல் உயர்ந்த படைப்பு வேறு இல்லை." என்றார் அண்ணல் காந்தி! இத்துணைச் சிறப்பிற்கு உரிய பெண்ணினம் இடையிலே சிலநாள் கண்மூடி, கல்வியில் பின்தங்கிப் பிறவிப் பயன் இழந்து, பெருவாழ்வை மறந்து வாழ்ந்துகொண்டிருந்தது. தானாக ஏற்றுக்கொண்ட வாழ்வா அது. அன்று நாட்டின் சூழ்நிலையும், அறியாமையும் சேர்ந்து அந்த வாழ்வில் பெண்ணினத்தைத் தள்ளிவிட்டன. புரட்சிக்கவிஞன் பாரதி தோன்றினான். புதுமைப் பெண்ணைப் படைக்க! புதுமைப் பெண்ணும் பொலிவோடு வந்தாள்.

"அறிவு கொண்ட மனித உயிர்களை அடிமையாக்க முயல்பவர் பித்தராம்." என்று சமத்துவ சங்கம் முழங்கினான் கவிஞன். இன்று பெண்கள் பட்டங்களை ஆண்டும், சட்டங்களைச் செய்தும் பாரினில் உயர்நிலை எய்தி வருகின்றனர்.

> "கற்றதனா லாய பயன் என்கொல் வாலறிவன்
> நற்றாள் தொழாஅர் எனின்"

என்பதல்லவா வள்ளுவப் பெருந்தகையின் முடிவு? கல்வியின் பயன்மட்டுமா அது? பெறற்கரும் பிறவிப்பயனே அதுதான் என்றல்லவா பெருமறைகள் பேசுகின்றன? இந்த உறவிலே ஒன்றிச் சமயங்காத்து நின்றனர் சைவ மங்கையர் அந்நாளில்.

## பிறவிப் பயன்

அடியார் பெருமை பேசப்படும் நூல்களில் எல்லாம் அவர் தம் தொண்டு பின்னிக் கிடக்கின்றது. தூண்டா விளக்கென, மேலோங்கி நின்ற அம்மங்கை நல்லாரின் மெய்யுணர்வு, மேன்மைகொள் சமயநீதியை மேதினிக்கு எடுத்துக் காட்டியது. இவையெல்லாம், நமக்குள்ளே மறந்துவிட்ட பழங் கதைகள் அல்லவா? இந்த மாபெரும் அருட்பணி இப்படிப் பொய்யாய்ப்-பழங் கதையாய்ப் போய்விட வேண்டியதுதானா? கூடவே கூடாது என்பதை நீங்கள் நிச்சயம் ஒப்புக்கொள்வீர்கள் என்று நம்புகிறேன்.

## கல்வியும் சமயமும்

கல்வித் துறையில் நமது பெண்சமூகம் மிக வேகமாக முன்னேறிவிட்டது உண்மைதான். ஆனல், சமயத்துறையில் கேள்வியோடு நின்றுவிடலாமா?

கல்வித் துறையோடு, சமயத் துறையிலும் பெண்மை மணம் கமழ்ந்தால்தான் மனித குலம் ஈடேற வழி உண்டு. புராண இதிகாச காலமுதல் பாரதத்தில் அம் மணம் பரவியே இருந்தது! இன்றும் ஓரளவு இருக்கத்தான் செய்கிறது. இதை ஏன் இங்கு இவ்வளவு விவரிக்கிறேன் என்ருல், சமயத் துறைக்கும் தங்களுக்கும் தொடர்பு இல்லை—அது தமக்கு அப்பாற்பட்ட செய்தி என்று கருதிச் சில பெண்கள் தங்கள் வாழுளை வீணாக்கி வருகிருர்கள்; அதிலும், இல்வாழ்க்கை யில் இதற்கு இடமில்லை யென்றே முடிவு கட்டிவிட்டார்கள். என்னே இவர்தம் அறியாமை?

## காரைக்கால் அம்மையார்

பேசப் பெரிதும் இனியாஞகிய பிரானுக்கு அன்பு செலுத் தப் பெண்ணுக்குத் தகுதி இல்லை என்று, பெண்ணே நினைக்கும் இழிநிலை, ஆண்டவன் அடியினை வேண்டி அழகை வெறுத்து, அவன் சீர்பாடி, அத்தன் திருவாயால் "அம்மையே"! என் றழைக்கும் பேறுபெற்ற காரைக்கால் அம்மை தோன்றியருளிய இந்நாட்டில் வேரூன்ற வேண்டுமா?

இந்து மதத்தின் சிறப்பினை அமெரிக்க மக்களுக்கு அன்று உணர்த்திய அருளியல் வீரர் விவேகானந்த அடிகள் கூறு வதைக் கேளுங்கள்.

"உயரிய வாழ்வியல் விதிகளைக் கண்டறிந்தவர்களை முனி வர்கள் என்கிருேம்; அவர்களை முழு நிறைவு பெற்றவர்களாகப் போற்றுகின்ருேம். அத்தகையவர்களுள், மிக்க பெருமை வாய்ந்தவர்களிற் சிலர் பெண்களாவர் என்பதை நான் இப் பேரவையினருக்கு மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறேன்."

இச் சான்ருேரின் மணிமொழி நம் எல்லோர்க்கும் வழி காட்டும் ஒளி விளக்காகுக!

உடன்பிறப்பினர்களே! இன்று இங்குப் பேசப் போகும் சைவ மங்கையர் அனைவரும் வாழ்வின் பல கோணத்திலிருந்து,

சைவ சமயத்தைப் பார்க்கப் போகிறார்கள். இந்த மகா நாட்டிலிருந்து ஒரு சிலரின் சாரமற்ற ஐயப்பாடும் அறவே நீங்கிவிடும்.

**மனித வாழ்வில் சமயம்**

பொதுவாக, 'மனித வாழ்வில் சமயம் எதற்கு?' என்ற மனப்பான்மை நம்மிடையே பரவி வருவது வருந்தத் தக்கது. சமய நெறி, மக்கள் வாழ்க்கையில் தெய்வ அருளைக்காட்டித் திருநெறிக்கு அழைத்துச் செல்கிறது. இந்த நெறி நமக்கே உரியது மட்டும் அன்று. இதிலிருந்து நாம் வழுவக்கூடாது; நமது வருங்காலத் தோன்றல்களையும் வழுவவிடக் கூடாது. இன்றைய சூழ்நிலையில், நம் தோன்றல்கள் வழுவுவதற்கே வாய்ப்புக்கள் காத்திருக்கின்றன.

**இளமையிற் சமயம்**

"இளமையிற்கல்" என்ற முதுமொழிக் கேற்பச் சமய உணர்வும் இளம் உள்ளத்திலேயே பதியப்பெறவேண்டும். அன்று, பாலோடு, படிப்போடு, கதையோடு, கண்வளரச் செய்யும் இசையோடு, அந்நிலை வளர இடம் இருந்தது. இன்று எல்லாமே இறக்குமதிச் சரக்காகிவிட்டது. அதனால் முதலுக்கே முட்டுப்பாடு ஆகிவிட்டது. இந்நிலைக்கு யார் பொறுப்பாளி கள்? ஐயம் என்ன? நாம் தான்!

இளமையில் நட்டவித்து எத்தகைய பலனைக் கொடுக்கும் என்பதற்கு,

"பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாங் காதல்
சிறந்துநின் சேவடியே சேர்ந்தேன்."

என்ற காரைக்கால் அம்மையாரின் அருள்மொழி ஊன்றி நோக்கத்தக்கது. மேலும், இராம கிருஷ்ண பரம ஹம்சரும் அதனைக் கீழ்வருமாறு விளக்குகிறார் அழகாக:

"முற்றாத மூங்கிலை எளிதில் வளைக்கலாம். முற்றின மூங்கிலைப் பலவந்தமாக வளைக்க முயன்றால் ஒடிந்துபோகும். அது போல, இளமையான மனத்தை இறைவனிடம் செல்லும்படி திருப்புவது எளிது. வயது முதிர்ந்தவனுடைய பழக்கப்படாத மனமோ அப்படித் திருப்ப முயலும் போதெல்லாம் பிடியை மீறிச் செல்லும்."

### அருள் நெறி

இன்று நாமும் நம் வழியினரும் அறிவியலிலே, ஆற்றலிலே, பொருளறிவிலே பேரளவு வளர்ந்து இருக்கிறோம் என்பதை யாரும் மறுக்கமுடியாது. ஆனால், அத்தனைக்கும் வித்தான, அரிய பிறவியின் பயனான அருள்நெறியிலே வளர்ந்திருக்கிறோமா? வளர உறுதி கொண்டுவிட்டோம்! என்பது தானே உங்கள் பதில். நல்லது ஒன்று சொல்ல ஆசைப் படுகிறேன்.

அருள் நெறியும், சமய உணர்வும் நம்மோடு நின்றுவிடக் கூடாது. அதில் நம் சமயம் வளர்ச்சி பெறவும் முடியாது. எங்கெல்லாம் ஓலக்குரல் எழுகிறதோ, எந்த உயிர் நம் அன்புக் காணிக்கையை எதிர் பார்க்கிறதோ, அங்கெல்லாம் நமது சமய சேவையின் முத்திரை பதியவேண்டும்.

இந்த அடிப்படையில் அறங்காத்து, அருஞ்சமயத்தைப் பேணி, அருள்நெறியைத் தங்களுக்கு உரிமையாக்கிக்கொண்ட பெருமை சைவ மங்கையர்க்கு உண்டு. இதிலே குறிப்பிடத் தக்க புகழுக்கு உரிய பெண் திலகங்கள் திலகவதியாரும், மங்கையர்க்கரசியாரும் என்னலாம்.

### திலகவதியார் திறம்

பெண்மையின் இயல்பு, எப்போதும் பிறருக்காகத் தன் அன்பை, தன் நலத்தை—ஏன்? தன் வாழ்வின் பெரும் பகுதியைத் தியாகம் செய்வது தான். தியாகத்தைத் தொழிலாகக் கொண்ட அவர்களின் அருள் மனம், அன்பு உள்ளம், பிறர் வாழ்வைப் பெரிதாக்குகிறது; தன் உரிமையையும் பறி கொடுக்கத் துணிந்து விடுகிறது. அப்படித் திலகவதியாரின் தியாகத்தால் கிடைத்ததுதான் "அப்பர்" எனும் நல்முத்து. "அவனருளாலே அவன் தாள் வணங்கி" என்றதுபோல, அவ் வன்னையின் அருள் அப்பரைத் தந்தது சைவ உலகிற்கு. இதை,

"தம்பியார் உளராக வேண்டுமென வைத்ததயா
உம்பருலகு அணையவுறும் நிலைவிலக்க உயிர்தாங்கி
அம்பொன்மணி நூல்தாங்காது அனைத்துயிர்க்கும்
அருள் தாங்கி
இம்பர்மனைத் தவம்புரிந்து திலகவதி யார்இருந்தார்."

என்று சேக்கிழார் பெருமான் அழகுறக் கூறியுள்ளார்.

தம்பியர்க்காக உயிர் தாங்கி, அவ்வழியால் அனைத்துயிர்க்கும் அருள் தாங்கிய அவர் தம் சீரிய தவம், நம் மங்கையர் உலகிற்கே ஒரு சிறப்பல்லவா? அதோடு,

"நிலைபெறுமாறு எண்ணுதியேல் நெஞ்சே நீவா,
நித்தலும்எம் பிரானுடைய கோயில் புக்குப்
புலர்வதன்முன் அலகிட்டு மெழுக்கு மிட்டுப்
பூமாலை புனைந்தேத்திப் புகழ்ந்து பாடித்
தலையாரக் கும்பிட்டுக் கூத்து மாடிச்
சங்கரா சயபோற்றி போற்றி என்றும்
அலைபுனல்சேர் செஞ்சடைஎம் ஆதீ என்றும்
ஆரூரா என்றென்றே அலறு நில்லே"

என்று அப்பரைப் பாடவைத்த பெருமையும் அவரைச் சார்ந்தது தான். அப்பர் பெருமானின் அடைபட்ட நெஞ்சின் திறவு கோலாய்த் திகழ்ந்தவரும் நம் திலகவதியாரே!

## மங்கையர்க்கரசியார்

திலகவதியாரால் நமக்கொரு அப்பர் கிடைத்தாரென்றால், மங்கையர்க்குத் தனி அரசி வளவர்கோன் பாவையால் பாண்டிய நாட்டில் நமது சமயமே பிழைத்திருக்கிறது. மதி இழந்த மன்னனையும் மக்களையும், எவ்வளவு பக்குவமாகப் பிற நெறியினின்றும் மீட்டார் அப்பாவை நல்லார் என்பதை, நம் சைவப் பெண்ணுலகம் சற்றே சிந்திக்குமானால், சமயத் துறைக்குத் தன் பங்கைச் செலுத்தத் தயங்கி நிற்காது.

## பிள்ளைகட்குப் பயிற்சி

பேரன்பர்களே! சமய வளர்ச்சிக்கு நாம் செய்யவேண்டிய தொண்டுகள் எத்தனையோ உள்ளன. அவற்றுள் முதலாவதாக உள்ள பணி நம் இளஞ்சிறார்களுக்குத் தேனினுமினிய தீஞ்சுவை மிக்க தேவார, திருவாசகப் பாடல்களை நாளும் ஊட்டவேண்டும். இன்று நம்மிடையே உள்ள தருமபுர ஆதீனம் இப்பணியைச் செய்து வருகிறது. ஒவ்வொரு பள்ளியிலும் இதற்கென வகுப்பு ஒன்று துவக்கவேண்டும். இப்போது ஒரு சில பள்ளிகளில் தேவார வகுப்பு இருப்பது தெரி

கிறது. ஆனால் மக்கள் அதனைத் தக்க முறையில் பயன் படுத்திக் கொள்வதாகத் தெரியவில்லை.

சமய உணர்வை, அருள் நெறியைக் குழந்தைகள் உள்ளத்தில் ஊட்ட இது துணைபுரியும் என்பதில் ஐயமில்லை.

பாடிய வாய் தேனூறும் தெய்வப் பாடல்களைப் பாடுவதே அரிதாகி வருகிறது இன்று. "வாயினால் பாடி மனத்தினால் சிந்தித்தாலே" போதும் என்கிறாள் சூடிக்கொடுத்த சுடர்க் கொடி—ஆண்டாள்.

"பாடாத நாவும் பணியாத சென்னியும்
பாவித்து அன்பாய்
நாடாத உள்ளமும் நான்படைத்
தால்நரகு ஏழும் சென்று
கூடாது உயர்கதி கூடுவனோ?"

என்றேங்குகிறார், உடலுறுப்புக்களால் ஆய பயனை அறிந்த அடியார் ஒருவர்.

## முடிவுரை

சைவ மணங்கமழும் சகோதரிகளே! ஆண்டுக்கு ஒரு முறை நாம் அனைவரும் கூடி அன்புடன் பேசி மகிழ்வது இருக் கட்டும். இனி நம் முன்னுள்ளது பணி ஒன்றே! வாருங்கள்! அருட்பணிக்கு நாம் ஆளாவோம்! சமயப் பணியும், தெய்வ நெறியும் தேசமெலாம் பரவும் வகை செய்வோம்!

மாறி நின்ற மயக்கறுத்து இடர் நீக்கிச் சுடர் விளக்கேற்றிய தெய்வப் பாவையின் திரு அடிகளைப் போற்றி, என் சிற் றுரையை முடித்து, இம்மா நாட்டைத் திறந்து வைக்கிறேன்.

"மங்கையர்க்குத் தனிஅரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மாற் போற்ற லாமே."

**வளர்க சைவ நெறி! வாழ்க உலகெலாம்!**

## தலைமையுரை



திருவாட்டி. சௌந்தரம் கைலாசம் அவர்கள்

மதிப்பிற்கும் பெருமைக்கும் உரிய பெரியோர்களுக்கும் நண்பர்களுக்கும் வணக்கம்!

இந்த மாநாட்டில் வந்து கலந்துகொண்டு பேசுகின்ற பெருவாய்ப்பினை அளித்த பெரியோர்களுக்கு என் மகிழ்ச்சியையும் உளங்கனிந்த நன்றியையும் தெரிவித்துக்கொள்கிறேன்.

### திட்டம் தீட்டுக

ஒவ்வோர் ஆண்டும் சைவ சித்தாந்த மாநாடு மிகச் சிறந்த முறையிலே நடத்தப்படுகிறது. சென்ற ஆண்டு சிறப்புற நடத்திவிட்டு அதுபற்றி எண்ணி மகிழ்ந்துகொண்டிருப்பதற்குள் ஓராண்டு உருண்டோடிவிட்டது. ஓராண்டு உருண்டோடி

விட்டது என்று சொன்னால், வாழ்வின் ஒரு பகுதி உருண்டோடி மறைந்துவிட்டது என்பதுதான் பொருள். "அரிதரிது மானிடராய்ப் பிறத்தல் அரிது" என்று ஔவையார் சொன்னரே, அந்த மனிதப்பிறவியின் அருமை நிறைந்த வாழ்க்கையிலே ஒரு பகுதி கழிந்தது என்று பொருள். எனவே, ஓராண்டுக் காலத்தில் எப்படி வாழ்ந்தோம்? நல்ல முறையிலே வாழ்ந்தோமா? இல்லையெனில், எங்கெங்கே எந்தெந்தச் சூழ்நிலையில் வாழவேண்டிய நெறியினின்றும் வழுவினோம் என்றெல்லாம் எண்ணிப் பார்த்து, இந்த ஆண்டு நாம் எப்படி வாழ்வை அமைத்துக்கொள்ள வேண்டும் என்று திட்டம் தீட்டிக்கொள்வதற்கான நல்லதொரு வாய்ப்பு இன்று நமக்குக் கிடைத்திருக்கிறது.

## மனிதப்பிறவியின் மாண்பு

எப்படியோ வாழ்ந்து முடிவது என்பது அன்று, மனிதனுடைய வாழ்க்கை. இப்படி இப்படி வாழவேண்டும் என்ற குறிக்கோளோடு இயங்குகின்ற வாழ்க்கை மனிதனுடைய வாழ்க்கை. உயிர் உய்வதற்கான வாய்ப்புள்ள வாழ்கை மனிதனுடைய வாழ்க்கை. ஆசையிலே அழுந்தி அழுந்தி அல்லலுற்று யோசிக்கும் வேளையில் உண்பதுவும் உறங்குவதுமாய் முடிவதன்று மனிதனுடைய இலட்சியம். அல்லற்பிறவி அறுத்துப் பேரானந்தப் பெருவெள்ளத்திலே மூழ்கித் திளைப்பதற்குத்தான் மனிதப்பிறவியே தவிரப் பொருள்ல்லவற்றைப் பொருளென்றுணரும் மருளால், பிறவிப் பெருங்கடலில் அழுந்திக் கிடப்பதற்காக அன்று. தீராத ஆசையிலே மாருத கவலைக்கிடங்கொடுத்து மயங்குவதன்று மனிதனின் குறிக்கோள்.

குறள் குரல் கொடுக்கிறது,

"நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்
பெருமை யுடைத்திவ் வுலகு".

நேற்று இருந்தவன் இன்று இல்லை. இதுதான் இந்த உலகின் பெருமை. மண்ணில் தோன்றிய மனிதர்கள் எல்லோருமே ஒருநாள் மறைய வேண்டுபவர்களே. எவ்வளவு காலம் வாழ்ந்தான் என்பதிலே அல்ல, எப்படி வாழ்ந்தான் என்பதிலே தான் மனிதவாழ்வின் பெருமை இருக்கிறது. பசித்துப் புசிப்

பதும், படுத்து உறங்குவதும் மட்டுமல்ல மனித வாழ்க்கை; பிறவிப் பெருங்கடல் நீந்தும் பெருவாய்ப்புள்ள வாழ்க்கை மனிதனுடைய வாழ்க்கை என்பதை உணரவேண்டும். பிறவியைப் பெரியதொரு துன்பம் என்று பேசுகிறோம். என்றாலும் தேவாரம் சொல்லுகிறது மனிதப்பிறவி தேவைதான் என்று!

"குனித்த புருவமும் கொவ்வைச்செவ் வாயிற் குமிண்சிரிப்பும்,
பனித்த சடையும் பவளம்போல் மேனியில்பால் வெண்ணீறும்,
இனித்த முடன்எடுத்தபொற்பாதமும் காணப்பெற்றால்,
மனித்தப் பிறவியும் வேண்டுவ தேஇந்த மாநிலத்தே"

எனவே, மானிடப் பிறவியின் மகத்துவமெல்லாம் மனம் மொழி மெய்யால் தனக்குவமை இல்லாதான் தாளை நினைந்துருகி மனக்கவலை மாற்றி மகிழ்வதிலேதான் இருக்கிறது. மனித வாழ்வின் மாண்பெல்லாம் மற்ற விலங்குகள் பறவைகளைப் போல் யோசிக்கும் வேளையில் உண்பதுவும் உறங்குவதுமாய் முடிவதிலே யின்றி, தனியொரு முதலைநாடி பிறவிப்பெருந் துயரைத் தவிர்த்துக்கொள்வதிலேதான் இருக்கிறது. "ஒன்றதாய்ப்பலவாய் உயிர்த்திரட்கெலாமுறுதி என்றதாய் என்றும் உள்ளதாய் எவற்றினுமிசைய நின்றதாய் நிலைநின்றிடு மறிஞ! என்னெஞ்ச மன்றதாயின்ப வுருக்கொடு நடித்திடின் வாழ்வேன்" என்று தாயுமானவர் கூறுகிறார். எச்சரிக்கிறார் மணிவாசகர்! "வாழ்கின்றாய் வாழாத நெஞ்சமே! வல்வினைப்பட்டு ஆழ்கின்றாய், ஆழாமல் காப்பானை ஏத்தாதே சூழ்கின்றாய், கேடுனக்குக் சொல்கின்றேன் பல்காலும் வீழ்கின்றாய் நீ அவலக் கடலாய வெள்ளத்தே". எனவே, "காதலாகிக் கசிந்து கண்ணீர்மல்கி ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது நாதன் நாமம் நமச்சிவாயவே" என்பதை நான் தெளிவாக உணர்கிறேன். உறுதியாக நம்புகிறேன்.

### பேரின்பம்

நில்லாதவற்றை நிலையானவை என்று உணரும் புல்லறிவால் தடுமாறுவது அன்று, போற்றுவதற்குரிய வாழ்க்கை முறை! இப்படி நான் சொல்வதனாலே உலக வாழ்வு இன்பமற்றது என்று கூறுவதாக எண்ணிவிடக் கூடாது. இறைவனாலே இயங்குகின்ற உலகம் இன்பமற்றது என்று யாரராலே கூறமுடியும்? உலக வாழ்வு இன்பமுள்ளதுதான்!

ஆனால் அது அழிவற்ற இன்பமென்று—முடிவான இன்ப மென்று சொல்ல முடியாது. வானாகி மண்ணாகி வளியாகி ஒளி ஆகி ஊனாகி உயிராகி உண்மையுமாய் இன்மையுமாய்க் கோனாகி யான் எனது என்று அவரவரைக் கூத்தாட்டும் குமிழ்சிரிப்புக் கோமானை நினைந்துருகி, நெஞ்சம் பெறும் இன்பமிருக்கிறதே. அஃது எல்லையற்றது—இணையற்றது—அழிவற்றது. அதனாலே தான் அதைப் பேரின்பம் என்று பிரித்தும், பெருமைப்படுத்தி யும் பேசுகிறோம்.

## பேரின்பப் பாடல்கள்

மணமுள்ள அழகான ஒரு மலர்க்காடு. வண்ணமலர்க் குலம் தேனீயை வாவா என்று கூவாமல் கூவி அழைக்கிறது. தேன் பொங்கும் நறுமலரைத் தேடி ஓடி வருகிறது தேனீ ஒன்று. அந்தத் தேனீயை அழைத்துப் பேசுகிறது திருவாசகம்.

*“ தினைத்தனை உள்ளது ஓர் பூவினில் தேனுண்ணாதே,*
*நினைத்தொறும் காண்தொறும் பேசுந்தொறும் எப்போதும்*
*அனைத்தெலும்பு உள்நெக ஆனந்தத்தேன் சொரியும்*
*குனிப்புடை யானுக்கே சென்றூதாய் கோத்தும்பீ !”*

மணிவாசகர் இதைத் தும்பிக்குச் சொல்வதைப்போல மனித சமுதாயத்திற்குத்தான் சொல்கிறார். ஆர்த்த பிறவித் துயர்கெட நாம் ஆர்த்தாடும் தீர்த்தனை—நற்றில்லைச் சிற்றம் பலத்தே தீஆடும் கூத்தனை நாத்தழும்பேற ஏத்தி மகிழ்கின்ற வாழ்வுதான் வாழ்வு. நெஞ்சகத்தே கூத்தன் நிலையுற்ற வாழ்வு தான், குறைவற்ற வாழ்வு—நிறைவுற்ற வாழ்வு. இதை நாம் நன்றாக உணர்ந்துகொள்ளவேண்டும். இறைவனின் பெருமை களை இதயத்துக்கு உணர்த்தும் பாடல்கள்—இறைவன்பால் நம்மை ஈடுபடுத்தும் பாடல்கள்—பக்திச்சுவை நனிசொட்டச் சொட்டப் பாடியுள்ள பாடல்கள்—பரம்பொருளை உருகிப் பருக வைக்கும் பாடல்கள் பைந்தமிழில் மிகப் பலவாயிருக்கின்றன.

வையத்துள் வாழ்வாங்கு வாழ வானுறையும் தெய்வத்தை நாடத் தூண்டிவிட்டுத் துணைபுரியும் நூற்கள் செந்தமிழில் மிகப் பலவாகும். தெள்ளுதமிழ்த் தேனமுத வெள்ளமெனத் திரண்டுவரும் தேவாரம், திருப்புகழ், திருவாய்மொழி,

தெய்வ வள்ளுவன் செய்த வான்மறை, கடையூழி வரும் தனிமை கழிக்கவென்று கடவுள் தம் கையிலுள்ள திருவாசகம் மட்டுமல்ல, இன்னும் எத்தனை எத்தனையோ இருக்கின்றன செந் தமிழில். நம்மை எச்சரித்து நல்வாழ்விற்கு வழிகாட்டும் கவிக் குயில்கள் தமிழ்ச்சோலையிலே ஒன்று அல்ல, இரண்டு அல்ல, மிகப் பல. தவறான பாதையிலே செல்லும் சமுதாயத்தைத் தடுத்தாட் கொள்ளக் காத்திருக்கும் பெரியோர்களுக்குத் தமிழுலகில் கணக்கே இல்லை. இத்தனையும் இங்கிருந்தும் பக்திக்குப் பஞ்சமென்றால் மெத்த இழுக்கன்றோ? மேன்மைக் குறைவன்றோ? உள்ளமெல்லாம் வேதனையின் வெள்ளமன்றோ ஏறிவரும்? மலைமலையாய் இலக்கியங்கள் மாயப் பிறப்பறுக்கும் மன்னன் மேல் குவித்துவிட்டு, இவை மறந்து நிலைகுலைந்து நிற்பதெனில் நீணிலத்தில் அது பெரிய நிந்தையன்றோ? வளர்ந் துள்ள பெரியோரும் வருங்காலப் பெரியோரும் தளர்ந்துவிடத் தேவையில்லை. தக்கமுறையிலே செயற்படுவோம் என்று உறுதி கூறுகிறோம்.

## வாழ்வின் குறிக்கோள்

முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொருளின், பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனின் திருப்புகழை இன்றுபோல் என்றும் பரப்புவோம். இங்குப் போல் எங்கும் பரப்புவோம். நல்லோர்களுடைய துணையோடு—பெரியோர் களுடைய ஆசியோடு—இறைவனின் அருளோடு இந்த ஆண்டும் இனியும் நல்வாழ்வு வாழ உறுதி எடுத்துக் கொள் வோம். விஞ்ஞானத்துறையிலே வேகமாக நடைபோடும் வியனுலகில், அஞ்ஞானந்தன்னை அகல்விக்கும் நல்லறிவை—மெய்ஞ்ஞானமாகி மிளிர்கின்ற மெய்ச்சுடரை, சொல்லற்கரியா னைச் சொல்லி அல்லற்பிறவி அறுத்திடுவோம். உதவாதினி ஒரு தாமதம் என்று உடனே விழித்தெழுந்து கண்சுமந்த நெற்றிக் கடவுளின்—கலிமதுரை மண்சுமந்து கூலிகொண்டு அக் கோவால் மொத்துண்டு புண்சுமந்த பொன்மேனியனின்-திருவடிக்கே அகங் குழைவோம்! அன்புறுவோம்! பூமாலை புனைந்தேத்துவோம்! புகழ்ந்துரைப்போம். நல்லதொரு பரி பக்குவத்தை நாம் அடைந்தே ஆதல் வேண்டும்.

## இதுதான் நம் வாழ்வின் குறிக்கோள்

இந்தக் குறிக்கோள் ஈடேறவேண்டும் என்னும் பெரு நோக்கம் காரணமாகத்தான்—இதுபோன்ற மாநாடுகள் இதற்குத் துணைபுரியும் என்னும் நம்பிக்கையில்தான்-பெரியோர்கள் ஆண்டுதோறும் கூட்டங்கள் கூட்டிப் பெரியோர்கள் ஆவன செய்யப் பாடுபடுகிறார்கள். இதுபோன்ற மாநாடுகள் நடைபெறுவதின் வாயிலாக அந்தக் குறிக்கோள் நிறைவேற வழிவகைகள் செய்யப்படுகின்றன. எப்பொழுதும் இறைவனைப் பற்றியே எண்ண முடியாவிட்டாலும், இதுபோன்ற கூட்டங்கள் நடைபெறுகின்றபொழுதேனும், நெஞ்சார இறைவனை நினைக்க வேண்டும் என்னும் எண்ணம் உள்ளத்தில் எழும் என்ற ஆசையின் அடிப்படையிலேதான், ஆண்டுதோறும் மாநாடு நடத்தப்படுகிறது என்று நம்புகிறேன். பார்க்குமிடமெங்குமொரு நீக்கமற நிறைகின்ற பரிபூரணானந்தனைப் பணிந்தேத்த வேண்டும் பக்திப் பரவசத்தோடு. அப்போது பணம் தர முடியாத அமைதியினைப் பக்தி எவ்வளவு எளிதாகத் தருகிறது என்பதை நாம் நன்கு புரிந்துகொள்வோம்.

**நாதன் தாள் வாழ்க !**

**வணக்கம்.**

# வீட்டமைப்பில் சைவம்



**(திருவாட்டி. ஜெயகுமாரி பாஸ்கரன் அவர்கள், சென்னை)**

அறிஞர் பெருமக்களே! தாய்ச் செல்வங்களே!

வணக்கம். அறிஞர்கள் கூடிய இந்த அவையின்கண் சைவ சமயத்தை இல்லற வாழ்வில் கையாளும் நிலையைப் பற்றிப் பேசுவதற்கு வாய்ப்பளித்த சைவ சித்தாந்த சமாசத்திற்கு என் இதயங்கனிந்த நன்றி.

“அல்லல் என்செயும்? அருவினை என்செயும்?
தொல்லை வல்வினைத் தொந்தம்தான் என்செயும்?
தில்லை மாநகர்ச் சிற்றம் பலவனார்க்(கு)
எல்லை இல்லதோர் அடிமை பூண்டேனுக்கே”

என்று நாவுக்கரசரால் துதிப்பாடல் பெற்ற சிவபெருமானது பெருமையை உலகுக்கு எடுத்துக்காட்டும் மதம்தான் சைவம்.

## சைவத்தின் பழமை

பண்டைக்காலம் முதல் கி. பி. 13-ஆம் நூற்றுண்டு வரையில் சைவம் வளர்ந்ததும், பின் சிறிதளவில் மறையத் துவங்கியதும் வரலாற்று ஆசிரியர்களால் குறிப்பதற்குரியவை. இந்தியாவின் மிகப் பழைய நாகரிக நகரங்கள் என்று ஆராய்ச்சியாளரால் கூறப்படும் மொகொஞ்சோதாரோ, ஹாரப்பா முதலிய இடங்களில் 600-க்கு மேற்பட்ட சிவலிங்கங்கள் கிடைத்துள்ளன. சிந்து வெளியிலும், மற்றும் வட இந்தியாவிற் பற்பல இடங்களிலும் கிடைத்துள்ளன. இவை அனைத்தையும் ஒன்றுபடுத்திய சர் ஜான் மார்ஷல் என்ற அறிஞர், சைவசமயம் 'மாக்கல் காலம்' அல்லது அதற்கு முற்பட்ட காலம் முதல், இன்றளவும் உள்ள மிகப் பழமையான சமயம் என்று எடுத்துக் காட்டியுள்ளார். சங்க காலத்திலும் 'ஆலமர் செல்வன்' 'முக்கண்ணன்' என்ற பெயர்களால் அழைக்கப்பட்ட சிவ பிரானே சிலப்பதிகாரத்திலும், மணிமேகலையிலும் முதலிடம் பெற்றிருக்கிருர். முதற் பல்லவர் காலத்திலும், கோச்செங்கட் சோழன் ஏறத்தாழ எழுபது சிவன் கோவில்களைக் கட்டினுன் என்று வரலாறு கூறுகிறது.

## சைவத்தின் சீரழிவுக்குக் காரணம்

இவ்வாறு சோழர் ஆட்சியிலும், பல்லவர் ஆட்சியிலும் செழித்தோங்கிய சைவத்தினுள் சாதிவேறுபாடு தோன்றி வளர்ந்து வயிரம் பாய்ந்துவிட்டது. கி. பி. 14-ம் நூற்றுண்டின் தொடக்கத்திலிருந்து மூடக் கொள்கைகளாலும், சாதிவெறியினுலும், சமய வெறியினுலும் சைவம் தன் ஆற்றலை இழந்து எதிரிக்குப் பணிந்தது.

இவ்வித காரணங்களால், சைவ மதத்தைச் சொல்லிப் பிழைப்பவரும் பலராகிவிட்டனர். "அன்பே சிவம்" என்ற கொள்கை புதைக்கப்பட்டு, அதன்மீது அறிவுக்குப் பொருத்தமற்ற கதைகள் கட்டப்பட்டன. இக்கேட்டினுல் பெரும்பாலான சைவமக்கள் திருநீறணிவதோடு அமைந்தனர். கல்விச் செருக்காலும், செல்வச் செருக்காலும் சைவர் பலர் தம் சமயத்தைச் சேர்ந்த பலருடன் பழகுவது இல்லை.

### அப்பரடிகள் கண்டனம்

திருநீறணிந்தும் உள்ளத்தில் பல தீய எண்ணங்களை உலவவிடும் வேடதாரிகளை, அப்பர் சுவாமிகள் வன்மையாகக் கண்டிக்கிறார்.

“ விறகில் தீயினன்; பாலில் படுநெய்போல்
மறைய நின்றுளன் ; மாமணிச் சோதியான்
உறவுகோல் நட்டு உணர்வு கயிற்றினால்
முறுக வாங்கிக் கடையமுன் நிற்குமே!”

என்றபடி, சிவநேசர்கள் அன்பினால் காணக்கூடிய அருட் பெருஞ்சோதியை அறிவிலிகள்,

“ உள்ளத்தே நிற்றியேனும், உயிர்ப்புளே வருதியேனும்
கள்ளத்தே நிற்றி அம்மா ! எங்ஙனம் காணுமாறே ?”

என்று பரிதவிக்கிறார்களே ! என்பதற்காக அப்பர் வருந்துகிறார்.

“ கங்கை ஆடிலென் ; காவிரி ஆடிலென் ;
கொங்கு தண்கும ரித்துறை ஆடிலென் ;
ஓங்கு மாகடல் ஓதநீர் ஆடிலென் ;
எங்கும் ஈசன் எனாதவர்க் கில்லையே ”

கங்கையிலும், காவிரியிலும், கன்னியாகுமரியிலும்தானா ஈசுவரன் இருக்கிறான் ? கடவுள் இல்லாத இடமில்லை என்ற உண்மையை உணர்ந்து ஒழுகினால் மோசத்திற்கு இடமேது ?

“ சாத்திரம் பலபேசும் சழக்கர்காள் !
கோத்திரமும் குலமும் கொண்டு என் செய்வீர் ?”

என்று வினவுகிறார்.

“ கோலும், புல்லும், கையில் கூர்ச்சமும்
தோலும் பூண்டு, துயரம் உற்(று) என்பயன் ?
நீல மாமயி லாடு துறையனே !
நூலும் வேண்டுமோ நுண்உணர்ந் தோர்கட்கே ?”

என்று பாடிக் குலங் கோத்திரங்களையும், சாத்திரங்களையும் கொண்டு பெருமை பேசும் சாதித் திமிரைக் கண்டிக்கிறார்.

### திலகவதியார் சிறப்பு

சைவ மதத்தை வளர்க்கப் பாடுபட்டவர்களில் பல பெண் மணிகளுக்கும் இடமுண்டு. அத்தகைய சைவப் பெண்மணி

களின் திலகமென்று போற்றக்கூடியவர், அக்காலத்து அரசனும் பிறரும் திருந்தும்படி உபதேசங்கள் செய்த திருநாவுக்கரசரின் அன்புத் தமக்கை திலகவதியார் என்றால், அவர் பெருமை எத்தகையது!

## வரலாறு

ஒழுக்கங்களில் சிறந்த வேளாளர் குடும்பத்தில் பிறந்த திலகவதி 'மருள் நீக்கி' என்பாரைத் தம் இளவலாகப் பெற்றிருந்தார். இருவரும் ஒன்றுபட்ட மனத்துடன் உள்ளன்போடு சிவனை வணங்கினர். திலகவதியாரைக் கலிப்பகையார் என்ற வீரருக்கு மணமுடிக்க உறுதி பூண்ட நாளில், அரசன் ஆணைப்படி அவர் போருக்குச் சென்று அங்கு உயிர் துறந்தார்.

தந்தையையும் தாயையும் இழந்து பரிதவித்த திலகவதி, கலிப்பகையாரையே கணவனாகக் கருதி வேறு மணாளனை ஏற்கவில்லை. தனது இல்லத்தைச் சிவமயமாக, மாக்கோலம், வாயிற்படிகளுக்குத் திருநீறு குங்குமம் மஞ்சள் இவைகள் இட்டு விளங்கச் செய்து, எந்நேரமும் சிவபூசையிலேயே ஈடுபட்டிருந்தார்.

இவ்வமயத்தில் அவர் தம்பியார் 'தருமசேனர்' என்ற பட்டத்துடன் சமணமதத்தைத் தழுவி, சைவத்தைப் புறக் கணிக்க ஆரம்பித்தார். இதனால் மனவேதனை அடைந்த திலகவதியார் சிவபெருமானிடம் "இறைவனே! 'சிவமே அன்பு; அன்பே சிவம்; இரண்டும் ஒன்றே; வேறல்ல', என்றெல்லாம் சிவநேசர்கள் முழங்கிக் கொண்டிருக்க, இத்தகைய மதத்தில் இல்லாத மேன்மையையா என் தம்பி வேறொரு மதத்தில் தேடுகிறான்? ஐயனே! சைவக் குடும்பத்தில் பிறந்தும் அன்னிய மதத்தை நாடும் மனத்தை அவனுக்கு ஏன் அளித்தாய்? அவன் திருந்தும் நாள் எந்நாளோ? என்று எண்ணி எண்ணி மனம் புழுங்கினர்.

அவர் வேண்டுகோளுக்குச் செவிகொடுத்த அம்பலத்தரசன் தருமசேனருக்குச் சூலை நோயை உண்டாக்கவும், அதை எவ்வழியிலும் தீர்க்க இயலாமல் தவக்கொழுந்தாகிய தன் தமக்கையின் திருவடியை நாடினர். அம்மையாரின் கையிலிருந்து திருநீறு வாங்கி அணிந்து, ஈசனை வணங்கி ஒரு பதிகம் பாடி

ணர். இறைவன் அருளைப் பெற்றார். நோயும் நீங்கிற்று; தேவாரம் பாடினார். திருநாவுக்கரசராய் விளங்கினார்.

**காரைக்காலம்மையார் பெருமை**

சைவ சமயத்தை வளர்த்த அறுபத்து நான்கு நாயன்மார்களில் ஒருவராகக் காரைக்கால் அம்மையார் விளங்குகிறார். கணவனே கைகூப்பித் தொழும் அளவுக்கு அவர் சிறப்பு வாய்ந்தவர். சிறந்த செல்வக் குடும்பத்தில் பிறந்த அவர் இளவயதிலேயே சிவ பூசையில் ஈடுபட்டுச் சிவனடியார்களுக்கு அமுது படைப்பதில் ஆர்வங் கொண்டிருந்தார். இல்லற வாழ்வில் ஈடுபட்ட பிறகும் தன் இல்லத்தைச் சிவப் பொலிவு தோற்றும்படி செய்வித்துப் பசித்துவரும் சிவனடியார்களை உபசரித்து, உணவும் உடையும் அளித்து மகிழ்ந்து, சைவ சமயத்தின் கொழுந்தாக விளங்கினார். பின்பு இறைவன் அருளால் தன் கணவனுக்குக் கனிகள் வரவழைத்துத் தந்ததும், அதைக்கண்டு கணவன் அவரைத் தெய்வமாகத் தொழுது வெளியேறியதும் அனைவரும் அறிந்ததே.

பெருஞ் செல்வக்குடியில் பிறந்திருந்தும், செல்வத்துள் செல்வமாக வளர்ந்திருந்தும் உலகப் பொருள்களையாவது, உலக இன்பங்களையாவது அவர் காதலிக்கவில்லை. சிவனை அடைய வீட்டைத் துறந்து துறவறம் பூணவேண்டும் என்பதில்லை; இல்லறத்திலிருந்தே சிவனருளை அடையலாம் என்பதைத் தன் கணவனுக்குக் கனிகளை கடவுள் அருளால் வரவழைத்துத் தந்து நிறுவினார்.

கடவுளரும் கற்புடைய மங்கையரின் ஆணைக்குக் காத்திருப்பார் என்பது இத்தகைய இல்லத்தரசிகளின் வாழ்விலிருந்து புலப்படும் உண்மையாகும். மேலும் இவர் சிறந்த கல்வியறிவு படைத்தவர். சிறு வயதிலிருந்தே கல்வி கேள்விகளில் சிறந்து இருந்ததினாலும், தமது பக்தியினாலும் திருவாலங்காட்டு மூத்த திருப்பதிகங்கள், இரட்டை மணிமாலை, அற்புதத் திருவந்தாதி முதலியவைகளை இயற்றியுள்ளார்.

“ காலையே போன்றிலங்கும் மேனி; கடும்பகலின்
வேலையே போன்றிலங்கும் வெண்ணீறு—மாலையின்
தாங்(கு) உருவே போலும் சடைக்கற்றை; மற்றவற்கு
வீங்கிருளே போலும் மிடறு ”

என்ற அம்மையாரின் கவிதை நமக்கு அருள் சுமந்த திரு மேனியையும், அதன் தூய்மையையும் காட்டுகிறதல்லவா?

" அறிவானும் தானே, அறிவிப்பான் தானே,
அறிவாய் அறிகின்றான் தானே;—அறிகின்ற
மெய்ப்பொருளும் தானே விரிசுடர் ஆகாயம்
அப்பொருளும் தானே அவன்."

என்று அம்மையார் கூறிய இறைவனை, 'ஒரு நாமம் ஓருருவம் ஒன்றுமிலார்க்கு, ஆயிரம் திருநாமம் பாடி நாம் தெள்ளேணம் கொட்டாமோ" என்று பாடப் பெற்ற அருட்சோதியின் அருளைப் போற்றும் சைவ சமயத்தைப் பரப்பப் பற்பல சைவ மடங்களும் சங்கங்களும் தோன்றியுள்ளன.

## சைவ மங்கையர் கடன்

எந்தச் செயலைச் செய்து முடிப்பதென்றாலும், பெண்கள் துணையை நாடினால் அஃது எளிதில் முடியும். ஆதலால் இந்தச் சைவசமயக் கோட்பாடுகளை நாம் இல்லற வாழ்க்கையிலேயே கையாளவேண்டும். நமக்குப் பிறக்கும் குழந்தைகளுக்குச் சிறந்த சைவப் பெயர்களான சிவநெறிச் செல்வன், தேவாரச் செல்வன், நெடுமாறன், கண்ணப்பன், கழற்சிங்கன் போன்ற நாயனார் பெயர்களையும், திருமுறைகளில் வரும் அரும் பெயர்களையும் வைக்கவேண்டும். இவ்வாறே பெண் குழந்தைகளுக்குச் சிவ அரசி, மங்கையர்க்கரசி, திலகவதி, புனிதவதி ஆகிய பெயர்களை வைக்கலாம்.

## சைவர் வீட்டமைப்பு

தெருவில் போகும்போது பார்க்கிறவர்களுக்கு 'இது சைவர் வீடு' என்று தெரியும்படி மாக்கோலம், திருநீறு, மஞ்சள், குங்குமம் இட்டு விளங்கச் செய்யவேண்டும். திங்கள், வெள்ளி, கிருத்திகை, திருவாதிரை முதலிய நாட்களில் மாவிலை கட்டவேண்டும். செம்மண் இடுதலும் நலம். மாவிலை தூய்மை செய்யும்; செம்மண் பூச்சிகள் சேராது காக்கும்.

வீட்டிற்குள் அன்பையும், அறத்தையும், அறிவையும் உணர்த்தும் நல்ல படங்கள் மாட்டப்படவேண்டும். கீழ்த்தர உணர்வை உண்டாக்கும் சினிமாப் படங்கள் கூடா.

பூசை அறை இருத்தல் இன்றியமையாதது. வழிபாட்டுக்கு என்று ஒரு பூசை மாடமேனும் வேண்டும். இயலாதாயின் சுவரில் படங்களை மாட்டித் திரையிட்டு வைத்துக்கொள்ள வேண்டும். பிள்ளையார் பூசை அன்றாடம் செய்தல்வேண்டும். அதற்காக வீட்டில் இரண்டொரு பூச் செடிகளை வளர்க்கலாம்.

வீட்டை அடிக்கடி பசுச் சாணத்தால் மெழுகவும், சாப்பிட்டதும் அந்த இடத்தைச் சாணமிட்டுத் துடைக்கவும் வேண்டும். வெளியிலிருந்து வீட்டுக்குள் வந்தால் கால் கழுவாமல் உள்ளே போகக்கூடாது. அடுப்பங்கரையை அன்றாடம் சாணமிட்டு மெழுகிக் கோலமும் இடவேண்டும். நம் நெற்றியில் குளித்தவுடன் திருநீறணியவேண்டும். இவற்றிற்கும் சைவத்திற்கும் என்ன தொடர்பு என்று எண்ணலாகாது. சைவம் பரிசுத்தமானது. சைவர் வீடுகளும் தூய்மையாகத் துலங்கவேண்டாவா? ஆதலால் இக்கோட்பாடுகளை யெல்லாம் நாம் மேற்கொண்டு உலகின் மிகப் பழமையான சைவமதத்தைக் கண்ணின் கருமணி போற்காத்து வளர்க்கவேண்டும் என்று கேட்டுக்கொண்டு விடை பெறுகிறேன். வணக்கம்.

# சமையல் அறையில் சைவம்



திருவாட்டி புனிதவதி இளங்கோவன்

தலைவர் அவர்களே! தாய்மார்களே! சகோதரிகளே!

## சமையலறையின் சிறப்பு

"சமையல் அறையில் சைவம்" என்னும் பொருள்பற்றிப் பேசவேண்டும் நிலைமை ஏற்பட்டிருப்பது பற்றி மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். ஏனெனில், சமையல் அறைதான் உண்மையாகவே சமயத்தை வளர்க்கின்றது. சமையல் அறைதான் நாயன்மார் பலருக்கும் பெருமையைத் தேடித்தந்தது. இல்லத்தில் வாழ்வரசியாய் இருக்கும் பெண்மணியின் உயிர்நாடியான இடம் சமையலறைதான். தன் கணவனையும் தன் மக்களையும் உற்றார் உறவினரையும் உணவால் மகிழ்விக்கும் இடம் சமையலறையே யன்றோ?

"உண்டி முதற்றே உணவின் பிண்டம்"

என்பது நம் முன்னோர் வாக்கு. வெளி உலக வாழ்வில் ஈடுபட்டுப் பசியோடு வரும் கணவனை மனைவி சமைய

லறைக்குத்தான் பரிவோடு அழைத்துச் செல்வாள்; இங்ஙனமே பள்ளிக்குச் சென்று திரும்பும் தன் பிள்ளைகளையும் அத்தாய் சமையலறைக்குத்தான் அன்போடு அழைத்துச் செல்வாள்; தான் மிகுந்த கவனத்தோடு சமைத்த பொருள்களை அன்போடு தன் கணவனுக்கும் பிள்ளைகளுக்கும் படைப்பாள். "இன்று மிளகுச்சாறு மிகவும் நன்றாயிருக்கிறது. பொதுவாகவே பிற பொருள்களும் சுவையாக அமைந்துள்ளன" என்று கணவன் அன்போடு சொல்லும்போது, மனைவியின் முகம் மலர்ச்சியடைகிறது. "கத்தரிக்காய் கூட்டு நன்றாயிருக்கிறது. இன்னும் சிறிது வை, அம்மா," என்று பிள்ளை கேட்கும்போது, அத்தாயின் உள்ளம் பூரிக்கிறது. அவள் தனக்கென்று வைத்திருக்கும் கூட்டைப் பிள்ளைக்கு வைத்து மகிழ்வாள்.

மனைக்கு வந்த விருந்தினரை மகிழ்விக்கவும் சமையலறை உதவுகின்றது. மகளிர் ஆட்சி செலுத்துமிடம் முழு இல்லமாக இருப்பினும், அவ்வில்லத்தை வாழ்விப்பது சமையலறையேயாகும். வீட்டாரும், உற்றாரும், நண்பரும் ஆக எல்லோரையுமே பேருண்டியாலும் சிற்றுண்டியாலும் மகிழ்விக்கும் இடம் சமையலறையே எனலாம்.

## சமையலறையில் அன்பு (சிவம்)

இங்ஙனம் எல்லோரையும் இன்புறுத்துதற்கு அடிப்படையாக அமைவது யாது? அன்பேயாகும். அந்த அன்புதான் சிவம் என்று சொல்லப்படும். அந்த அன்பினால்தான் மனைவி பலமணிநேரம் அடுப்பின் நெருப்புக்கு முன்னிருந்து பொறுமையாகச் சமையல் செய்கிறாள்; குழம்பு வைப்பதிலும் ரசம் வைப்பதிலும் இவ்வாறே ஒவ்வொரு கறி சமைப்பதிலும் மிக்க கவனத்தோடு இருந்து இனிமையாகச் செய்கிறாள். அவற்றைக் கூட்டும்போது உப்பு, காரம் முதலியன பொருந்தியிருக்கின்றனவா என்பதை ஆவலோடு பரிசோதிக்கிறாள். தான், சமையலில் நற்பெயர் எடுக்கவேண்டுமே என்ற கவலை அவளை ஆட்டிப் படைக்கின்றது. இச் சமையலறைப் பேச்சு அவளது பெண்ணரசுக்கு அமைந்த சிறந்த அடிப்படை எனலாம்.

சமையல் தொழில் பெண்களுக்கே சிறப்பாக உரியதாயினும், அறிவுடைய ஆடவரும் அதில் அடிக்கடி பங்கு கொள்

வர். ஓய்வு நாட்களில் பல குடும்பங்களில் சமையலறையில் கணவர் இருந்து மனைவிக்கு வேண்டும் உதவிகள் செய்வர். கணவர் காய் நறுக்குவார்; மகன் வெங்காயம் அரிவான்; மகள் தேங்காய் அரைப்பாள்; எல்லோரும் மகிழ்ச்சியாகப் பேசிக்கொண்டே சமையல் வேலைகளைச் செய்வர். அன்று எல்லோர் முகங்களிலும் மகிழ்ச்சி துள்ளும். அன்பால் அனைவரும் கட்டுண்டு தத்தம் தொண்டுகளைச் செய்வர். இத்தகைய குடும்பங்கள் எம்மதத்தினவாயினும், அவையெல்லாம் சைவக் குடும்பங்களேயாகும். 'எங்கெல்லாம் அன்பு இருக்கின்றதோ, அங்கெல்லாம் சிவம் இருக்கின்றது'. எனவே, அன்பை வசப்படுத்தும் சமையலறை சிவ நெறியை வலுப்படுத்தும் கருவறையாகும்.

## நாயன்மாரும் சமையலறையும்

மழை கொட்டிக்கொண்டிருந்த நள்ளிரவில் சிவபெருமான் முதிய சிவனடியாராக இளையான் குடிமாறர் இல்லத்திற்கு வந்தார். வீட்டில் அரிசி இல்லை; நெல்லும் இல்லை. உடனே நாயனார் அன்று வயலில் விதைத்த நெல் மணிகளைப் பொறுக்க வயலுக்கு ஓடினார். அம்மையார் கொல்லையில் தாமாக முளைத்திருந்த கீரையைப் பறித்தார்; விறகு இல்லாததால் வீட்டின் கூரையில் ஒரு பகுதியைப் பிரித்து, அடுப்பை எரிக்கத் தொடங்கினார்; நாயனார் கொண்டுவந்திருந்த நெல்லைக் குற்றிச் சோறாக்கினார்; கறி அமுது படைத்தார்; அடியாரை உவப்போடு உண்பித்தார். இச்சமையலறைத் தொண்டினால்தான் சிவபெருமான் உள்ளம் நெகிழ்ந்தது. வந்த முதியவர் மாதொரு பாகனாகக் காட்சியளித்தார். இங்ஙனம் சமையலறைச் சைவமே இளையான்குடி மாறரை வாழ்வித்தது.

" வாளால் மகவரிந்து ஊட்ட வல்லேன் அல்லேன் " என்று பட்டினத்து அடிகள் வியந்து பாராட்டும் அளவிற்குச் சிறுத்தொண்டரை உயர்த்தியது சமையலறைச் சைவமேயாகும். தாம் பெற்ற ஒரே மைந்தனை அரிந்து கறி சமைக்க அம்மையார் உடன்பட்டார்; தம் மைந்தனைப் பிடித்துக் கொண்டார்; தந்தையார் மைந்தனை அரிந்தார். அம்மையாரும் பணிப்பெண்ணும் இருந்து சமைத்தனர். அவர்தம் சமையலறையின் மகத்துவத்தால்தான் சிறுத்தொண்ட நம்பி செயற்கரிய

செயலைச் செய்த பெரியோராகப் போற்றப்பட்டார். 'பிள்ளைக் கறி சமைக்க முடியாது' என்று வெண்காட்டு நங்கை வெறுப்புடன் கூறியிருந்தால், நாயனார் கதி யாதாகியிருக்கும்! சற்றே எண்ணிப் பாருங்கள். அவர் உத்தராபதியார் சாபத்திற்கு ஆளாகியிருத்தல் நேரிடும். அங்ஙனம் ஆகாமல் அவரை வாழ்வித்தது சமையலறைச் சைவம்தான்.

காரைக்கால் அம்மையார் சிவனடியாரை உண்பிக்கும் வழக்கமுடையவர். அவர் கணவர் இல்லாத பொழுதும் சிவனடியாரை வரவேற்று உண்பிக்கும் உரிமை பெற்றிருந்தார். அடியாரை உண்பித்த சிறப்பினால்தான் அம்மையார் தெய்வீகத் தன்மை பெற்றார் என்று அவரது வரலாறு கூறுகின்றது.

தம் வீடு தேடி வரும் அடியார்களின் பாதங்களைக் கணவன் விளக்க, மனைவியார் நீர் ஊற்றுவர்; பின்பு இலையைக் கழுவி அமுது படைப்பர்; அடியார் பலர் நாயன்மார் வீடுகளில் விருந்துண்பர். இங்ஙனம் பல நாள் விருந்துண்பர். இங்ஙனம் அடியார் பலர் வந்து தம் மனையில் விருந்து உண்பதையே சிறந்த பேறாகக் கருதியவர் பலராவர். அப்பலரும் நாயனாராகிப் பேறுபெற்றதற்குக் காரணம் சமயலறைச் சைவமேயாகும். அஃதாவது, அன்பால் பொருள்கள் சமைக்கப்படுகின்றன—அன்பால் அவை அடியவர்க்குப் படைக்கப்படுகின்றன. அன்பால் பிணிப்புண்ட அடியார்கள் அவ்வுணவுண்டு அகமகிழ்வார்கள்; இல்லத்துத் தலைவனையும் தலைவியையும் உளமார வாழ்த்துவார்கள். இங்ஙனம் செல்விருந்தோம்பி வருவிருந்து காத்து நிற்கும் பெருநிலை, சமையலறைச் சிறப்பினால்தான் அமைவதாகும்.

சமையலறைச் சைவம், உண்மைச் சைவம் போலவே சாதி வேறுபாடுகளைக் கடந்தது. ஆதலால்தான், அந்தணரான அப்பூதியடிகள் வேளாளரான திருநாவுக்கரசரை விருந்துக்கு அழைத்தார்; அவர் கால்களைக் கழுவினார். அந்நீரை அவரும் அவர் மனைவியாரும் மக்களும் தங்கள் மேல் தெளித்துக் கொண்டதோடு பருகவும் செய்தனர். அம்மையார் அகமகிழ்ச்சியோடு சமையல் செய்தார்; முதலில் கறிவகைகளும் பிறவும் தயாரிக்கப்பட்டன; இறுதியிலேயே சோறு வட்டிக்கப்பட்டது. அறுக்கப்பட்ட இலைப் பகுதி உண்பவர் வலக்கைப் பக்கம் அமையும்படி வாழை இலை போடப்பட்டது; கறிகள் பரிமாறப்பட்டன

அனைவரும் திருநாவுக்கரசரோடு இருந்து அன்பினால் பிணைப் புண்டு அமுது அருந்தினர். இத்தகைய பேறு அன்புடை யார்க்கே கிடைக்கும்.

முடிவுரை

"சமையலறையில் சைவம்" என்னும் தலைப்பை மேலோட்டமாகப் பார்ப்பவர்கள் ஏளனம் செய்வர். ஆழ்ந்து கவனித்தால்தான் அத்தலைப்பின் சிறப்பை உள்ளவாறு உணர முடியும். இல்லறத்து உறுப்பினர் அனைவரும் அன்பாய் இருப் பதற்குச் சமையலறையே அடிப்படையாகும். இவ்வாறே உற்றார் உறவினரை உவப்பிப்பதும் சமையலறையேயாகும். 'தொட்டிற் பழக்கம் சுடுகாடு மட்டும்' என்பதுபோலச் சமைய லறையின் மூலம் (அன்புச் சைவமே) சமுதாயத்தில் பரவுகிறது; அதாவது, வீட்டில் தொடங்கும் சைவமே நாட்டிலும் காணப் படும். சமையலறையில் மலரும் அன்பு வீட்டில் பரவுகிறது— பின்பு நாட்டிலும் பரவுகிறது.

இங்குள்ள இந்துமத பாடசாலையைச் சேர்ந்த சமைய லறையில் ஒவ்வொரு வேளையிலும் பல நூறு மாணவர்க்கு உணவு தயாரிக்கப்படுகிறது. "தம்மைப் பெற்று வளர்த்து, அன்பைச் சொரியும் பெற்றோரைவிட்டு, நம்மை நம்பி இங்கு வந்துள்ள இப்பிள்ளைகளுக்கு இனிய உணவை அளிப்பது நமது கடமை" என்று தாய் அன்பு கொண்டு, எரிகின்ற அடுப்பு களுக்கு முன் ஒவ்வொரு நாளும் பல மணி நேரம் நின்று வேலை செய்யும் சமையற்காரர்களை, அன்பின் திருவுருவங்கள் என்று சொல்லலாம். அவர்கள் படைக்கும் இனிய உணவினால்தான் இளம்பிள்ளைகள் துள்ளி விளையாடுகிறார்கள்—படிக்கிறார்கள்— ஆடுகிறார்கள்—பாடுகிறார்கள். இவர்கள் அனைவரையும் அன் பினால் ஆட்டிப் படைக்கும் நமது மாசிலாமணி அப்பா அவர்கள் அன்பின் திருவுருவம்—சைவத்தின் திருவுருவம் என்று நான் அன்போடு கூற விரும்புகின்றேன். சமைய லறைச் சைவத்தால்தான் உலகமே இயங்குகின்றது என்பது முக்காலும் உண்மை.

**வாழ்க சமையலறைச் சைவம்!**

# நடை உடையில் சைவம்



திருவாட்டி வா. தாட்சாயணி அவர்கள், B.A. (Hons.)
(ஆராய்ச்சி மாணவியார், சென்னைப் பல்கலைக் கழகம்)

## சைவம்

சிவத்தின் தொடர்புடையது சைவம். சிவனை வழிபடு கடவுளாகக் கொண்ட—நல் வாழ்க்கைக்கும் ஆன்ம நலனுக்கும் வழி காட்டுகின்ற—நெறியே சைவ நெறி அல்லது சிவநெறி என்பது. உலகத்திலுள்ள பல சமயங்களைப் போலவே சிவ நெறியும் ஒன்று; ஆயினும் என்று தோன்றியது என்று அறுதி யிட்டு உரைக்க முடியாதது; பழமைக்குப் பழமையானது—அப்பாலுக் கப்பாலாய் நிற்பது நம் சிவநெறி. இது நான் கூறுவது அன்று—கிறித்தவ சமயத்தில் பிறந்து அச் சமயத்திலேயே வளர்ந்து வருகின்ற மேனாட்டு ஆராய்ச்சி யாளர்கள் கண்டறிந்த உண்மையாகும்.

அமெரிக்க நாட்டிலும்—ஐரோப்பிய நாடுகளிலும்—ஜப்பான் போன்ற ஆசிய நாடுகளிலும்—பசிபிக் பெருங்கடலில் உள்ள எண்ணிறந்த தீவுகளிலும் சிவலிங்கங்கள் அகழ்ந்து எடுக்கப்பட்டுள்ளன. மாக்கல் காலம்—கற்காலம்—இரும்புக் காலம்—வெண்கலக் காலம் என்று கூறப்படும் உலக வரலாற்றின் பல்வேறு காலங்களில் சிவலிங்கங்கள் உலகத்தின் பல பகுதிகளில் இருந்திருக்கின்றன; பண்டை மக்களின்—நாகரிக, அநாகரிக மக்களின்—வழிபடு பொருள்களாக விளங்கியிருக்கின்றன என்னும் உண்மையை ஒவ்வொரு நாட்டுப் புதைபொருள் ஆராய்ச்சியும் தெளிவாகப் புலப்படுத்துகின்றது. இத்தகைய பெருமை வாய்ந்த சமயம் நம்முடையது என்பதை அறிந்து மெய்யாகவே நாம் பெருமைப் படவேண்டுமல்லவா?

## சமயம்

சமைக்கப்பட்டது சமையம்; அதாவது நெறிப்படுத்தப் பட்டது என்றே சொல்லலாம். சமயக் கொள்கைகளும்—பழக்க வழக்கங்களும் அக்காலத்திலேயே பெரியோர்களால் நெறிப்படுத்தப்பட்டன—சமைக்கப்பட்டன என்பதை இச் சொல் உணர்த்துகிறது.

சில சமயங்கள் எக் காலத்திலும் மாருத தன்மையுடையனவாக இருக்கலாம். ஆனால் பல சமயங்கள் காலத்திற்கேற்றவாறு, சிற்சில நெறி முறைகளில் மாற்றங்களை அமைத்துக் கொள்ளுதல் இயல்பு. அத்தகைய இயல்புகளை இந்து சமயத்தில் காணலாம். சைவமும் இத்துறையில் விரிந்த சிந்தையும், பரந்த நோக்கமும் உடையது. சிவனுக்குப் பிள்ளைக் கறியைப் படைத்தவரும் நாயனார்; சிவலிங்கத்தின்மீது செருப்புக் காலை வைத்தவரும் நாயனார்; சிவன்மீது கல்லெறிந்தவரும் நாயனார் என்றால், சைவத்தின் பரந்த நோக்கத்தை அறிவுடையோர் அறிதல் கூடும்.

## நடை

நாயன்மார் ஒவ்வொருவரும் ஒவ்வொரு நடையிலே (போக்கிலே) தம் வாழ்க்கையை நடத்தினவர் என்பதைப் பெரிய புராணத்தால் புலப்படுகிறது. உருத்திர மந்திரம் செபித்தார்

ஒருவர்—விலங்கின் இறைச்சியை இறைவனுக்குப் படைத்தார் இன்னொருவர்—ஈசனடியாரை இன்முகங்காட்டி உண்பித்து உபசரித்தவர் ஒரு தொண்டர். புறச் சமயவாதிகளுடன் வாதிட்டுச் சைவ சமயத்தை நிலைநாட்டியவர் சிலர். அடியார்க்கு ஆடை நெய்வதும், வெளுப்பதும் சிலருடைய பணியாயிற்று. அடியார் விருப்பத்திற் கிணங்க மனைவியையும் ஈயத் துணிந்தார் மற்றொருவர். சிவநெறியை இழித்துப் பேசினுரின் நாவறுத்தார் ஓர் அன்பர். சூதாடி வென்ற வருவாயைக் கொண்டு சிவனடியாரை உண்பித்தார் ஒரு பக்தர். கோவில்தோறும் உழவாரப் பணி செய்த உத்தமர் ஒருவர். கோவில் பணிகளைச் செய்யும் ஆண்டார் முதலியரைப் பழக்குவித்தவர் ஒருவர். அப்பர், சம்பந்தர், சுந்தரர் இவர்களையே போற்றி வாழ்ந்த அடியவர் சிலர். புறச் சமயத்திலிருந்த கணவனைத் திருத்தி ஆட்கொண்ட மங்கை நல்லார் ஒருவர். ஒழுக்கம் தவறிய கணவரைத் திருத்திய உத்தமியார் ஒருவர்.

இங்ஙனம் அறுபத்து மூன்று நாயன்மாரும் பல நடைகளில் சென்றவர்களாகக் காணப்படுகின்றனர். எந்த நடையாக இருப்பினும், சமயத்தின் உயிர் நாடியான அன்பை அடிப்படையாகக் கொண்டதாக இருக்குமாயின், அந்நடை—சிவநெறிக் கேற்ற நடையென்று அறிஞரால் கொள்ளப்படும்.

இதுவரையில் நம் முன்னோர்களின் பலவகை வாழ்க்கை நடைகளைக் கண்டோம். இனி நமது நெறி எவ்வாறு அமைய வேண்டும் என்பதை இங்கு எண்ணுவோம்.

உண்மைச் சைவர்கள் உள்ளத்தில் அன்பு நிலைபெற்று உள்ளது. இந்த அன்பு அவர்களது வாழ்க்கையிலும்—பல திறப்பட்ட நடைமுறைகளிலும் காணத்தக்க வகையில் தெளிவாக விளங்கும்.

அன்பு நடை ஏழைகள்மீது இரக்கம் கொள்ளச் செய்யும்; கொடியவர்களை நல்வழிப்படுத்தும்; தீய கணவனை நன்னெறியிற் செலுத்தும்; முரட்டுப் பிள்ளைகளை நன் மக்களாக்கும். மருமகள்மீது பாய்ந்து புலிவேடம் ஆடும் மாமியாரையும் செந்நெறிப்படுத்தும் என்றால், அன்பினால் ஆகாத செயலும் உண்டோ? அன்பே சிவம் அல்லவா? அன்புநெறி அல்லது சிவநெறிதான் அன்புநடை—அல்லது சிவ நடை. இச்சிவ நடை நம் எல்லோரிடமும் நிலைபெற்று வளர்தல் வேண்டும்.

இந்நிலை நம்மிடை வளருமாயின், நாம் அடிவைத்து நடக்கும் இடமெல்லாம் அன்பு ஒன்றையே காணலாம்.

மனைவியே குடும்பத்தின் தலைவி. இச்சொல்லிற்கு நேரான ஆண்பாற் சொல் இல்லையென்பது இங்கு உணரத் தக்கது. இவ்வாறு கணவன் என்ற சொல்லுக்கும் நேரான பெண்பாற் சொல் இல்லை. அரசி—அரசன் என்றாற்போல, ஏன் இச்சொற்களுக்கு மாற்றுச் சொற்கள் இல்லையென்பது ஆராய்ச்சிக்குரியது.

கணவன், மனைவி ஆகிய இருவரும் "ஓர் ஆவிற்கு இரு கோடு பூத்தாற்போல" இணைந்து வாழத் தக்கவர்கள். ஆயினும், குடும்ப ஆட்சியில் ஒரு பகுதி கணவனுக்கு உரியது. அதில் மனைவி தலையிட இயலாது. இவ்வாறே குடும்ப ஆட்சியில் மற்றொரு பகுதி மனைவிக்கே உரியது. அதில் கணவனுக்கு உரிமையில்லை. அதாவது, கணவன் குடும்பம் நடத்துதற்குரிய பொருளீட்டி வரும் பெரும்பணியில் ஈடுபட்டவன். அப் பொருளைக் கொண்டு குடும்பத்தை நடத்தும் பொறுப்பு வாய்ந்தவள் மனைவி. இவ்வுண்மையை உணர்த்தவே அறிவு சான்ற நம் முன்னோர், கணவன் எனும் சொல்லிற்கு நேரான பெண்பாற் சொல்லை உண்டாக்கவில்லை; மனைவி என்னும் சொல்லுக்கும் நேரான ஆண்பாற் சொல்லையும் படைக்கவில்லை. இறைவன் படைப்பில் ஆண் பிறப்புத் தனி; பெண் பிறப்புத் தனி. இருவரும் இரு வேறுபட்ட செயல்களைச் செய்து முடிக்கவே கடமைப்பட்டவர்கள். இருவரும் கருத்தொருமித்துச் சம நிலையில் நின்று செயலாற்றினால்தான் இல்லறம் நல்லறமாக நடைபெறும்.

இந்த உண்மையை உள்ளவாறு கண்டவன் சைவன் என்றே சொல்லலாம். ஏனெனில், சைவன் தனது கடவுளை அப்பனாக மட்டும் வழிபடவில்லை. அம்மையும் அப்பனுமாக—சமமாக இணைந்து இருக்கின்ற நிலையைத் தன் உள்ளத்தால் உருவகம் பண்ணி—"மாதொரு பாகன்" என்று பெயர் சூட்டி வணங்கத் தொடங்கினான். அறிவிற் சிறந்த அப்பெருமகனுக்கு நமது நன்றி கலந்த வணக்கத்தைச் செலுத்துவோமாக. இத்திருவுருவம் ஒன்றே போதும் சிவநெறியின் உயிர்த் தத்துவத்தை விளக்குதற்கு என்னலாம்.

இந்த உண்மையை - கணவனும் மனைவியும் சரிநிகர்

சமானமானவர் என்னும் - உண்மையை - சைவப் பெண்மணி களாகிய நாம் உள்ளத்தில் இருத்துதல் வேண்டும்; இருத்தி, அதற்கு ஏற்றவாறு நமது நடையை அமைத்துக்கொள்ள வேண்டும்.

கணவனோடு ஒருயிரும் ஈருடலுமாக இயங்கும் நடையே சைவப் பெண்மணிகளுக்கு ஏற்ற நடை. கருத்தொருமித்த குடும்ப வாழ்வே சைவ வாழ்வு. உண்மை பேசுதல் - உடம்பைப் பாதுகாத்தல் - தீயன அகற்றல் - நல்லனவே நினைத்தல்- இன்பத்திலும் துன்பத்திலும் இறைவனை எண்ணுதல் - எங்கும் எப்பொழுதும் அன்பு ஒன்றையே வழிபடுதல் - ஆகிய இவை அன்பு நடைக்கு இன்றியமையாதவை. இத்தகைய நடையே சைவப் பெண்மணிகளாகிய நமக்கு ஏற்றதாகும்.

## உடை

காலத்திற்குக் காலம் நடை வேறுபடுவது போலவே உடையும் வேறுபடுவது இயல்பு. இது தவிர்க்க முடியாதது. பழைய மனிதன் இலைகளாலான ஆடையை உடுத்திருந்தான்; அறிவும், ஆராய்ச்சியும் பெருகப் பெருகப் பஞ்சின் பயனைக் கண்டறிந்தான்; பஞ்சினைக் கொண்டு நூல்நூற்று ஆடைநெய்து அணிந்துகொண்டான்; பின்பு பட்டு நூலாலும் - எலி மயிராலும் ஆடைகள் நெய்து பயன்படுத்தினன். விஞ்ஞான அறிவு வளர்ந்த பிறகு மர நார்களைக் கொண்டு - விஞ்ஞானப் பொருள்களைக் கொண்டு - பல்வேறு கலவைகள் கொண்டு (லினன் - நைலான் - ஷிபான் - ஜார்ஜட் முதலிய) மெல்லிய ஆடை வகைகள் கண்டறியப்பட்டன. இதைப் பயன்படுத்துவோரும் உண்டு; மறுத்துப் பேசுவோரும் உண்டு.

உடை என்பது உடலை மறைக்க மட்டுமல்லாது, அழகு படுத்துவதாகவும் அமைவதால் இவ்வாடைகள் அணிவதில் தவறில்லை என்பது புலப்படும். முற்காலத்திலேயே புகை, பாலாவி, பாம்பின்உரி போன்ற மெல்லிய ஆடைகளை அணிந்தார்கள் என்பதற்குச் சங்கத்தமிழ் நூல்களிலேயே சான்றுகள் பல உள. அம்மெல்லாடையணிந்த மெல்லியலார் இறையன்பில் இளைத்தவரல்லர். இதனால் உடையின் மாற்றத்தால் அன்பு உள்ளம் மாறமாட்டாது என்பது விளங்குகின்றதன்றோ?

அவரவர் விருப்பப்படி - வயதிற்கும் - வசதிக்கும் ஏற்றபடி உடையணிந்து கொள்வதால் இழப்பு ஏதும் இல்லை. ஆயினும் இதிலும் ஒரு நெறி இருத்தல் இன்றியமையாதது. இந்த உறுதிப்பாடு பெண்களின் உள்ளத்தில் இருக்குமாயின், உடையால் எவரும் குறைகூற இடமிராது என்பது திண்ணம்.

## முடிவுரை

மக்கள் வாழப் பிறந்தவர்கள். நாம் வையகத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து பேறுபெற வேண்டுபவர்கள். இதனை உளங்கொண்டு, வாழ்வின் ஒவ்வொரு பகுதியிலும் அன்பு நெறியாகிய சிவநெறியை நமது செயலால் தோற்றுவிக்கக் கடமைப் பட்டிருக்கிறோம் என்பதை மறந்துவிடலாகாது.

> " வையத்து வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
> தெய்வத்துள் வைக்கப் படும் "

என்னும் திருவள்ளுவர் திருவாக்கு நம் உள்ளத்திலே நிலை பெற்று, நம்மை நல்வழிப்படுத்தி அன்புக் கடலில் ஆழ்த்துவதாக!

# விருந்தோம்பலில் சைவம்



திருவாட்டி வ. பா. தாமரைக் கண்ணியார் அவர்கள்
(செயலர், தாய்மார் கழகம், சென்னை.)

## நமது நாட்டின் பண்பு

விருந்தினர்களைப் பேணுவதில் நமது நாடு பேர் பெற்றது. விருந்தினர்களை உபசரித்து அவர்களுக்கு உபகாரம் செய்வது தான் அன்புடைய கணவனும் மனைவியும் சேர்ந்து நடத்தும் இல்லறத்தின் முக்கிய நோக்கமாயிருக்க வேண்டுமென்று பொது நூலாகிய திருக்குறள் சொல்லுகிறது. விருந்தினர்களைப் பேணும் சிறந்த ஒழுக்கத்தைப் பற்றித் திருவள்ளுவர் பத்து குறள்கள் அடங்கிய ஒரு தனி அதிகாரத்தையே வகுத்திருக்கிறார் என்றால், இந்த ஒழுக்கத்தை நமது நாட்டில் எத்துணை மேன்மையாகக் கருதி வந்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளலாம்.

## விருந்து பேணல் பெண்கள் கடன்

ஆண் மக்கள் பொருள் ஈட்டுவதற்காகவோ, புகழ் தேடுவ தற்காகவோ, கல்வி பெறுவதற்காகவோ வீட்டைவிட்டு வெளியே போய் அலைந்து கொண்டிருப்பவர்கள். ஆனால் பெண்மணிகள் வீட்டிலே இருந்து வீட்டுக்குரிய அறத்தைச் செய்வதில் கண் ணுங் கருத்துமாயிருப்பவர்கள். ஆகையால், வீட்டுக்குரியவர் கள் ஆண்கள் அல்ல பெண்கள்தான் என்றுகூடச் சொல்லலாம். இதுபற்றியே ஒரு வீட்டுத் தலைவிக்கு இல்லாள், மனையாள், மனைவி என்னும் பெயர்கள் தமிழ் மொழியில் வழங்குகின்றன. இவைகளுக்கு ஆண்பால் இல்லையென்பதையும், வலிந்து ஆண் பால் விகுதி ஏற்றினால் விபரீதப் பொருள் விளையுமென்பதையும் நாம் அறிவோம். ஆகவே, ஆண்களைவிடப் பெண்களே விருந் தினர்களைப் பேணும் ஒழுக்கத்தில் நன்கு பயிற்சி பெறவேண்டு மென்று ஏற்படுகிறது.

உண்மையிலேயே, ஒரு பெண்ணின் துணையில்லாமல் ஓர் ஆண்மகனால் விருந்தினர்களை உபசரிக்க முடியாதென்றே நமது முன்னோர்கள் கருதினார்கள். இராவணனால் அசோக வனத்தில் சிறை வைக்கப்பட்ட சீதை வேறெதற்காகவும் அத் துணை வருத்தப்படவில்லை. “ இராமபிரானைத் தேடிக்கொண்டு யாரேனும் அதிதிகள் வந்தால் யான் அருகே இராமையால் அவர்களை உபசரிக்க முடியாமல் துன்பப்படுவாரே ” என்பதற் காகத்தான் அவள் வருந்தினாள். “ விருந்து வந்தபோது என் னுறுமோ என விம்மும் ” என்று சீதை வருந்துவதாகக் கம்பர் அமைத்திருக்கிறார். தன் ஒழுக்கத்தில் தன் கணவன் ஐயங் கொள்வானென்பதையும் எண்ணிப் பார்க்காமல், தன் வீடு தேடி வந்தடைந்த சிவனடியாரை உபசரித்து அனுப்பிய காரைக்கால் அம்மையார் என்னும் புனிதவதியாரைப் பற்றி நாமெல்லாம் கேள்விப்பட்டிருக்கிறோம். சிறுத்தொண்டருடைய மனைவியாரா கிய திருவெண்காட்டு நங்கை, தன் வீடுதேடி வந்தடைந்த விருந்தினரை மகிழ்விப்பதற்காகச் செய்த செயலை எண்ணும் போது, நாம் அச்சமும் வியப்பும் திகைப்பும் ஒருங்கே அடை கிறோம்.

## விருந்தோம்பலும் சைவமும்

**முத்தன்ன வெண்ணகையீர் ! சைவ ஒழுக்கத்தில்**

'விருந்தோம்பல்' ஓர் இன்றியமையாத அங்கமாகக் கருதப் பட்டது. சைவராயினுர் பிறவிப்பயன் எய்த வேண்டுமாளுல் அவர்கள் இரண்டு செயல்களை மேற்கொள்ள வேண்டும். முதலாவது, மதிசூடும் அண்ணலார் அடியார் தமை அமுது செய்வித்தல். கண்ணிளுல் அவர் நல்விழாப் பொலிவு காண்டல் இரண்டாவதாகத்தான் கருதப்பட்டது. இவ்வாறு சேக்கிழார் பெருமான் அறுதியிட்டுக் கூறுகிருர். இதற்கு அவர் மூலமாகக் கொண்டது,

" ஒட்டிட்ட பண்பின் உருத்திரப் பல்கணத் தார்க்கு
அட்டிட்டல் காளுதே போதியோ பூம்பாவாய் "

என்னும் சம்பந்தரது திருமயிலைத் திருப்பாசுரமாகும்.

## விருந்தோம்பிய தொண்டர்கள்

**வண்ணக்கிளி மொழியீர்!** சைவ நங்கையர்களாகிய நாம் படித்து அறிந்து கடைப்பிடிக்க வேண்டிய பெருநூல் சேக்கிழாரது பெரியபுராணம் என்பதை நீங்கள் உளங்கொளல் வேண்டும். கிடைத்தற்கரிய கருவூலம் என நாம் அதனை மதிக்க வேண்டும். அத்திரு நூலில் பல திருத் தொண்டர் களது செயற்கருஞ் செயல்கள் பேசப்பட்டுள்ளன. தொண்டர் கள் சிவப்பேறு பெற்ற விதங்கள் பலதிறப்பட்டனவாகும். அவற்றுள், சிவனடியார்களைப் பேணி, அவர்களுக்கு வேண்டு வன நல்கி, அமுது செய்வித்து, அதளுல் முத்தி பெற்ற தொண் டர்கள் பதின்மருக்குக் குறையாமலிருக்கிருர்கள். இவர்களுள் ளும், காரைக்காலம்மையாரைத் தவிர்த்து, மற்ற தொண்டர் கள் ஆண்களேயாயினும், அடியவர்களை அமுது செய்வித்தலில் இவர்களுக்கு உறுதுணையாயிருந்தவர்கள் இவர்களுடைய மனைவிமார்களேயாகும். இளையான் குடிமாற நாயனுர் மனைவி யாரும், திருவெண்காட்டு நங்கையும், இயற்பகை நாயனுர் மனைவியாரும் இதற்குச் சிறந்த எடுத்துக்காட்டுக்களாவார்கள்.

## சேக்கிழார் கூறும் விருந்தோம்பு முறை

விருந்தாக வந்த சிவனடியார்களை எவ்வாறு உபசரிக்க வேண்டுமென்பதைச் சேக்கிழார் தமது நூலின் தொடக்கப் பகுதியிலேயே வரையறுத்துக் கூறிவிடுகிருர். இளையான் குடி

மாற நாயனர் அடியவர்களை உபசரித்த திறத்தைச் சேக்கிழார் அழகுற எழுதிக் காட்டுவதைப் பாருங்கள்.

" கொண்டுவந்து மனைப்புகுந்து
குலாவுபாதம் விளக்கியே
மண்டு காதலின் ஆதனத்திடை
வைத்தருச்சனை செய்தபின்
உண்டிநாலு விதத்திலாறு
சுவைத்திறத்தினில் ஒப்பிலா
அண்டர்நாயகர் தொண்டர் இச்சையின்
அமுது செய்ய அளித்துளார் "

நன்கு கற்றறிந்து பெரிய புராணத்தில் ஊறித்திளைத்த தோழியர்களாகிய உங்களுக்கு இப்பாட்டின் பொருளை விளக்க வேண்டியதில்லை. மேலும், சான்ரூேர் கவியாதலால் தூய பளிங்கு நீரைப்போல் தெளிந்திருக்கிறது இப்பாடல்.

ஆயினும், இப்பாட்டிலுள்ள ஒரு சொல்லை மாத்திரம் நீங்கள் கருத்தூன்றிக் கவனிக்க வேண்டுமென விழைகிறேன். " இச்சையின் " என்பதே அச்சொல்லாகும். இதனை மேற்கொண்டு விளக்குவதற்குமுன், பெருங் கவிஞர்களுடைய சீரிய இயல்பைப்பற்றிச் சிறிது கூற ஆசைப்படுகிறேன்.

## நல்லிசைப் புலவர் வல்லமை

நல்லிசைப் புலவர்கள் சிலருடைய காவியங்களில் சில இடங்கள் நமக்கு விளங்காமலிருக்கலாம். அவர்கள் சொற்களோ அவர்கள் தோற்றுவித்த கதாபாத்திரங்களின் செயல்களோ நமக்குக் குழப்பத்தையும் ஆத்திரத்தையும் வெறுப்பையும்கூட மூட்டலாம். ஆனல் இக் குழப்பங்களுக்கு விளக்கம்—புதிர்களுக்குத் தீர்வு - ஐய வினக்களுக்கு விடை - காவியத்தில் மற்ரூேரிடத்திலிருக்கும். சுருங்கச் சொன்னல், இவர்களுடைய நூல்களில் ஓரிடத்தில் பூட்டு இருக்கும், அதற்குரிய சாவி மற்ரூேரிடத்திலிருக்கும். முடிச்சு ஓரிடத்திலிருக்கும், அதை அவிழ்க்கும் முறை மற்ரூேரிடத்திலிருக்கும். கம்பர் காவியத்தில் வரும் இத்தகைய புதிர்களுக்குக் ' கம்ப சூத்திரங்கள் ' என்றே வழங்குகிருர்கள். கவிப் பேரரசர்களாகிய இளங்கோவடிகள், காளிதாசர், மில்ட்டன் முதலியோர் காவியங்களி

லும் நாடகங்களிலும் இப்படிப்பட்ட சூத்திரங்களை அங்கங்கே காணலாம். இவை கற்பவர்களுக்குப் பேருவகை அளிப்பன வாகும்.

## ஒரு பூட்டும் சாவியும்

இதைத் தெரிந்துகொண்ட பிறகு இப்போது சேக்கிழார் பாடலுக்கு வருவோம். சிவனடியார்கள் எவ்வாறு இச்சிக்கிறார் களோ அல்லது விரும்புகிறார்களோ அவ்வாறு அவர்களுக்கு அமுது செய்வித்தலை இளையான் குடிமாறர் தமது கடப்பாடாகக் கொண்டார் எனச் சேக்கிழார் கூறுகிறார். "இளையான் குடி மாறர் மட்டுமல்லர், மற்ற தொண்டர்களும் இதனையே கடப் பாடாகக் கொண்டார்கள். இவர்களது வரலாறுகளைத்தான் உள்ளது உள்ளபடியே யான் எழுதுகிறேன். என் பேரிலோ என் காவிய பாத்திரங்களின் பேரிலோ குற்றம் சொல்லிப் பயனில்லை எனச் சேக்கிழார் சொல்லாமற் சொல்வதை நீங்கள் கேட்கிறீர்களல்லவா? தோழியர்களே! தாங்களே ஏற்படுத்திக் கொண்ட இத்தகைய விதி அல்லது சட்டம் அல்லது கடப் பாட்டை ஒட்டியே சிறுத்தொண்டர் உத்தராபதியாரான வயிர வருக்குப் பயங்கர விருந்தளித்தார்; இயற்பகையார் 'செயற் கரும் செய்கை செய்த தீரன்' எனப் பேரெடுத்தார். எனவே, இவ்விரு அடியார்களது இயல்புக்குமாறான செயல்களைக்கண்டு நாம் அடையும் மனக் குழப்பத்திற்கு விடை அல்லது தெளிவு இளையான் குடிமாறர் வரலாற்றில் இருக்கிறது.

## சைவ மங்கையர் கடன்

ஒள் நித்தில் நகையீர், பழந்தமிழ் நாட்டில் சைவ நன் மக்கள் எவ்வாறு விருந்தினரை மகிழ்வித்தனர் என்பதை இது காறுங் கூறினேன். இனி இவ்விருபதாம் நூற்றாண்டில் வாழும் சைவ மங்கையர் இத்துறையில் கடைப்பிடிக்க வேண்டிய நெறி யாது? காலம் மாறிப்போய் விட்டதென உங்களுக்குத் தெரி யும். காலவகையினானே பழையன கழிதலும் புதியன புகு தலும் வழுவல. திருவெண்காட்டு நங்கையைப் போலவும், இளையான் குடிமாறர் மனைவியார் போலவும், சிவனடியார்களை உபசரிக்கவேண்டுமென நான் உங்களுக்குச் சொல்லமாட்டேன். அடிப்படையான விருந்தோம்பலில் மாற்ற மில்லாமல், சில

புறச் செயல்களைத் தற்காலத்துக் கேற்றவாறு நாம் மாற்றிக் கொள்வதில் தவறில்லை,

பழையபடியே, மதிசூடும் அண்ணலார் அடியார்தமை அமுது செய்விக்க வேண்டும். அதாவது, மகேசுவர பூசைகள் நடக்கவேண்டும். நமது பொருளாதாரத்துக் கேற்றவாறு 63 நாயன்மார் அல்லது திருமுறை ஆசிரியன்மார் அல்லது நால்வர் திருநாட்களைக் கொண்டாடி, அக் காலங்களில் தூய ஒழுக்கமும் சிவவேடமும் உள்ள ஏழை அடியவர் ஒருவருக்கோ பலருக்கோ, சிறப்பாகவோ எளிமையாகவோ அமுது படைப்பதையும் புத்தாடை வழங்குவதையும் நமது கடப்பாடாகக் கொள்ளவேண்டும். அதுவன்றியும், பிழையின்றித் தேவார திருவாசகங்கள், அருட்பா, தாயுமானவர், பட்டினத்தார் பாடல்கள், திருப்புகழ் முதலியன பாடிக்கொண்டு வரும் பிச்சைக்காரர்களுக்குக் காசு கொடுக்கலாம் அல்லது சோறு போடலாம். இதன் விளைவாக, இத்தகையோர் எண்ணிக்கை பெருகும். அந்த வீட்டுக்குச் சென்றால், சினிமாப் பாட்டுப் பாடாமல் தாயுமானவர் பாட்டுப் பாடினால் காசு கொடுப்பார்கள், சோறு போடுவார்கள், பழைய ஆடை கொடுப்பார்கள் என்ற நிலை ஏற்பட்டால், அது நம் சைவத்துக்கும் தமிழுக்கும் நல்லதுதானே!

இதுவே என் விருப்பமும் வேண்டுகோளும்.

**மேன்மைகொள் சைவ நீதி விளங்குக உலகம் எல்லாம்!**

**வணக்கம்.**

# பிள்ளை வளர்ப்பில் சைவம்



திருவாட்டி. கிருஷ்ணு சஞ்சீவி, B.A., B.T.
(10, செட்டித் தெரு, காஞ்சிபுரம்)

சமுதாயத்தின் அடிப்படை, வீடு. நன்கலமாய மக்கட் பேற்றினைக் கொண்ட மங்கலமாய மனைமாட்சி சிறவாத எந்த நாடும் செழிப்புற்று இருக்க முடியாது. இத்தகைய குடும்பத்தில்தான் வருங்கால மக்களாகிய குழந்தைகள் தங்கள் வாழ்க்கையின் ஆரம்ப நாட்களைக் கழிக்கின்றனர். அந்நாளில் அவர்களது பிஞ்சு உள்ளம் பசுமரத்தாணிபோல் பழக்க வழக்கங்களை ஏற்றுக்கொள்ளும். எனவே, குடும்பமே சமுதாயத்தின் செல்வங்களாகிய குழந்தைகளின் உடல்—உள்ள—உயிர்ப் பண்புகளை உருவாக்கும் உலைக்களம்.

இந்தத் தலைமுறையில் குழந்தைகளாயிருப்பவர்கள் அடுத்த தலைமுறையில் பெற்றோர்களாயிருப்பர். இன்றைய

குழந்தைகள் மனத்தெளிவையும் உடல் திண்மையையும் பொறுத்தே நாளைக்கு அவர்கட்குப் பிறக்கும் மக்கள் மனத் தெளிவும் உடல் திண்மையும் அமையும். அதனால் குழந்தை களின் உடல் வளர்ச்சியிலும் மனவளர்ச்சியிலும் ஒழுங்கும் ஒழுக்கமும் ஊறிநிற்றல் வேண்டும். அந்த ஒழுங்கும் ஒழுக்க மும் கடவுள் நெறியின் அடிப்படையிலேயே கற்பிக்கப்படுதல் இன்றியமையாதது.

இனி பிள்ளை வளர்ப்பில் சைவம் என்ற பெருந்தலைப்பை (1) உண்ணும் உணவு (2) உடுக்கும் உடை (3) உறையும் மனை (4) எண்ணும் எண்ணம் என்ற உள்தலைப்புக்களில் ஆராய்வோம்:

## உண்ணும் உணவு

குழந்தை பிறக்கு முன்பே தன் உடலில் சிறிதளவு இரும் புச் சத்தைப் பெற்றிருக்கிறது. பிறந்த பின்னர் அச் சத்துச் செலவழிந்து விடுவதால் ஆறு மாதக் குழந்தைக்கு இரும்புச் சத்து மிகத் தேவையாயுள்ளது. ஒன்பது மாதங்கள் வரை குழந்தையின் சிறந்த உணவு பசுப்பால். இதில் எல்லாச் சத்துக்களும் அமைந்திருப்பினும் குழந்தைக்கு அந்தப் பருவத் தில் தேவையான இரும்புச்சத்துக் குறைவு. அதேபோல் கால்சிய மும் பாஸ்வரமும் பாலிலுள்ள சர்க்கரைப் பொருளால் பாதிக் கப்படுவதால் அவை இரண்டும் குறைபடுகிறது. இரும்புச் சத்து இல்லையெனின் இரத்த சோகையும், பாஸ்வரமும் கால்சி யமும் குறைபடின் எலும்பு வளர்ச்சிக் குறைபாடும் ஏற்படு கிறது. முட்டையின் வெள்ளைக் கருவில் இரும்புச்சத்து அதிகம்; அதை எளிதாய்க் குழந்தைகள் பெறக்கூடும். எனவே முட்டையின் வெள்ளைக் கருவைப் பாலில் கலந்து இரண்டு தேக்கரண்டி கொடுக்கும்படி டாக்டர்கள் கூறுகின்ற னர். இதைவிட இரும்புச்சத்துள்ள சைவ உணவுப் பொருள் களாகிய முருங்கைக்கீரை, அரைக்கீரை முதலியவற்றை உப்பிட்டுச் சாறாக (ரசம்) வைத்தோ அல்லது 'சூப்' (Soup) ஆக வைத்தோ அத்தண்ணீரைக் கொடுப்பது சிறந்தது. பாஸ்வரம், கால்சியத்தைச் சரிசெய்ய ஆறு மாதங்கட்குப் பிறகு சிறிது சிறிதாக வெண்ணெயைச் சேர்த்துக்கொள்ளல் நலம்.

புரோட்டீன் (Protein) உடல் வளர்ச்சிக்கும் உடலில் சிதைந்த திசுக்களைப் (Tissues) புதுப்பிக்கவும் மிகத் தேவை. முக்கியமாகச் சீரணப்பாதையில் பாக்டீரியாக்களால் ஏற்படும் பாதிப்புகளைப் புரோட்டீனிலும் வைட்டமின் 'B'-யிலும் உள்ள 'பெரிகாரிப்' என்ற பொருள் தடுக்கிறது. இது கைக்குத்தல் அரிசியிலும் தவிடு நீக்கப்படாத அரிசியிலும் அதிகமாயுள்ளது. மேலும் அரிசியிலுள்ள மாவுப்பொருளில் (Starch) சிறிதளவு பாஸ்வரமும் இருக்கிறது.

நாம் உபயோகிக்கும் பருப்புவகைகள், விதைகள் முதலிய வற்றில் இளஞ்செடி தோன்றத் தேவையான சத்துப்பொருள் சேமித்து வைக்கப்பட்டுள்ளன. தண்ணீரில் இவை ஊறின வுடன் அச்சத்துப்பொருள்கள் கரைந்து மாறுதலடைந்து இளஞ்செடி அச்சத்துக்களை ஏற்று ஜீரணிக்கத்தக்க எளிய நிலையிலுள்ளது. மேலும் முளை கிளம்பிய தானியங்களில் வைட்டமின் C (Vitamin-C) உள்ளது. எனவே அமிலத் (acid) தன்மையுடைய அரிசிச் சாதத்துடன் காரத் (alkaline) தன்மையுடைய வைட்டமின் C அடங்கிய முளை கிளம்பிய தானியங்களையோ—கிழங்கு வகைகளையோ—பச்சைக் காய்கறி வகைகளையோ அல்லது புளிப்புள்ள பழங்களையோ சேர்த்துக் குழந்தைகளுக்குக் கொடுத்தல் நல்லது. இவை நன்குக வேக வைக்கப்பட்டு நசுக்கப்பட்டு மென்மையான பொருளாக்கப் பட்டபின் குழந்தைகளுக்குக் கொடுத்தால்தான் எளிதில் செறிக்கும்.*

வளரும் குழந்தைகட்கு வைட்டமின்கள் அவசியம். பச்சைக் காய்கறிகளில் 'காரடீன்' என்ற சத்துப்பொருளும் வைட்டமின்களும் உள்ளன. காரடீன் வைட்டமின்களின் வேலையைச் செய்கிறது. வைட்டமின் C-யும் வைட்டமின் D-யும் குழந்தைகளின் உணவில் குறையுமானால் அதன் எலும்பு வளர்ச்சி பாதிக்கப்படும். வேறு எந்த வைட்டமின் குறையினும் குழந்தை நன்குக வளர்ந்தபின் கூடச் சரிசெய்து கொள்ள வழிகளுண்டு. வைட்டமின் D குறைவு நெஞ்சு கூடு கட்டல், முட்டிக்கால் இடித்தல், இடுப்பெலும்பு குறுகுதல்,

---

* கைக்குத்தல் அரிசியும் முளை கிளம்பிய பருப்பு வகைகளும் இம் மாநாடு நடைபெறும் வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக் குழந்தைகட்கு எல்லாம் வள்ளலார் இல்லத்தில் வழங்கப்பெறுவது போற்றதற்குரியது.

எலும்பு முனைகள் பெருத்தல் போன்ற நிரந்தரக் குறைபாடுகளை எலும்பு வளர்ச்சியில் உண்டாக்குவதால் குழந்தை வளர்ந்த பின் இக்குறைகளைச் சரிசெய்யவே இயலாது. எனவே ஆரம்பத்திலேயே வைட்டமின் D குறைவைப் போக்கவேண்டும். பால், வெண்ணெய் முதலிய உணவுப் பொருள்களில் இந்த வைட்டமின் உள்ளமையால் அவற்றை உபயோகித்தல் வேண்டும். சூரிய ஒளியால் இந்த வைட்டமின் நம் உடலில் உற்பத்தியாக்கப்படுவதால் குழந்தைகட்குப் போதுமான சூரிய வெளிச்சம் கிடைக்குமாறு செய்தல் நல்லது. சூரிய வெளிச்சத்தில் விளையாடவிடுதல் நல்லது.

மனித வாழ்க்கை உழைப்பு நிரம்பியது. உழைப்பு-சக்தியின் ஓர் உருவம். இந்தச் சக்தியைப் பெறவே குழந்தை முதல் கிழவர் வரை எல்லோரும் உணவு உட்கொள்கிறோம். இதன்றி வெளியில் உள்ள தட்ப வெட்பத்திலும் நம் உடல் வெப்பம் குறைவாயிருப்பதால் நம் உடலுக்குத் தேவையான வெப்பத்தையும் நம் ஆகாரத்திலிருந்தே பெறவேண்டியுள்ளது. இத்தகைய சக்தியையும் வெப்பத்தையும் தரக்கூடியவை கார்போ ஹைடிரேட்டும் (Carbo-hydrates) கொழுப்பும் (Fats) ஆகும். தண்ணீரில் கரையாத கார்போ-ஹைடிரேட்டு மாவுப் பொருள் (Starch) வடிவத்தில் அரிசி, கோதுமை, கேழ்வரகு முதலிய தானியங்களில் நிறைந்துள்ளன. தண்ணீரில் கரையக்கூடிய கார்போ-ஹைடிரேட்டு சர்க்கரை உருவில் கரும்பு, வெல்லம், பனைவெல்லம், அஸ்கா, இனிப்பான பழரசங்கள் முதலியவற்றுள் நிறைந்துள்ளன. இச்சர்க்கரை சுவாசித்தலின்போது கிடைக்கும் உயிர்க்காற்றுடன்(Oxygen) எரிந்து வேலைசெய்யச் சக்தியையும் வெப்பத்தையும் தருகிறது.

எனவே குழந்தை உணவில் பால், மோர், தயிர், வெண்ணெய், பழச்சாறுகள் இவை அவசியம் இடம் பெறல்வேண்டும். மோர் ஏழை முதல் பணக்காரர் வரை யாவரும் பெறத்தக்க எளிய உணவு. அதேபோல் எல்லோராலும் ஆப்பிள் உண்டு வளர இயலாது. அவர்கட்கு தினம் இரண்டு நெல்லிக்கனி களைக் கொடுப்பின், அது ஒரு ஆப்பிளுக்குச் சமமான சத்துக் களைக் கொடுக்கின்றது. இதேபோல் விலை அதிகமாயுள்ள உணவுப் பொருள்களில் இருக்கும் சத்துக்கள் எளிய உணவுப் பொருள் எவ்வெவற்றிலிருக்கிறதென ஆராய்ந்து

அறிந்தவரைக் கலந்து அவற்றைக் குழந்தைகட்குக் கொடுத்தல் நலம்.

பிள்ளைகட்கு உணவின் அவசியம் தெரியாது; சில வற்றை விரும்புவர்; சிலவற்றை விரும்பார். அவர்களுக்கு விருப்பமில்லாத பொருள்களிலுள்ள சத்துக்கள் அவர்கட்கு விருப்பமான எந்தப் பொருள்களில் இருக்கின்றன என்பதை அறிந்து உணவு கொடுத்தல் வேண்டும். உணவு உண்ணக் கட்டாயப்படுத்துதல் கூடாது. விரும்பியவற்றை விருப்புடன் உண்ணப் பழக்கவேண்டும். சில குழந்தைகள் பசி, சாப்பிட விருப்பம்—இவை இருந்தும் சாப்பிட மறுக்கும். நரம்புத் தளர்ச்சி, புரட்சி மனப்பான்மை, அடம்பிடித்தல்—காரண மாகக் கூட அவ்வாறு மறுக்கலாம். அத்தகைய குழந்தை களிடம் இரக்கம், பரிவு, அன்பு காட்டி அவைகளின் மனத்தில் ஏற்பட்டிருக்கும் குறைபாட்டை அறிந்து அதைத் தவிர்க்க முற்படவேண்டும். சுறுசுறுப்பான குழந்தைகள் வயது வந்த சரீர உழைப்பாளியைப் போன்று கடினவேலை செய்யச் சக்தி யுடையனவாயிருக்கும்.

## உடுக்கும் உடை

'ஆடையில்லாதவன் அரை மனிதன்' என்பது ஆன்றோர் வாக்கு. சத்துள்ள உணவால் மட்டும் குழந்தை வளர்ச்சியடைவ தில்லை. பருவ நிலைகட்கும் தேவைக்கும் ஏற்ற தூய 'உடை அணிவித்தல் குழந்தையின் உடல் நலத்திற்கும் மன வளர்ச்சிக்கும் நலம் செய்வதாகும்.

அதிக வெப்பமும் அதிக குளிரும் குழந்தையை எளிதில் பாதிக்கும். எனவே கோடையில் குளிர்ச்சியையும் குளிர் காலத்தில் வெப்பத்தையும் தரக்கூடிய ஆடைகளைத் தேர்ந் தெடுத்தல் நலம். குறைவான—கனமில்லாத—எளிதில் சலவை செய்து சுத்தம் செய்யக்கூடிய—காற்று எளிதில் உள்ளே செல்லத் தக்க துணியாக இருத்தல் வேண்டும். அத்தகைய ஆடை பருத்தி ஆடையே யாகும். அது ஒரு சிறந்த வெப்பக் கடத்தி (Conductor of heat). பருத்தி ஆடை உறுதியும் அழகும் உள்ளது; உடம்போடும் ஒன்றியிருக்கும்; உடம் புக்குக் குளிர்ச்சியையும் தரும் தன்மையுடையது.

குளிர் நாட்களில் மெல்லிய கம்பளி ஆடைகளே நம் நாட்டு

மக்களுக்குப் போதுமானவை. மிருகங்களைக் கொன்று அவற்றின் தோலால் ஆகிய ஆடைகளை உடுத்த வேண்டிய அவசியமே இல்லை. கம்பளி ஆடையை உபயோகிக்கும்போது கூட உள் ஆடை நூலாடையாக இருத்தல் வேண்டும். அடிக்கடி உள் ஆடைகளைத் துவைத்து உலர்த்திச் சுத்தமாக உடுத்த வேண்டும். குழந்தைகளைக் குளிப்பாட்டினவுடன் உள் ஆடைகளை மாற்றி உலர்ந்த வெண்மையான ஆடை அணிவித்தல் வேண்டும். இதனால் குழந்தைகட்கு மன மகிழ்ச்சியும் உடல் நலமும் ஏற்படும்.

உள் ஆடை தளர்த்தியாகவோ அல்லது இறுக்கமாகவோ இருத்தல் கூடாது. இதனால் வளரும் குழந்தைகளின் இரத்த ஓட்டம், தசை அசைவுகள் இடர்ப்படும். உட்காருதல், நிற்றல், நடத்தல் முதலிய பழக்கங்களும் பாதிக்கப்படும். மேலும் உடைகள் சிறிது தளர்த்தியாகத் தைத்துப் பயன்படுத்துவதால் குழந்தைகள் தாமாகவே உடைகளைக் கழற்றவும் திரும்ப உடுத்துக் கொள்ளவும் கற்றுக்கொள்ள உதவியாயிருக்கும்.

இரவில் குழந்தைகள் தாராளமாய்க் கைகால்களை நீட்டிப் புரண்டு படுக்கத்தக்க முறையில் தளர்ச்சியான மெல்லிய ஆடைகளைப் போடவேண்டும். இடுப்புக் கச்சங்களையும் தளர்த்திவிட வேண்டும். சிறு பிராயத்திலேயே தளர்த்தியான மிதியடிகளை அணிவித்துப் பழக்கினால், வளரவளர, மிதியடிகளின் அவசியத்தை உணர்ந்து சரியான முறையில் அவற்றை உபயோகிக்கக் குழந்தைகள் கற்றுக்கொள்ளும்.

குழந்தைகள் ஆடையின் இன்றியமையாமையையும், அவற்றைத் தூய்மையாய் வைத்துக்கொள்ள வேண்டுவதன் அவசியத்தையும் நன்றாக உணரும்படி செய்தல் வேண்டும். உயர்ந்த பட்டாடைகளை உடுத்தி அவற்றை அது கவனிப்புடன் பார்த்துக்கொள்ளும் என எதிர்பார்த்தல் கூடாது. மண், தண்ணீர் இவற்றருகே விளையாடும் குழந்தைகட்கு எளிதில் சுத்தம் செய்யக்கூடிய உடைகளை உடுத்த வேண்டும். பழக்கம் காரணமாகக் குழந்தைகள் அழுக்குத் துணிகளை நீக்கிச் சுத்த ஆடைகளை விரும்பக் கற்றுக்கொள்ளும். இதனால் சுகாதாரப் பழக்கம் ஏற்படுவதன்றி அழுக்குக் கிருமிகளால் ஏற்படும் தீமைகளையும் நீக்க இயலும்.

**எண்ணும் எண்ணம்**

உணவால் வளரும் உடலை உடையால் மட்டும் பாதுகாத்தல் போதாது. உடலின் உள்ளே—உயர்ந்ததாயுள்ள உள்ளமும் வளர்ச்சி பெறுதல் வேண்டும். 'உள்ளப்பண்பு மரபு வழி வருவதன்று' என ஆராய்ச்சியாளர் கூறுகின்றனர். 'மரபு நிலை'க் கோளாறுகளையும் தக்க சூழ்நிலையால் தடுத்துவிடலாம்; 'மரபு வழி' நற்பண்புகளும் இயல்பான திறமைகளும் கூடத் தக்க சூழ்நிலையின்றி நசித்து விடலாம் என்றும் உள நூல்கள் கூறுகின்றன. எனவே எண்ணும் எண்ணம்—சூழ்நிலையைப் பொறுத்துப் பெரும்பாலும் அமைகிறது.

விளையாட்டு, குழந்தைகள் ஈடுபடும் வேலைகள் இவ்விரண்டையும் பொறுத்தே மன வளர்ச்சி அமைகிறது. படிப்பும் பயிற்சியும்கூட விளையாட்டிலும் பார்த்துப் பின்பற்றலிலும் தான் அதிகமாய் நடைபெறுகின்றன. ஆனால் நம் நாட்டில் விளையாட்டினால் குழந்தைகள் ஒழுக்கம் உருவாகத் தக்க சூழ்நிலை இன்னும் சரியான நிலையில் உருவாகவில்லை.

குழந்தைகள் இரண்டு வயது வரை பொம்மை விளையாட்டுக்களில் ஈடுபடுகிறது; அப்பொழுது ஆராய்வுத் திறனும் ஏற்படும்; எதைக் கண்டாலும் கைகளால் உணர்ந்து வாயால் சுவைத்து அப்பொருளை என்னவென்று அறிய முற்படுகிறது. இதைத் தடுத்தல் கூடாது. ஆனால் எளிதில் உடையக்கூடிய அல்லது எச்சலால் கலங்கக்கூடிய வர்ணங்களுடைய பொம்மைகளை அவற்றிற்குக் கொடுக்கக்கூடாது. மேலும் விளையாட்டில் கொடுமையும் பொருட் சேதமும் ஏற்பட விடக்கூடாது. அத்துடன் எதிர்மறையில் அவற்றை அதிகாரம் செய்து கண்டிப்பதைவிட எதிர்மறைக்கான சூழ்நிலையையே ஏற்படாவண்ணம் தவிர்ப்பதே புத்திசாலித்தனமாகும். மூன்று வயதில் குழந்தைகள் தாய்தந்தையரைப் பின்பற்றுகின்றன. எல்லா வீட்டு வேலைகளிலும் பங்கெடுத்துக்கொள்ள ஆர்வம் காட்டுகின்றன. இந்தக் காலத்தில் பெற்றோர்கள் மிகவும் கவனிப்புடன் நடந்து கொள்ளுதல் வேண்டும். நான்கு வயதில் கற்பனைத்திறன் உண்டாகிறது. தாங்கள் பார்த்தவை கேட்டவைகளைப் பாவனையினால் செயலில் காட்டுகின்றன. அப்போது குழந்தைகட்குக் குட்டிச் சுவர்களும் தலையணைகளும் வாகனமாகிவிடும்.

ஊதல்கள் சத்தத்துடன் குழந்தைகளே ரயிலாக மாறிவிடும். பொம்மைகளை இடுப்பில் வைத்துக்கொண்டு தாயாகிவிடுவார்கள். இது பிறர் செயலைப் பிரதி செய்யும் காலம்.

கதை கேட்டல் குழந்தைகளுக்கு மிக்க இனிமையானது. சிறந்த வீரக்கதைகளைக் கூறியே ஜிஜீபாய் சிவாஜியைப் பெரிய வீராதிவீரனாக்கினர் என்று சரித்திரம் கூறுகிறது. அதிலும் குழந்தைகட்குக் கேட்ட கதையையே கேட்க விருப்பம் அதிகம்; மறந்து நாம் சிறிது மாற்றிக் கூறினோமானால் அவற்றை உடனே திருத்திவிடும். இக்காலத்தில் பக்தி நிறைந்த கதைகள், அடியார்களின் வரலாறு, வீரர்களின் சரித்திரம், வாய்மையால் பெரியோர்கள் பெற்றபேறு, நேர்மையினால் ஏற்படும் நன்மைகள் முதலிய கருத்துக்கள் நிறைந்த கதைகளைக் கூறுதல் அவசியம். இத்தகைய கருத்துக்கள் செறிந்த இலக்கியக் கதைகளைவிடக் குழந்தைகள் தினந்தோறும் காணும் உயிரற்ற பொருள்களாகிய மேஜை, நாற்காலி, பென்சில் முதலியவை, நாய், குதிரை, பசு, யானை, காக்கை, குருவி, கழுகு முதலிய மிருகங்கள்—பறவைகள் பேசுவது போன்று கற்பனையால் புனையப்பெற்ற கதைகளில் மேற்கூறிய கருத்துக்கள் அமையுமாறு கதை கூறினால் அவை எளிதில் குழந்தைகள் மனத்தில் பதியும். அவற்றின் உயர்வையும் அறிவார்கள். இதனால் ஞாபகசக்தி வளர்வதன்றித் தாம் எவ்வாறு இருக்கவேண்டும் என்ற தன்னம்பிக்கை உணர்வையும், அவர்கள் திறனுக்கேற்றவாறு தேர்ந்தெடுத்துக் கொள்ளத்தக்கவாய்ப்பும் ஏற்படுகிறது. தெய்வபக்தியுள்ளவர்களைப் பார்த்துப் பழகும் குழந்தைக்குத் தெய்வபக்தியும், சுகாதாரப் பழக்கமுடையவர்களுடன் கலந்துறவாடும் குழந்தைக்குச் சுகாதாரப் பழக்கங்களும் ஏற்படுவது கண்கூடு.

இசையின் இனிமைக்கு இசையாத குழந்தைகளே இல்லை. கதையும் பாட்டும் குழந்தையின் மனப்பண்பை உறுதியுடையதாயும் உருக்கமுடையதாகவும் செய்கிறது. சில குழந்தைகள் இசையில் - பாட்டில் - ஈடுபட்டு அதேபோன்று பாடக் கற்றுக்கொள்கின்றன. சுறுசுறுப்பான குழந்தைகள் இசைக்கேற்ற அங்க அசைவுகளையும் ஆட்டங்களையும் தாமாகவே செய்கின்றன. இக்குழந்தைகட்கு நடனம் பயிற்றுவித்தல் நல்லது. இதனால் குழந்தையின் மனம் உற்சாகமடைவதன்றி அங்க

அசைவுகளைக் கட்டுப்படுத்தவும் சமனப்படுத்தவும் கற்கின்றன. எனவே நேராக நிற்கவும் நடக்கவும் பயிற்சி ஏற்படுகிறது. ஒரு விதத்தில் இசையின் தாளக்கட்டிற்கேற்ப அசைவுகள் ஏற்படுத்துவதால் சூழ்நிலைக்கேற்ப உள்ளப் போக்கையும் சமனப்படுத்த இக்குழந்தைகள் பயிற்சி பெறுகின்றன.

ஐந்து வயதில் குழந்தைகள் பள்ளிக்குச் செல்கின்றன; பிறர் சொல்லுக்குக் கட்டுப்படுகின்றன; சிந்திக்கின்றன; செயல் ஆற்றுகின்றன. இந்தக் காலத்தில் வீட்டில் உருவாகிய ஒழுக்கங்கள் நிலை பெறுவதால் வெளிச் சூழ்நிலைச் சோதனைகள் அவற்றைக் குறைவாகவே பாதிக்கின்றன. நாவையும் மனத்தையும் கட்டுப்படுத்தி ஒரு நியதிக்குக் கொண்டுவர ஆசிரியரின் கல்வி போதனை அறவுரைகளும் உதவுகின்றன. குழந்தைகளுடன் கூடி விளையாடுவதால் தன்னடக்கம், பொறுமை, கோபத்தை அடக்கல், விட்டுக் கொடுத்தல், முயற்சி, சகிப்புத்தன்மை, பிறருக்குக் கீழ்ப்படிதல், மற்றவரிடம் அன்பாகப் பழகுதல் முதலிய பண்புகள் உருவாகின்றன.

## உறையும் மனை

இவ்வாறு பண்பாட்டின் வழிப் பழக்கமடைகின்ற குழந்தைகளின் வாழ்க்கை சுதந்திரமாக வளர ஆரம்பிக்கிறது. அவற்றின் வேலைகள் ஒரு நியதிக்குட்பட்டு இயங்க ஆரம்பிக்கின்றன. பாரதியார் கூறுவதுபோன்று,

காலை எழுந்தவுடன் படிப்பு பின்பு
கனிவு கொடுக்கும் நல்ல பாட்டு
மாலை முழுதும் விளையாட்டு—என்று
வழக்கப்படுத்திக் கொள்ளு—பாப்பா.

என்ற நியதி ஏற்படுகிறது. இந்நிலையில் குழந்தையின் வாழ்க்கை செப்பமடையச் செய்ய வேண்டும் பொறுப்பு வீட்டில் பெற்றோருடையதாகவும், வெளியில் பொது மக்களுடையதாகவும் பள்ளியில் ஆசிரியருடையதாகவும் இருக்கிறது. அறிவு வளர வளர, வளர்ச்சிக்கேற்ப பொருள்களின் அறிவையும் புகட்டல் வேண்டும். நல்லது-தீயது, நியாயம்-அநியாயம் முதலியவற்றைப் பகுத்து அறியச்செய்தல் வேண்டும். ஆர்வத்திலும் ஆராய்ச்சியிலும் அலைபாயும் குழந்தை உள்ளத்தைச் சோம்பித் திரிய விடலாகாது.

தன்மதிப்பு, நிதானம், மனவலிமை, பிறர் உணர்ச்சியை மதித்தல் முதலிய நற்பண்புகளைப் பழக்கத்தில் கொண்டுவரல் வேண்டும். இவற்றை நேரடியாகக் கற்பிப்பது எளிதன்று. இந்தச் சந்தர்ப்பங்களில் பெரியவர்கள் நடந்துகொள்ளும் முறையைக் கொண்டே குழந்தை இக்குணங்களை மறைமுகமாகப் பயில்கின்றன. நேரடிக் கண்டிப்பில் கட்டாயம் செய்வதால் எதிர்ப்பு உணர்வே வளரும்.

குழந்தையிடம் கட்டுப்பாட்டுடன் நடந்துகொள்வதன் நோக்கம் அவர்கள் தங்களைக் காத்துக்கொள்வதற்கான வழியைக் கற்றுக்கொள்வதற்கே. மனித வாழ்க்கையில் பகைமையும் கோபமும் பலவீனமான குணங்கள். இதனால் முன்னேற்றம் தடைப்படுவதன்றித் தோல்வியும் அவமானமும் ஏற்படுகின்றன. எனவே மனத்தைக் கட்டுப்படுத்திச் செயல்களைச் செய்யக் குழந்தைகளை ஊக்குவித்தல் வேண்டும்.

கடவுள் அன்புமயம்; 'அன்பே சிவம்'; குழந்தையின் பிஞ்சு மனத்தை இயற்கையில் புதைந்து கிடக்கும் அழகைக் காணவும் அதைச் சுவைக்கவும் பயிற்றுவித்தல் வேண்டும். இயற்கையின் வனப்பில் மரம், இலை, பூ, பூச்சிகள், பறவைகள் - இவற்றின் அமைப்பில் எல்லாம் கடவுளின் அளவற்ற சக்தியும் உயர்வும் தெரிகின்றன. இவை மனித வாழ்க்கைக்கு உற்சாகமளிப்பதன்றி - அநுபவிக்க அன்றி - அழிப்பதற்கு அன்று என்ற உயர்ந்த பண்பாடு ஏற்பட ஏதுவாகிறது. அழ்குஉணர்வும் அன்புணர்வும் உள்ள உள்ளத்திலேயே ஆண்டவன் உறைவான்.

பண்பும் பயனும் செறிந்த பிற்கால வாழ்விற்குப் பிள்ளைப் பருவம் ஒரு ஒத்திகை. எனவே அதில் அமையும் ஒழுங்கும் ஒழுக்கமும் உறுதியும் ஊக்கமுமே வாழ்விற்கு இன்பமும் ஒளியும் வழங்கும். 'போலச் செய்யும்' (Imitation) ஒரு பருவம் பிள்ளைப்பருவம். மனித வாழ்க்கையின் அடிப்படையாக அப்பருவம் அமைகிறது. அத்தகைய நுட்பம் வாய்ந்த பருவத்தில் தன்னைச் சுற்றியுள்ளோர்கள் - வயது வந்தோர்கள் - வாழும் " அறிவறிந்த - உணர்வு நிறைந்த - ஒழுக்கம் செறிந்த வாழ்வைப் பார்த்தே பிள்ளைகள் தம் வாழ்வை உருவாக்கிக்கொள்கின்றனர். இப்பெரிய உண்மையை ஆழ உணர்ந்து, வயது வந்தோர் பொறுப்போடு நடந்துகொள்வது பிள்ளை வளர்ப்பிற்குச் செய்யும் மிகப் பெரிய தொண்டு.

பிள்ளை வளர்ப்பில் சைவநெறி தழைத்தோங்கச் சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது 'அற்புதத் திருவந்தாதி' பாடிய காரைக்கால் அம்மையாரின் குழந்தைப் பருவ வாழ்க்கை. திருத்தொண்டர் வரலாற்றைப் பெருங்காவிய மாக்கிய சேக்கிழார் பெருமான் சிந்தனையைப் பெரிதும் கவர்ந்த அந்த அருள் வாழ்க்கைப் பண்பை ஆராய்ந்து பயன் கொள்ளல் அறிவுடையோர் கடமை.

பிள்ளை வளர்ப்பில் சிவநெறியைப் போற்றுவதன் வாயி லாக அத்தொண்டைச் செய்கின்ற பெற்றோர்களும் - பெரிய வர்களும் சிவநெறியை வளர்ப்பதிலும் - சிவநெறியில் வாழ் வதிலும் சிறந்த பங்கு கொண்டவராகின்றனர். பிள்ளை வளர்ப் பிலேயே சிவநெறி சேர்ந்தால்தான் பின்னர் அப்பிள்ளைகளால் உருவாகும் பெரியவர் உலகிலும் சிவநெறி தழைக்கும். குழந்தையே கடவுள்; கடவுள் நெறியே சைவம்.

**குழந்தை வாழ்க! கடவுள் நெறியாம் சைவம் வாழ்க!**

# மங்கையர் வாழ்வில் சைவம்



திருவாட்டி வித்துவான் சிவ. மீனுட்சிசுந்தர சிவை அவர்கள்

அன்பறிவாற்றல்கள் மிக்க செம்பொருள் துணிவு சேர் தலைவர் அவர்களே! அருள் நிறை அன்னை நல்லோர்களே! உடன் பிறப்பாளர்களே! உங்கள் அனைவர்க்கும் என் உளம் நிறைந்த அன்பு உரித்தாகுக.

## சிவம்—சைவம்

சீர்பெறு சமாசத்தார் எளியேனைப் பேசுமாறு பணித்த பொருள் "மங்கையர் வாழ்வில் சைவம்." எனப்படும். இதனைப் பேசுவதற்கு எனக்கு ஒரு வாய்ப்பளித்த அவர்களுக்கு எனது உளங்கலந்த நன்றி. சைவம் என்னுஞ் செந்தமிழ்ச் சொல் சிவம் என்னும் பெயர்ச் சொல்லடியாகத் தோன்றியது. சிவத் தொடர்புடையது சைவம் என்ருகும். பித்தத் தொடர்புடையது பைத்தியம் என்ருவது இதற்குக் காட்டாகும்.

### மங்கையரும் வாழ்வும்

மங்கையர் என்னுஞ் சொல் மங்கலம் என்னும் பெயர் அடியாகத் தோன்றியது. மங்கலம் என்பது நன்மை, இன்பம் முதலிய பல பொருளைத் தருவது. அவையனைத்தையும் உடையார் மங்கையராவார். வாழ்வு என்பது அனைத்துயிர்க்கும் இன்பம் உண்டாவதற்குரிய துணையாக நிற்பதென்பதாகும். சுருங்கச் சொல்லில் பிற உயிரை வாழ்விப்பதே வாழ்வாகும்.

ஒருவர் தனித்திருக்கின்ற பொழுது அவரது நிலையை வாழ்வு எனக் கூறுர். தனி வாழ்வு எனக் கூறப்படினும் அது பிழைப்பென்றே பொருள்படும், பிழைப்பென்பது சீவனம் என்னும் பொருள் தருவது. மனைவி, மக்கள் முதலிய குடும்பத்தொடு வாழ்வதே வாழ்வு எனப்படும். நுணுகி நோக்கின் தனி வாழ்வு எவருக்கும் ஏற்படாது. பெற்ருேரைச் சார்ந்தோ, பிற உதவியாளரைச் சார்ந்தோ ஒருவர் வாழ்வதுதான் இயல்பாகும். அந்த முறையால் நோக்கினும் பிறர்க்கு உதவியாக நின்று வாழ்வதே வாழ்வு என்பதாகும்.

எனவே, பிறரைப் பேணுந் தன்மை இயல்பாகப் பிறப்பிலேயே அமைந்த சிறப்பினையுடைய மங்கையர் வாழ்வில், சைவம் எங்ஙனம் நிலைத்திருப்பது என்பதே அச் சொற்ருெடரின் பொருளாகும்.

### சைவத்தின் புண்ணியக் கண்

சைவத்திற்குப் புண்ணியக் கண் இரண்டெனச் சேக்கிழார் அடிகளால் புகழ்ப்பெற்ற தன்மையினைச் சிறிது நோக்குவாம்:—

“ அருட்பெருகு தனிக்கடலும் உலகுக் கெல்லாம்
அன்புசெறி கடலுமாம் எனவும் ஓங்கும்
பொருட்சமய முதற்சைவ நெறிதான் பெற்ற
**புண்ணியக்கண் ணிரண்டெனவும்** புவனம் உய்ய
இருட்கடுவுண் டவருளும் உலகம் எல்லாம்
ஈன்றுள்தன் திருவருளும் எனவுங் கூடித்
தெருட்கலைஞா னக்கன்றும் அரசுஞ் சென்று
செஞ்சடைவா னவர்கோயில் சேர்ந்தார் அன்றே.”

ஞானசம்பந்தப் பெருமானும் திருநாவுக்கரசு நாயனரும் சீர்காழிப்பதியில் இறைவனை வணங்கச் சென்றவிடத்து, இரு

பெருமக்களும் உயர்ந்த சைவநெறி பெற்ற புண்ணியக் கண்ணிரண்டும் போன்று போந்தனர் என்று விளக்கப்பட்டுள்ளனர்.

## கண்ணும் துணையும்

அவ்விருவரும் முறையே, அகநிலையில் திருத்தோணி புரத்துப் பெரியநாச்சியாரால் திருமுலைப்பால் கொடுக்கப் பெற்றும், திருவதிகை வீரட்டானத்து இறைவனால் சூலைநோய் கொடுக்கப்பட்டும் ஆட்கொள்ளப்பட்டவராவார். அதுபோல் புறத்து உலகத்திடையே சைவநெறியைப் பரப்புவதற்குக் கருவித் துணையாய் நின்றவர்கள், முறையே மங்கையர்க்கரசியாரும், திலகவதி அம்மையாரும் ஆவர். இந்நாளில் நால்வரால் நிலைத்திருக்கும் நம்முடைய செந்நெறி நிலைபெற்றதற்குத் துணைக் காரணமாக உள்ளவர்கள் மங்கைமாரிருவரும் ஆவர். அந்நால்வரும் வினைமுதற் காரணமேயாவர். வினைமுதற் காரணமெனினும், நிமித்த காரணமெனினும் ஒன்றே.

எங்கணும் திருவெண்ணீறு பரப்புவதற்குக் கருவியாக இருந்தவர்கள் சம்பந்தர், அப்பர் ஆகிய இருவராவார். அச் செயலுக்கு வினை முதலாக நின்றவர்கள் முறையே மங்கையர்க்கரசியாரும், திலகவதி யம்மையாரும் ஆவார்கள். மங்கையர்க்கரசியார் வினை முதலாக நின்ற தன்மையினை வரும் சேக்கிழார் அடிகள் திருப்பாட்டால் உணர்க.

“ மங்கையர்க்குத் தனியரசி எங்கள் தெய்வம்
வளவர்திருக் குலக்கொழுந்து வளைக்கை மானி
செங்கமலத் திருமடந்தை கன்னி நாடாள்
தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப் பாவை
எங்கள்பிரான் சண்பையர்கோன் அருளி னாலே
இருந்தமிழ்நா டுற்றஇடர் நீக்கித் தங்கள்
பொங்கொளிவெண் திருநீறு பரப்பி னாரைப்
போற்றுவார் கழல்எம்மால் போற்ற லாமே.”

## சைவம் பரப்ப உதவிய பெண்மணிகள்

சிவபெருமானின் திருவடித் தொண்டாம் சைவம் பரப்புஞ் சிறப்பினை அவனருளால் நால்வர் பெருமக்களும் பொன்னினாலும், பெண்ணினாலும் இவ்வுலகத்திற்கு உணர்த்தி உலகத்தை

உய்வித்தனர் என்பதைப் பின்வரும் திருத்தணிகைப் புராணத் திருப்பாட்டால் அறியலாம்.

"முன்னாலும் துளைக்கரத்தோன் முருகவேள்
 பிடித்திழுத்து மொய்ம்பில் தாவப்
பின்னாலும் கதிர்ச்சடிலப் பிஞ்ஞகனார்
 திருத்தொண்டின் பெருக்க வீறு
பொன்னாலும் பெண்ணாலும் அறிவுறுத்திவ்
 வுலகினிடர் பொன்றி ஆண்ட
அந்நால்வர் பதகமலம் புகழ்ந்திறைஞ்சி
 அரந்தை தீர்வாம்."

'பெண்ணாலும்' என்றதனால் ஞானசம்பந்தப் பெருமான் திருமருகலில் செட்டிப் பெண்ணின் பாம்பு கடித்திருந்த மணவாளனை உயிர்ப்பித்ததும், திருமயிலாப்பூரில் பூம்பாவை அம்மையாரை என்பு வடிவத்தினின்றும் எழுப்புவித்ததும் ஆகும். அது மட்டுமன்று, மங்கையர்க்கரசியாரைக் கருவியாகக் கொண்டு சைவம் பரப்பியதுமாகும். திருநாவுக்கரசு நாயனார் வானுலகத்தினின்றும் வந்திறங்கி மயக்கத்திற்குரிய செயல்களைச் செய்த பெண்களால் உணர்த்தினர். அதாவது தன் நிலையில் திரியாது நின்று சைவ உண்மையை நிலைநாட்டினர். அது மட்டுமல்லாது திலகவதியம்மையார் வினை முதலாக நின்று அவரைச் சைவத்திற்குப் புகுத்தினமையாலும் உணரலாம். இதுபோல் மங்கையர்க்கரசியாரும் வினைமுதலாக நின்று பாண்டியனையும், பாண்டிய நாட்டையும் சைவத்திற் புகுத்தினர் என்பதை நினைக. சுந்தரமூர்த்தி நாயனார் பரவையாரோடு கூடி வாழ்ந்ததால் அறியலாம். மாணிக்கவாசகப் பெருமானார் தில்லையின்கண் புத்தரோடு வாதிட்ட இடத்து வந்திருந்த இலங்கை மன்னனின் மகளுடைய ஊமையை நீக்கினமையால் பெறப்படும்.

## ஒன்றே குலம்

இதுபோல் மங்கையர் வாழ்வினிடத்தில் சைவம் என்றது அன்றும், இன்றும், என்றும் நிலைத்திருப்பதற்குப் பல வரலாறுகள் காணலாம். சைவத்தின் கொள்கை "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின் நமனில்லை" என்பு

தாம். நமன் என்பது பிறப் பிறப்பாகிய இருவகைத் துன்பம் என்பதாம். 'ஒன்றே குலம்' என்பது உரை சேரும் எண்பத்து நான்கு நூறுயிரம் ஆகிய வேறுபாடுள்ள உடம்பினைப் பெற்று வாழ்கின்ற உயிர்கள் அத்தனையும் தங்கட்கும், தாங்கள் வாழும் உடல் உலகங்கட்கும் இயற்கை அம்மையப்பராக, என்றும் செம்மையோடு பொன்றாது நின்று நிலவும் சிவபெருமான் ஒருவனே ஈன்றவனுவான். அம்முறையால் அனைத்துயிரும் சிவனது அடிமையாகிய தொண்டர் குலமாகும். தொண்டர் குலமெனினும், தொண்டக் குலமெனினும், சிவக்குலமெனினும் ஒன்றேயாம். நல்ல குலமெனினும் இப்பொருளையே தரும். இவ்வுண்மை "குலம் பொல்லேன் குணம் பொல்லேன்" என்னும் அப்பரடிகள் திருப்பாட்டால் உணரப்படும்.

## அன்பே சிவம்

"குலம் பொல்லேன்" என்பது சிவனை நினையாத தாழ்ந்த சூழ்நிலையாகிய சமணத்தில் சேர்ந்து, சிவனைப் பழித்து வந்த குற்றத்தை உடையேன் என்பதாம். சிவனைப் பழிப்பதென்பது அன்பைப் பழிப்ப தென்பதாகும். அஃது "அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்" என்னுந் திருமந்திரத் திருப்பாட்டால் உணரலாம்.

## சைவம் என்பது அன்பும் அருளும்

அன்பு என்பது பிற உயிர்களுக்குத் துன்பம் செய்யாமல் இன்பம் செய்வதும், இன்பத்திற்குத் துணை நிற்பதும் ஆகும். இவ்வன்பினுல் மட்டும் அருள் பெருகும். பிற உயிர்க்குத் துன்பஞ் செய்து தம்முயிர்க்கு அன்பு செய்வாரிடத்து அருள் பிறவாது என்பதனை,

> "தன்னூன் பெருக்கற்குத் தான்பிறிதூன் உண்பான்
> எங்ஙனம் ஆளும் அருள்"

என்னும் தமிழ் மறையால் அறியலாம்.

எனவே, கொல்லாமையும், கொன்றதனுல் வரும் புலாலைத் தின்னுமையும், இவ்விரு பெரு நன்மையும் நீங்காமலிருப்பதற்கு ஒருவனுகிய சிவபெருமானை மறவாமையும் வேண்டும் என்பதாகும். இவையனைத்தையும் உள்ளடக்கியிருப்பதே

சைவம் என்னுஞ் சொல்லாகும். வழக்கத்தில் சைவம் என்பது கொலை புலை இல்லாமையையும், சைவர் என்பது அவ்விரண்டினையும் வழுவாது உயிரின் சிறப்பாகக் கைக்கொண்டு ஒழுகுவோர் என்பதையும், கற்ருேர் கல்லாதார் ஆகிய எல்லா மக்களிடையும் வழங்கிவரக் காண்கிறேம்.

## திருநீலகண்டர் பிழை

திருநீலகண்டத்துக் குயவனுர், சைவச் செந்நெறியில் உறைத்து நின்ற பெருமை, அவர்தம் மனைவியாரின் வாழ்வால் வாய்ந்ததாகும். கற்பின் ஆற்றலால் கடந்த இளமையை மீண்டும் பெற்ற கற்பரசியல்லவா அவ்வம்மையார்? அந்நாயனுர் செய்த பிழையின்பொருட்டு அவரை மட்டுமின்றித் தன்னையும் ஒறுத்துக் கொண்டமை செயற்கரிய செயலாகும். உலகியல் முறையில் பரத்தையிற் பிரிந்து வருதல் அல்லொழுக்க வழுவாகாது. நல்லொழுக்க வழுவமைதியாகும். ஆனல் இவ்வொழுக்கம் உடலோடு ஒழிவதொன்ருகும். உயிரொடு பொருந்தி வருகின்ற நல்லொழுக்கமாகிய சமய வாழ்விற்குப் பரத்தையிற் பிரிந்து வருதல் பொறுக்கலாற்ருப் பெருங்குற்றமாகும். அவ்வுண்மை,

> “ பொருட்பொருளார் புன்னலந் தோயார் அருட்பொருள்
> ஆயும் அறிவி னவர் ”

என்னும் திருக்குறளால் உணரலாம்.

## சைவ வாழ்வு

ஆதலின், நாயனுரின் இக்குற்றத்தைப் பொறுக்காது ஆணையிட்டு அவரைத் தூய்மைப் படுத்தினர். தூய்மையாவது தவருகக் கொண்ட இன்பத்தை நேர்மையான வழியிலும் கொள்ளாது அகற்றுவதேயாகும். இந்த முறையில், ஆண்டவனை அடையும் திருநெறியில் ஒழுகுவார், ஒருவனும் ஒருத்தியுமாய் வாழவேண்டும் என்ற உயர்ந்த உண்மையை நிலைநாட்டி, சைவத்தைத் தம் வாழ்க்கையில் கண்டார்.

## திருநீல நக்கரின் செயல்

இதுபோல், திருநீல நக்க நாயனுரின் மனைவியார் அவர் தம் இல்வாழ்விற்கும், சிவ பூசையாம் சிறப்புத் தொண்டினிற்

கும், அகத்தும் புறத்தும் துணை நின்று வந்து தம் வாழ்வில் சைவத்தை நிலைநாட்டினர். புறத்தே திருக்கோயிலில் அந் நாயனர் சிவபூசை புரிவதற்கு வேண்டும் துணையாக ஒருநாள் பணி செய்து கொண்டிருந்தனர். அப்போது சிவபெருமான் மேல் ஒரு சிலந்தி வீழ்ந்தது. அம்மையார் ஆண்டவனுக்கு ஊறு நேராவண்ணம் வாயினல் ஊதி உமிழ்ந்து அதனை அகற்றினர். அதனைக் குற்றமென்றெண்ணி அந்நாயனர் அம்மையாரை விலக்கித் தாம் மட்டும் மனைக்குச் சென்ருர். அம்மையார் திருக்கோயிலிலேயே சிவனை நினைந்து அமர்ந்து விட்டனர். நாயனர் கனவில் சிவபெருமான் தோன்றி, அம்மையாரால் ஊதப்படாத தன் முதுகுப் புறத்தில் கொப்பு ளங்கள் இருக்கின்றன என்று காட்டினர். உண்மை உணர்ந்த நாயனர் அம்மையாரை அன்புடன் அழைத்து வந்து பண்டு போல் கூடி வாழ்ந்தனர்.

## இளையான்குடிமாறரின் இல்லாள் திறம்

நள்ளிரவில் நம்பனுக்கு அமுதளித்த நங்கையார் இளை யான் குடிமாற நாயனரின் மனைவியார். அவர் வயலில் பகல் விதைக்கப்பட்ட .நெல் முளையை வாரிக்கொண்டு வரும்படி கணவனருக்கு உற்றுழி யுதவும் அறிவு கொளுத்தினர். கொண்டு வந்த நெல்லை மாரிக் காலத்தில் நள்ளிரவில் வந்த சிவனடியா ராம் நல்விருந்துக்கு நல்லமுதாக்கிய முறைமையால் தம் வாழ் வில் சைவம் நிலைத்திருப்பதைக் காட்டினர்.

## குங்கிலியக்கலையரின் மனைவி

குங்கிலியக் கலய நாயனரின் மனைவியாராகிய அம்மை யாரும் குடும்பத்தாரின் உணவின் பொருட்டு 'ஈகை அரிய இழை'யாகிய தாலியைக் கொடுத்து நெல் வாங்கி வரும்படி கணவனரைக் கேட்டுக் கொண்டார்கள். அவர் நெல் வாங்காது எதிரில் கண்ட குங்கிலியத்தை வாங்கி, திருக்கோயிலுக்குச் சென்று சிவத்தொண்டு புரிந்தனர். ஆண்டவன் இதுகாறும் பெற்ற நாயனரின் பொருளாகிய குங்கிலியத்திற்குக் கைம்மாறு செய்யவில்லை. அம்மையாரின் திருத்தாலியின் பொன்னல் பெற்ற குங்கிலியத்திற்கு ஈடு எடுப்பின்மையால், அதனை யேற்றுக்கொண்ட ஆண்டவன் அம்மையாரின் பொருட்டு ஈடும்

எடுப்புமில்லா எல்லா வாழ்வினையும் மனையகத்துப் பனையள வாகக் குவித்துக் கொடுத்தருளினன்.

இவ்வரலாறுகளால் மங்கையர் வாழ்வில், சைவம் பொங்கிப் பொலிந்து மிகுந்த தன்மைகளைக் காணலாம்.

## சிறுத்தொண்டர் மனைவியின் சீர்மை

இதுபோல், சிறுத்தொண்ட நாயனாரின் துணைவியாராகிய பிள்ளைக்கறி கொடுக்க உள்ளமிசைந்த பெண்ணின் நல்லாரும், தவத்தால் கிடைத்த தம் மகனாகிய சீராளனைக் கணவன் கருத்திற்கு ஒத்துக் கொலைக்குத் துணை நின்று கறி சமைத்தனர். பைரவராய் வந்த இறைவன் கறி உண்ணத் தொடங்குங்கால் பிள்ளையை அழைக்கும்படி கட்டளை இட்டனர். இருவருஞ் சென்று பிள்ளையை அழைத்தனர். அவ்வழைப்பில் சிறுத் தொண்டர் மைந்தா! வருவாய் என்றழைத்தனர். அம்மையார் தலைவர்பணி தலைநிற்பாராய்ப் பிள்ளை வரவேண்டியதற்குரிய காரணங்கள் பலவற்றையுங் கூறி அழைப்பாராயினர். அக் காரணங்களுள் தலைசிறந்தது "சிவனாரடியார் யாம் உய்யும் வகையில் உடன் உண்ண அழைக்கின்றார்" என்பதாம். அவ் வழைப்பினாலேயே பரமனருளால் பிள்ளையும் பள்ளியினின்றும் ஓடி வருவான்போல் வந்தனன். இந்த முறையில் மங்கையர் வாழ்வில் சைவம் தங்கி நிற்பதென்பதும் பெறப்படும்.

## அப்பூதியின் அன்பு

குடும்பம் முழுவதுமே சிவனருளால் பெற்ற திருநாவுக்கர சென்னும் திருமாமறையினைப் பெயராகக் கொண்டு திகழ்ந்தது அப்பூதியடிகளாரின் குடும்பம். அக்குடும்பத்தில் உயர் திணைப் பொருளாகிய பிள்ளைகளுக்கு மட்டுமன்றி, அஃறிணைப் பொருளாகிய மாடு அளவு நிறை முதலிய கருவிகள் வீடு மனை அறச்சாலை முதலிய நிலையங்கள் எல்லாம், திருநாவுக்கரசு நாயனாரின் திருப்பெயரையே பெற்றுத் திகழ்ந்தன. திருநாவுக் கரசு நாயனாரின் திருத்தொண்டைக் கேட்ட அளவாலே அவர்பால் அப்பூதியடிகளார்க்கு அளவிறந்த காதல் ஏற்பட்டது. அக்காதலால் இடையறாது அவரையே உள்குவாராயினர். உள்குதல் - தியானித்தல். திருவருளால் அக்காதலின் புற அடையாளமாக அவர்தம் திருப்பெயரை மேலே கூறியவாறு அமைத்து வழங்கி வந்தனர்.

திருநாவுக்கரசு நாயனுர் திருப்பழனத்தை வழிபட்டு வருகிற வழியில் அப்பூதி அடிகள் அமைத்த தண்ணீர்ப் பந்தரைக் கண்டனர். கண்டு அதில் தம் பெயர் பொறித்திருப்பதற்குக் காரணம் என்ன என்று ஆராய்ந்தனர். அதைத் தெரிந்து கொள்வதற்கு அப்பூதியார் மனைக்கு வந்தனர். அப்பூதியாரும், குடும்பத்தாரும் திருநாவுக்கரசு நாயனுரை வணங்கி விருந்தமுது உண்ணவேண்டுமென்று வேண்டி விண்ணப்பித்தனர். நாயனுரும் அதற்கிணங்கினர். மூத்த திருநாவுக்கரசு உண்கலத்திற்கு வேண்டிய வாழைக்குருத்தை ஈரும்பொருட்டுத் தோட்டத்திற்குச் சென்றனன். குருத்தை ஈரும்பொழுது பாம்பு கடித்தது. ஓடோடியும் வந்து குருத்தைத் தாயார் கையிற் கொடுத்துப் படிமேல் வீழ்ந்து மாண்டனன். மாண்ட மகன் விடத்தினுல் வீந்தான் என்று உண்மை தெரிந்து, சிறிதும் கலக்கமின்றி நாயனுருக்கு அமுது செய்விக்கத் துணிந்தனர். பிள்ளையைப் பாயிற் சுற்றிப் புறமனை முற்றத்தில் ஒருபக்கம் மறைத்து வைத்தனர்.

நாயனுரை அமுது செய்விக்க அழைத்தனர். நாயனுர் தாம் நீறணிந்து, இயல்புடைய இருவராகிய அப்பூதியார்க்கும், அவர்தம் மனைவியார்க்கும் திருநீறளித்துப் பிள்ளைகளுக்கு அளிக்கும்போது மூத்த திருநாவுக்கரசு எங்கே? என்று வினவினுர். அவர்கள் ‘இப்போது அவன் இங்கு உதவான்’ என்றனர். திருவருளால் உள்ளத்தில் உண்மை உணர்ந்த நாவுக்கரசர் “ஒன்றுகொலாம்” என்னும் திருப்பதிகம் பாடிப் பிள்ளையை எழுப்புவித்தனர். பின்னர் எல்லாருமாக இருந்து விருந்துண்டனர். அம்மையார் மனத்தடுமாற்றம் சிறிதும் இன்றிப் பிள்ளையினும் பெரிதாகச் சிவத்தொண்டினைக் கருதிக் கணவனேடு ஒத்துத் தொண்டுபுரிந்தனர். செயற்கரிய செய்கையைச் செய்து மாண்ட மகனை மறைத்து மறையவரை உபசரித்த தியாக அரசி அவர். இதனுல் மங்கையர் வாழ்வில் சைவம் எங்ஙனம் நிலைத்து நிற்கின்றதென்பது தெரியும்.

## மானக்கஞ்சாறரின் மகள் செய்த தியாகம்

மானக்கஞ்சாற நாயனுரின் மகளாரும், ஏயர்கோன் கலிக்காம நாயனுரின் மனைவியாருமாகிய அம்மையார், திருமணத்தின் முன்பு சிவனடியாராக வந்த சிவபெருமானுக்கு அவர்

வேண்டியவாறு தன் கூந்தலைப் பஞ்சவடிக்கு அரிந்துகொடுக்க இயைந்தனர். அதனால் தந்தையார் பேறுபெற்றார்.

### ஏயர்கோன் துணைவியாரின் சிறப்பு

ஏயர்கோன் கலிக்காம நாயனாராகிய கணவனார், நம்பியாரூரர் ஆண்டவனைப் பரவையார்பால் தூதாகப் போகச் செய்தது, கழுவாயில்லாத பெரிய வழுவென்று பகைமை கொண்டனர். இதனையறிந்த நம்பியாரூரர் ஆண்டவனிடத்து, அவரோடு தம்மை நட்பாக்கி வைக்க வேண்டுமென்று விண்ணப்பித்தனர். ஆண்டவனும் ஏயர்கோன் கலிக்காமருக்குச் சூலை நோயைக் கொடுத்து, நம்பியாரூரரைப் போய் அதனை நீக்குமாறு பணித்தனர். ஏயர்கோன் இடத்தும் நோய் நீக்க நம்பியாரூரர் வருகின்ற செய்தியைக் கூறினர். ஏயர்கோனார் முன் கொண்ட உறுதிப்படி நம்பியாரூரர் கண்ணில் விழிப்பதைவிட மாண்டுவிடுவது நல்லதென்று, கத்தியால் வயிற்றைக் கீறிக் கொண்டு மாண்டுவிட்டனர். மனைவியாரும் உடன் உயிர் நீக்கத் துணிந்தனர்.

அந்நிலையில் நம்பியாரூரர் வருஞ் செய்தியை அறிந்தனர். ஏவலாளரைக் கொண்டு வீட்டை அழகுபடுத்தி ஆரூரரை வரவேற்கச் செய்தனர். ஆரூரர்க்கு, ஏயர்கோனார் நோய் நீங்கி நன்றாய் உறங்குகின்றனர் என்று சொல்லுவித்தனர். அச்சொல்லில் ஆரூரர் உள்ளம் அமைதி பெறாமையினால் உள்ளே சென்று ஏயர்கோன் கலிக்காமர் நிலையினைக் கண்டார். தாமும் கத்தியினால் உயிரை மாய்த்துக் கொள்வதெனத் துணிந்தனர். ஏயர்கோனார் திருவருளால் உயிர்பெற்றெழுந்து, ஆரூரரை மாளவொட்டாது கையைப் பிடித்துத் தடுத்தனர். இருவரும் நண்பாய் இறைவனை வழுத்தினர்.

அம்மையார் இளமையில் தந்தையார் கருத்தொத்துச் சிவத்தொண்டிற்குத் துணை நின்றும், வாழ்க்கையில் கணவனார் கருத்தொத்துச் சிவத்தொண்டிற்குத் துணை நின்றும், மங்கையர் வாழ்வில் சைவம் என்பதனை நிலைநாட்டினர். அம்மையார் கணவனார் கருத்தொத்து நின்றமை, அவர் வாழ்ந்த காலத்துச் சிவனடியார்களைச் சிறப்பாக அவர் வரவேற்பதற்குத் துணை நின்றார். அதேபோல் அவர் மாண்ட பின்பும் ஆரூரரை வரவேற்றமையும், ஆரூரர் கண்ணில் தாம் விழித்தல் கூடாது

என்று உறுதிகொண்டிருந்த சிவத்தொண்டின் கருத்திற் கியைந்து திரையிட்டுத் தாம் அவரைக் காணுது நின்றமையும் புலப்படுத்தும்.

## காரைக்காலம்மையார் பெருமை

காரைக்காலம்மையார் சிவபெருமான்மாட்டுப் பிறந்து மொழிபயின்ற பின்னெல்லாம் காதல் சிறந்து வாழ்ந்தனர். ஆருயிர்கள் அனைத்திற்கும் இயற்கை உண்மைக் காதற் கணவன் சிவபெருமானேயாவர். அக்கொழுநனை அடைவதற்கு அற இயல்போடு கூடிய வழி இல்லறமேயாகும். அவ்வில்லறத் தில் உடல் ஓம்புவதும், அது வாயிலாக உணர்வு பெருகி உயிர் உய்யும் செந்நெறியினை ஓம்புவதும் தலைசிறந்த இருபெருங் கடமைகளாகும். முதற் கடமையாகிய உடல் ஓம்புவதற்கு ஒருவர்க்கொருவர் துணையாய்த் திகழ்பவர் காதலர் ஆவர். அம் முறையால் உலகத்துக் கொழுநர் அனைவரும் உடலுக்குரிய கொழுநரேயாவர். உயிருக்குரிய கொழுநர் ஒப்பில்லாத சிவபெருமானே ஆவர். உடலுக்குரிய கொழுநனைப் பேணு வோர் அவனது சுற்றத்தையும் பேணுவது போன்று, உயிருக் குரிய கொழுநனுகிய சிவபெருமானைப் பேணுவோர் அவனது சுற்றமாகிய சிவனடியாரையும் பேணி வருவர். சிவனடியாரைப் பேணும் தொண்டே சிறந்த சிவத்தொண்டும், இறப்பில் பெருந் தவமுமாகும். இவ்விரண்டினையும் இடையருது கைக்கொண்ட வர் காரைக்காலம்மையார் ஆவர்.

உடற்கணவன் கருத்தறிந்த அம்மையார் இனி இவன் துணையின்றித் தாமாகவே, உயிர்க் கணவனுகிய சிவபெரு மானை அடையவேண்டுமென்று உளங்கொண்டனர். அருளை வேண்டி அழகுற அமையப்பெற்ற உடம்பின் தசைப் பொதியைக் கழித்தனர். என்புருவாம் பேய்வடிவினை எய்தினர். சிவபெருமானைப் பாடினர். திருக்கயிலைக்குத் தலையால் நடந்து சென்றனர். அம்மையாரின் வருகையைக் கண்ட திருவருள் அம்மை வியப்புக்கொண்டனர். அம்மையாரின் பேரன்பினைப் பாராட்டினர். ஆண்டவன் ‘அம்மையே’ என்று செம்மை ஒரு மொழியால் அருகுவர அழைத்தனன். அம்மையாரும் ஆண்ட வன்பால் இறவாத அன்பு முதலிய வேண்டுதலைப் புரிந்து, ஆண்டவன் ஆணை வழி திருவாலங்காட்டிற்கு வந்து, திருப்பதி

கம் பாடி, ஆண்டவன் திருவடியின் கீழிருந்து, அவர் திரு நடனம் கண்டு என்றும் இன்புற்றிருக்கின்றனர்.

மங்கையர் வாழ்வில் உடற்கணவனோடு ஒத்துழைத்துச் செய்யும் புறவாழ்விலும், சைவமே நிலைத்து நிற்பது அம்மையார் அடியார்க்கமுது முதலியன அளித்த திருத்தொண்டால் அறியலாம்.

## அமர் நீதி அம்மையார் அருமை

அமர்நீதி நாயனாரின் மனைவியாரும் கணவனாரின் சிவத் தொண்டிற்கு ஒத்த கருத்தினராய் இருந்து துணை புரிந்தார். ஆண்டவன் கொடுத்து மறைத்த கோவணத்தின் நிறையின் பொருட்டுக் கணவனுடன் துலைமேல் ஏறி நின்றனர். துலை சமமாக நின்று அதுவே விமானமாக மாறி வீடு பேறெய்தினர்.

இதுகாறும் கூறியவற்றால், மங்கையர் தத்தம் கணவன்மார் செய்கின்ற சிவத்தொண்டினிற்குத் துணை நிற்பதும், கணவன்மார் சிவத்தொண்டில் வழுவினால் அவரை அவ்வழுவினின்றும் கைதூக்கி எடுத்துச் சிவத் தொண்டில் நிலைநிறுத்துவதும், தாங்கள் என்றும் ஒன்றுபோல் வழுவாது சிவத்தொண்டு புரிந்து வருவதும், தம் மக்களையும் மற்றுமுள்ள சுற்றத்தாரையும் சிவத்தொண்டு புரியுமாறு செய்வதும், பெருங்கடனாகக் கொண்டு திகழ்பவர்கள் என்பது தானே விளங்கும்.

## திருநீறும் மங்கையரும்

எனவே, அன்றும் இன்றும் என்றும் பொன்றாது சைவம் நிலை நிற்பது மங்கையரால்தான் என்பது உறுதி. "நீற்றுப் பதிகம் நிகழ்த்துங்காலை மாற்றுப் பறையின் வரலாறாகும்" என்பதால், திருவருளின் திருவுரு திருநீறு என்று தெரிகிறது. சைவத்திற்குச் சிறந்த சின்னமாகிய திருநீற்றின் உருவம் அம்மையார் என்றால், அதனைப் பரப்பும் உரிமையும் மங்கையர்களுக்கே சிறப்பாக உரியது என்பது பெறப்படுகிற உரிமையல்லவா? ஆதலின் அப்பெண்ணின் நல்லார்கள்போல் இன்றும் பெண்கள் ஆண்டவனை வழிபட்டுச் சைவ சமயத்தை நன்கு வளரச் செய்வார்களாக!

# சமய வளர்ச்சியில் மங்கையர் பங்கு



திருவாட்டி மா. ரா. தமிழரசி அவர்கள், B.A., சென்னை

## ஆண்மையும் பெண்மையும்

உலகம் ஆண்மை, பெண்மை என்னும் இரண்டு ஆற்றல்களும் சேர்ந்த பேராற்றல் ஒன்றினால் படைக்கப் பெற்று, இயங்கப் பெறுகின்றது என்னும் உண்மையை இன்றைய விஞ்ஞானம் மெய்ப்பித்துள்ளது. பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட காலத்தில் வாழ்ந்த மக்களுள் ஒரு பகுதியினர் ஆண் ஆற்றலைப் பெரிதென நம்பி அதனை ஆண் கடவுளராக உருவகப்படுத்தி வழிபடலாயினர்; வேறு சிலர் அப் பேராற்றலைப் பெண்மை என்று நம்பினர்; அவ்வாற்றலைப் பெண்ணாகவே உருவகப்படுத்தித் தாய்மை வணக்கத்தை மேற்கொண்டனர். பண்டை வரலாறுகளில் இந்த உண்மையைக் காணலாம். ஆடவர் செல்வாக்குப் பெற்ற நாடுகளில் ஆண் கடவுளர் வணக்கம் சிறந்திருந்தது. பெண்கள் சமுதாயச் சிறப்புற்றிருந்த நாடு

களில் தாய்மை வணக்கம் உயர்ந்த நிலையில் விளங்கியது. தாய்மை வணக்கமே 'சாக்தேயம்' என்பது.

காலப்போக்கில், ஆண்மகன் பெண்ணின் இன்றியமையாமையையும் சிறப்பியல்புகளையும் நன்கறிந்து அவளைத் தனக்கு நிகராக மதிக்கத் தொடங்கினான். அது முதல் தந்தை வணக்கமும் தாய் வணக்கமும் சமமாகக் கருதப்பட்டன. இங்ஙனம் ஆண்மை-பெண்மை ஆகிய பேராற்றல்களை ஒன்றுபடுத்தி ஒரே திருவுருவத்தில் கண்ட முதல் மனிதன் பண்டைத் தமிழன் என்று கூறுதல் பொருந்தும். அவன் தான் வழிபட்ட பேராற்றலின் இடப்பகுதியைப் பெண்ணாகவும் வலப்பகுதியை ஆணாகவும் உருவகப்படுத்தினான். அந்தத் திருவுருவமே மாதொரு பாகன் திருவுருவமாகும். மனித அறிவே உருவமற்ற கடவுளுக்கு உருவைக் கற்பிக்கின்றது என்பது உலகம் அறிந்த உண்மை. இதனை நோக்க, மாதொரு பாதியன் திருவுருவம் பண்டைத் தமிழனுடைய அறிவாற்றலையும், குடும்ப நிலையையும் நாகரிகத்தையும் பண்பாட்டையும் நமக்கு நன்கு உணர்த்துகிறதன்றோ?

உலகம் வளர ஆண்மையும் பெண்மையும் தேவை. ஆண்மையும் பெண்மையும் கலந்து இயங்கும் ஒவ்வொரு துறையிலும் ஆடவரும் பெண்டிரும் சமபங்கு மேற்கொண்டால்தான் அத்துறை செம்மைப்படும். வீடு நோக்கி வருகின்ற விருந்தினரைக் கணவனும் மனைவியும் சேர்ந்து வரவேற்றால்தான் விருந்தினர் மகிழ்வர். இவ்வாறே பெண்டிர் ஒத்துழைப்பில்லாமல் ஆடவர் சமயத் துறையில் ஈடுபடுதல் இயலாது. நமது நாட்டில் இன்றுள்ள அளவிற்குச் சைவம் வளர்ந்திருப்பதற்கு ஆடவரும் பெண்டிரும் சேர்ந்து மேற்கொண்ட முயற்சியே காரணமாகும்.

## பெரியபுராணப் பெண்மணிகள்

நாயன்மார்களின் சிறப்புக்கு அவர்கள் மனைவியர் எந்த அளவிற்கு உதவினர் என்பதைச் சேக்கிழார் பெருமான் தமது நூலில் பல இடங்களில் கூறிச் செல்கிறார். விருந்துண்ண வந்த அடியார்களுக்கு உணவைத் தயார் செய்தவர் அம்மங்கையரேயாவர். நாயன்மார்கள், வந்த அடியார்களின் கால்களை விளக்க, அவர்தம் மனைவிமாரே நீரூற்றினர் என்

பதை அறிகிறோம். கணவர் பூசை செய்யும்போது மனைவியர் அருகிலிருந்து உதவினர். சைவத் தொண்டிற்குக் குங்கிலியக் கலய நாயனார் மனைவியர் தமது தாலியையே கொடுத்தா ரெனின், அக்காலச் சைவ மங்கையர் சமயத்தை எவ்வாறு மதித்தனர் என்பதைத் தெளிவாக அறியலாமன்றோ?

மானக்கஞ்சாற நாயனார் மகளார், தமது திருமணப் பந்தலில் வந்த மாவிரதியர் விருப்பப்படி, தம் அழகிய கூந் தலை அரிந்து கொடுத்தனர் என்பது, அவரது சமயப்பற்றை எந்த அளவு உயர்த்திக் காட்டுகிறது என்பதை நாம் எண்ணிப் பார்க்கவேண்டும். கணவர் வயிற்றை அறுத்துக்கொண்டு குற்றுயிராகக் கிடந்த நிலையில், அவரைத் தேடிவந்த சுந்தரரை, அவர் தகுதிக்கும் தம் கணவர் தகுதிக்கும் ஏற்ற வாறு சிறந்த முறையில், தக்கவரை ஏவி, வரவேற்ற அதே அம்மையாரின் சமயப்பற்றினை என்னென்பது! அச்சமயப் பற்றல்லவா அவர் கணவரான கலிக்காம நாயனாரை உயிர்ப் பித்தது!

தம் கணவனான பாண்டியன் நெடுமாறனைச் சமண சமயத் திலிருந்து சைவனாக்கிய பெருமை, அவன் மனைவியாரான மங்கையர்க்கரசியாரையே சாரும். அதனால்தான் சேக் கிழார் பெருமானும்,

"தென்னர்குலப் பழிதீர்த்த தெய்வப்பாவை"

என்று அவரைப் பாராட்டினார்; மேலும் அம்மையார் அக் கணவனுக்குச்

'சைவ வழித்துணையாய் நெடுங்காலம்'

வாழ்ந்து வந்தார் என்றும் பாராட்டினார்.

இம்மங்கையர்க்கரசியாரது சமயத் தொண்டினால் அல்லவா சமணனான பாண்டியன் சைவனாக மாறியதோடமையாது, 'நாயனார்' என்ற பட்டத்தையும் பெறல் முடிந்தது. அவ்வம் மையாரது சைவத் தொண்டினால்தானே பாண்டிய நாட்டில் சைவம் தழைத்தது.

சமண சமயத்தில் பல்லாண்டுகள் இருந்தும் பயன் காணாத தம்பியை வரவேற்றுத் திலகவதியார் திருநீறளித்த சிறப்பாலன்றோ தருமசேனர் திருநாவுக்கரசரானார்; அவ ரால் தொண்டை நாட்டில் சைவம் பரவியது; நாடாண்ட

பல்லவனும் சைவனுனன். திலகவதியார் சைவ வாழ்வு வாழ வில்லையாயின், திருநாவுக்கரசர் பெயர் திருத் தொண்டத் தொகையில் இடம் பெற்றிருத்தல் அரிதாகும் அன்ருே?

திருநீலகண்டர் சிவனடியாராக இருந்தும் ஒழுக்கத்தில் வழுக்கினர். அறிவும் ஒழுக்கமும் சமய உணர்ச்சியும் மிகுந்த அவர்தம் மனைவியார், "திருநீலகண்டத்தின் மேல் ஆணையாக என்னை நீர் தீண்டுதல் கூடாது" என்று கூறியதாலன்ருே, திருநீலகண்டர் ஒழுக்கத்தில் தலைசிறந்து நின்ருர். சிவ நெறிக்கு ஒழுக்கம் உயிர்நாடி என்பதை அவ்வம்மையார் நன்கறிந்தவர் ஆதலால் தம் கணவரை நல்வழிப்படுத்தினர்.

திருநீலகண்ட யாழ்ப்பாணர் யாழ் வாசிப்பதற்கு உறு துணையாக இருந்து, அவரோடு தலங்கள் தோறும் சென்றவர் அவர்தம் மனைவியார். இறைவன்மீது அருட்பாடல்களைப் பாடிச் சைவப் பெரும் புலவராக விளங்கியவர் காரைக்காலம் மையார். அவ்வம்மையார் சமயத்திற்கென்றே தம் வாழ்க் கையைத் துறந்தவர். தமது மூத்த மகன் அரவு தீண்டி இறந்தான் என்பதை அறிந்தும், அதனை மறைத்துத் திரு நாவுக்கரசரை உண்பிக்க முயன்ற அப்பூதி அடிகளின் மனைவி யின் பெருமையை யான் எங்ஙனம் கூறவல்லேன்!

இங்ஙனம் நாயன்மார் மனைவியரால் தமக்கையரால் சைவ சமயமும் நாயன்மாரும் சைவ வரலாற்றில் அழியா இடம் பெற்றனர்.

## சோழர் காலத்தில்

கண்டராதித்த சோழரின் மனைவியாரான செம்பியன் மாதேவியார் பல கோவில்களைக் கற்றளிகளாக்கினர்; பல கோவில்களுக்கு அணிகலன்கள் உதவினர்; தம் கணவரைச் சிவலிங்க உருவில் வழிபாடு செய்தார். அவ்வம்மையாரைப் பின்பற்றிச் சோழ மாதேவியர் பலர் அளவற்ற திருப்பணிகள் செய்தனர் என்பதைக் கல்வெட்டுக்களால் அறிகின்ருேம். இவ்வாறே சிற்றரசர் தம் மனைவியரும் புதல்விகளும் சாதாரணப் பெண்மணிகளும் கோவில்களுக்குப் பல நிவந்தங் களை விட்டனர் என்பதை நூற்றுக்கணக்கான கல்வெட்டுக்கள் தெரிவிக்கின்றன. மூன்ரும் இராசராச சோழன் காலத்தில் (கி. பி. 1240-இல்) திருவிடைமருதூர் மாளிகை மடத்தைச்

சேர்ந்த 'ஈசான தேவர்' என்னும் துறவிக்கு ஒரு மாணவி இருந்தாள். அவள் நல்லூரில் அவருக்கு ஒரு மடத்தை அமைத்து நிலங்களை எழுதுவித்தாள் என்று ஒரு கல்வெட்டு கூறுகின்றது.

## ஆடல்—பாடல்

சைவ சமயத்திற்கு உயிர்நாடி சிவன் கோவில்களே. அக்கோவில்களிலும் பெண்மணிகள் இருந்து சமயத்தொண்டு செய்தனர். அவர்கள் ஆடல், பாடல் முதலிய திருத்தொண்டுகளைச் செய்தனர்.

கோவில்களில் இருந்து தொண்டாற்றிய மாதருள் தேவரடியார் ஒரு வகையினர். இவர்கள் கோவிலில் திருவலகிடல், திருமெழுகிடல், படையல் அரிசியைத் தூய்மைப் படுத்தல், திருப்பதிகம் பாடல் முதலிய பணிகளைச் செய்து வந்தனர். மேலும் இவர்கள் திருநீற்றுத்தட்டு, புஷ்பத்தளிகை என்பவற்றையும் விழாக்காலங்களில் எடுத்துச் செல்வர்; அம்மனை அலங்காரப்படுத்தி மண்டபத்தில் வைக்கும்பொழுது கவரி வீசுவர். முதற் குலோத்துங்கனது நாற்பத்தொன்பதாம் ஆட்சியாண்டில் பாணபுரத்தில் இருந்த 'அச்சப்பிடாரன் கணபதி நம்பி' என்ற படைத்தலைவன், திருவல்லம் சிவபெருமானுக்குத் தன் குடும்பப் பெண்கள் சிலரைத் தேவரடியராக விட்டான். அவர்கள் குலப்பொறி பொறிக்கப் பெற்றுக் கோவில் பணியிற் சேர்க்கப்பட்டனர். தேவரடியார் சிறப்பு இதிலிருந்து நன்கு உணரப்படுமன்றோ? தேவரடியாருள் சிலர் நடனமாடவும் அறிந்திருந்தனர்.

தளியிலார் என்பவர் ஆடல் பாடல்களில் முனைந்திருந்தனர்; பின்பு திருப்பதிகங்கள் பாடவும் தொடங்கினர்; சோழர் ஆட்சியின் இறுதியில் தேவரடியாரைப் போலக் கவரி வீசுதல் முதலிய பணிகளையும் மேற்கொண்டனர். சமய நாடகங்களிலும் பெண்கள் சிறந்த பங்கு கொண்டிருந்தனர். தஞ்சையை ஆண்ட சரபோஜி மன்னர் பெயரில் ஏற்பட்ட குறவஞ்சி நாடகம் ஆண்டுதோறும் தஞ்சைப் பெரிய கோவிலில் பெண்களாலேயே நடிக்கப்பெற்றது.

இவ்வாறு தமிழ்ப் பெண்மணிகள் சைவ சமயத்தைப் பலதுறைகளில் வளர்த்து வந்தனர். ஆடவர் பலதுறைகளில்.

ஈடுபட்டுச் சமய நெறியில் இருந்து பிறந்தாலும், இன்றளவும் சைவ இல்லங்களில் சைவம் இருந்து வருதல் பெண்களால்தான் என்பதைத் திண்ணமாகக் கூறலாம்.

அம்மானை, ஊசல், பொற்சுண்ணம், தெள்ளேணம் முதலிய ஆடல்களிலும் சிவபெருமானின் புகழைப் பாடிக் கொண்டு பெண்கள் ஆடினர் என்றுதான், சம்பந்தரும் மணிவாசகரும் கூறுகின்றனரேயன்றி, ஆண்கள் விளையாட்டில் இவற்றைக் கூறவில்லை என்பது கவனிக்கத்தக்கது. பெண்கள் தாம் சமயத்தை நன்கு வளர்ப்பவர்கள்—அவர்கள்தாம் வாழ்க்கையின் விளக்கு—அவர்கள்தாம் ஆடவர்க்குச் சமய வழித்துணையானவர் என்னும் உண்மையைச் சம்பந்தரும் மணிவாசகரும் உணர்ந்திருந்தனர் என்பதற்குப் பெண்களுக் குரிய இப்பாடல்களே ஏற்ற சான்றாகும்.

இங்ஙனம் நாயன்மார்களின் நம்பிக்கைக்கு உரியவராய் இருந்த சைவமகளிரின் மரபில் வந்த நாம், நமது உயிரனைய சைவ சமயத்தை நமது வாழ்க்கையில் கடைப்பிடித்து, சமுதாயம் நலம்பெறப் பேணி வளர்ப்போமாக! இம்முயற்சி யில் அம்மையப்பர் திருவருள் நமக்குத் துணை நிற்பதாக!

# பிற சமயங்களில் மாதர் தொண்டு



திருவாட்டி. சு. இராசலட்சுமி அவர்கள், B.A. (Hons.)
(ஆராய்ச்சித்துறை மாணவியார், பல்கலைக் கழகம், சென்னை.)

## முன்னுரை

உலகத்தில் பல திறப்பட்ட சமயங்கள் பல்வேறு காலங்களில் தோன்றின. வளர்ந்து செழித்தன சில; அழிந்து மறைந்தன பல. அவற்றுள் வரலாற்றுச் சிறப்புப் பெற்ற சமயங்களாகச் சமணம், பௌத்தம், கிறித்தவம், இசுலாம், வைணவம், சைவம் ஆகியவை குறிப்பிடத்தக்கனவாகும். பொதுவாக எல்லாச் சமயங்களின் குறிக்கோளும்—நோக்கமும்—தொண்டு செய்வதாகவே இருந்துள்ளது. இந்நிலையில் ஒவ்வொரு சமயத்திலும் ஆடவரைப்போலவே மகளிரும் சமயத் தொண்டு செய்து வந்தனர். இப்போதும் வருகின்றனர்; இனியும் வரவேண்டும் என்பதே நம் நோக்கமாகும்.

சமண சமயம்

இனி, தனித்தனியே மேற்குறிப்பிட்ட சமயங்கள் ஒவ்வொன்றிலும் மங்கையர் திலகங்கள் பலர் செய்து வந்த தொண்டைச் சிறிது காண்போம். சமண சமயத்தை எடுத்துக் கொண்டால் ஆண்களைப்போலவே பெண்களும் துறவிகளாக வாழ்ந்தனர்; மடங்களை அமைத்துக் கொண்டு சமயத்தொண்டு புரிந்தனர் என்பனவற்றை அறிகிறோம். சுமார் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகட்டு முன் தோன்றிய நமது சிலப்பதிகாரத்திலே சமணத் துறவியாகக் கவுந்தி அடிகள் காட்சியளிக்கிறார். அக்காலத்தில் சமணப் பெண்கள் துறவற வாழ்க்கையை நடத்தினர் என்பதற்கும் அவர் சான்றாக விளங்குகிறார். அவர் பெயரினின்றும் சமணத் துறவிகள் 'அடிகள்' என அழைக்கப்படும் வழக்கத்தையும் காண்கிறோம். கவுந்தியடிகளின் வாழ்க்கையை நோக்க அறவுரை பெறுதலும், பிறருக்கு அறவுரை கூறுதலுமே அவர் வாழ்க்கையின் குறிக்கோளாக இருப்பதைக் காண்கிறோம். மதுரைக்குச் செல்லும் வழியிலே கோவலன் கவுந்தியடிகளைக் கண்டு "நெறியின் நீங்கியோர் நீர்மையேனாகி...சிறுமையுற்றேன்" என்று கூறி வருந்திய போது, அம்மாதவத்தாட்டி கோவலனுக்கு அறிவுரை பல கூறுகிறார். அனுபவமும், ஆழ்ந்த அறிவும் கொண்ட கவுந்தியடிகளே மேலும் சமயக் கொள்கைகளை அறியும் ஆவல் மிக்கவராய் மதுரை நோக்கிச் சென்றனர் என்றால், சமயத்தில் பேரார்வம் கொண்டிருந்த அப்பெருமகளின் முயற்சியை என்னென்று கூறமுடியும்? இவரைப் போலவே குண்டலகேசி என்ற பெண் மணி வடநாடு முழுதும் சுற்றி, பிற சமயத்தினரோடு வாதம் செய்து வென்று சமணத்தை நிலைநாட்டியதாகக் குண்டலகேசி என்ற காப்பியத்தால் அறிகிறோம். காப்பியத் தலைவியாக விளங்கும் அளவிற்குக் குண்டலகேசியின் தொண்டு சிறந்து விளங்கியது என்பதே நாம் ஈண்டுக் குறிப்பிடத்தக்கதாகும்.

பிற்காலச் சோழர் காலத்தில் சமணப் பெண் துறவிகள் ஆங்காங்கே மடங்களை அமைத்துக் கொண்டு சமயத்தொண்டு புரிந்தனர் என்று கல்வெட்டுக்களின் வாயிலாக அறிகிறோம். அவர்கள் 'அடிகள்' என்றும் 'குரத்திகள்' என்றும் அழைக்கப்பட்டனர். சில மடங்களில் 500 பெண்களுக்கு மேல் வாழ்ந்து தொண்டு புரிந்தனர் என்றும் சான்றோடு அறிய முடிகிறது.

## பௌத்த சமையம்

இனி, பௌத்த சமயத்தில் பெண்களின் நிலையைக் காண் போம். புத்தர் காலத்திலேயே பௌத்த சமயப் பெண்களின் சங்கங்கள் தனித்தனியே இயங்கின. அச்சமயப் பெண் துறவி கள் பிக்ஷுணிகள் என அழைக்கப்பட்டனர். பௌத்த சமயம் தென்னாட்டில் வேரூன்றிய அக்காலத்திலேயே சமயப் பணியில் பெண்கள் பங்கு கொண்டனர் என்று அறிகிறோம். பௌத்த சமய வளர்ச்சியிலேயே தன் வாழ்நாளில் பெரும்பகுதியைக் கழித்த அசோக மன்னனின் திருமகளார், ஈழம் முதலிய கீழை நாடுகளுக்குச் சென்று பௌத்த சமயத்தைப் பரப்பியதாக நாம் படிக்கிறோம்.

பௌத்த சமயப் பெண் துறவிகள் சமுதாயத்திற்கு எந்த முறையில் பயன்பட்டார்கள் என்பதையே, மாதவியின் மகளான மணிமேகலையின் மூலம் அறிகிறோம். யாக்கை நிலையாமை, செல்வம் நிலையாமை முதலிய அறவுரைகளைக் கூறுவதோடு மட்டும் அமையாது, சமயத்தின் அடிப்படைக் கருத்துத் தொண்டு செய்தலே என்பதைத் தன் வாழ்க்கையின் மூலமாக மணிமேகலை அறிவுறுத்துவதைக் காண்கிறோம்.

> " காணார் கேளார் கால்முடப் பட்டோர்
> பேணுநர் இல்லோர் பிணிநடுக் குற்றோர்
> யாவரும் வருக என்று இசைத்துடன் ஊட்டி "

பசிப்பிணியை அகற்றவே மணிமேகலையின் தலையாய நோக்கம் என்பதைப் படித்து இன்புறுகிறோம். கால் நடையாகவே பசிப்பிணியுற்ற இடங்களுக்கெல்லாம் சென்று அன்னதானம் செய்ததாகச் சாத்தனார் அழகுபடக் கூறுகிறார். இங்ஙனம் பெருஞ்சமயத் தொண்டு புரிந்த மணிமேகலை நம் தமிழ் மரபில் பிறந்தவள் என்று நாம் பெருமையடைய வேண்டும்.

## கிறித்தவ சமையம்

அடுத்து, கிறித்தவ சமயத்தை நோக்குவோம். இச்சமயத் திலும் பெண் துறவிகள் இருந்ததை, இருத்தலைக் கண்கூடாகக் கண்டு வருகிறோம். அவர்கள் தம் பொன்னான தாய் நாட்டைத் துறந்து, உலகெங்கும் பரவிக் கன்னியர் மடங்களை அமைத்துக் கொண்டு சமயத் தொண்டு புரிவது நாம் அறிந்த ஒன்றே

யாகும். சமயத் தொண்டிலே சமுதாயத் தொண்டையும் இணைத்துக் காணும் சமயம், இன்று கிறித்தவச் சமயம் ஒன்று தான் என்று கூறவேண்டியுள்ளது. தாங்கள் சென்று தங்கும் நாட்டு மக்களுக்குக் கல்வி, மருத்துவம் இவற்றை இலவசமாக அளித்து அவர்தம் உள்ளங்களைக் கொள்ளை கொள்ளுகின்றனர். நம் குழந்தைகளின் நலத்திற்காக அவர்கள் ஆங்காங்கே பள்ளிகளைத் திறந்து கல்விச் செல்வத்தை வாரி வழங்குகின்றனர். நம்மால் புறக்கணிக்கப்பட்ட ஏழைகள், திக்கற்றவர்கள், செயலற்ற முதியோர்கள் இவர்களுக்கு விடுதிகளை அமைத்து மருத்துவ உதவியும் அளித்து வருகின்றனர். இத்தகைய பணிகளை இறைவனுக்குச் செய்யும் திருப்பணிகள் என்றே கூறவேண்டும். வேற்று நாட்டாராகிய நமக்கு இவ்வகைப் பணிகளைச் செய்து வரும் பெண்களின் அருள் கனிந்த தூய உள்ளத்தை எண்ணுந்தோறும் நம் உள்ளங்களும் குழைந்து உருகுகின்றன. செல்வச் சீமாட்டியாகப் பிறந்த 'ப்ளாரன்ஸ் நைட்டிங்கேல்' என்பார், நோயாளிகளுக்குத் தொண்டு புரிவதில் நாட்டங்கொண்டு தன் வாழ்க்கையை அத்துறைக்கே வழங்கினார் 'என்பதைப் படிக்கும்போது வியப்பும், மதிப்பும், பத்தியும் ஏற்படுதல் இயல்பேயாகும். 'என்கடன் பணி செய்து கிடப்பதே' என்ற முறையில் இவ்வம்மையார் "தொண்டே சமயம்" என்று வாழ்ந்து காட்டியுள்ளார். அவரைப்போலவே நம் நாட்டில் பண்டிதை இராமாபாயைக் கூறலாம். அன்பான கணவனையும், உயிரான மழலைச் செல்வத்தையும் இழந்து துன்புற்ற இராமாபாய் மக்களுக்குத் தொண்டு செய்தலையே தன் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொண்டார். சமுதாயத்திலே கைவிடப்பட்ட பெண்கள் பலரைக் கண்டு நெஞ்சம் வெதும்பி, அநாதைப் பெண்களுக்கென விடுதிகள் ஏற்படுத்தினார். போதிய வசதியற்ற நிலையில் மேனாடுகளிலெல்லாம் சுற்றி வருந்தி, நன்கொடைகளைப் பெற்றுப் பல விடுதிகளை ஏற்படுத்தி, அம்மங்கை நல்லார் பெரும்பணி செய்துள்ளார். இத்தகைய சீரிய தொண்டுகளால் இச்சமயம் இம்மையிலேயே வாழ்விக்கும் சமயமாக விளங்குகிறது என்று கூறலாம்.

### இசுலாம்

இசுலாம் மதத்திலும் பெண்களின் சேவைக்கும் தொண்டுக்கும் பஞ்சம் இல்லை என்றுதான் கூறவேண்டியுள்ளது. நபிகள் நாயகத்தின் உயிருக்குயிரான மனைவியார் நாயகத்தின் அருள் மொழிகளைப் பலருக்கும் எடுத்துக் கூறி மக்களைச் சமயத்துறையில் ஈடுபடுத்தினர் என்பதை வரலாறு உணர்த்துகிறது. நாயகத்தின் திருமகளான 'பாத்திமா'வின் இல்வாழ்க்கை சிறந்த சமய வாழ்க்கையாக விளங்கியது.

### வைணவ சமையம்

அடுத்து வைணவ சமயத்தில் பெண்களின் பங்கைக் காண்போம்: ஆண்டாளின் அருட்பாசுரங்கள் தேன் போல் இனிப்பவை. மகளிர்க்குரிய சமய ஒழுக்கமாக மார்கழி நோன்பைத் தாம் இயற்றியதைத் திருப்பாவையில் கூறியுள்ளார். இவரன்றிக் கூரத்தாழ்வார் போன்ற பல வைணவப் பெரியார்களின் மனைவிமார்களும், தம் கணவருக்கு உதவியாக இருந்து வைணவத்தை வளர்த்தனர் என்பதைக் குருபரம்பரை முதலிய நூல்களால் அறிகிறோம். பிற்காலத்தில் விசய நகரப் பேரரசர்களின் மனைவிமார்களும் வைணவக் கோயில்களுக்குப் பல திருப்பணிகள் செய்திருப்பதைக் கல்வெட்டுக்கள் கூறுகின்றன.

### சைவ சமையம்

சைவ சமயத்தில் பெண் துறவிகளும், பெண் தொண்டர்களும் பலர் இருந்துள்ளனர். மனமுருகப்பாடி இறையருளைப்பெற்று இன்புற்றவர் காரைக்கால் அம்மையாராவர். நாவுக்கரசரின் தமக்கையான திலகவதியார் ஒரு தியாகப் பிறவி என்றுதான் கூறவேண்டும். பெற்றோரையும் கணவனையும் இழந்த பிறகு தம்பிக்காகவே உயிர் வாழ்ந்தார். சமண சமயத்தினின்று தம் தம்பி, சைவத்தை அடையமாட்டாரா என ஏங்கினர்; இறைவனை வழிபட்டே தம்பியையும் சைவ சமயத்திற்கு மீண்டு வரும்படி செய்து சைவ சமயத்திற்கு ஓர் ஒப்பற்ற தலைவரை—நாட்டிற்கோர் நல்ல தம்பியை உருவாக்கிக் கொடுத்தார். அத்துடன் அமையாது, சைவ மடத்தை அமைத்து நாட்டு மக்களிடமும் சமயத்தைப் பரப்பிப் பேருதவி

புரிந்தார். மற்றும் பாண்டிய நாட்டில் சைவ சமயம் தழைத்துச் செழித்தது என்ருல், அது மங்கையருக்கு அரசி போல் விளங்கிய மங்கையர்க்கரசியாரின் சமயப்பற்றும் ஆற்றலுமே எனலாம். அன்றியும் பிற்காலச் சோழர்களின் மனைவிமார் களும், தாயார்களும், மக்களும் சைவத்தை வளர்க்கப் பெரிதும் ஆக்க வேலைகளைச் செய்தனர் என்று கல்வெட்டுக்களால் அறிகிறோம் :

## நமது தொண்டு

இதுவரை ஒவ்வொரு சமயத்திலும் மாதர் தொண்டு எந்த அளவில் இருந்தது என்பதை மேற்போக்காகக் கண்டோம். இனி நமது சைவ சமயம் வளரவேண்டுமாயின், மகளிர் செய்யத்தகும் தொண்டுகள் யாவை என்பதுபற்றிச் சில கூறுவேன் :

வெறும் புறக்கோலங்களாலும் வாய்ப்பேச்சிலும் மட்டுமே நாம் சமயப்பற்றுடையவர்களாக ஆகிவிட முடியாது. சமய மகா நாடுகளை நடத்தி உணவு மகாநாடுகளாக்குவதால் மட்டும், சமயத்தை வளர்த்தவர்களாக முடியாது. மக்கள் தொண்டு கலவாத வரையில் எந்தச் சமயமும் ஓர் உயர்ந்த நிலையை அடைவதில்லை. இந்நிலையில் கிறித்தவத் தாய்மார்களைப்போல, சைவ சமயப் பெண்மணிகளும் பள்ளிகளை அமைத்துக் கல்வித் தொண்டு செய்யவேண்டும். வசதியுள்ள பெண்கள் மருத்துவத் துறையிலும் சேர்ந்து பொதுமக்களுக்கு இலவச மருத்துவம் செய்யலாம். அந்நிலையங்களிலெல்லாம் கிறித்தவத் தாய்மார் களைப் போலவே, நோயாளிகளுக்குச் சமய போதனை செய்ய லாம். ஊர்தோறும் சைவ மங்கையர் கழகங்களை ஏற்படுத்தி இக்காலத்திற்கேற்ற முறையில் சமயத்தை வளர்க்கக்கூடிய முயற்சியில் ஈடுபடுத்தல் நல்லதாம்.

சைவம் குறுகிய நோக்கமுடையதன்று. அன்பே சிவம் என்பதே நம் சமயத்தின் உயிர் நாடி என்பதை அறியவேண் டும். கிறித்தவத் தாய்மார்களைப் போலவே சைவ சமயப் பெண்மணிகளாகிய நாம், எல்லாச் சமயங்களைச் சார்ந்த மக்க ளிடமும் அன்பைக்காட்டி, நம்மால் இயலும் உதவிகளைச் செய்து அன்பே சிவம் என்ற உண்மையை மக்கள் உள்ளங் களில் பதியச்செய்யும்படி வேண்டிக்கொள்கிறேன்.

# சைவ இளைஞர் மாநாட்டுத் திறப்புரை



மணலி. சீனி. இராமகிருஷ்ண முதலியார் அவர்கள், B. A.

சைவப் பெருமக்களே! தாய்மார்களே! இளைஞர்களே!

வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் நிகழும் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் 54-ஆம் ஆண்டு விழாவில், சைவ இளைஞர் மாநாட்டைத் திறந்து வைக்கும்படி, அப்பா. திரு. வா. தி. மா. அவர்களும் பிறரும், என்பாற் கொண்ட பேரன்பினால் ஏவிப் பணித்துள்ளார்கள். அவர்களின் அன்பாணைக்கு இணங்கி, "நல்ல தாய் தந்தை ஏவ நான் இது செய்யப் பெற்றேன்" என அப்பூதியடிகளின் புதல்வர் மூத்த திருநாவுக்கரசு மகிழ்ச்சியும் பெருமிதமும் எய்தியவாறு போல, இச் சைவ இளைஞர் மாநாட்டைத் திறந்து வைக்க ஏவப் பெற்றமை குறித்து, நானும் மட்டில்லா மகிழ்ச்சியும் பெருமிதமும் எய்துகின்றேன்.

இத்தகைய ஒரு பெறலரும் பேறு திருமயிலையில் நிகழ்ந்த சைவ சித்தாந்த மகா சமாசத்தின் 52-ஆம் ஆண்டு விழாவி லும் எனக்கு வழங்கப் பெற்றது. அவ்விழாவிற்கு என்னுடைய அரும்பெறல் மாமா உயர் திரு. ம. பாலசுப்பிரமணிய முதலியார் B.A., B.L., அவர்கள் தலைமை தாங்கினார்கள். அவர்கள் விரும்பிப் பணித்தபடி, யான் அப்போதும் சைவ இளைஞர் மாநாட்டைத் திறந்துவைத்து மகிழ்ந்தேன்.

## திரு. ம. பா. அவர்கள்

சைவ சித்தாந்த மகா சமாச விழா நிகழ்ச்சிகளில், யான் கலந்து கொள்வதை ஒரு பெறலரும் பேறாகவும், உரிமையாக வும் எண்ணி உவப்பெய்துகின்றேன். ஏனெனில், இச் சைவ சித்தாந்த மகா சமாசத்தினை என்னுடைய மாமா திரு. "மயிலை கிழார்" அவர்கள், தம்முடைய உயிரினும் மேலாக எண்ணித் தமது அருமருந்தன்ன குழந்தையைப் போலச் சீராட்டிப் பாராட்டி 1922 முதல் 1958 வரை ஏறத்தாழ 36 ஆண்டுகள் கண்ணை இமைகள் காப்பது போலக் கட்டிப் பாதுகாத்து வந்தார்கள்; தமது வாழ்நாளிற் பெரும் பகுதியைச் சைவமும் தமிழும் தழைக்க உழைக்கும் இச் சமாசத்தின் வளர்ச்சிக் கென்றே ஒப்படைத்து உரிமையாக்கினார்கள்; பள்ளத்தூரிலும் யாழ்ப்பாணத்திலும் திருமயிலையிலும் நிகழ்ந்த சமாச மாநாடுகளில் தலைமை தாங்கி, அரிய பெரியவிரிவுரைகள் ஆற்றினார்கள்; "சித்தாந்தம்" பத்திரிகையின் ஆசிரியராகப் பல ஆண்டுகள் தொடர்ந்து விளங்கி, அதனைச் செம்மையுற நடத்தினார்கள்; பன்னிரு திருமுறைகளையும், பதினான்கு சாத்திரங்களையும், சங்க இலக்கியம், சீவக சிந்தாமணி, நாலா யிர திவ்வியப் பிரபந்தம் முதலிய பல நூல்களையும் அடக்க விலைச் சுத்தப் பதிப்புகளாகப் பல்லாயிரக் கணக்கான பிரதிகள் அச்சிட்டு வெளியிட்டார்கள்; சமாஜத்தின் பொன் விழாவைக் கண்டு களித்தார்கள்; தம் வாழ்நாளின் இறுதி வரையிலும் சமாசத்தின் வளர்ச்சி பற்றி எண்ணி எண்ணித் திட்டமிட்டுக் கொண்டிருந்தார்கள்.

அத்தகைய என்னுடைய மாமா அவர்கள் அரும்பாடு பட்டு வளர்த்த இச் சமாச விழாக்களில் கலந்துகொண்டு, அவர் களின் சீரிய அடிச்சுவட்டைப் பின்பற்றி, என்னால் இயன்ற

வகைகளில் எல்லாம் சிறிதும் தளராது, சமாசத்தை வளர்க்க முயலுதல் என்னுடைய கடமைகளில் ஒன்றல்லவா? தமக்குப் பின்னுல் யான் சமாசத் தொண்டுகளில் கலந்துகொண்டு பணி யாற்றிச் சமாசத்தைத் தம்மைப்போலவே, யானும் வளர்க்க முற்படுதல் வேண்டும் என்று எண்ணியே போலும், அவர்கள் தமது வாழ்நாளின் கடைசிக் காலத்தில் சமாசத்தோடு என்னைத் தொடர்பு படுத்தி வைத்தருளினுர்கள். இவை களை யெல்லாம் ஒன்றியிருந்து நன்கு நினைந்து பார்க்கும் போது, இது போன்ற சமாச விழாக்களில் யான் கலந்து கொண்டு பணியாற்றுவதை, என் மாமா அவர்களின் ஆருயிர் கண்டு மகிழும் என்பதில் எனக்கு ஐயமே யில்லை. எனவே, இப் பணியில் என்னை ஈடுபடும்படி செய்த உங்கள் அனைவருக் கும் என் நன்றி கலந்த வணக்கத்தைத் தெரிவித்துக்கொள்ளு கின்றேன்.

## சைவத்தின் பழமையும் பெருமையும்

சைவ இளைஞர்களே!

நமது சைவ சமயம் உலகத்திலேயே மிகப் பழமையான உயிர்ப்புடைய சமயம். இதனை "The most ancient living religion in the world" எனச் சர் ஜான் மார்ஷல் (Sir John Marshall) என்னும் ஆராய்ச்சியறிஞர் குறிப்பிடு கின்றுர். ஒரு காலத்தில் உலகம் முழுதும் சைவ சமயம் தழைத்தோங்கி யிருந்தது எனவும், அதற்கு அடையாளமாக இன்றும் உலகின் பல்வேறு பகுதிகளிலும் சிவலிங்கங்கள் காணக் கிடைக்கின்றன என்றும் அறிஞர்கள் கூறுகின்றனர். "வையகம் எங்கும் சைவம்" என்னும் பொருள் பற்றித் திரு. "மயிலை கிழார்" அவர்கள், ஒரு முறை ஆராய்ச்சி நிறைந்த ஓர் அரிய சொற்பொழிவும் நிகழ்த்தியுள்ளார்கள்.

"சைவ சமயமே சமயம்" எனவும், "இராசாங்கத் தமர்ந்தது வைதிக சைவம் அழகிதந்தோ" எனவும், வேதாந்த சித்தாந்த சமரச ஞான வித்தகச் செல்வராகிய தாயுமான அடிகள், சைவ சமயத்தின் அருமை பெருமைகளைப் பாராட்டிக் கூறுகின்றுர்:

"புறச் சமயத் தவர்க்கிருளாய்
அகச்சமயத் தொளியாய்ப்
புகல்அளவைக் களவாகிப்
பொற்பணிபோல் அபேதப்
பிறப்பிலதாய்,இருள்வெளிபோற்
பேதமும், சொற்பொருள்போல்
பேதா பேதமுமின்றிப்
பெருநூல் சொன்ன
அறத்திறனல் விளைவதாய்,
உடலுயிர்கண் அருக்கன்
அறிவொளி போல்
பிறிவரும்அத் துவிதம்ஆகும்
சிறப்பினதாய், வேதாந்தத்
தெளிவாம் சைவ
சித்தாந்தந் திறன்
இங்குத் தெரிக்கலுற்ரும்."

என அருள்நந்தி சிவாசாரிய சுவாமிகளும்,

" நிலவுல காய தாதி நிகழ்சிவாத் துவிதாந் தத்துக்
குலவினர் அளவ ளாவாக் கொள்கைய தாகி, வேதத்
தலைதரு பொருளாய், இன்பாய்த், தாவில்சற் காரி யத்தாய்,
மலைவறும் உணர்வால் பெத்த முத்திகள் மதித்தாம் அன்றே"

என உமாபதி சிவசாரிய சுவாமிகளும், சைவ சித்தாந்தத் தத்துவக் கோட்பாடுகளின் மேம்பாட்டினை மிக வியந்து புகழ்ந்து போற்றியுள்ளனர். மேலை நாட்டறிஞர் ஆகிய டாக்டர் திரு. ஜி. யூ. போப் அவர்களும், சைவ சித்தாந்தத்தின் சிறப்பினைத் 'தென்னிந்திய மக்களின் பேரறிவின் பெரு விளைவு' (The choicest product of the Dravidian intellect) எனப் பாராட்டி உவப்புற்ருர். இத்தகைய பெறலருஞ் சிறப்புக்கள் பல பெற்று விளங்கும் சைவ சமயத்தையும் சைவ சித்தாந்தத் தத்துவக் கொள்கைகளையும் நன்கினிது போற்றி வளர்க்க வேண்டுவது நம்மைப் போன்ற சைவத் தமிழ் இளைஞர்களின் கடமையல்லவா?

## சைவ நூல்களின் சிறப்பு

சைவ சமயத்திலுள்ள பன்னிரு திருமுறைகளைப் போன்ற மிகச் சிறந்த பக்திப் பாடல் இலக்கியங்களை உலகில் வேறு எங்கணும் காண்டல் அரிது. சிறப்பாகப் பெரிய புராணம் என்னும் அரும்பெறல் நூலைப் போல, இறையருள்பெற்ற அடியார்களின் வரலாறுகளை உண்மை வழுவாது உள்ளவாறு ஆராய்ந்து, சொற்பொருட் சுவை நலங்கள் துளும்ப, கற்பார் நெஞ்சம் கல்லேயாயினும் கசிந்துருகும்படி அழகொழுகப் பாடி விளக்கும் பிறிதொரு நூல், உலகில் வேறு எச்சமயத்தினும் இல்லை எனத் துணிந்து சொல்லலாம். அதனாலன்றோ, பெருங் கவிஞர் மீனாட்சி சுந்தரம் பிள்ளை அவர்கள், "பக்திச் சுவை நனி சொட்டச் சொட்டப் பாடிய கவி வலவ!" எனப் பெரிய புராணம் பாடிய சேக்கிழார் பெருமானைப் புகழ்ந்து பாராட்டிப் போற்றியுள்ளார்கள்?

இங்ஙனமே, சைவ சமயத்தின்கண் உள்ள திருவாசகம் திருக்கோவையார் போன்ற அருள்நூல்களை வேறு எந்நாட்டிலும் காண்டல் அரிது. திருமூலர் அருளிய யோக அநுபவத் திறங்களை விளக்கும் நுண்பொருள் மறைநூல் ஒன்றினை வேறு பிற எந்நாட்டாரும் பெறாத வகையில் நாம் பெற்றிருக்கின்றோம். சிவஞான போதம், சிவஞான சித்தியார் போன்ற அரும்பெருந் தத்துவ நூல்களும், அவற்றிற்குத் திட்ப நுட்பம் செறிந்த சிறந்த உரை நூல்களும், சைவத் தமிழ் மக்களின் தனிப் பெருந் தவப்பேறேயாகும். இவைகளையெல்லாம் போற்றித் தக்கவாறு பயன்கொள்ள வேண்டுவது, சைவத் தமிழ் இளைஞர்களாய நம்மனோர்க் கெல்லாம் தலையாய பெருங் கடமையன்றோ?

## இளஞ்சைவ நண்பர்களே!

நாட்டுப் பற்றும் மொழிப் பற்றும் எத்துணை இன்றியமையாதன என்பதனை இன்று மக்கள் எல்லோரும் உணர்வார்கள். அவ்வாறே சமயப்பற்றும் ஒவ்வொரு மனிதனுக்கும் இன்றியமையாத ஒன்றாகும். ஏனெனில், ஒரு நாட்டோடும் மொழியோடும் சமய உணர்வும் பிரிவற விரவிப் பிணைந்து கிடக்கின்றது. ஒரு நாட்டின் நாகரிகமும், ஒரு மொழியின் சிறப்

பும் சமய வுணர்வுடன் இணைகின்றபோதுதான், பல மடங்கு தலைசிறந்து ஓங்கித் திகழ்கின்றன.

"Religion! What a treasure untold
Resides in that heavenly word,
More precious than silver and gold
Or all that this world can afford"

என ஆங்கிலப் பெருங்கவிஞர் ஒருவர் (William Cowper) பாடியது கொண்டு, சமயவுணர்வு எத்துணைச் சிறப்புடையது என்பதை நன்கு உணரலாம்.

இந்துமத பாடசாலை

இச்சைவ இளைஞர் மாநாட்டிற் கலந்துகொண்டு சொற்பொழிவாற்ற இருக்கும் அறிஞர்கள் அனைவரும், இவ் இந்துமத பாடசாலையிற் படித்துப் பல பெருந் தகுதிகளைப் பெற்றுச் சமய உணர்வுடன் விளங்குபவர்கள் என்பதை எண்ணும்போது, எல்லையில்லா இறும்பூது எய்துகின்றேன். இத்தகைய சிறந்த இளம் பேரறிஞர்களை உருவாக்கி உயர்த்திய இந்துமத பாடசாலையினையும், வடலூர் வள்ளலார் மாணவர் இல்லத்தினையும், இவற்றை யெல்லாம் வளர்த்துவரும் **அப்பா திரு. வா. தி. மாசிலாமணி முதலியார்** அவர்களையும் மனமாரப் பாராட்டி மகிழ்கின்றேன்.

அப்பா திரு. வா. தி. மா. அவர்களை யான் மிக இளம் பருவத்தில் இருந்தே அறிவேன். அவர்கள் என் தந்தையார் பால் அவ்வப்போது வந்து அளவளாவிப் பேசி மகிழ்வார்கள். என் தந்தையார் அவர்களுக்கு இந்துமத பாடசாலையின் மீதும், வடலூர் வள்ளலார் மாணவர் இல்லத்தின்மீதும், அதனைச் சிறப்புற நடத்தி வளர்த்துவரும் அப்பா திரு. வா. தி. மா. அவர்களிடத்தும் கரைகடந்த பேரன்பும் எல்லையற்ற மதிப்பும் ஈடுபாடும் உண்டு. இந்துமத பாடசாலையினின்று வரும் மாணவர்கள் யாவராயினும், எங்கள் மணலி விடுதியில் தடையின்றிச் சேர்க்கப்படுவர். அப்பழக்கம் என் தந்தையார் காலத்தில் இருந்தாற் போலவே, எப்போதும் இருந்து வரும் எனவும் உறுதி கூறுகின்றேன்.

இச்சைவ இளைஞர் மாநாட்டினைத் திறந்து வைக்கின்றேன். தமிழ் வெல்க! சைவம் வளர்க! வையகம் துயர் தீர்க!

# தலைமையுரை



**திரு. ந. சஞ்சீவி அவர்கள், M. A.**
**(தமிழ்த்துறைத் தலைவர், பச்சையப்பர் கல்லூரி, காஞ்சிபுரம்)**

உலகமும் பல்லுயிரும் ஒன்றிநிறைந் தோங்கி
இலகுஞ் சிவனெம் இறை.

—சைவ சமய நெறி

தாய்மார்களே! பெரியோர்களே! நண்பர்களே!

வணக்கம். பாலாற்றங் கரையில் பார் புகழ விளங்கும் வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் நடைபெறும் சைவ இளைஞர் மாநாட்டிற்குத் தலைமை தாங்கும் பெரும் பேற்றினை அடியேனுக்கு வான்கருணையுடன் வழங்கியருளிய சைவ சித்தாந்த மகா சமாசத்தார்க்கு எனது பணிவார்ந்த நன்றி கலந்த வணக்கங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். திருவருள் இயக்க, இச்சிறப்பினை யான் எய்தப் பெருங் கருணைபுரிந்த

இந்துமத பாடசாலை அப்பா திரு. மாசிலாமணி (முதலியார்) அவர்கட்கும், அண்ணு உயர்திரு. தணிகை அரசு அவர்கட்கும், சமாசச் செயலர் திரு. கீ. இராமலிங்கனுர் அவர்கட்கும் யான் பெரிதும் கடமைப்பட்டுள்ளேன். இந்த ஆண்டு இளைஞர் மாநாட்டிற்கு யான் தலைமை தாங்கவேண்டும் என்று முதன் முதலாக விரும்பிய எனது அருமை நண்பரும், முத்தமிழ் அச்சக உரிமையாளருமாகிய திரு. எஸ். காளப்ப முதலியார் அவர்கட்கும் இதுபோழ்து என் வணக்கங்களைத் தெரிவிக்கும் கடப்பாடு உடையேன்.

வாலாசாபாத் இந்துமத பாடசாலையில் நடைபெறும் இந்த இளைஞர் மாநாட்டிற்குக் கால் நூற்றுண்டிற்கு மேலாக இப் பள்ளியின் வாயிலாகவும், வள்ளலார் இல்லத்தின் வாயிலாகவும் தமிழ்நாட்டு இளைஞர்கட்கு அரும்பணி ஆற்றிவரும் உயர் திரு தணிகை அரசு (அண்ணு) அவர்களே தலைமை தாங்கவேண்டும் என்று நான் பெரிதும் அவாவினேன். அவர்தம் தன்னல மறுப்புணர்வும், என்பால் அவர்கள் வைத்துள்ள தனிப்பற்றுமே என்னை உங்கள்முன் இந்நிலையில் நிறுத்தியுள்ளது. அவர்தம் அன்புள்ளம் வாழ்க! வெல்க!

பெரியோர்களே!

பிஞ்சிளம் வயதிலேயே என் நெஞ்சில் தமிழுணர்வும் சைவசமயப் பற்றும் முளைவிடக் காரணமாய் விளங்கிய சான்றேர் திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகளைத் தமது ஞான குருவாகக் கொண்ட எனது அருமைத் தந்தையார் அவர்களே. யான் அறிவறிந்த மைந்தனுக விளங்க ஆவல் கொண்டிருந்த அப்பெரியார், என் உள்ளத்தில் விதைத்த விதை முளை விட்டுச் செடியாக நீரூற்றி வளர்த்த சான்றேர் பலர். அவர்களுள் குறிக்கத் தக்கோர் மௌனம் சோமசுந்தரத் தம்பிரான் அவர்களாவர். எனது அருமைத் தந்தையார் காலமாவதற்கு முன்னர் யான் உயர்நிலைப் பள்ளி மாணவனுய் இருந்தபோது திருச்சிராப்பள்ளி மௌனமடத் தலைவராய் இருந்த சோமசுந்தரத் தம்பிரான் அவர்களிடம் என்னைச் சேர்ப்பித்தார்கள். அப்பெரியார் இனிமையாகப் பேசியும் இடிபோல் முழங்கியும் என்னை ஆட்கொண்டார். அவர் அருளாலேயே யான் தருமபுரம் சென்றேன்; அவ்வாதீனத் தலைவர் ஆசியாலும் ஆதரவாலும் சென்னை சேர்ந்தேன்; அதன் காரணமாகவே இந்து அற

நிலையக் காவலராக அப்போது விளங்கிய பெரியவரும் எனது அருமைத் தந்தையாரின் உயிர் நண்பருமாகிய திவான்பகதூர் தி. மு. நாராயணசாமிப் பிள்ளை அவர்கள் இல்லத்தில் அவர் பிள்ளைகளோடு பிள்ளையாய் வாழும் பேறு பெற்றேன். பின்னர்ச் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் பயின்று பட்டம் பெற்று, அண்மையில் உள்ள அழகான காஞ்சியில் கடந்த பத்தாண்டு களாக இளம் மாணவர்க்கட்குத் தொண்டு செய்யும் அரிய வாய்ப்பினைப் பெற்றுள்ளேன். அத்துறையில் யான் இடருறுதும் தளராதும் இலக்கியப் பணிபுரிய எனக்கு அவ்வப்போது அறி வொளி காட்டிவரும் சைவ உலகின் இருபெருஞ் சுடர்களாகிய உயர்திரு. வச்சிரவேலு முதலியார் அவர்கட்கும், உயர்திரு. அருணைவடிவேலு முதலியார் அவர்கட்கும் யான் எழுமையுங் கடப்பாடுடையேன்.

முதன் முதலாக என் உள்ளத்தில் சைவசமய அறிவும் ஆர்வமும் வேரூன்றக் காரணமாய் அமைந்தது திருப்பாதிரிப் புலியூர் ஞானியார் அடிகள் தலைமையில் திருச்சிராப்பள்ளியில் மிகச் சிறப்பாக நடைபெற்ற சைவ சித்தாந்த சமாச ஆண்டு விழாவே. அப்போது யான் பெற்ற சமய அறிவும் ஆர்வமும் எனது கல்லூரி வாழ்வில் கருகிப் போகாமல் காப்பாற்றிய எனது ஆசிரியப் பெருந்தகை டாக்டர் திரு. மு. வரதராசனுர் அவர்கட்கு யான் என்ன கைம்மாறு செய்யவல்லேன் ?

தெய்வ நம்பிக்கைக்கு மாறுன கொள்கைகளையும் போக்கு களையும் பின்பற்றுவதால் எத்தனையோ கொச்சை இன்பங்களை எளிதில் ஈயும் சூழ்நிலைகள் நாட்டில் முற்றி முதிர்ந்துள்ள இந் நாளில், என்போன்ற இளைஞன் ஒருவன் சமயப் பற்றோடு இருப்பதற்குக் காரணம், அமுதூட்டி வளர்த்த அன்னை முதலாக அருளுடையோர் பலர் ஆவர். அவர்கள் திருவடிகட்கு எல்லாம் என் நன்றி கலந்த வணக்கங்கள் என்றென்றும் உரியன.

## சமாசத்தின் திருப்பணிகள்

சைவ சித்தாந்த மகா சமாசத்தின் ஓர் உறுப்பாகவே இந்த இளைஞர் மாநாடு கூடுகிறது. எனவே, சைவ இளைஞர்களாகிய நமது முதற் கடமை, சைவ சித்தாந்த மகா சமாசம் கடந்த அரை நூற்றுண்டிற்கு மேலான காலவெளியில் செந்தமிழ்

செழிக்கவும் சிவநெறி தழைக்கவும் ஆற்றியுள்ள அரும்பணிகளை நன்றியோடு நினைவுகூர்ந்து வாழ்த்தி வணங்கவே ஆகும். அந்த வகையில் சமாசத்தின் அரிய தொண்டுகளின் பெரிய பயனை அடியேன் கூறுவதினும், கரந்தைத் தமிழ்ச் சங்கத்தின் புகழ்மிக்க தலைவராய் விளங்கிய தமிழவேள் உமாமகேசுவரம் பிள்ளை அவர்கள் கரந்தைத் தமிழ்ச்சங்க வெள்ளிவிழா மலரில் 'நமது சங்கமும் தமிழ் வளர்ச்சியும்' என்ற தலைப்பில் வரைந்துள்ள அரிய கட்டுரையில் 'இருபதாம் நூற்றாண்டின் தமிழ் வளர்ச்சி' என்ற உள்தலைப்பில் உண்மையுணர்வோடு கூறியுள்ள உரையினை நினைவுகூட்டி விளக்கல் பயனுடைத் தன்றோ? சமாசம் பற்றித் தமிழவேள் மதிப்பீடு வருமாறு:

"சைவ சமயத்திலும் சித்தாந்த உண்மையிலும் பெரும் பற்றுள்ள நன்மக்கள் பலர்கூடி, சைவ சித்தாந்த மகா சமாசம் என்னும் ஒரு சமயச் சார்பான சங்கத்தைச் சென்னையில் இந் நூற்றாண்டின் முற்பகுதியில் (1905) நிறுவினார்கள். சமய உண்மைகளைப் பரப்புவதற்குச் சமாசக் கூட்டங்களைப் பல இடங்களிலும் நடத்தி வந்ததோடு, 'சித்தாந்தம்' என்னும் ஒரு திங்களிதழையும் வெளியிட்டு வந்தார்கள். சமயமே இவர்களது முதன்மையான நோக்கமெனினும், சமயத்தினின்று பிரிக்கமுடியாத தமிழ் மொழியும் இவர்கள் தொண்டின் பயனைப் பெறுவதாயிற்று. இக்கூட்டங்கள் பலவிடங்களிலும் நிகழ்ந்தமையாலும் பேரறிஞர்கள் பலரும் விரிவுரையாற்றி வந்தமையாலும் உயர்ந்த முறையில் விரிவுரையாற்றும் பழக்கம் நாளுக்குநாள் பெருகுவதாயிற்று. இவ்வுயரிய முறையான விரிவுரைகளைத் தங்கள் விரிவுரைகளால் பரவச் செய்தவர்களுள் உயர்திரு மறைமலையடிகளும், திருப்பாதிரிப்புலியூர் ஞானியார் அடிகளும் தலைசிறந்தவர் ஆவர். இச்சமாசம் இடையே சிலகாலம் தளர்வுற்றிருந்ததேனும், 1928-ஆம் ஆண்டு தொடங்கி மிகச் சீரிய முறையில் தொண்டாற்றி வருகின்றது. மிகக் குறைந்தகால எல்லைக்குள் பன்னிரு திருமுறைகளையும், பதினான்கு சைவசித்தாந்த சாத்திரங்களையும், திருப்புகழையும் அடக்கவிலைப் பதிப்பாக வெளியிட்டு எல்லாரும் வாங்கக்கூடிய குறைந்த விலைக்கு விற்றுவருவது பெரும் பயனளிப்பதொன்றாகும்."

இருபத்தொரு ஆண்டுகட்கு முன் நடுவுசான்ற நன்

னெஞ்சு படைத்த ஒருவரின் சிறந்த புகழுரையைப் பெற்ற சமாசத்தின் தொண்டிற்கு இணை உண்டோ? சமாசப் பதிப்புக் கள் பல இன்று கிடைக்கப் பெருது ஏங்கும் ஒவ்வொருவர் இதய மும் அதன் அரும்பெருந் தொண்டைப் போற்றிப் பரவுகின்ற தன்ருே?

## சைவசமய மறுமலர்ச்சி இயக்கம்

இத்தகைய பெரும்புகழ் வாய்ந்த சமாசம், வரும் ஆண்டு களில் தமிழ்நாட்டில் ஒரு பெரிய 'சைவ சமய மறுமலர்ச்சி இயக்கத்தைத்' தோற்றுவிக்க வேண்டும். அதன் பயன் ஒவ் வொரு தமிழன் இல்லத்தையும் அது அறிவுக் கோயிலாய் - அருட் கடலாய் ஆக்கவேண்டும் என்பதே இந்த இளைஞர் மாநாட்டுத் தலைவன் என்ற முறையில் யான் செய்துகொள்ளும் வேண்டுதல் ஆகும். இதை நான் வெறும் சொல்லழகு கருதியோ - ஆரவார ஆசை கொண்டோ கூறவில்லை. இச் செயலை - இவ்விளைஞர் சமய மறுமலர்ச்சி இயக்கத்தை - நாம் தோற்றுவிக்கத் தவறுவோமானுல், நம் மொழியும் பண்பாடும் பல்வேறு தீய சக்திகளால் ஒழிக்கப்படாமற் போனுலும் - ஊறுபடுத்தி ஒளியிழக்கச் செய்யக்கூடும் என்று யான் அறிவால் ஆராய்ந்தும் அநுபவத்தால் உணர்ந்தும் அஞ்சுவதாலேயே ஆகும்.

ஒரு நாட்டின் இளைஞர் சமுதாயத்தை உருவாக்கும் மூன்று பெருஞ்சக்திகள்—பிறந்த வீடு - பார்க்கும் உலகம் - பயிலும் பள்ளி. இந்த மூன்றிலும் உள்ள குணம் குறைகளின் எதிரொலியே இளைஞனின் இதயத் துடிப்பு. எனவே, அறியாமை நிறைந்த வீடும் - அநீதி நிறைந்த உலகும் - அவ லம் நிறைந்த பள்ளியும் இளைஞர் சமுதாயத்தை அழிக்கும் கொடிய படைகள். இக்குறைகளை நீக்கவே - நமது தேசீய வாழ்க்கையை ஒளிபெறச் செய்யவே - 'சைவ சமய மறுமலர்ச்சி இயக்கம்' தேவை என்று யான் கருதுகிறேன். இந்த இயக்கத் தின் இரு கண்களாய்ப் புலமையும் தொண்டும் அமைய வேண்டும். இந்நாளில் பயனற்ற தேர்வு, முறையற்ற பயிற்சி களாலும் பெரும்பாலும் மாணவர்களிடையே ஆழ்ந்த படிப் புணர்ச்சி அருகி வருகின்றது. இக்கருத்தை யான் வலியுறுத் தும் வகையில் சென்ற தலைமுறையில் எத்தகைய ஆழ்ந்த படிப்

புணர்ச்சி இருந்தது எனபதற்குச் சிறந்ததொரு சான்றுகச் சிவத்திரு. மறைமலை அடிகளார் செந்தமிழ் வாசகம் ஒன்றை நினைவுகூரல் தக்கது ஆகும். அடிகளார் தாம் இயற்றிய செந் தமிழ் நலங்கனிந்த 'திருவொற்றி முருகர் மும்மணிக் கோவை' முன்னுரையில் மொழிந்துள்ள தம் வரலாற்றுப் பகுதி வருமாறு :

"எமது பதினைந்தாம் ஆண்டில் முறைப்படி துவங்கிய் தமிழ்ப் பயிற்சியானது 21-ஆம் ஆண்டில் பெரும்பாலும் நிரம்பிய தென்னலாம். 21-ஆம் ஆண்டிற்குள் தொல்காப்பியம், திருக்குறள், திருச்சிற்றம்பலக் கோவையார் என்னும் மூன்று நூல்களையும் முழுதும் நெட்டுருச் செய்து முடித்தோம்......... சிவஞான போதம், சிவஞான சித்தியார் என்னும் நூல்கள் இரண்டும் முழுமையும் நெட்டுருச் செய்து முடிக்கப்பட்டன."

இத்தகையதொரு கல்வியை ஏறத்தாழ இதே ஆண்டுகள் கலைக்-கல்லூரிகளிலோ தனித்தமிழ்க் கல்லூரிகளிலோ செலவிடும் மாணவர்கள் அடைதற்குரிய சூழ்நிலையும் வாய்ப்பும் கட்டாயமும் இன்று உண்டோ என்பதை அறிஞர் பெருமக்கள் ஆராய்ந்து பார்க்கவேண்டும். புலமைக்கு உயிர் உழைப்பே ஆகும். அப்பண்பு இன்று பல காரணங்களாலும் படிப்புத் துறையில் மங்கி வருவது நாட்டிற்கு நன்மையன்று. இளமைப் பருவத்தில் சத்துள்ள உணவுண்டு உடல்நலம் பெருதான் வாழ்வும், மாணவப் பருவத்தில் பயனுடைய நூல்களைப் பழுதற ஓதிப் புலமை பெருதான் வாழ்வும் பாழ். இவ்வுண்மையை நம் நாட்டுக் கல்வியாளர்கள் இன்னும் கூடுதலான பொறுப் புணர்ச்சியோடு சிந்தித்துச் செயற்பட வேண்டும்.

அடுத்து யான் கருதும் 'சைவ சமய மறுமலர்ச்சி இயக்கம்' வெற்றிபெற வேண்டுவது தொண்டு. இத்தொண்டு ஏனைய அரசியல்-சமூக சேவைத் துறைகளில் இற்றை நாளில் காணப் பெறுதல் போன்ற ஆடம்பரத் தொண்டாய் இருப்ப தால் அணுவளவும் பயனில்லை. தூய்மையை உயிராய்க் கொண்ட அருள் தொண்டுகளே வருங் காலத்தை வாழ்விக்கும். எனவே, தேக்கம்-அழிவு, இயக்கம்-வாழ்வு என்னும் உண்மையை ஓர்ந்து உணர்ந்து சான்றோர்களாகிய முதியோர்கள் சொற்படி புலமை நெறியும் தொண்டு நெறியும் மேற்கொள்ளப் பலவகைகளிலும் நெருக்கடியான நிலையில் சிக்குண்டுள்ள தாய்

நாட்டின் தலைவிதியை உருவாக்கும் பொறுப்புடைய சைவ இளைஞர்களாகிய நாம் புதியதோர் சபதம் மேற்கொள்ள வேண்டும்.

இன்று நம் தாயகம் முழுவதும் இளைஞர்களின் ஒழுங்கின்மை குறித்தும், ஒழுக்கக் குறைவு குறித்தும் கண்டனங்கள் எழுந்தவண்ணம் இருக்கின்றன. இந்நிலைக்கு யார் பொறுப்பு? இதை முதியோர் உலகு பொறுமையுடன் எண்ணிப் பார்க்க வேண்டும் என்பது, 'இளைஞனும் அல்லேன் முதியோனும் அல்லேன்' என்று கூறிக்கொள்ளக்கூடிய பருவத்தில் ஏறத்தாழ நிற்கும் எளியேனின் பணிவார்ந்த வேண்டுகோள்.

அரசியல் துறையிலும்—ஏன்?—சமயத் துறையிலும் தமது ஒழுக்கக் கேடான செயல்களை ஊரும் உலகமும் சுட்டிக்காட்ட 'வாழ்க்கை' நடத்தும் பலர் இளைஞர்களா? முதியவர்களா? ஆழ்ந்த படிப்புணர்ச்சிக்கும் உயர்ந்த ஒழுக்கத்திற்கும் உலை வைக்கும் வகையாய் இன்று கல்வியுலகில் சிறப்பான நிலைகள் பலவற்றிலும் இருப்பவர்கள் சிறுவர்களா? முதியவர்களா? சிறு தொகையினரா? பெருந் தொகையினரா? மாணவர்கள் திரைப் படங்களைப் பார்த்துக் கெட்டுப் போகிறார்கள் என்ற உண்மையைப் பலரும் பறை சாற்றுகின்றனர். ஆனால் ஒழுக்கக் கேட்டை வளர்க்கும் படங்களை எடுப்பவர்கள் குழந்தைகளா? கொள்ளை கொடுக்கும்—கொள்ளை கொள்ளும் சீமான்களா? என்பதை எல்லாம் நெஞ்சில் கை வைத்து நீள நினைந்து பார்க்கும் கடப்பாடு வளரும் உலகைப் பார்த்து வைது வருந்தும்—வளர்ந்துவிட்ட உலகிற்கு உண்டு. அண்மையில் ஒரு அந்தண அன்பர் என்னிடம் கூறினார்: "கலியுகத்தின் அடையாளம் பார்ப்பானும் நாத்திகம் பேசுவான்" என்று. எனக்குப் பல சமயங்களில் தோன்றும் இன்னொரு கருத்து: 'கலியுகத்தின் அடையாளம் உணர்ந்தோ உணராமலோ பெற்றோர்கள் பிள்ளைகளைக் கெடுப்பதும், அறிந்தோ அறியாமலோ ஆசிரியர்கள் மாணவர்களைக் கெடுப்பதும், தெரிந்தோ தெரியாமலோ தலைவர்கள் தொண்டர்களைக் கெடுப்பதும்' என்பதே. பதினைந்து ஆண்டுகளாய் மாணவனாக இருந்தவன்—பத்து ஆண்டுகளாய் ஆசிரியனாய் இருப்பவன்—ஏழு ஆண்டுகட்கு மேலாய்க் குடும்ப வாழ்வில் பெற்றோனாயும் இருப்பவன் என்ற முறையில் என் உள்ளத்து உணர்ச்சிக்கு யான் கொடுக்கும் சொல் வடிவம் தனிப்பட்ட எவ

ரையும் புண்படுத்தும் நோக்கம் உடையதே அன்று; யாதொரு துறையையும் தாழ்த்தும் கருத்தும் கொண்டதே அன்று; அவ்வாறு யாரும் கருதி வருந்தவேண்டா எனப் பணிவுடன் இறைஞ்சுகிறேன்.

சமயம் வெறும் சடங்கு அன்று. அது வாழ்க்கை; தனி மனித வாழ்க்கையையும் சமூக வாழ்க்கையையும் கட்டியாளும் கடவுள் தத்துவம் என்பதை எளியேனாகிய யான் ஆழ உணரும் உணர்ச்சியின் காரணமாக மனம் நொந்து கூறும் துயரமொழிகளே அவை. யான் மேலே குறிப்பிட்ட துறைகளில் எல்லாம் விதிவிலக்காய் வாழும் சான்றோர்களும் உண்டு என்பதை அறியாதவன் அல்லேன். 'உண்டாலம்ம இவ்வுலகம்' அவர்களால் என்பதையும், இல்லையேல் 'மண்புக்கு மாய்வது மன்' என்பதையும் மனமார உணர்ந்து அச்சான்றோர்கட்குத் தலைவணங்குகிறேன். ஆனால் பெரும்பாலான உலக நிலையென்று யான் கருதுவது பொய்யாயின், அது குறித்துப் பெருமகிழ்வே கொள்வேன். உண்மையாயின், உணர்ந்து செயல்படுவோர் அருள் வாழ்வில் புது உலகம் பூக்கும். இதைக்கூட யான் எடுத்துரைத்ததற்குக் காரணம் இன்றைய இளைஞரே நாளைய முதியவர் என்பதாலும், 'காலங் கெட்டுப்போச்சு' என்று கலங்குவோர் அது முன்னே கெட்டது முதியவர்களிடத்தில், பின்னே கெட்டது சிறியவர்களிடத்தில் என்னும் உண்மையையும் சேர்த்துச் சிந்திக்க வேண்டும் என்பதற்காகவே. 'முன்னேர் சென்ற வழிப் பின்னேர்', 'குற்றம் உணர்வான் குணவான்' என்னும் மூதுரைகள் நம்மை வாழ்விக்கவல்லன அல்லவா?

## ஒழுக்கமே உயிர்

சைவ இளைஞர்களாகிய நாம் எது எப்படி அமையினும், ஒழுக்கமே உயிர் எனப் போற்றவேண்டும். அதுவே நமக்கும் சமுதாயத்திற்கும் விழுப்பம் தருவதாகும். இந்த உணர்வும் உறுதியும் நம் உள்ளத்தில் வேர்கொள்ள நாம் உண்மைச் சைவர்களாய்—வாழ்க்கைச் சைவர்களாய்--விளங்கல் வேண்டும். அந்நிலை வாய்க்க நாம் ஆழ்ந்த சைவ சமய அறிவு பெற வேண்டும்; பன்னிரு திருமுறைகளையும் பதினான்கு சாத்திரங்களையும் நெட்டுருச் செய்து பொருளுணர்ந்து போற்றும் கட

மையை முதலில் செய்து முடிக்க வேண்டும்; எந்நாட்டுக்கும் இறைவனாய் விளங்கும் தென்னாடுடைய சிவனருள் பெருகி விளங்கும் பைந்தமிழ் நாட்டு இளைஞர்கள் நாம் என்பதில் பெருமை பாராட்டுவதோடு, அப்பெருமையால் நமக்கு எளிதில் வாய்த்துள்ள நன்மைகளையும் பயன்படுத்திக்கொண்டு, இம்மை மறுமைப் பேறுகளையும் பிறவாப் பேற்றையும் எய்தவேண்டும். தென்தமிழ் நாட்டின் மக்களாய் நாம் பிறந்திருப்பது நாம் முன் செய்த நல்வினையின் பயனே.

'உலகின் இப்பகுதியில் மட்டும் சமயத்துறையில் ஈதென்ன சிறப்பு?' என்று ஐயக்கண் கொண்டு பார்ப்பவர் உலகின் இப்பகுதியில் மட்டும் இயற்கை கொண்டிருக்கும் கருணையைக் காண வேண்டும் - ஆராய வேண்டும். சில நூறு மைல்கள் தொலைவில் இருக்கும் பம்பாயிலும், கல்கத்தாவிலும், நாகபுரியிலும், டெல்லியிலும் தண்டமிழ்நாட்டு மக்கள் துய்க்கும் இயற்கை அமைதி இல்லையே! கொடிய மழையும், கொடிய குளிரும், கொடிய கோடையுமே அங்கெல்லாம் மக்களை வாட்டு கின்றன அல்லவா? இயற்கையின் அருளே இவ்வாறு அமைந்து இருப்பதன் உட்பொருள் யாது? இயற்கையின் அருளை ஒட்டியே இறையருளும் இன்பத்தமிழ் நாட்டிற்கு வாய்த்துள்ளது. அதன் பயன் நமக்கு, நமக்கே - நம்மால் உலகம் முழுமைக்கும் என்று அகங் கரைந்து ஆடிப்பாடி மகிழ்வோமாக!

## சைவத்தின் பழைமை

சைவசமயம் பழம்பெருஞ் சமயம். கங்கைக் கரையில் தமிழர் வாழ்ந்த காலத்திலேயே அந்நெறியில் அவர்தம் உள்ளம் படிந்திருந்தது என்பதற்குத் தன் அடிவயிற்றைத் திறந்து காட்டி நிலமகள் கூறும் சான்றுகள் நெஞ்சை உருக்கும் நீர்மையன. மொகஞ்சதரோ - ஹரப்பா பள்ளத்தாக்குகளில் கிடைக்கும் காளை இலச்சினைகளைக் கண்ணுறும் போது,

> "ஊர்தி வால்வெள் ளேறே—உயர்ந்த
> சீர்கெழு கொடியும் அவ்வேறு என்ப"

என்ற பாரதம் பாடிய பெருந்தேவனாரின் புறநானூற்றுக் கடவுள் வாழ்த்துப் பாடலன்றோ நம் நினைவில் எழுகிறது? இவ்

வுண்மை ஆராய்ச்சி அறிஞர்களாலும் ஒப்புக் கொள்ளத்தக்க நிலையில் உள்ளமை, நம் சமாசத்தின் காவலராகப் பல்லாண்டுகள் விளங்கிய பெரியார் உயர்திரு. ம. பா. அவர்கள் கலைக் களஞ்சியம் - நான்காம் தொகுதியில் 711-ஆம் பக்கத்தில் 'சிவன்' பற்றி வரைந்துள்ள அரிய ஆராய்ச்சிக் கட்டுரையில் "சிவன் எனும் சொல் வடமொழி நூல்களில் முதன் முதலாகத் தோன்றிய காலத்திற்குப் பல நூற்றுண்டுகள் முன்னதாகவே, சிந்துவெளி நாகரிகத்தில் சிவலிங்கங்களும் காணப்பட்டமையால் அக்காலத்திய மக்கள் வழங்கிய மொழியின் தொடர்புடையதாகச் சிவன் எனும் சொல் இருக்கலாமோ என்று சர். ஜான். மார்ஷல் கருதுகின்ருர்," என்று கூறியிருப்பதால் உறுதிப்படுகின்றது அன்ருே?

## பழந்தமிழ் வாழ்வு கோலோச்சவேண்டும்

ஆனல் ஓர் இடர்ப்பாடு. அண்மையில் எனது மதிப்புமிக்க நண்பர் ஒருவர் 'சைவம் - சித்தாந்தம் - மகாசமாசம்'— இதில் ஒன்றுகூடத் தமிழில்லையே! உங்களுக்கு அங்கென்ன வேலை?' என்று உள்ளன்புடனும் நகைச்சுவையுடனும் கேட்டார். அவர் தம் புலமை, வயது, ஒழுக்கம் காரணமாக யான் அப்போது வாளா இருந்துவிட்டேன். மேலும் அவர் எடுத்துக் காட்டியதில் இருக்கும் உண்மையின் ஒரு முகத்தை யான் எங்ஙனம் காணுதிருத்தல் கூடும்? ஆனல் பழமலை விருத்தாசலம் என்று ஆகிவிட்டதால் அவ்வூரைத் தமிழ் நாட்டிலிருந்து தள்ளிவிட்டோமா? மறைக்காடு - வேதாரண்யம் ஆகிவிட்டதால் அவ்வூரை அருகில் உள்ள கடலில் ஆழ்த்திவிட்டோமா? இல்லையே! அவ்வாறுதான் மொழித்துறையிலும், சமயத்துறையிலும் இடைக்காலத்தில் புகுந்துவிட்ட வடமொழி ஆதிக்கத்தை மெல்ல மெல்ல அகற்றிப் பழந்தமிழ் வாழ்வு கோலோச்சச் செய்ய வேண்டும். மொழிமேல் கொண்ட வெறுப்பால் மொழிப் பொருளையும் இகழ்வது அறியாமை. ஆனல் தமிழுணர்ச்சியை - தமிழ்ப் பற்றை - பிறமொழிப் பகையாகவும் பிறமொழி வெறுப்பாகவும் பிறழ உணர்ந்து அரசியல் அரங்கிலும், சமயத்துறையிலும் பெரிய பதவிகளில் பிணியுண்டு இருப்போர் சிலர் வடமொழிக்கு 'வக்காலத்து' வாங்கிக்கொண்டு, "கோயில்களில் வடமொழியிலேயே வழி

பாடு நிகழ வேண்டும். தமிழில் நிகழும் வழிபாடு கேட்கச் சகிக்கவில்லை. தமிழுக்கும் வடமொழிக்கும் எக்காலத்தும் பிணக்கு இருந்ததே இல்லை. 'திரு' அவசியம் இல்லை— 'ஸ்ரீ'யே இருக்கலாம்" என்று பிதற்றுவது, இன்றைய தமிழ் நாட்டு இளைஞர்கள் நெஞ்சில் ஒரு சிறிதளவு இருக்கும் கடவுள் நம்பிக்கையையும், தேர்வுக்காலக் கோயில் வழிபாட்டு உணர்ச்சியையும் கூடக் கொன்றுவிடும் கொடிய பாவச் செயலாகும் என்பதை, நம் அனைவரின் தனிமதிப்பிற்கு உரிய அப்பெரியார்களின் தாள் பணிந்து சொல்லக் கடமைப்பட்டுள்ளேன். இதை நான் சைவ சித்தாந்த மகா சமாசத்தின் ஆண்டு விழாக் கூட்டத்தில் கூற ஒரு சிறிதும் அஞ்சவில்லை; கூசவில்லை. காரணம் இதே சமாச ஆண்டுவிழா 1916-ஆம் ஆண்டில் இதே மார்கழித் திங்களில் சென்னையில் நடந்தபோது, யாழ்ப்பாணம் முதலியார் சபாரத்தினம் அவர்கள் தலைமையில் வெள்ளாடை வேந்தர் சர். பி. தியாகராய செட்டியார் 'பிராமணர் அல்லாதார் முன்னேற்றம்' பற்றிப் பேசித் தமிழ் முனிவர் திரு. வி. க. அவர்கள் சிந்தனையிலும் தீயெழச் செய்தார் அங்கே!

'யானைவரும் பின்னே, மணியோசை வரும் முன்னே' என்ற பழமொழிக்கு ஏற்ப, அப்பேச்சிற்குப் பின்னர் நாட்டில் நீதிக்கட்சி புகுந்தது என்பதும் நம்மால் மறத்தல் இயலுமோ?

## முப்பொருள்கள்

பொதுவாகச் சமயத்திலும், சிறப்பாகச் சைவத்திலும் ஈடுபாடும் நம்பிக்கையும் கொண்டுள்ள யான், உலகியல் பற்றிச் சிந்திக்கும் முப்பொருள்கள் உண்டு. அவை (1) சமயமும் சமுதாயமும், (2) சமயமும் வாழ்க்கையும், (3) சமயமும் விஞ்ஞானமும் என்னும் தலைப்புக்களாகும். இவை பற்றித் தனித்தனியே விரிவான நூல்கள் எழுதவேண்டும் என்ற ஆவலும் எனக்கு உண்டு. இப்பொருள்கள் பற்றி அறிஞர் பெருமக்கள் அவ்வப்போது ஆராய்ந்து அறிவொளி பரப்பல் மன்பதைக்கு நன்மை பயக்கும் என்பது என் கருத்து. சமயத்தின் பெரும்பயன் சமுதாய நல்வாழ்வே என்பதையும், சமயம் துருப்பிடித்துப் போகாமல் இருக்க வேண்டுமாயின் சமயம் வாழ்வின் மூச்சாக வேண்டும் என்பதையும், சமயத்தின் இன்றியமையாமையும் பெருமையும் ஒவ்வொரு நாளும்

உலகில் நடைபெறும் விஞ்ஞான ஆராய்ச்சிகளால் உறுதிப்படுகின்றன என்பதையும் எவ்வளவுக்கு எவ்வளவு அழகோடும் ஆற்றலோடும் அறிவோடும் அருளோடும் இளைஞர் உலகிற்கு எடுத்துக் காட்டுகிறோமோ, அவ்வளவுக்குச் சமயம் வாழ்வு பெறும் - சைவம் தழைக்கும் என்பது எனது தாழ்மையான கருத்து. மேலே குறிப்பிடப் பெற்ற மூன்று கருத்துக்களுள்ளும் இன்றைய காலநிலையைக் கருதி இளைஞர்கள் கவனத்தைச் 'சமயமும் விஞ்ஞானமும்' என்னும் தலைப்பில் நாம் அவ்வப்போது ஆராய்ந்து கூறும் உண்மைகள் பெரிதும் நம்பால் ஈர்க்கும். எனவே, சர். ஜேம்ஸ் ஜீன்ஸ், ஐன்ஸ்டீன், அலெக்சிஸ்காரல், ஐசன்பர்க் போன்ற விஞ்ஞானிகளின் சிந்தனைச் செல்வங்களைச் சேதமில்லாமல் வாரி வழங்க வேண்டும். அத்தொண்டு கால அடைவில் உலக அமைதிக்கும் பெரும்பயன் அளிக்கும். அவ்வளவு பெரிய அறிவியல் கண்டுபிடிப்புக்களும் அழிவிற்குப் பயன்படுத்தப் பெருதவாறு காக்கவும் பெறும். விஞ்ஞானம் மெய்ஞ்ஞானத்தின் பகையாக இல்லாமல் பண்புடைய ஏவலாளன் ஆகும்.

## மூன்று கருத்துக்கள்

எனது தலைமையுரையை மேலும் நீட்டித்தற்குக் காலம் இல்லை. சைவசமய வளர்ச்சி கருதிச் சிறப்பாக இளைஞர்கட்குப் பயன்படும் வகையில் சமாசமும், பிற பெருஞ்சமய அமைப்புக்களும் செய்ய வேண்டும் பணிகள் பலவுண்டு. சென்ற ஆண்டு மயிலத்தில் நடைபெற்ற சமாச ஆண்டு விழாவில் தலைவர் உயர்திரு. நல். முருகேச முதலியார் அவர்கள் நிகழ்த்திய தமது பொன்னன முன்னுரையில் வைர ஒளி வீசும் யோசனைகள் பலவுள. அவற்றுள் யாதானும் ஒன்றையேனும் ஒவ்வோர் ஆண்டும் சைவ உலகம் சாதிக்குமேல், எவ்வளவோ பெரும் பயன் உண்டு. சைவசமய வளர்ச்சிக்கு இன்றியமையாதனவாக யான் கருதும் மூன்றை மட்டும் ஈண்டு நினைவூட்டக் கடமைப்பட்டுள்ளேன். ஏனைய அனைத்தையும் தொகுத்துச் 'சிவநெறி வளர்க்கும் சிந்தனைகள்' என்ற தலைப்பில் தனியாக வெளியிட எண்ணியுள்ளேன்.

முதலாவதாகச் சமாசம் முன்னமே வெளியிட்டுள்ள பதிப்புக்களும் தற்போது வெளியிட்டு வரும் பதிப்புக்களும் எக்

காலத்தும் எங்கும் முட்டின்றிக் கிடைக்க ஏற்பாடு செய்ய வேண்டும். தீர்ந்துபோன பதிப்புக்கட்கு உடனுக்குடன் மறு பதிப்புக்கள் வரவேண்டும். இரண்டாவது உடனடியாக நமதரிய சைவ மடங்களும் சமாச அறிஞர்களும் பல்கலைக் கழகங்களின் உதவி நிதியையும் அரசாங்கத்தின் பொருட்கொடையையும் பெற்றே-பெருமலோ, 'சைவ சமயக் கலைக்களஞ்சியம்' ஒன்றை விரிவான அடிப்படையில் தயாரிக்க வேண்டும். அதில் சித்தாந்த மணம் கமழ வேண்டும். இது இந்த நூற்றுண்டின் சைவ உலகின் பெருஞ்சாதனையாக அமைய வேண்டும். மூன்றுவது 'சைவ இளைஞர் இயக்கம்' ஒன்று சமாச ஆதரவில் உருவாக வேண்டும். கிறித்துவ இளைஞர் சங்கம் இன்று உலகில் சாதித்துள்ள சாதனைகட்கு இணையுமுண்டோ? சென்னையில்—பாரிமுனையில் மட்டும் எவ்வளவு பெரிய அமைப்பு—கட்டடம்?

### வேண்டுகோள்

மேலே யான் குறிப்பிட்டுள்ள கருத்துக்கள் எல்லாம் நிறைவேற வேண்டுமானல், சைவ சமயச் சார்புடைய தமிழக அறிவுச் செல்வரும், பொருட் செல்வரும், அருட் செல்வரும், தன்னலங் கருதாது 'மன்ற உலகத்து மன்னுதல் குறித்து' மனமொழி மெய்களால் சலியாது உழைத்தல் வேண்டும். இந்த ஆண்டு நமது இளைஞர் மாநாட்டைத் திறந்து வைக்கும் மணலி, சீனி. இராமகிருஷ்ண முதலியாரிடம் நாடு எவ்வளவு நம்பிக்கை கொண்டிருக்கிறது! அதை அவர் அறியாவிடினும் அம்பலவாணன் அறிவானே! இந்த மாநாட்டைத் திறந்து வைக்கும் அவர் மனந்திறந்தால் செந்தமிழ் நாடெங்கணும் சிவமணம் கமழுமே! மணலி முதலியார் அவர்கள் தமிழ் நாட்டுச் செல்வர்கட்கு ஓர் எடுத்துக் காட்டாய்த் தொண்டாற்ற இறைவனை மனமார வேண்டுவோமாக! அவர் பேரருளால் சமாசத்திற்குச் சென்னையில் ஒரு பெருங்கட்டடம் எழுக! பிற நலங்கள் பெருகுக!

இந்த ஆண்டு சமாச ஆண்டு விழாவிற்கும், சைவர் மாநாட்டிற்கும் தலைமை தாங்குபவர்கள் நமது மதிப்பிற்குரிய தம்பிரான் சுவாமிகள் ஆவார்கள். வருங்காலத் தமிழ் நாட்டைச் சிவமயமாக்க வல்ல தருமை ஆதீனத் தலைவர் திருச்

செவியில் நம் தேவைகளைத் தம்பிரான் சுவாமிகள் நினைவு படுத்தினால் போதும். எத்தனையோ பயனுடைய நலங்களைத் தருமை தருமே! ஆண்டவன் அருள்வானாக!

## பண்பை வளர்க்கும் பாடசாலை

இன்றைய தமிழ் நாட்டின் தலைசிறந்த குருகுலம் வாலாசாபாத் இந்துமத பாடசாலை. சமாச அமைப்பிற்குப் பத்தாண்டே இளைய இவ்வமைப்பு எவ்வளவு மாட்சி வாய்ந்தது என்பதை இச்சமாசத்தைத் தோற்றுவித்த சான்றோராகிய திருப்பாதிரிப் புலியூர்ச் சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள், கால் நூற்றாண்டுக்கு முன்பே கண்டுணர்ந்து கூறியுள்ள ஞான மொழிகளால் இனிது புலனாகும். அவர்தம் அருளுரையை அன்பர்கள் மார்கழித் திங்கள் 'குருகுல' இதழில் கண்டு களிக்கலாம். இருபத்தைந்து ஆண்டுகட்கு முன்பு இணையிலா ஞானியார் அடிகள் இதயம் உருகி ஏட்டில் எழுதிய எழுத்தைக் காண்பதோடு நாம் திருப்தி கொள்ளத் தேவையில்லை. இருபத்தைந்து ஆண்டுகட்குப் பின் இன்று, அன்று ஞானியார் சுவாமிகள் அளித்த ஆசியால் விளைந்துள்ள பயனை இம்மேடையில் காணலாம். இந்த இளைஞர் மாநாட்டில் பேசுவோரிற் பெரும்பாலோர் இந்த இந்துமத பாடசாலையின் நிழலில் பயின்று வளர்ந்தவர்கள்; வள்ளலார் இல்லத்தில் வதிந்து உடல் நலமும், உள நலமும் பெற்றவர்கள்; எழுபதாண்டான இளைஞரான அப்பா அவர்கள் அயரா உழைப்பிற்கும், அண்ணா அவர்களின் மாறா அன்பிற்கும் சான்றாகத் திக்கெட்டிலும் திகழும் வெற்றித் தூண்கள். இவர்கள் ஆற்றும் அரிய உரைகளை—அநுபவ மொழிகளை—அருகிருந்து கேட்டுப் பயனுறும் வாய்ப்பை என் எளிய நிலைக்கு இரங்கி, ஆண்டவன் தந்துள்ள தகைமையினை நினைந்து உருகுகின்றேன். இவ்வுருக்கமே இன்னும் உயரிய நிலைகளை யான் பெற வித்தாகும் என்றும் உறுதியாக நம்புகிறேன். வணக்கம்.

செந்தமிழ் வாழ்க!
சிவநெறி வெல்க!

# மாணவ வாழ்க்கையில் சைவம்



திரு. மணிஅரசு க. நாராயணசாமி அவர்கள்
(பள்ளியின் பழைய மாணவர்)

## மாணவர் சிறப்பு

மாணவர் வாழ்க்கை மானிட வாழ்க்கையில் வளமான ஒரு பகுதி. மனித வாழ்வினைச் செப்பனிடும் பகுதி. மழலைப் பருவம் கடந்து பாலப் பருவம் தொடங்கும் நேரத்திலே மாணவ வாழ்க்கையும் தொடங்குகின்றது. மாணவர் வாழ்க்கை மற்றவர் வாழ்க்கையினின்றும் முற்றிலும் வேறுபட்டதும் மாறுபட்டதுமாகும்.

மாண்பு மிக்கோரே மாணவர். மாணவர் வளர்ச்சியே நாட்டின் வளர்ச்சி. இன்றைய மாணவர் வருங்காலத் தலைவர்கள். இவர்களே ஆசிரியர்களாகவும், பேராசிரியர்களாகவும், விஞ்ஞானிகளாகவும், வித்தகர்களாகவும், கலைஞர்களாகவும், கலைவல்லுநர்களாகவும், காவலர்களாகவும், நாவலர்களாக

வும், சன்மார்க்கச் சான்றோர்களாகவும், சமயத் தலைவர்களாக வும், சைவ மெய்யன்பர்களாகவும் விளங்கப் போகின்றார்கள்.

### சைவம்

மாணவர்கள் சைவநெறியின்பால் பற்றுடையராதல் வேண்டும். சைவம் என்பது அன்பு, அறிவு, அறம் ஆகிய மூன்றும் சேர்ந்த ஒரு தத்துவமே ஆகும். அன்பென்பது எல்லாம் வல்ல இறைவனிடத்துக் கொள்ளும் பக்தியும், பிற உயிர்களிடத்துக் காட்டும் இரக்கமுமேயாம். மக்கள் கடவு ளிடத்துச் செலுத்தும் பக்தி பிள்ளைகள் பெற்றோரிடத்துக் கொள்ளும் அன்பினைப் போன்றதே. உலகில் தோன்றிய எல்லாச் சமயாசாரியர்களும் அன்பு, அறிவு, அறம் ஆகிய சைவத்தின்பாற்பட்ட நெறிகளை வற்புறுத்தியுள்ளனர்.

### இறைவன் உள்ளம்

எல்லாம் வல்ல பரம்பொருள் ஒன்று உண்டு. உலகின் படைப்புக்கும், காப்புக்கும், முடிவிற்கும் அதுவே பொறுப் பானது. மண், நீர், நெருப்பு, காற்று, ஆகாயம் ஆகிய ஐம் பெரும் பூதங்களையும் உண்டாக்கி, உயிரினங்களையும் உண் டாக்கிச் செயல்படும் வண்ணம் செய்துவரும் பரம்பொருளின் மகிமையைக் கற்றுணர்ந்த பெரியோர்களெல்லாம் போற்றுகின் றார்கள். இறைவனின் இயக்கத்தை எளிதில் விளக்கவந்த பெரியோர்கள், “ சூரியன் வருவது யாராலே சந்திரன் வருவது யாராலே......” என்று சுட்டிக் கேட்பதன் வழித் தெளிவாக விளக்கியுள்ளார்கள். இருதய கமலத்தின் இயக்கமே ஆடலரச ரின் நடமிடும் ஒலி என்கின்றனர். இவைகளெல்லாம் இறை வன் ஒருவன் இருக்கின்றான் என்பதை மெய்ப்பிக்கவேயாகும்.

உலகம் போற்றும் உத்தமர் திருவள்ளுவர். அவர் வாழ் வாங்கு வையத்துள் வாழ்ந்த பேராசிரியர். வாழும் வகை— இவை என அறம், பொருள், இன்பம் என்னும் முப்பாலால் விளக்கியவர்;, “ திருக்குறள் ” என்னும் ஒப்பரிய நூலை உவந் தளித்தவர். ஒப்பாரும் மிக்காரும் இல்லாத வள்ளுவர் தாம் யாத்த பெருநூலில், ‘ கடவுள் வாழ்த்து ’ என்னும் அதி காரத்தை முதலாவதாக வைத்துப் பத்துப் பாடல்களைப் பாடி யுள்ளார். ஆரம்ப ஆசான் கற்பிப்பதுபோல ‘ அ ’ என்னும் எழுத்தையே முதலாவதாக வைத்து ஆரம்பித்துள்ளார். திருக்

குறளின் முதல் எழுத்து 'அ' ஆகவும் கடைசி எழுத்து 'ன்' ஆகவும் காணப்படுவது திருவள்ளுவர், 'தெய்வப் புலவர்' என்பதற்கோர் எடுத்துக்காட்டாகும்.

## இறை வணக்கம் தேவை

'அ' என்னும் எழுத்திலிருந்தே எல்லா எழுத்துக்களும் தோன்றியுள்ளன. வரிசைக்கிரமத்திலும் அகரமே முதலிடம் பெற்றுள்ளது. அவ்வாறே இவ்வுலகம் முழுமுதற் பொருளை முதலாக உடையது. அத்தகைய கடவுளின் தூய திருவடிகளை நாம் வணங்கவேண்டும். வணங்குதல் கற்றதன் பயனாகும். வணங்காவிடின் கற்ற கல்வியால் விளையும் பயன் ஒன்றும் இல்லை. அன்பர்களின் மனமாகிய தாமரையில் கடவுள் அமர்ந்துள்ளார். அவர்தம் பெருமை வாய்ந்த திருவடிகளை நாம் வணங்கினால் இவ்வுலகில் நெடுங்காலம் இன்பமாக வாழலாம். கடவுள் விருப்பு வெறுப்பு இல்லாதவர். அக்கடவுளை வணங்கினால் நாம் சிறந்த குணத்தைப் பெறலாம். எவ்வகைத் துன்பங்களும் எக்காலத்தும் நம்மை அணுகமாட்டா. நாம் சென்ற பிறப்பில் செய்த தீவினை, இப்பிறப்பில் செய்யும் தீவினை ஆகிய இவ்விரண்டும் நம்மைத் துன்புறுத்தமாட்டா. மேலும் தீவினைகளைச் செய்யாமல் நல்வழிகளில் நடப்போம். எண்வகை நற்குணங்களையும் அடையக் கடவுள் அருளே வேண்டும். நாம் அல்வழிச் செல்லுங்கால் நல்வழிப்படுத்தும் பெருமானை, நம்மைப் பிறவிப் பெருங் கடலினின்றும் கரையேற்றி நித்திய இன்பத்தைத் தரவல்ல இறைவனை, மாணவர்கள் இளமையிலிருந்தே தியானம் செய்தல் வேண்டும்.

கடவுள் நினைவு இளமையில் ஏன்? முதுமையில் பார்த்துக் கொள்ளலாம் என்று வாளாவிருத்தல் கூடாது. கள்ளமறியாப் பிள்ளைப் பருவ முதலே உள்ளங்கவர் கள்வனைக் கண்டவர் சம்பந்தர்; பெருமானின் பேரருளால்தான் திருவும், ஞானமும் பெற்று, "திருஞான சம்பந்தர்" எனப்பட்டார். சேக்கிழார் பெருமான் பாடியுள்ள பெரிய புராணத்தின் அறுபத்து மூன்று நாயன்மாருள்ளும் திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார் தாம் பிள்ளைப் பருவத்திலேயே மெய்ஞ்ஞானியாக விளங்கிய அருளாளர்.

### சமய ஒழுக்கம்

ஒவ்வொரு சமயத்தினர்க்கும் சமயக் குறிகள் உள்ளன. சைவ சமயத்தினரான மாணவர்கள் திருவெண்ணீறு அணிவதனை மேற்கொள்ள வேண்டும். திருவெண்ணீறு சிவ சிந்தனையைத் தரவல்லது; நோய் நீக்கம் செய்யவல்லது; எண்ணிய எண்ணியாங்கு எய்துதற்குரிய அருமருந்து. "மந்திரமாவது நீறு......" என்று தொடங்கும் தேவாரப் பாடலால் திருநீற்றின் பெருமையை அறியலாம்.

### அறவழி

சிவசிந்தனையுடையோரே அறத்தின் வழி நிற்போர். அறம் ஒருவனுக்கு நல்ல மதிப்பினையும் செல்வத்தினையும் அளிக்கும். உயிர்களுக்கு நன்மையைத் தருவதில் அறத்தினும் மேம்பட்டது வேறு ஒன்றும் இல்லை. இயன்ற போதெல்லாம் அறச்செயலினை இடைவிடாது செய்து வர வேண்டும். மனத்தூய்மையே அறம் ஆகும். மனத்தில் பொறாமை, பேராசை, கோபம், கடுஞ்சொல் ஆகியவற்றைக் கொண்டு அறச்செயல்களைச் செய்வதால் பயன் ஒன்றும் இல்லை. இந்நான்கு குற்றங்களையும் நீக்கி நடப்பதே அறமாகும்.

'மாணவப் பருவத்திலே அறச் செயல் ஏன்? மூதுமையில் பார்த்துக்கொள்ளலாம்' என்று காலம் போக்காது அறம் செய்தல் வேண்டும். காலம் கடத்துவது கடல் அலை ஓய்ந்த பின் நீராடலாம் என்பதுபோலாகும். அறம் செய்வதால் மறம் அழியும்; தருமம் தழைக்கும். தருமச் செயல்களைச் செய்து வருவதால் வறுமை, பிணி, மூப்பு முதலியவற்றால் உண்டாகும் துன்பங்கள் நீங்கும். "தருமம் தலை காக்கும்" என்பதும் இதன் பொருட்டேயாம். அறத்தின் பயன் இதுவென வரையறுத்துச் சொல்ல முடியாது. இன்ப வாழ்வு அறச் செயல்களினால்தான் உண்டாகின்றது. நன்னெறிகளால் வரும் இன்பமே நிரந்தர இன்பம். வேறு தீயவழிகளால் வருவனவெல்லாம் இன்பத்துக்குப் புறம்பான துன்பத்தைத் தருபவை. அவற்றால் புகழும் இல்லை. இகழே விளையும். எந்நிலையிலும், எக்காலத்தும், எவ்விடத்தும் தவறாமல் செய்ய வேண்டுவது அறச் செயலேயாகும் என்பதனைச் சிவ சிந்தனையுடைய மாணவர்கள் இயல்பாய் மேற்கொள்ளுவர்.

## அன்பு தேவை

மாணவர்கள், யாவரிடமும் அன்புடையராதல் வேண்டும். அன்புடையார் பிறர்க்குப் பயன்படுவார்; தமது உடல், பொருள், ஆவி யாவற்ருலும் பிறர்க்குப் பயன்படுவர். அன்பில்லாதவர்கள் சுய நலமிகள்; உலகின் இன்பங்களை எல்லாம் தாமே அடைய எண்ணுவர். அன்பு அறத்திற்கு மட்டுமின்றி வீரத்திற்கும் துணையாக நிற்கின்றது. மகாத்மா காந்தி அடிகளின் அன்பின் வெற்றியைப் பார்க்கின், அன்பு வீரத்திற்கும் துணை நின்றது தெரியும். அன்பில்லாதவர்களை அறக்கடவுள் வருத்தும். அன்பில்லாத வாழ்வு பாலைவன வாழ்வுக்கு ஒப்பானது. ஆகவே மாணவர்கள் அன்புவழிகளை மேற்கொள்ளுவதனுல் சைவ நெறியில் நின்றவராவர்.

## உணவு முதலியன

மாணவர்கள் உணவு, உடை, உறைவிடம் யாவற்றினும் எளிமையை விரும்பவேண்டும். ஆடம்பரம் வீண் செலவே யாம். ஆடம்பரத்தைவிட எளிமையும் இனிமையுமே நல்லோர் பலரும் விரும்பும் உயர்ந்த பண்புகளாம்.

உணவு, உடல் வளர்ச்சியுடன் மனவளர்ச்சியையும் உண்டாக்குவதாக இருத்தல் வேண்டும். மரக்கறி உணவே கொள்ளல்வேண்டும். புலால் உணவை எக்காரணம் பற்றியும் உண்ணலாகாது. உயிர்ச்சத்துள்ள உணவுகளெல்லாம் மரக்கறி உணவுப் பொருள்களிலேயே கிடைக்கின்றன. "ஆருயிர்கட் கெல்லாம் நான் அன்பு செயல் வேண்டும்" என்று மனங் கசிந்து வேண்டிய அருட்பெருஞ்சோதி வள்ளலார் இராம லிங்கப் பெருமான், புலால் உணவை விட்டொழித்தவர்க்கே நன்மைகள் யாவும் சித்திக்கும் என்று வலியுறுத்துகின்ருர். மரக்கறி உணவு இயற்கையாகவே அன்பு, அறிவு, அழகு யாவும் தரவல்லது.

## உள்ளத் தூய்மை

மாணவர்கள் உள்ளத் தூய்மையுடன் உடல் தூய்மையும், உடைத் தூய்மையும் உடையவர்களாதல் வேண்டும். காலையில் எழுந்து கடன்களை முடித்து, நன்னீராடி, வெண்ணீறு அணிந்து சிவ சிந்தனையுடன் கந்தரனுபூதி, கந்தர் கலி

வெண்பா, சண்முக கவசம் முதலான நூல்களைப் பக்தியுடன் ஓதல் வேண்டும். குழந்தைக் கடவுளான பால முருகன் இளமையும் அழகும் தரவல்ல இளவழகன். ஆதலினால் திரு முருகன் வழிபாடு சாலச் சிறந்தது. நின்பதத்தியான முண்டாயில் அரசே நீருண்டு, காருண்டு, நிலனுண்டு, பலனுண்டு, நிதியுண்டு, துதியுண்டு, மதியுண்டு, நெறியுண்டு, நிலையுண்டு, ஊருண்டு, பேருண்டு, மணியுண்டு, பணியுண்டு, உடையுண்டு, கொடையுண்டு, உணவுண்டு, உளமுண்டு, வளமுண்டு, தேருண்டு, கரியுண்டு, பரியுண்டு, மற்றுமுள்ள செல்வங்கள் யாவும் உண்டு என்று சைவமணியான சண்முகத் தெய்வமணியை வள்ளலார் பெருமான் வேண்டுவதுபோல மாணவர்கள் வேண்டிக்கொள்ளவேண்டும்.

## சமய அறிவு தேவை

சைவப் பெருந்தகையாளர்—பொதுநலப் புரவலர்—அப்பா திரு. வா. தி. மாசிலாமணி முதலியார் அவர்கள் தோற்று வித்துச் செயலாற்றும் வாலாசாபாத் குருகுலம் மாணவர் களுக்கோர் வரப்பிரசாதமாகும். வள்ளலார் மாணவர் இல்லத்தின் சிறுவர்கள் காலையில் துயிலெழுந்து, இரவு படுக்கைக்குப் போவதுவரை ஈடுபடுகின்ற எல்லாச் செயல்களை யும் திருவருள் துணையினை வேண்டியே செய்துவருகின்றனர். இத்தகைய குருகுலங்களில் கல்வி பயிலும் வாய்ப்புப்பெற்ற மாணவர்கள் நற்குண நற்செய்கைகளால் சிறந்து விளங்குவர் என்பது உறுதி. ஏனெனின் வாழ்க்கைக்குத் தேவையான கல்வியும் கைத்தொழிலும் கற்பிப்பதுடன் மனிதன் மனிதனாக வாழ்வதற்குச் சமய அறிவும் இன்றியமையாதது என்பதனை அறிந்து செயலாற்றுவதேயாம்.

## முடிவுரை

மாணவ மணிகள் அன்றாட வாழ்வில் ஒழுக்க சீலர்களா கவும், மரக்கறி உணவு மட்டுமே கொள்ளுகின்றவர்களாகவும், புகை முதலிய போதைப்பொருள்களை மனத்தாலும் எண்ணாத வர்களாகவும், பெற்றோர்க்கும் பெரியோர்க்கும் கீழ்ப்படிகின்ற வர்களாகவும், உயிர்களிடத்து அன்புடையவர்களாகவும், சிவ சிந்தனையுடையவர்களாகவும் செயல்பட்டால், மாண்புமிக்கவர் மாணவர்களே என்பதனை மெய்ப்பிக்கலாம்.

# ஆசிரியர் வாழ்வில் சைவம்

திரு. மு. அண்ணுமலை அவர்கள், M.A.
(தமிழ்ப் பேராசிரியர், அண்ணுமலைப் பல்கலைக் கழகம்,
வள்ளலார் மாணவர் இல்லத்தின் பழைய மாணவர்)

சிற்றூர் வாழ்க்கையின் மையப் புள்ளியாக ஒரு காலத்தில் ஆசிரியர் திகழ்ந்தார். இன்றும் பல சிற்றூர்களில் இந்நிலைமை நிலவத்தான் செய்கிறது. ஆசிரியர் அவ்வூர் மக்களுக்குப் பொது மனிதராகவும், எடுத்துக்காட்டு எனத் தகும் எளிய— உயர்ந்த வாழ்வைக் கடைப் பிடிப்பவராகவும் வாழ்ந்தார்.

எல்லோருடைய மகிழ்ச்சியிலும் துன்பத்திலும் அவர் பங்கு கொள்ளத் தவறவில்லை. நல்ல நாட்களிலும், தேர்-திருவிழாக் காலங்களிலும் மக்கள் தம்மூர் ஆசிரியரை மறக்கவில்லை. விழாக் காலங்களில் தங்களுக்கு வேட்டி துணிமணி எடுக்கும் போது ஆசிரியரையும் தங்கள் குடும்பத்தில் ஓர் உறுப்பின ராகவே கருதிக்கொண்டனர்.

சிற்றூர் மக்கள் சமூகம் ஆசிரியரைக் கௌரவமான ஒரு நிலையில் வைத்தே நோக்கினர். அதனால் ஆசிரியர்கள் அந்தக் கௌரவமான நிலையைவிட்டுக் கீழே இறங்க முடியவில்லை. கௌரவமான நிலையென்று சொல்லும்போது சிற்றூர் மக்கள் ஆசிரியரை மாடிவீட்டில் வாழ வைத்துவிட்டார்கள் என்பது அதன் பொருளன்று. பொருள் வருவாய் என்பது அந்தச் சிற்றூரின் பொருளாதார வசதிகளைப் பொறுத்துத்தானே அமைய முடியும்? நான் இங்கே சொல்ல வருவதெல்லாம் ஆசிரியரைச் சிற்றூர் மக்கள் தாங்கள் பின்பற்றுவதற்கேற்ற முன்மாதிரியாக வும், தங்கள் மரியாதைக்குரிய, வழிகாட்டியாகவும் (moral and spiritual guidance) கொண்டிருந்தார்கள் என்பது தான்.

## ஆசிரியர்களின் பெருநிலை

பொதுவாக மக்கள் குழு எதையும் தானே சிந்தித்துச் செய லாற்றும் இயல்புடையதன்று. பிறரைப் பின்பற்றுவதையும்

நம்புவதையும் மக்கள் எளிதில் கையாளுகிருர்கள். வாழ்க்கையின் ஒவ்வொரு துறையிலும் ஒவ்வொரு கட்டத்திலும் மக்கள் சிந்தித்தே செயலாற்ற வேண்டும் என்று நாம் எதிர்பார்ப்பதற்குமில்லை. எனவே பின்பற்றுவதும் நம்புவதும் மக்களின் பொது இயற்கை என்பதை ஒத்துக்கொண்டால் அவர்கள் பின்பற்றக்கூடிய நிலையில் அவர்கள் வாழ்க்கையில் தொடர்புபட்டிருக்கும் சிலரின் பொறுப்பும் கடமையும் மிகமிகப் பெரியனவாக இருத்தலையும் நாம் இங்கே ஒத்துக்கொள்ளவேண்டும்.

மக்களின் இந்தத் தேவையை நிறைவேற்றும் சிலருள் ஆசிரியனும் ஒருவனுவான். மக்களின் இந்தத் தேவையை நிறைவேற்ற முடியாத ஆசிரியன் சிற்றூர்களில் பெரும்பாலும் வெற்றியோடு வாழ முடிவதில்லை. ஒழுக்முடையவர்களாகவும் வாழ்வின் முன் மாதிரிகளாகவும் அமையவேண்டிய கட்டாயம் அல்லது ஒரு நிர்ப்பந்தம் ஆசிரியர் சமூகத்தை அழகு செய்தது.

ஒழுக்கம், நேர்மை, அறம் முதலியனயாவும் நம் நாட்டில் சமயவுணர்வோடு இணைந்தே உருவாகி வந்துள்ளன. அவற்றைப் பிரித்துப் பார்க்கின்ற போக்கும் நம் வாழ்வில் இல்லை. அதனுல் சமயத்தை உதறிவிட்டு வாழ்க்கை நடத்தும் ஆசிரியன் ஒருவனைக் கற்பனை செய்து பார்க்கக்கூட மக்கள் அஞ்சினர் என்றுதான் சொல்லவேண்டும்.

அளவும் நெறியும் உடைய—வேகமும் வெறியும் அற்ற—சமயத்தை, சமயங் கடந்த சமரசத்தை வாழ்வில் கடைப்பிடித்துத் தெய்வீக ஒளியோடு ஆசிரியன் திகழ்வது சமுதாயத்திற்கு நன்மைதானே பயக்கும்? ஆசிரியனின் தெய்வீக நலந்திகழும் வாழ்வைக் கண்ணுற்ற மக்கள் பொதுவாகப் பெற்ருேர்களோடும், அரசனேடும், தெய்வத்தோடும் ஒப்பவைத்து ஆசிரியனை மரியாதை செய்தனர். ஐம்பெருங்குரவர்களுள் ஒருவராக ஆசிரியர் கருதப்பட்டார்.

அதாவது நான் சொல்ல முனைவதெல்லாம் ஆசிரியர் குழந்தைகட்குமட்டும் ஆசிரியராக இல்லை. அவர் இருக்கும் ஊர் மக்கள் அனைவருக்கும் தம் நடைமுறைகளால் ஆசிரியராகத் திகழ்ந்தார் என்பதுதான். வளரும் சமுதாயத்தை உருவாக்கும் பணியோடு வளர்ந்த மக்கள் குழுவிற்கும் வழிகாட்டும் பொறுப்பை அவர் ஏற்றுக்கொண்டார். தெய்வத்தோடு ஒப்பவைத்து எண்ணும் அரிய நிலையும் அவருக்கு வாய்த்தது.

## ஆசிரியர்களின் இன்றைய நிலை

மாறிவரும் சமுதாயப் போக்கிலும் புதுச் சூழ்நிலையிலும் மேற்கூறியது போன்ற ஆசிரிய வாழ்வை நாம் எதிர்பார்க்க முடியவில்லை. ஆசிரியன் மேற்சொன்ன கௌரவமான நிலையில் இருந்து கட்டுப்பாட்டிற்குள் இயங்க வேண்டும் கட்டாய நிலை இப்பொழுது இல்லை.

நகர்ப்புறச் சூழ்நிலைகளில் ஒருவன் மற்றொருவனைப் பற்றிக் கவலைப்பட நேரமில்லை. ஆசிரிய சமூகத்தின் நடவடிக்கைகள் கூர்ந்து கவனிக்கப்படுவதில்லை. ஆசிரியப் பணி ஏதோ ஒரு அலுவலக வேலை போலாகிவிட்டது. அல்லது இப்படிச் சொல்லலாம். வேலையற்றவர்கள் நல்ல வேலை கிடைக்கும் வரையில் தங்கிப் போகும் அகதி மடம் போலாகிவிட்டது ஆசிரியத் தொழில்.

கல்லூரி ஆசிரியர்களில் மாணவவாழ்வோடு ஒன்று படாமல்-ஒன்றுபட முடியாமல் சிலர் திணறுகின்றனர். சிலர் மேலெழுந்த வாரியாகப் பறக்கின்றனர். விரிந்து கொண்டிருக்கும் அறிவுத் துறைகளை நோக்கி ஆசிரியனின் தனிப்பட்ட வாழ்க்கை வேறு; ஆசிரியனின் அறிவுத் திறமை வேறு; இரண்டையும் ஒன்றரோடு ஒன்றை இணைத்துப் பார்க்கக்கூடாது என்று இப்பொழுது நம்மில் பலர் வியாக்யானம் செய்துகொண்டிருக்கிறோம்.

மாறிக்கொண்டிருக்கும் சமுதாய அமைப்பில் ஆசிரியநிலை பல மாதிரியாக அலைக்கழிக்கப்பட்டு உருவாகிக்கொண்டு வருகிறது. எது எப்படியானாலும் சரி, ஆசிரியன் நியாய உணர்ச்சி அற்றுப்போய் மரமாகவோ புழுவாகவோ மாறிவிடக்கூடாது. மாணவ சக்திகளைத் தூண்டிவிட்டு அழிவு வேலைக்கும் அவன் உடந்தையாகிவிடக்கூடாது. இன்றைய நிலைமையில் சமயத்தின் கனிவும் சாரமும் (the essence of religion) அவன் உள்ளத்தோடு கலந்தால் நன்மை பெரிதும் விளையலாம். நான் இங்கே குறிப்பிடுவது நடையுடைகளில் வெளிப்படும் பாவனை அல்லது சடங்குச் சமயத்தை அன்று. சமய மெய்ப்பொருளின் தெளிவே இங்கே ஆசிரிய வாழ்விற்குத் தேவையென்று குறிப்பிடுகிறேன்.

அரசியல் கட்சிகளின் ஆதிக்கங்கள் ஆசிரியன் எவ்வெவ்

விடங்களில் எவ்வெச் சூழ்நிலையில் விடப்பட்டிருக்கிருனே அவ் வவ்விடங்களில் நேரும் அதிகாரக் குழப்பங்கள் சுயநல நோக் கங்கள், பதவி வேட்கை முதலியவற்றின் பிடியிலே சிக்கிக் கொண்டு விடுகிருன். அவனது நியாய உணர்ச்சி மரத்துப் போய் விடுகிறது. தன் சூழலுக்கேற்பவும் தனக்கேற்பவும் தன் குழுவிற் கேற்பவும் நியாயத்தைத் திரித்துக் கொள்கிருன். நியாயமல்லாதனவற்றை நியாயமாகவும் நியாயத்தை அநியாய மாகவும் காட்டவும் துணிந்து விடுகிருன். அவனது அறிவு கோணல் வழிகளில் சஞ்சாரம் செய்து மகிழ்கிறது.

## ஆசிரியர்களுக்குரிய பண்புகள்

ஆசிரியனுக்கு ஓரளவு துறவுள்ளம் தேவை. காவி உடைக் கும் கமண்டலத்திற்கும் அப்பால், உள்ளத்தோடு சேர்ந்து முதிர்ந்து வருகின்ற பக்குவத்தை—துறவுள்ளத்தையே நான் இங்கு வேண்டும் என்று குறிப்பிடுகிறேன்.

பல ஆயிரம் ஆண்டுகள் தனக்கென்று தொடர்ந்த வரலாறு உடையதாய் நிலவிப் பலகோடிக்கணக்கான மக்களின் உள்ளத் தில் அமைதியையும் தெய்வீக ஒளியையும் பரப்பி நலஞ் செய்து வந்திருக்கும் சைவசமயம் மனித உள்ளத்தில் புதுமலர்ச்சியை ஊட்டமுடியும் என்று இப்பொழுது நான் நம்புகிறேன். வாழ்க் கையில் அநுபவம் உண்டாக உண்டாகத்தான் சமய வாழ்வின் தேவையும் அருமையும் நமக்குப் புலப்படுகின்றன.

தெய்வீக ஒளி உள்ளத்தில் புகத் தொடங்கும்போது தர்மம் வெற்றிபெற வேண்டும் என்ற ஆவலும் ஆன்மீக உறுதியும் ஒருவனுக்கு வாய்த்து விடுகின்றன. சொல்லும் செயலும் ஒன்ருகும்போது உண்மை மரியாதை செய்யப்படுகின்றது.

இதுவரையிலும் பழங்காலச் சிற்றூர் வாழ்க்கையில் ஆசிரியன் நிலையையும் புதுச் சூழ்நிலையில் ஆசிரியன் விடப்பட் டிருக்கும் நிலையையும் மிக வேகமாகத் தொட்டுக் காட்டிக் கொண்டு வந்தேன். இன்றைய நிலையில் ஆசிரியன் உள்ளத் தில் அமைதியையும், கீழான குழப்பங்களிலும் பதவி வேட்கை யிலும் ஈடுபட்டு மனிதத்தன்மையை இழந்துவிடாதபடி துறவு மனப்பான்மையையும் சமய உணர்வு தந்துதவ முடியும் என்றும் கூறினேன். இனி ஆசிரியன் வாழ்வில் கடைப்பிடிக்கத் தகும் சைவம் யாது என்பதையும் ஓரளவு விளக்க முற்படுகின்றேன்.

## ஆசிரியர்களும் சைவவுணர்வும்

சிவனை முழுமுதற் கடவுளாகக் கொண்டு அவன் பேரருள் பெற்று உய்திகாண முயலும் வழிபாட்டு முறை சைவமாகும் என்று பொதுப்படக் கூறலாம்.

உண்மையான சைவ வாழ்வு சிவனடியார்களின் வரலாற்றிலே மலர்ந்திருப்பதை நாம் இங்கு நினைவு கூரலாம். எல்லா அடியார்களின் வாழ்விலும் பொதுவாக ஊடுருவிச் செல்லும் ஓர் உள்ளோட்டத்தைக் காணலாம்.

எல்லா நாயன்மார்களும் தங்களுக்கியன்ற செயல் இதுவென்று கணக்கிட்டு, அதனைத் தங்கள் வாழ்வின் குறிக்கோளாகக் கொள்கின்றனர்; அந்தக் குறிக்கோளுக்காக இறுதிவரை வாழ்கின்றனர்; எந்தச் சூழ்நிலையிலும் எந்த இக்கட்டிலும் எவ்விதச் சோதனையிலும் தளராது நின்று ஈடு கொடுக்கின்றனர்.

இத்தகைய மனப்போக்கு ஆசிரியர்கட்கு அமைவதன் மூலம் அவர்களால் உருவாக்கப்படும் எதிர்காலச் சமுதாயம் நன்மையடையும்.

நாயன்மார்கள் பல்வேறு சாதிகளைச் சேர்ந்தவர்கள். இன்ன சாதியினர்தாம் சைவர்கள் என்ற விதி இல்லை. எல்லோருக்கும் சிவன் திருமுன்னிலை திறந்து கிடக்கிறது. இறைவன் முன்னால் எல்லா ஆன்மாக்களும் ஒரு நிகரனவே! சாதி கடந்து-திணை கடந்து நிற்கிற சமயமாகச் சைவத்தைக் காண்கிறோம்.

நமிநந்தி அடிகளின் வாழ்வு சைவத்தின் சமரசப் போக்கிற்குத் தக்க சான்றாக நின்றுதவுகிறது. நமிநந்தி அடிகள் சோழநாட்டு அந்தணர். சிவன்பால் இடையறாத அன்பு பூண்டவர். ஒருநாள் திருவாரூர்த் தியாகேசர் மணலிக்கு எழுந்தருளிய போது தாமும் கூடச் சென்று நள்ளிரவில் வீடு திரும்பினார். வீடு திரும்பிய அவர் நேராக வீட்டிற்குள் நுழைய வில்லை. பல்வேறு சாதியினரும் இறைவன் உலாவில் கலந்து வந்தமையால் தம் தூய்மை கெட்டுவிட்டதாக அவர் கருதினார். சிவனை வழிபடும் பக்தர்களுக்கிடையே இப்படி ஒரு சாதி வேறுபாடா? சிவனடியார்களுக்கிடையே சாதிப் பூசலுக்கு இடமில்லை. என்பதை இறைவன் அவருக்கு உணர்த்தி அருளவேண்டிய அவசி

யம் ஏற்பட்டது. இறைவன் கனவில் தோன்றி நமிநந்தி அடிகள் உள்ளத்தைத் தெளிவித்தார். நமி நந்தி அடிகட்கு இறை கூறிய உரையை, உயர்சாதி என்ற மமதை உடையவர்கள் அத்தனை பேருக்கும் கூறிய உரையாகத்தானே கொள்ள வேண்டும்?

ஆசிரியனது சைவ வாழ்வில் சாதி வேறுபாடு பற்றிய பூசல் இருத்தற்கு வழியில்லை.

நாயன்மார்களின் வாழ்வைப் பார்த்தால் சைவம் பருவங் கடந்த—பால் கடந்த சமயமாகவும் இருத்தலைக் காணலாம். இறைவனின் அருட்பெருக்கிற்கு முன்னர் இளையர், முதியர் என்ற பருவ வேறுபாடோ—ஆண் பெண் என்ற பால்வேறுபாடோ இல்லை. முதியவர்கள் இளையவர்களை ஊக்குவித்து ஏற்றுக் கொள்ளாத அலட்சிய மனப்பான்மையும், முதியவர்களை இளையர் மதியாத அடங்காத்தனமும் உண்மையான சைவத்திற்கு முரண்பட்டவையாம். ஞானசம்பந்தப் பிள்ளையும், முதியராய்த் தள்ளாடி நடக்கும் அப்பர் பெருந்தகையும், இறைவன் உறைவிடம் நோக்கி நடந்த காரைக்காலம்மையும் நமக்குச் சொல்லக் கூடியது இதுதானே.

## புலனடக்கம்

திருநீலகண்டர் வாழ்வு உணர்த்தக் கூடிய பேருண்மை யாது? காம வாழ்க்கையில் மிக எளியராய் அலைந்த நீலகண்டரை நோக்கி "எம்மைத் தீண்டேல்; திருநீலகண்டத்தின் மீதாணை" என்று அவர் மனைவியார் ஊடிக் கூறினர். 'திருநீலகண்டம்' என்ற ஒலி-இறைவனின் பெயர் அவருடைய உள்ளத்தில் பெரிய வேலையைச் செய்துவிட்டது. காம உணர்வையே அடக்கிப் பெண்ணினத்தையே தீண்டமாட்டேன் என்று சொல்லத்தக்க பேருறுதியைத் தந்துவிட்டது. இறைவனின் பெயர் விசேடம் அப்படி. அந்த நாதம் அவருடைய வாழ்க்கையில் ஒரு திருப்புமுனையாக அமைந்துவிட்டது. ஆசிரியர்கள் இளையவர்களாக இருந்தால் இந்தத் திருநீலகண்டம் என்ற சொல்லின்மூலம் சிறிதளவாவது புலனடக்கம் பெறக்கூடும் அல்லவா? ஆசிரியர்கள் மணமானவர்களாக இருந்தால் இத்திருநீலகண்ட உச்சாரணம் முன்னெச்சரிக்கையாக-பாதுகாவலாக நின்றுதவும் அல்லவா?

புலனுணர்ச்சிகளிலிருந்து விடுபட முடியாமல் தவிக்கும் மனிதனுக்குச் சாதிக்கமுடியாத காரியங்களைச் சாதிப்பதற்கு ஏற்ற ஊக்கத்தை இறைவன் திருநாமம் தந்துதவும்.

## சமுதாயத் தொண்டு

ஆசிரிய வாழ்வு மனிதாபிமானத்தை அடிப்படையாகக் கொண்டுதான் மலர்கிறது. அடியார்கள் மற்ற சிவனடியார்களுக்கு உதவுவதையும் சொல்லொணுத வறுமையிலும் அவர்கள் பசியைத் தீர்த்து வைப்பதையும் காண்கிறேம். சைவப்பற்றின் அடிப்படையில் ஒரு குறிப்பிட்ட அளவு செம்மையாக மனிதாபிமானம் வளர்க்கப்பட்டிருக்கிறது என்பதை நாம் ஒத்துக் கொள்ளவேண்டும். ஒரு மனிதன் பிறருக்கு உதவியாக வாழ்வதென்ருல் ஒரு குறிப்பிட்ட அளவு மக்களுக்குத்தானே முடியும்! அந்த எல்லை அளவைச் சைவர்கள் சிவப்பற்று என்ற பொதுமையை அடிப்படையாக வைத்து நிர்ணயித்துக்கொண்டிருக்கிருர்கள். இதில் என்ன தவறு இருக்கிறது? சிவப்பற்று என்ற அடிப்படையில் ஒரு மனிதன் மற்ரெரு மனிதன் பசியைப் போக்கப் படாதபாடு பட்டிருக்கிருன். ஒரு மனிதன் மற்ரெரு மனிதனுக்கு வேண்டியவாறு ஊழியம் புரிந்து உதவி மனப்பான்மையை வளர்த்திருக்கிருன். எனவே மனிதாபிமானத்திற்குத் தீங்குவராத முறையில் ஆசிரியர்கள் சைவ வாழ்வைக் கடைப்பிடித்துச் சிறக்கமுடியும்.

சமுதாயத்தை விட்டு ஒதுங்கி ஓடும் ஒதுங்கல் கொள்கையை சைவம் வலியுறுத்தவில்லை.

## தூயவுள்ளம்

ஆசிரியனுக்கு விருப்பு வெறுப்புக்களால் பாதிக்கப்படாத உள்ளம்—இன்ப துன்பங்களால் அலைக்கழிக்கப்படாத உள்ளம்—வேண்டும். 'மெய்த்திரு வந்துற்ருலும் வெந்துயர் வந்துற்ருலும் ஒத்திருக்கும்' பெரிய இலட்சிய நிலைக்குத் தன் உள்ளத்தை ஆசிரியன் பழக்கிக் கொள்ளவேண்டும்; ஓடும் செம்பொனும் ஒக்க நோக்கும் துறவு நிலைக்குத் தன் உள்ளத்தைப் பண்படுத்தி உயர்த்துதல்வேண்டும். துன்பத்தைக் கண்டு வெருவி ஓடிக் கலங்காமல் அதனையே இன்பமாகக் கொண்டு மகிழும் ரகசியத்தை அவன் கற்றுக்கொண்டு விட

வேண்டும். எல்லோரும் சோகமாகக் கருதும் கடைசிக் கட்டத்தில்தானே—அதாவது சுடுகாட்டில்தானே இறைவனின் ஆனந்தக் கூத்து தொடங்குகிறது? இத்திருக்கூத்து, அடையாள ரீதியாக (Symbolic) ஒரு பெரிய உண்மையை உணர்த்துகிறது. துன்பத்தின் இடையே ஆனந்தக் கூத்தைக் கண்டு களிக்கிற மனோபாவம் ஒரு மனிதனுக்கு வந்துவிட்டால் அவன் தெய்வீக வாழ்வின் எல்லையைக் கண்டு விடுகிறான் என்பதுதானே பொருள்? ஒருவன் இன்ப துன்பங்களால் பாதிக்கப்படவில்லை என்றால் என்ன பொருள்? இந்த உலகக் கட்டிலிருந்து விடுபடக் கற்றுக்கொண்டுவிட்டான் என்பது தானே?

ஆசிரியனுக்கு மதவெறி இருக்கக் கூடாது. சமயக் காழ்ப்பு இருந்தால் ஆசிரிய வாழ்வு தோல்வியடையும். எந்தச் சமயத்து மாணவர்களைக் கண்டாலும் தமராகக் காணும் மனப்பாங்கு உடையனாதல்வேண்டும். பிற சமயத்தார்களையும் பிற தெய்வங்களையும் காணும்போதெல்லாம் சிவனடியார்களையும் சிவனையும் காண்பதாகவே அவன் நினைந்து மகிழவேண்டும். அப்படிப்பட்ட ஒரு மனப்பழக்கத்தை அவன் உண்டாக்கிக் கொள்ளும்போது, அவன் சைவ சமயத்தைச் சமயம் கடந்த சமரசமாகக் காணும் பெரும்பணியைச் செய்தவனாகிறான். "யாதொரு தெய்வம் கொண்டீர் அத்தெய்வமாகி ஆங்கே மாதொரு பாகனார்தாம் வருவர்" என்று உள்ளூர நினைந்து அமைதி கொண்டால் பூசலில்லை அல்லவா?

# சமுதாயத்தில் சைவம்



திரு. சுந்தரவடிவேல் அவர்கள், பி. எஸ்ஸி.
(தலைமை அஞ்சலகம், சென்னை)

பெரியோர்களே! உடன்தோன்றல்களே! வணக்கம்.

## அன்பே சிவம்

பலவற்றின் கூட்டமே சமூகமாகும். இன்றைய சமூகத்தை நல்வழியில் நடக்க வைப்பது சட்டமாகும். ஆனால் பண்டை நாட்களில் சைவமே சட்ட நிலையில் நின்று பணியாற்றியது; இது மட்டுமன்றித் தனக்கே உரித்தான அன்பு நெறியும் கொண்டு சமூகத்தை உயர்ந்த பண்புகளுடன் வளர்த்தது.

"சைவம்" என்ற சொல் சிவபெருமானை வழிபடும் ஒரு செயலைக் குறிப்பதாகும். சிவம் என்றால் அன்பு என்பது பொருள். "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்" என்பது முதுமொழியாகும். எனவே, சமூகத்தில் பிற உயிர்களிடம் அன்பு காட்டுவதே சைவமாகும். "மக்கட் பணியே

மாபெரும் பணி" என்றும், "நடமாடுங் கோயில் நம்பர்க் கொன்றீயில், படமாடுங் கோயில் பரமற்கொன் றுகும்", (To serve humanity is to serve God) என்றும் பெரியோர் புகன்றனர். சிவபெருமான் ஏழைகளுக்கிரங்கும் எம் பெருமான். இதனுல்தான் "ஏழை பங்காளனைப் பாடேலோ ரெம்பாவாய்" என்ருர் மணிமொழியார்.

## பரந்த நோக்கம்

"பிறப்பொக்கும் எல்லா வுயிர்க்கும் சிறப்பொவ்வா செய் தொழில் வேற்றுமை யால்" என்பதும், சிறப்பெய்துவது சைவ நெறியைப் பற்றி நடப்பதால் ஏற்படும் ஒரு பேறு என்பதும் சைவ சமய நாயன்மார்கள் வாழ்க்கை வரலாறுகளே விளக்கும். "ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும், கங்கைவார் சடைக் கரந்தார்க் கன்பராகில், அவர்கண்டீர் நாம் வணங்கும் கடவுளாரே" என்பது நாவுக்கரசர் நவின்ற மொழி. எனவே, சிவனை வழிபட்டவர், அதாவது சைவர்கள் சமூகத்தில் சமத்துவம் கண்டனர். இதனுல்தான், "எல்லோரும் ஓர் குலம்; எல்லோரும் ஓர் நிறை; எல்லோரும் இந்நாட்டு மன்னர்" என்று பாரதியார் பாடினுர். சைவர்கள், சைவ சமூகமே அன்றிப் பிற சமயத்தாரும், பிற நாட்டாரும் இனிதே வாழ வேண்டுமென்று விரும்பினர். "யாதும் ஊரே, யாவரும் கேளிர்"; "எல்லோரும் இன்புற்றிருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறென் றறியேன் பராபரமே"; "தென்னுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி" என்ற சொற்றொடர்களெல்லாம் சைவர்களது பரந்த நோக்கத்தையும் இன்றைய பஞ்ச சீலக் கொள்கைகளையும் விளக்கா நிற்கின்றன.

உயிர்கள் கூடி வாழ்வது சமூகமென்றும், அவ்வாழ்க்கையை நல்ல வழியில் நடக்க வைப்பது சட்டம் அல்லது சைவம் என்றும் கண்டோம். இனி ஒரே கடவுளின் சிவ உருவத்தையன்றி அக்கடவுளின் பிற நிலைகளை வணங்கும் பல சமயத்தவர்களும்-சைவத்தை, அதாவது, சைவக் கொள்கைகளையே கடைப்பிடிக்கின்றனரென்பதையும், சமூகம் இன்பநிலையில் வாழவேண்டுமானுல் ஒரு "சமயம்" தேவை என்பதையும் காண்போம்:

## யாண்டும் அன்பே

சைவ சமயத்தின் அடிப்படைக் கொள்கை "அன்பு". இதையே அளவிற்கும் இடத்திற்கு மேற்பக் கருணை, இரக்கம், பாசம், காதல் என்பர். இறைவனை எண்ணி எண்ணிக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க வேண்டுமென்பது கூறப்படுகிறது. உலகில் காணப்படும் சமயங்களின் உட்கிடக்கையும் 'பிற உயிர்பால் அன்பு காட்டலே'யாகும். இசுலாத்தைப் பரப்பிய நபிநாயகத்திற்கு "ரஹீம்கான்" என்பதும் ஒரு பெயர். 'ரஹீம்' என்ற சொல்லிற்குக் 'கருணை' என்பது பொருள். 'கான்' என்பதற்குத் 'தலைவன்' என்பது பொருள். எனவே, முகமது நபி கருணாகர மூர்த்தி யாகும். கிறித்தவ மதம் அன்பிற்கே பேர் போனது. இம்மதம் கருணையின் இருப்பிடம் என்பது இன்று கண்கூடு. 'உன்னைப் போல் பிறனை நேசி'; 'ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தைக் காட்டு': 'மேல் சட்டை கேட்டால் கால் சட்டையும் கொடு'; 'ஒரு மைல் தூரம் உடன் அழைத்தால் இரு மைல் தூரம் செல்' என்ற ஏசுவின் வாக்குகளும், தேவ இரக்கம், அருளானந்தம், நற்குணம், கிரேஸ் (Grace) போன்ற கிறித்தவத் திருநாமங்களும் இம்மதத்தின் உயிர் நாடியை நன்கு விளக்குகின்றன அல்லவா?

ஒன்றின்மீதுள்ள பற்றினை நீக்கவும், பிற உயிர்களிடம் அன்பு காட்டவும் பௌத்த மதம் போதிக்கிறது. பிற உயிர்களை நேசிப்பதே நோக்கமாகக் கொண்ட சமண மதம் உயிர் வதை நீக்குவதே சிறப்புக் குறிக்கோளாகக் கொண்டுள்ளது. பிற்காலத்தில் தோன்றிய சமயக் கொள்கைகளும் அன்பையே அடிப்படையாகக் கொண்டன. அக்பர் ஏற்படுத்திய 'தீன் இலாஹி'யும் வடலூர் வள்ளலார் கண்ட 'சமரச சன்மார்க்க'மும் இந்நாளில் பேசப்படும் 'காந்தீய'மும் இதற்குச் சான்றாகும். எனவே, சமயங்கள் வேறாயினும் யாவும் அன்பையே அடிப்படையாகக் கொண்டுள்ளன எனலாம்.

## பேராற்றல்

விஞ்ஞானத்தில் மூழ்கியுள்ள சமூகத்தில் சைவம் முந்திக் கொள்கிறது. அணுக்கள் பல நுண்பொருள்களாலானதென்றும், ஒரு அணுவின் நடுவே ஒரு முக்கியப் பொருள் உண்

டென்றும், அதைச் சுற்றி வேறு நுண்பொருள்கள் ஒரு குறிப்பிட்ட திசையிலும் விசையிலும் சுற்றி வருவதாகவும், இவைகளின் சுற்றுதல் நின்றுவிட்டால் உலகம் அழியும் என்றும் விஞ்ஞானிகள் கூறுகின்றனர். தில்லைவாசி ஓர் வட்டத்திற்குள் குறிப்பிட்ட முறையில் எப்போதும் நடனமிடுவதாகவும், அவரது ஆட்டம் நிற்கும் காலமே உலக முடிவென்றும் சைவர் கூறுகின்றனர்.

'சமயமும் சட்டமும் இல்லையெனின் மக்கள் ஒழுக்கம் கெடும்' என்று அறிஞர் கூறியுள்ளனர். ஒரு சமூகத்தை நன்னெறியில் நடத்திச் செல்லச் சட்டம் எவ்வளவு அவசியமோ, அவ்வளவிற்குச் சமயமும் அவசியம் என்பது இதனால் புலனாகிறது.

## சமையம் தேவை

'சமையம்' என்றும் அழிக்கமுடியாத ஒரு 'கொள்கை'. சைவ சமயம் முதற்படி, முதல் முடிவற்ற கடவுள் தன்மையை விளக்கும் சமயம். சைவத்தில் பால பாடம் கற்பவர்க்கு உருவச்சிலைகளும் கோவில்களும் உதவுகின்றன. "வழக்கறிஞனைப் பார்க்கும்போது நீதிமன்றமும், குழந்தையின் கையில் விளையாட்டு யானையைப் பார்க்கும்போது உண்மை யானையின் உருவமும் கோவில்களைப் பார்க்கும்போது ஆண்டவனின் நினைவும் உள்ளத்தில் வருகிற" தென்று விவேகானந்த அடிகள் கூறியுள்ளார். பாலபாடத்தோடன்றிப் பரந்த தத்துவ ஞானங்களையும், சைவசித்தாந்தங்களையும் விளக்கும் "சிவஞான போதம்" போன்ற புதைபொருள் நூல்களையும் சைவம் கொண்டுள்ளது. எனவே, சமூகம் நல்வாழ்வு வாழச் சைவம் தேவை என்பது தேற்றம்.

ஒரு மொழியின் இலக்கியத்திற்கும் இலக்கணத்திற்கும் தொடர்பு காணவந்த அகத்தியர், "பூவினுள் வாசம் பொருந்துதல் போல, இலக்கண இலக்கியம் இயல்புடைத்தாகும்" என்றார். இவ்வுவமையே சமூகத்திற்கும் சைவத்திற்கும், அதாவது சமயத்திற்கும் பொருந்துமென்றாலும் மிகையாகாதெனக் கூறி, என் உரையை முடித்துக்கொள்கிறேன். வணக்கம்.

# வாணிகத்தில் சைவம்



திரு. E. D. தட்சிணுமூர்த்தி அவர்கள், B. Com.
(பள்ளியின் பழைய மாணவர்)

## முன்னுரை

வாணிகத்தில், சைவம் எப்படி கடைப்பிடிக்கப்பட வேண்டும்? ஏன் கடைப்பிடிக்க வேண்டும்? என்பதனை ஆராய்வதற்கு முன்பு, சைவம் என்பதின் உண்மைப் பொருளை முதலில் உணர்தல் வேண்டும். சைவம் என்பது ஒரு சமயத்தைக் குறிப்பது என்பதும், அந்தச் சமயத்தைச் சார்ந்தவர்கள் சைவர்கள் என்பதும் யாவரும் அறிந்தனவே. சைவ சமயத்தைப் போன்றே, உலகில் வேறு பல சமயங்கள் உள்ளதையும், ஒவ்வொரு மனிதரும் ஏதாவது ஒரு சமயச் சார்புடையவராக இருப்பதையும் காண்கிறோம். ஆனால் 'மறுமலர்ச்சிக் காலம்' என்று கூறப்படும் இந்நாளில், இதுபோன்ற சமயச் சார்புகள் மக்களுக்குத் தேவையா என்று பேசப்படுவதையும் உணர்கிறோம். ஆகவே, அதுபற்றியும் இங்கு ஆராயவேண்டுவது நமது கடமையாகிறது.

## சட்டமும் ஒழுக்கமும்

இந்நாளில், மக்கள் சமுதாயத்தில், வலியோரால் எளியோருக்கு இடைஞ்சல் ஏதும் ஏற்படா வகையில், அச்சம் தவிர்க்க வாழ்க்கை அமையவும், நீதியும் நேர்மையும் நிலவவும், அரசாங்கம் சட்டங்கள் செய்து அதன்மூலம் மக்களிடையே கட்டுத்திட்டங்களை ஏற்படுத்தியுள்ளது. அந்தக் கட்டுத்திட்டங்களை மீறி நடப்போரைத் திருத்த, நீதி மன்றங்களும் காவற்படைகளும் ஏற்படுத்தப்பட்டுள்ளன. ஆனால் இந்தச் சட்டதிட்டங்கள், அவைகளை நிறைவேற்றக் காவற்படைகள் ஆகியவை சமீப காலத்தவை என்பதை யாவரும் அறிவர். இந்தச் சட்டதிட்டங்கள் இல்லாத பழங்காலத்தில், மக்கள் இந்நாளைவிட அதிக ஒழுக்கமுடன், ஒருவரை யொருவர் வஞ்சிக்காமல், சான்றாண்மையோடு வாழ்ந்ததைப் பண்டைநாள் வரலாற்றாலும், வேறு பல வகையானும் அறிகிறோம். அவ்வாறு அந்நாளில் மக்களை நல்லொழுக்கத்தில் ஈடுபடுத்திய உணர்வு எது? அதுதான் சமய உணர்வு. அந்த உணர்வு இந்நாளில் மக்களிடையே குன்றியிருத்தலே, கொடுமைகள் பெருகுவதற்குக் காரணமாயுள்ளது. ஆகவே, அரசாங்கத்தின் சட்டங்களைவிட, ஆன்றோர்கள் காட்டிச் சென்ற சமய உணர்வு, நாட்டிலே நல்லதோர் சமுதாயத்தை அமைக்கவும், மக்களை மக்களாக வாழச் செய்யவும் வழிகோலுகிறது என்பது தெளிவாகிறது. சட்டத்தினால் ஏற்படும் பயத்தைவிட, சமய உணர்வு தரும் மனப்பண்பு நல்ல பலனைத் தரும். சமய உணர்வு எவ்வாறு மக்களை நல்வழிப்படுத்துகிறது என்பதை அடுத்துக் கவனிப்போம்:

விலங்குகளைப் போலவே மனிதனும் முன்பு 'காட்டில்தான் வாழ்ந்தான். ஆனால் மனிதனுக்குள்ள பகுத்தறிவைக் கொண்டு, இது நல்லது, இது தீயது என்று பகுத்துணர்ந்து, அந்த உணர்வுக்கு ஏற்பத் தனக்கும், தன்னைச் சார்ந்து வாழும் மக்களுக்கும், வாழ்க்கையில் சில வரன் முறைகளை வகுத்துக் கொண்டான். பெரியோரிடத்தில் பணிவு, பிற உயிர்களிடத்து அன்பு, எளியோருக்கு உதவுதல், குடும்பமாக வாழ்வது—இப்படியாகப் பல நல்ல முறைகளைத் தங்களுக்குத் தாங்களே ஏற்படுத்திக்கொண்டு, மனித சமுதாயம், விலங்கு வாழ்க்கையினின்றும் வேறுபட்டு, மேம்பாடுடைய சமுதாயமாக, நாகரிகமும்

நல்லொழுக்கமும் உள்ள சமுதாயமாக மாறி, வாழ்ந்துள்ளது. மக்களிடையே நல்லொழுக்கத்தைக் கற்பித்து, அவர்களை வரன் முறையோடு வாழச் செய்த பெரியோர்களின் நல்லுரைகள்தாம், பழைய மனிதர்களின் ஏட்டில் எழுதாத திட்டங்கள், கொள்கைகள். அந்தக் கொள்கைகளின் திரட்சியையே சமயம் என்றனர் சான்றோர்.

## அன்பே சிவம்

விலங்கு உணர்ச்சியைப் போக்கி, மனித உணர்ச்சியை மேலோங்கச் செய்ய வழி யாது என்று நம் மூதாதையர் யோசித்தனர்; அன்புடைமையே மனிதத் தன்மை என்று ஆராய்ந்து முடிவு கண்டனர். எனவே, மக்கள் யாவரும் பிற உயிர்கள்மீது அன்பு கொண்டு பழகுவதையே, நல் ஒழுக்கத்திற்கும், நல்வாழ்விற்கும் அடிப்படைக் கொள்கையாகக் கொண்டனர். அதனையே தாங்கள் சார்ந்து ஒழுகவேண்டிய சமயமாகக் கொண்டனர்; அவர்களே சைவர் என அழைக்கப்பட்டனர். சைவம் என்பது சிவசம்பந்தம் கொண்டது. அந்தச் சிவமாவது யாது? அன்பே சிவம் என்பதனை அறியாதார் யார்? அதனையே திருமூலரும்,

“ அன்புஞ் சிவமும்இரண் டென்ப ரறிவிலார்
அன்பே சிவமாவ தாரு மறிகிலார்
அன்பே சிவமாவ தாரு மறிந்தபின்
அன்பே சிவமா யமர்ந்திருப் பாரே ”

என்றார். ஆகவே, அன்பே சிவம் என்று கண்டு, அன்புடன் வாழ்வதையே தங்கள் அடிப்படைக் கொள்கையாகக் கொண்டவர்கள் சைவர்கள்; அவர்கள் சமயம் சைவ சமயம்.

அன்பை அடிப்படையாகக் கொண்ட சைவம் எப்போது தோன்றியது என்று பார்த்தால், அஃது இந்தக் காலத்தில்தான் தோன்றியது என்று யாராலும் சொல்ல இயலவில்லை. அதனைத் தோற்றுவித்தவர்கள் யார் என்றாலும் அதற்கும் பதில் இருக்க முடியவில்லை. பிற சமயங்களைப் பற்றிப் பேசும்போது இந்தச் சமயம், இன்னவரால், இன்ன காலத்தில் தோற்றுவிக்கப்பட்டது என்று குறிப்பிட்டுக் கூறமுடிகிறது. ஆனால் அது போல் சைவ சமயம் தோன்றிய காலத்தைக் குறிப்பிட்டுக் கூற

முடியவில்லை. எனவே, மனிதனை மனிதனாக்கிய பழம் பெரும் சமயம் சைவம். மனிதன் நல்லறிவு பெற்று, பிற உயிர்களிடத்து அன்பாய் இருக்கவேண்டும் என்று எண்ணிய அன்றே சைவம் தோன்றியது என்னலாம். எனவே, சைவத்தின் சாரம் அன்பு என்பதைக் கண்டோம்; ஆகவே அன்பே சிவம் என்பது மூதுரையாயிற்று என்பதனையும் உணர்கிறோம்.

## அன்புச் சமயம்

அன்புள்ளத்திற்கு எத்தகைய ஆற்றல் உண்டு என்பதனை அறியாதார் யார்? அன்பு சுரக்கும் உள்ளத்தில் தியாக எண்ணம் தோன்றுகிறது. தாயின் அன்பு தன் குழந்தையின் நலனுக்காக எந்தவிதத் தியாகத்தையும் செய்யக் காத்திருப்பதைக் காண்கிறோம். தாய் நாட்டின்மீதும், தாய் மொழியின் மீதும் அன்பு கொண்டோர், அவைகளுக்கு ஆபத்து ஏதும் ஏற்படின், அதனைத் தடுத்து நிறுத்த, தமது உடல், பொருள், ஆவி அனைத்தையும் தியாகம் செய்யக் காத்திருக்கின்றனர். அன்புள்ளம் கொண்டவர்கள் தியாக மூர்த்திகளாகின்றனர்; ஆனால் அப்பண்பு இல்லாதவர்களோ, சுயநலப் பித்துக் கொண்டு, தங்களின் சுகபோக வாழ்விற்காகப் பிறர்க்குத் தீங்கு செய்யவும் தயங்குவதில்லை. எனவே, மக்கள் சமுதாயத்தில் தீமைகள் நிகழ்வதற்குக் காரணம் அன்புள்ளம் அமையப் பெறுதவர்கள் இருப்பதேயாகும். அத்தகையோரைத் திருத்த, நல்வழிப்படுத்த, அன்புள்ளவர்களாக ஆக்க ஓர் அமைப்பு வேண்டும். அந்த அமைப்பு முறையே சைவ சமயம். அத்தகைய சமயம் நாட்டுக்கு வேண்டாம் என்று யார்தாம் கூறுவர்?

## வாணிக உலகம்

சைவம் நாட்டில் தழைத்தோங்க வேண்டுவதன் தேவையை இதுகாறும் கூறினோம். இத்தகைய சைவம், வாணிகத் துறையில் ஈடுபட்டுள்ளோரால் எவ்வாறு கடைப்பிடிக்கப்பட வேண்டும் என்று அடுத்துக் கவனிப்போம். மக்கள், தங்கள் வாழ்க்கையை நடத்தப் பொருளீட்டவேண்டும். பொருளீட்டப் பல துறைகள் உள்ளன. அவைகளில் சிறப்பானது வாணிகத் துறை என்பதை அனைவரும் ஏற்றுக்கொள்வர். ஆனால் வாணிகத்தில்

ஈடுபட்டுள்ளவர்களைப் பற்றி, இன்று, நாட்டு மக்கள் எத்தகைய எண்ணம் கொண்டுள்ளனர் என்று பார்த்தால், நாமெல்லாம் வருத்தப்படும் வகையில், மிகத் தவறான எண்ணமே கொண்டுள்ளனர்; நாட்டிலே உள்ள ஒரு சில வணிகர்கள், தவறான போக்கில் ஈடுபட்டுக் கள்ள வாணிகம் செய்தும், கொள்ளை லாபம் அடித்தும், பெரும்பாலான மக்களுக்குப் பெருந்துயர் விளைவிக்கின்ற காரணத்தால், அத்துறையில் ஈடுபட்டுள்ள அனைவரையும், குற்றவாளிக் கூண்டிலே நிறுத்தி, கொடுமையின் உருவங்களாகச் சித்திரிக்கின்றனர். வஞ்சகர்கள், நெஞ்சிலே ஈரம் இல்லாதவர்கள், பஞ்சைப் பராரிகளைக் கொல்லாமல் கொல்லும் கொடியவர்கள், சூதும் வாதும் செய்து, அதுவே வியாபார சூட்சமம் என்று பேசி, குறுக்கு வழியில் பெருஞ் செல்வம் சேர்க்க விரும்பும் பேராசைக்காரர்கள் என்றெல்லாம் வாணிகர்கள் பேசப்படுகின்றனர்.

## பண்டை வாணிகர்

ஆனால் வணிகர்கள் தாம் வரை யாது கொடுக்கும் வள்ளல்களாக இருந்துள்ளனர். எண்ணற்ற அறநிலையங்களையும், கல்வி நிலையங்களையும் ஏற்படுத்தி நாட்டுக்குப் பெருந்தொண்டு புரிந்தவர்கள் வணிகர்கள் என்பதை நாம் மறந்துவிடக் கூடாது. அதுமட்டுமன்று: பண்டை நாளில் வாணிகம் செய்தோர், பழி பாவத்திற்குப் பயந்து, பதுக்கல் போன்ற பாவச் செயல்களைக் கனவிலும் கருதாதவராய், நியாயமான முறையில், கொள்வதும் மிகை கொளாது, கொடுப்பதும் குறை கொடாது, நேர்மையான முறையில் வாணிகம் செய்து வந்ததை அறிகிறோம். அதுபற்றியே வள்ளுவப் பெருந்தகை, சான்றோர்கள் எவ்வாறு நடுவுநிலையில் இருப்பர் என்பதற்கு உதாரணம் கூறப் போந்தவர், வாணிகம் செய்வோரின் துலாக் கோலையே குறிப்பிட்டு, "சமன் செய்து சீர்தூக்கும் கோல் போல்" என்று கூறுகின்றார். வாணிகம் செய்தோரிடத்தில் அத்தகைய வாய்மை இருந்ததே இதற்குக் காரணமாயிருத்தல் வேண்டும் அன்றோ?

## வணிகர்க்குத் தேவை அன்பே

வாணிகத்தில் ஈடுபட்டுள்ளோர், அன்புள்ளம் கொண்டவர்களாக இருந்தால், பேராசை எனும் பேய் அவர்களை

அணுகாது. பேராசை இல்லாத இடத்தில், நியாயம் இருக்கும். ஆனால் அத்தகைய நியாயமான வாணிபம் குறைந்து வருவதாலேயே, அரசாங்கம் "நியாய விலைக் கடைகளை"த் திறக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுள்ளது. நியாயமாக வாணிபம் செய்வோர் பொதுமக்களில் ஒருவரும் இல்லை என்ற நிலையில், அரசாங்கமே பொறுப்பெடுத்துக்கொண்டு, பொருள்களைக் கொள்முதல் செய்து, அதனை நியாயமான விலையில் விற்க, நியாயவிலைக் கடைகளை ஏற்படுத்துகின்றன. இந்த நிலைமை நீங்க வேண்டும். கடை என்று சொன்னாலே, அஃது நியாய விலைக் கடையாகத்தான் இருக்கவேண்டும். அந்த நிலை பிறப்பது எப்படி? வாணிகத்தில் சைவம் தழைத்தலே அதற்கான வழி. வாணிபம் தவிர்த்த பிற துறைகளில் ஈடுபட்டுள்ளோர், பெரும்பாலும் பிறரின் கட்டளைக்குக் கீழ்ப்படிந்து, நடப்பவர்கள். மேலும் அத்துறைகள் பொதுமக்களின் வாழ்க்கையைப் பெரிதும் பாதிக்காத வகையில் அமைந்திருக்கும். ஆனால் வாணிபத்தில் ஈடுபட்டுள்ளோர், தம் இச்சையாகக் காரியமாற்றுகின்றனர்; அத்துடன் அவர் தம் தொழில் துறை, அதாவது வாணிபம், பொதுமக்களைப் பெரிதும் பாதிக்கும் வகையில் உள்ளது. ஆகவேதான் அவர்கள் நல்லவர்களாக, நல்ல உள்ளம் உள்ளவர்களாக இருத்தல் மிக அவசியமாகிறது.

## வாணிகத்தில் வாய்மை வேண்டும்

வாணிகம் நடைபெறவில்லை யெனில், நாட்டு மக்களுக்கு வாழ்வில்லை; அந்த வாழ்வு நல்வாழ்வாக இருக்க வேண்டுமெனில், வாணிகம் நல்ல முறையில் நடைபெற வேண்டும். வாணிகம் நல்ல முறையில் நடைபெற, வாணிபம் செய்வோரிடத்தில் வாய்மை வேண்டும். அன்புள்ளம் கொண்டவரே வாய்மை வழி ஒழுகுவர்.

நெஞ்சையள்ளும் சிலப்பதிகாரக் கதையை அறியாத தமிழர்கள் இருக்க மாட்டார்கள். சிலம்பினை விற்கச் சென்ற கோவலனை, கொலைக் களத்தில் பலியாக்கியதும், அதன் காரணமாகப் பாண்டி மன்னனும் அவன் தர்ம பத்தினியும் மாண்டதும், மதுரைமாநகர் அழிந்துபட்டதும், எதனால்? வாணிகத்திலே வாய்மை தவறியதால்; ஒரு பாவமும் அறியாத கோவலன் சிரச்சேதம் செய்யப்படும் நேரத்திலும், நெஞ்சிலே இரக்

கம் ஏற்படாமல், அன்பு சுரக்காமல், கொடுமையின் உருவமான ஒரு கொடியவனால், சிலம்பினைத் தக்க விலைக்கு விற்றுத் தருவதாக எடுத்துச் சென்ற பொற் கொல்லன் ஒருவனால், மன்னன் முதல் மக்கள் ஈறாகக் கொடுமைக்கு ஆளான கதையைச் சிலப்பதிகாரம் செப்புகிறது.

## வணிகர்க்குச் சைவம் தேவை

எனவே, வாணிகம் தனிப்பட்ட ஒருவரின் வாழ்க்கையை மட்டும் பாதிக்கக் கூடியது அன்று. அஃது ஒரு சமுதாயத்தையே பாதிக்கக் கூடியது. ஆகவே சமுதாயத்தினரின் வாழ்வும் தாழ்வும் பிணிக்கப்பட்டுள்ள வாணிபம் நல்ல முறையில் நடைபெற வேண்டும். அந்தத் துறையில் ஈடுபட்டுள்ளோர் நல்லொழுக்கம் உள்ளவர்களாகவும், அன்புள்ளம் கொண்டவர்களாகவும் அமைதல் வேண்டும். அந்த அன்பைப் போதிப்பது சைவம்; எனவே, சைவம் வாணிகம் செய்வோரால் கடைப்பிடிக்கப் படவேண்டும்.

காவி உடை தரித்தலாலேயே சாமியாராகிவிட முடியாது; கறுப்பு அங்கியை அணிந்ததாலேயே, வழக்கறிஞராகத் தம்மைக் கருதிக்கொள்ள முடியாது. அதுபோல் உள்ளத்தில் உண்மையான அன்பு சுரக்காமல், வெளி வேடத்தில் மட்டும் தம்மைச் சைவராகக் காட்டிக்கொள்வதில் பலனில்லை. சைவர்கள் எல்லாம் நல்லவர்களாக, பரோபகாரம் உள்ளவர்களாக இருப்பர். எனவே, அவர்களை யாவரும் ஏற்று மரியாதை செய்வர், மனமார நம்புவர். கள்ளர் சிலர் இந்த நிலைமையைப் பயன்படுத்திக்கொண்டு, நல்லவர்போல் நடித்து, தம்மைப் பிறர் நம்பச் செய்யச் சைவ வேடம் தாங்குவதும் உண்டு; அந்த வேடதாரிகளின் உண்மை உருவம் தெரிகிற வரையில், அவர்களையும் உண்மைச் சைவர் என்று நம்பி மோசம் போவோரும் உண்டு. இத்தகைய வேடதாரிகளால், சைவத்தின் வளர்ச்சி தடைப்படுவதோடு, தூய நெஞ்சினரையும் மாசுள்ளவர்களோ என்று மற்றவர் ஐயுறும்படி செய்கின்றனர்.

வாணிகத் துறையில் ஈடுபட்டுள்ளோர் பலர், சமயச் சின்னங்களைத் தவறாது அணிகின்றனர்; திருநீறு பூசுகின்றனர். திருநீற்றின் வெண்மை நிறம் தூய்மையைக் குறிக்கிறது. உள்ளத்தில் தூய்மை வேண்டும் என்பதை எடுத்தியம்பு

கிறது. வணிகத்தில் ஈடுபட்டுள்ளோர் வெள்ளை உள்ளத்தின ராக இருக்க வேண்டும். அதை விடுத்து, 'கள்ளத்தனமே காரிய சித்தி தரும், காசு பணம் நிறைய வரும்', என்ற எண்ணத்தில், நாசவேலைகளில் ஈடுபடுவது, நாட்டிற்குக் கேட்டையே தரும்; நல்லவர்களையும் பொல்லாதவர்களாகக் கருதச் செய்யும். எனவே, வாணிகர்கள் உண்மைச் சைவர்களாக ஒழுக வேண்டும். ஒருவருக்கு உண்மையான இன்பம் பிறரை ஏய்த்துப் பிழைப்பதில் கிடைப்பதில்லை; இயன்றவரை பிறர்க்கு உதவி செய்வதிலேயே இன்பம் உண்டு என்ற உண்மையை உணர வேண்டும்.

## பொதுநலத் தொண்டு

வாணிகத்தின் மூலம் ஒருவருக்குச் சேர்ந்துவரும் செல்வம், 'லாபம்' என்ற பெயரில் பொதுமக்களிடமிருந்து கிடைக்கும் வருவாயேயாகும். அவ்வாறு அடைந்த செல்வத்தில், தங்களின் தேவைக்குப் போக மீத மிருப்பதைப் பொதுக் காரியங்களில் செலவிட வாணிகர்கள் முன்வர வேண்டும். அங்ஙனமின்றி, தங்களின் சுயநல சுகபோகமே பெரிதெனக் கொண்டு, வணிகத்தின்மூலம் கிடைத்த பெருஞ் செல்வத்தை பிறருக்குப் பயன்படா வகையில் பூட்டி வைத்து, பூதம்போல் காத்திருப்பதால் நாட்டின் பொருளாதாரம் பாழ்பட்டு, நாட்டு மக்களும் வறுமையில் வாடுவர். வணிகர் தமக்குக் கிடைத்த செல்வத்தைப் பலருக்கும் பயன்படும் வகையில் செலவிடப் பரந்த மனமும், உயர்ந்த கொள்கையும் உடையவராய் இருத்தல் வேண்டும். அன்புள்ளம் கொண்டவரே, பிறர் நலங் கருதும் பெற்றியராய் இருப்பர்; அத்தகைய அன்புள்ளத்தை அமையச் செய்வது சைவம்.

சைவம், குறிப்பிட்ட ஒரு சமயத்தாரால் மட்டும் கடைப்பிடிக்கப்பட வேண்டிய ஒன்றன்று. எப்படி, வாய்மை நல்லொழுக்கம் ஆகியவை மக்களாய்ப் பிறந்த அனைவருமே கடைப்பிடிக்க வேண்டியவையோ, அவ்வாறே சைவக் கொள்கை, அதாவது அன்புள்ளம் கொண்டிருத்தலும் அறவழி நிற்றலும், இந்த அவனியில் பிறந்த அனைவருக்குமே பொதுவான ஒன்று. குறிப்பாக வாணிகம் செய்வோர், இந்தக் கொள்கையைத் தம் உள்ளத்தே கொண்டிருத்தல் மிக மிக அவசியம்; காரணம்

வாணிகத் தொழில், பொதுமக்களின் வாழ்க்கையில் பின்னப்பட்டுள்ள ஒன்று. வாணிகர்கள் நல்லவர்களாக, அன்புள்ளம் கொண்டவர்களாக இருப்பின், மக்கள் நலமடைவர்; மாறாக அன்பெனும் பண்பின்றிக் கொடுமையினராக இருப்பின், பழிபாவங்கட்கு அஞ்சாமல் பாதகம் பல புரிவர்; மக்களோ பலவித இன்னல்கட்கு ஆளாவர்.

## வணிகரே உதவமுடியும்

வாணிகர்கள்தான், பிறதொழில் செய்வோரை விடப் பெருஞ் செல்வராக ஆதற்கு வாய்ப்புகள் அதிகம் உண்டு. "உழுபவன் கணக்குப் பார்த்தால் உழவுக் கயிறும் மிஞ்சாது" என்பது பழமொழி; ஆகவே, உழவுத் தொழில் செய்வோர் பெருஞ் செல்வத்தைச் சேர்க்க முடியாது. அதேபோன்றுதான் தையல், தச்சு, நெய்தல் போன்ற கைத்தொழில் புரிவோருக்கும் தங்கள் வயிற்றைக் கழுவிக்கொள்ளும் வகையில்தான், அவர் தம் வாழ்க்கைத்தரம் உள்ளது. ஆகவே, அவர்கள் பெருஞ் செல்வம் சேர்ப்பதும், பிறர்க்கு உதவியாக இருப்பதும், அவர்களின் சக்திக்கு அப்பாற்பட்டது. மற்றும் அலுவலகங்களில் பணியாற்றும் கணக்காளர், அதிகாரிகள் ஆகியோரின் செல்வ நிலையும் அத்தகைத்தே. எனவே, பிறருக்கு உதவும் வகையில் பெருஞ் செல்வம் சேர்க்கும் வாய்ப்புள்ள துறை வாணிகம் ஒன்றுதான்.

வஞ்சக நெஞ்சும், பேராசைக் குணமும் கொண்டோர் சிலர், இந்த வாய்ப்பினைத் தவறான முறையில் பயன்படுத்தி, கலப்படம், கள்ள வாணிகம், கொள்ளைலாபம், ஏமாற்றுவித்தை போன்ற பல்வகைச் சூதுவழிகளில் பொதுமக்களை ஏய்த்துப் பெருஞ் செல்வம் சேர்க்க முனைகின்றனர். அவ்வாறு சேர்த்த செல்வத்தைத் தங்களின் போக போக்கியத்திற்குப் பயன்படுத்தியும், பூட்டிவைத்து அழகு பார்த்தும், நாட்டைப் பிடித்த சனியன்களாய், நாட்டின் நாசகாரர்களாய் உள்ளனர். இந்த நிலை மாறவேண்டும். மாறுவது எப்படி?

## வாணிகத்தில் சைவம் வேண்டும்

வாணிகர் தம் வாழ்க்கையில் வாய்மை இடம் பெற வேண்டும். அன்பே சிவம் எனும் கொள்கை கொண்ட சிவ

நெறி—சைவம்—வாணிகர்களால் கடைப்பிடிக்கப்படவேண்டும். நல்ல முறையில்—பழி பாவங்கள் சேராத வகையில்—செல்வத்தை ஈட்டவும், அவ்வாறு ஈட்டிய செல்வத்தைப் பலருக்கும் பயன்படும் வகையில் செலவிடவும் சைவ உணர்வு வழிகோலுகிறது. எனவே, வாணிகத்தில் சைவம் வேண்டும். அன்பு எனும் ஆண்டவன், உள்ளம் எனும் கோயிலில் ஆட்சி செலுத்த வேண்டும். அப்போதுதான், வஞ்சகம் அற்ற வாணிகம் வளரவும், அந்த வாணிகத்தில் வந்த பெருஞ் செல்வத்தை, வாழ்வளிக்கும் காரியங்களுக்கு வரையாது அளிக்கவும், மக்கள் நலமடையவும், இந்த மாநிலம் சிறக்கவும் வழியேற்படும். எனவே, அந்த அன்பினைப் போற்றுவோமாக, அன்பு கொண்டு ஒழுகுவோமாக!

அன்பெனும் ஆண்டவனை—சிவனை—ஆதியில் உணர்ந்தவர்கள் தமிழர்கள், தென்னாட்டவர்கள். தென்னாட்டவரின் உள்ளமெனும் கோயிலில் பள்ளிகொண்டிருக்கும் அன்பெனும் ஆண்டவன், எந்நாட்டவர்க்கும் இறைவனாக வேண்டும்; எல்லோர் உள்ளத்திலும் கோயில் கொள்ளவேண்டும். உலக மக்கள் அனைவரும் அன்புள்ளம் கொண்டு அறவழி வாழ அதுவே வழி. ஆகவே, "தென்னாடுடைய சிவனே போற்றி, எந்நாட்டவர்க்கும் இறைவா போற்றி!" என்று வாழ்த்தி வணங்குவோம். மக்கள் அனைவரும் அன்புள்ளத்தவர்களாக ஆகவேண்டும்; அந்த உணர்வை உண்டாக்கும் சைவம் உலகில் தழைக்கவேண்டும்; சைவக் கொள்கையினை நாட்டிலே பரப்பிவரும் சைவ சமாசங்கள் மேலும் மேலும் வளர்ந்து, மக்களின் மேம்பாட்டிற்கு வழிவகை செய்ய வேண்டும்.

வாழ்க அன்பு நெறி! வளர்க சைவ சமாசம்!!

# அலுவல் துறையில் சைவம்



திரு. தி. செ. பழநிவேலு அவர்கள், B.A.
(வள்ளலார் இல்லப் பழைய மாணவர், சென்னை)

தலைவர் அவர்களே! பெருமக்களே! வணக்கம்.

என்னை எதிர்நோக்கி நிற்கும் பொருள், "அலுவல் துறையில் சைவம்" என்பது ஆகும். அலுவல் துறையைப்பற்றி அறியாதவன் நான்; பட்டம் பதவிகளின் பெருமையை அறியாதவன் நான். என்னை அலுவல் துறையில் சைவத்தைப் பற்றிப் பேசும்படிப் பணித்தபொழுது நான் வியப்படைந்தேன். அரசினரின் அலுவல் துறையில் எனக்குப் பயிற்சி இல்லா விட்டாலும், தனிப்பட்டார் நிலையங்களில் அலுவல் பார்த்த வகையில் ஓரளவு அநுபவம் இருப்பதால், என்னுடைய அலுவல் துறை வாழ்வில், சைவம் எனக்கு எவ்வாறு உறுதுணை யாக இருந்தது என்பதைப் பற்றியும், பொதுவாக அலுவல் துறையினருக்கும் சைவத்திற்கும் இருக்கின்ற உறவு பற்றியும்,

இருக்கவேண்டும் உறவுநிலை பற்றியும் ஒரு சில வார்த்தைகள் பேச விரும்புகின்றேன்.

ஒரு தனி மனிதனுடைய வாழ்க்கை, அவனுடைய லட்சியம் இவைகளை ஒட்டியே ஒரு சமுதாயத்தின் வாழ்க்கையும், லட்சியமும் அமைகின்றன. அதாவது ஒரு சமுதாயத்தின் ஜீவசக்தியானது, எந்த அளவுக்கு வலுவுடையதாக இருக்கின்றது என்பதை, அந்தச் சமுதாயத்தின் சிறு அமிசமாகிய தனி மனிதன் எப்படி வாழ்கிறான்? எத்தகைய லட்சியங்களை உடையவனாக இருக்கிறான்? என்பதன் மூலமாகவே காணமுடியும். சைவர்களுடைய சமுதாயமானது எவ்வளவு உயர்ந்தது? எத்தகைய சிறப்புடையது? என்பதை, அந்தச் சமுதாயத்தின் சின்னமாக, நாட்டிலே நடமாடும் ஒவ்வொரு சைவனும், ஒவ்வொரு சைவ இளைஞனும், எத்தகைய வாழ்க்கை நடத்துகின்றான்? எத்தகைய லட்சியங்களை, குறிக்கோள்களை உடையவனாக இருக்கின்றான்? என்பதன் மூலமாகவே தெரிந்துகொள்ள முடியும்.

பெருமக்களே! சமுதாயத்திலே படித்தவர்கள், பண்பாடு உள்ளவர்கள், பதவி வகிப்பவர்கள் ஆகிய அலுவல் துறையினர், தங்களுடைய தனிப்பட்ட வாழ்விலே, சைவத்தை எவ்வளவு தூரம் பின்பற்றுகின்றார்கள்? என்பதை நாம் நினைத்துப் பார்க்க மிகவும் கடமைப்பட்டிருக்கின்றோம்.

நான் ஒரு சைவன் என்று கூறிக்கொள்வதற்கு, முதன் முதலில், அதற்குரிய சின்னங்கள் ஏதும், நான் அணிந்து இருக்கின்றேனா? வீட்டிற்குள்ளே, ரகசியமாக, ஏதோ பெற்றோர்களுக்காகவோ, சில பல இடங்களில் மனைவியின் விருப்பத்திற்கு மாறாக நடக்க விரும்பாததாலோ, நம்முடைய சமயச் சின்னங்களை அணிந்துகொண்டால் மட்டும் போதுமா? எத்தனை அலுவலகங்களில், திருநீறோ அல்லது சந்தனப் பொட்டோ வைத்த ஒரு அலுவலரைப் பார்க்க முடிகின்றது? ஒரு இசுலாமியரோ, ஒரு கிறித்தவரோ, ஒரு சீக்கியரோ தம்முடைய சமயச் சின்னத்தை எவ்விதத் தயக்கமுமின்றி, வெளிப்படையாக அணிந்துகொண்டு, அலுவலகத்திற்கு வரும் பொழுது, சைவர்களில் பெரும்பாலோர், அவ்விதம் செய்வதற்குத் தயங்குவதேன்?

நான், இலங்கையில் மிகப் பெரியதொரு தொழில் நிலைய

மாகிய மதராஸ் பாஸேயகாட் கம்பெனியில் சிப்பந்தியாக ஆறு ஆண்டுகள் பணியாற்றி இருக்கின்றேன். "எல்லாம் இறைவன் திருவருள்படியே நடக்கின்றன; பரம கருணாநிதியாகிய அம்பலவாணன் ஆட்டுவிக்கின்றபடியே நாம் ஆடுகின்றோம்; நம்முடைய திறமையைக் கொண்டுமட்டும், எதுவும் எளிதில் முடிவடைவதில்லை'; என்ற கருத்துக்களில் எல்லாம் ஆழ்ந்த நம்பிக்கை இந்தக் காலத்தில்தான் எனக்கு ஏற்பட்டது.

சிப்பந்தி நிலையிலிருந்து விலகி, ஒரு தொழில் நிலையத்தின் பங்காளிகளுள் ஒருவனாக நான் மாறிய சில மாதங்களுக்குள் ஒரு நிகழ்ச்சி நடந்தது. நம் நாட்டிலிருந்து இலங்கையில் இறக்குமதி செய்யப்படும் கைத்தறி லுங்கி ரகங்களுக்கு இறக்குமதி லைசன்சு வாங்கவேண்டும். சென்னைத் துறைமுகத்தில் ஏற்றப்படும் சரக்கு, சில சமயங்களில் 36 மணி நேரத்திற்குள் கொழும்புத் துறைமுகத்தில் இறக்கப்பட்டு விடுவதும் உண்டு. ஒருமுறை, ஒரு சனிக்கிழமை காலை 9 மணிக்கு சரக்கு கப்பலில் ஏற்றப்பட்டுவிட்டதாகச் சென்னையிலிருந்து தந்தி வந்தது. வேறு அவசர வேலையின் காரணமாக நான் உடனே லைசன்சு வாங்கும் வேலையைக் கவனிக்க முடியவில்லை; திங்கட்கிழமை அன்றுதான் வாங்கினேன். ஆனால், ஞாயிற்றுக் கிழமை மாலையே, கொழும்புத் துறைமுகத்தில் சரக்கு இறக்கப் பட்டுவிட்டது. கஸ்டம்ஸ் கலெக்டர், சரக்கு இறக்குமதி செய்யப்படுவதற்கு முன்பே லைசன்சு வாங்கவில்லை என்ற காரணத்தைக் காட்டி, ஒரு பெருந் தொகையை அபராதமாகப் போட்டுவிட்டார்.

புதிதாக நான் ஏற்றுக்கொண்டிருந்த பொறுப்பிற்கும், என்மேல் மற்ற பங்காளிகள் வைத்த நம்பிக்கைக்கும் இத்தகையதொரு இக்கட்டான நிலைமை ஏற்பட்டது பொருத்தமானதாக இல்லை. நான் மிகவும் மனம் வருந்தி, லைசன்சு வழங்கும் டைரக்டரை நேரில் போய்ப் பார்த்தேன். என்னை நன்றாக அறிந்தவர் ஆக அவர் இருந்தபோதிலும், எதுவும் செய்வதற்கில்லையென்று சொல்லிவிட்டார். பிறகு, இத்தகைய பிரச்சினைகளைத் தீர்த்து வைப்பதில் பெரிய திறமைசாலியாக எல்லோராலும் மதிக்கப் பெற்ற வழக்கறிஞரிடம் விவரத்தைச் சொன்னேன். தாம் இதேமாதிரி, நான்கு அபராதங்களுக்கு நிவாரணம் கேட்டு, கலெக்டர் முன் பேசி, ஒன்றுமே வெற்றி

யடையவில்லையென்றும், ஆகையால் தாம் எதுவும் செய்வதற்கில்லையென்றும் கையை விரித்துவிட்டார்.

அபராதத் தொகையைக் கட்டிவிடுவது மட்டும் இதில் பிரச்னையன்று; என்னிடம் ஒப்படைக்கப்பட்ட வேலையை ஒழுங்காகக் கவனிப்பதில் நான் தவறிவிட்டேன் என்ற பழி, என்மீது சுமத்தப்படுமே என்பதை எண்ணி எண்ணி நான் மிகவும் துன்பப்பட்டேன்.

கொழும்பில் நான் இருந்த காலத்தில், இப்பொழுது மதுரைத் திருஞான சம்பந்தர் ஆதீனத்தின் இளவரசாகத் திகழும் தவத்திரு. சோமசுந்தர அடிகளாருடைய திருவருளைப் பெறும் பேறு எனக்குக் கிடைத்தது. அவர்கள் முன்னின்று நடத்திய கூட்டு வழிபாட்டு இயக்கத்தில், என்னை ஈடுபடச் செய்தார்கள். திங்கள்தோறும் இலங்கை வானொலியில் ஒலி பரப்பப்பட்ட உரையாடல் நிகழ்ச்சியில், அவர்களைக் கேள்விகள் கேட்டு ஐயங்களைத் தீர்த்துக்கொள்ளும் பங்கு எனக்கு அளிக்கப்பட்டது. அவர்கள் அடிக்கடி சொல்லிவந்த அறிவுரைகள், எல்லோராலும் எப்பொழுதும் போற்றப்பட வேண்டுபவை: "எத்தகைய இடுக்கண் ஏற்பட்டாலும் மனந் தளராதே! இறைவன் திருவருள்மேல் முழு நம்பிக்கை வைத்து உன்னுடைய காரியங்களைச் செய்; தெருவில் நடந்து போகும்போதும், காரில் போகும்போதும், நீ எந்த வேலையில் ஈடுபட்டிருந்தாலும், நாதன் நாமம் நமச்சிவாயத்தை மறவாதே! அது உன் உள்ளத்திலும் நாவிலும் நிறைந்து நிற்கட்டும்" என்று அடிக்கடி சொல்வார்கள்.

இலங்கையில் வசிப்பதற்கு அனுமதிச் சீட்டு அரசினரிடமிருந்து பெற வேண்டும். அதைப் பெறுவதற்குரிய தகுதிகள் எதுவும் எனக்கு இல்லை. ஆகையால் அதைப் பெறுவதற்கு முயற்சி செய்யாமலேயே, இலங்கையை விட்டு வந்துவிடுவது என்ற நோக்கத்துடன், என் கருத்தை அடிகளாரிடம் தெரிவித்தேன். அதற்கு அவர்கள், "அனுமதிச் சீட்டு கொடுப்பதும் கொடுக்காததும் அதிகாரிகளுடைய பொறுப்பு; உன்னுடைய நிலைமையை நேரில் போய்ச் சொல்; இறைவன் திருவருள்படி எதுவும் நடக்கும்" என்று சொன்னார்கள். அதன்படி அதிகாரியிடம் நேரில் சென்று என் நிலைமையைச் சொன்னேன்; அரை மணி நேரத்தில் அனுமதிச் சீட்டுக் கொடுத்துவிட்டார்.

இத்தகைய நிகழ்ச்சிகளையெல்லாம் எண்ணி, ஞானப் பொது வெளியில் ஐந்தொழில் திருக்கூத்து இயற்றும் அம்பலத் தரசன், நிச்சயமாக இந்த இக்கட்டிலிருந்து நம்மை விடுவிப் பான் என்ற முழு நம்பிக்கையுடன் Principal Collector of Customs-ஐப் போய்ப் பார்த்தேன். "அன்றே என்றன் ஆவியும் உடலும் உடைமையெல்லாம், குன்றே அனையாய்! என்னை ஆட்கொண்டபோதே கொண்டிலையோ, இன்றோர் இடையூறு எனக்குண்டோ!" என்ற அருள் மொழியை உள் ளத்தில் பதியவைத்துக்கொண்டே, என் நிலைமையை விளக்கி விட்டு, Hence I Plead for mitigation of the Severity of the Penalty என்று சொல்லி முடித்தேன். அவர் எதுவும் சொல்லவில்லை. என்னிடம் இருந்த அபராத அறிவிப்புத் தாளை வாங்கி, அதில் ஏதோ எழுதி, அவருடைய சேவகரிடம் கொடுத்து அனுப்பிவிட்டார்; என்னையும் போகச் சொல்லிவிட் டார். வெளியில் வந்து பார்க்கும்பொழுது, "Waive the Penalty; Release the goods" என்று எழுதியிருந்தார். "ஆட்பாலவர்க்கருளும் வண்ணமும் ஆதிமாண்பும், கேட் பான் புகில் அளவில்லை" என்று பாடிக்கொண்டே நான் திரும் பினேன்.

அகில இந்திய கைத்தறி போர்டாரால் ஏடனில் நடத்தப் பெறும் தொழில் நிலையத்தில் இரண்டு ஆண்டுகளுக்குமேல் பணி ஆற்றினேன். இங்கே பல நாட்கள் தமிழிலே பேச முடியாத நிலைமையும், மாதக் கணக்கில் நம்முடைய உணவு கிடைக்காத நிலைமையும் ஏற்பட்டது. என்னுடைய அறிவுக் கண்களைத் திறந்துவிட்ட வள்ளலார் மாணவர் இல்லத்தில், நான் இளமையில் பெற்ற பயிற்சி எனக்கு இந்தக் காலத்தில் மிகவும் உதவியாக இருந்தது.

நான் விரும்பிய சிலவகை உணவுகளை நானே தயாரித்துக் கொண்டேன்; தமிழ் பேசுவதற்குத் துணைவர்கள் கிடைக்காத தால், திருவாசகத்தை வாய்விட்டுப் படிப்பேன். இத்தகைய தன்னம்பிக்கையை வளர்த்தது வள்ளலார் மாணவர் இல்லம். சமயச் சின்னங்களை வெளிப்படையாக அணிந்துகொண்டு, கல்லூரிக்குச் செல்வதற்கும், தெருவிலே நடமாடுவதற்கும் மனவுறுதியை அளித்தது வள்ளலார் மாணவர் இல்லம். சமய நூல்களை வாங்குவதிலோ, படிப்பதிலோ பொதுவாகப் பலரும்

ஆர்வம் காட்டாத இந்தக் காலத்திலே, சமய நூல்களைப் படிப்பதிலே, இன்பம் காணச் செய்தது வள்ளலார் மாணவர் இல்லம். கோயிலுக்குப் போவது Fashion இல்லை என்பது மட்டுமன்று, சில்பல நண்பர்களின் கேலிக்கும் ஆளாக வேண்டிய இக்காலத்திலே, கோயிலுக்குப் போவது, கோயிலுக்குப் போக வேண்டிய முறையோடு போவது முதலிய செயல்களில் பெருமைப்படுகின்ற மனப் பக்குவத்தை அளித்தது வள்ளலார் மாணவர் இல்லம்.

எனவே, ஏடனில் எல்லா வகையாலும் கட்டுப்பாடான வாழ்வு நான் வாழ்ந்தபடியால், நோய் எதுவும் வராமலும், என் அலுவலகத்தில் ஒருநாள்கூட விடுமுறை கேட்காமலும் வாழ்ந்து வந்தேன்.

திடீரென்று நாடுகள் பலவற்றிலும் பரவிய விஷக் காய்ச்சல் அந்த ஊரிலும் பரவ ஆரம்பித்தது. ஒரு ஊசி போட்டு மருந்து கொடுப்பதற்கு இருபது ரூபாய்கள் வாங்கிய மருத்துவர்கள் வீட்டில், கியூவில் நிற்க வேண்டிய ஊரில் ஏற்பட்டது. இந்தக் காய்ச்சல் என்னையும் பாதித்தது. ஒரு நாள் இரவு பன்னிரண்டு மணிக்கு மிகவும் துன்பப்பட்டேன். துணைக்கு யாரும் இல்லை. என் உணவு விடுதியில் இருந்த குஜராத்திகளில் பெரும்பாலோர், இந்தக் காய்ச்சலால் பாதிக்கப்பட்டிருந்ததால், பேச்சுத் துணைக்குக் கூட யாரும் இல்லை. என் பெற்றோர்களின் ஒரே ஆண் பிள்ளையாகிய நான் செல்வத்தில் வளராவிட்டாலும், என்மீது பொழியப்பட்ட அன்புக்கு அளவில்லை. ஆகையால் 2500 மைல்களுக்கு அப்பால் கேட்பாரற்றுத் துன்பப்பட்டுக்கொண்டு இருந்தபொழுது, எனக்கு உறுதுணையாக இருந்தவை நான் என்னுடன் கொண்டுபோயிருந்த அம்பலத்தரசன் திருவுருவமும், திருவாசகமும், தேவாரமுமே ஆகும். வெப்ப நோயின் வேகம் அதிகரித்துக்கொண்டே இருந்தது. அந்த நிலைமையில் இறுதியாக நான் "பேராயிரம் பரவி வானோர் ஏத்தும் பெம்மானைப் பிரிவிலா அடியார்க் கென்றும் வராத செல்வம் வருவிப்பானை, மந்திரமும் தந்திரமும் மருந்துமாகித் தீரா நோய் தீர்த்தருள வல்லான்தன்னை" என்ற பாடல் தான் பாடினேன். அதற்குப் பிறகு எனக்கு உணர்வே இல்லை. நான் கண்விழித்தபொழுது வெப்ப நோய் மறைந்துவிட்டது. டாக்டருக்குக் காசு கொடுக்காமல் நான் தப்பினேன்!

"உன் வாழ்வில் துன்பமெனும் திரை அகன்று அங்கு இன்பமெனும் ஒளி உண்டாக வேண்டுமானால், நீ எக்காலத்தும் இறைவனை மறவாதே! மறந்ததினால்தான், நீ இவ்வுலகில் துன்பத்திற்கு ஆளானாய்" என்று ஆங்கிலப் பெரியார் ஒருவர் கூறியிருப்பதை, என் அலுவல் துறை வாழ்வில் நான் என்றுமே மறந்ததில்லை.

அலுவலகங்களிலே சமயப் பேச்சுக்களுக்கு ஏற்பாடு செய்தல், சமய உலாக்கள் போய் வருதல், சமய நூல்களைப் படிக்கத் தூண்டுதல் முதலிய செயல்கள் திட்டமிட்டு நிறைவேற்றப் படுதல், அலுவலர்களின் நல்வாழ்வுக்கு அவசியமானவை ஆகும்.

நம் வாழ்நாளில், நாம் செய்யப்போகும் செயல்களும் செய்கின்றவைகளும், நம்முடைய எல்லா நடவடிக்கைகளும் எல்லையற்ற ஒரு பரம்பொருளின் முன்னையில் நிகழ்பவை என்ற உணர்ச்சியுடன் நாம் செயல்பட வேண்டும். அப்படிச் செய்தால் தான், நல்லதை, நாலு பேருக்குப் பயன் உள்ளதைச் செய்தவர்கள் ஆவோம். நாம் செய்யும் ஒவ்வொரு காரியத்தையும், ஒவ்வொரு செயலையும் ஆண்டவனுக்குச் செய்யும் திருப்பணியாகக் கருத வேண்டும். சர். அர்னல்டு டாயின்பி கூறுவதுபோல, நம்மைப் பரம்பொருளின் ஒரு பகுதியாக நினைத்து இறைவனை மறவாமல் இருந்தால், நல்வாழ்வு நமக்குத் தானகவே வரும். நம் செயல்களைக் கடவுளின் திருப்பணியில் ஒரு பகுதியாகக் கருதிச் செய்வதால், நம் எல்லாச் செயல் முறைகளும், தோல்விகளும், நமக்கு ஓரளவு மகிழ்ச்சி அளிக்கக் கூடியதோடு, மற்றவர்களுக்கும் பயனுள்ளவையாக இருக்கும்.

பண்பாடு என்பது இறைவன் வழிபாட்டை ஒட்டி நிற்பதுதான். ஆன்மீகத் துறையில், நாம் ஆற்றும் பணியிலும், உள்ளத்தை நெறிதவறவிடாது நல்வழியில் கொண்டு செல்வதிலும், சுயநலத்தை ஒழித்துப் பிறருடன் அன்பு கொண்டு கூடிவாழ்வதிலும்தான் பண்பாடு நிற்கிறது. அலுவல் துறையில் ஆகட்டும், வேறு எந்தத் துறையில் ஆகட்டும், இந்தக் கடவுள் நம்பிக்கை, அதன் விளைவான சைவ வாழ்வு—நல்வாழ்வு—இனிய வாழ்வு. நாம் எல்லோரும் வாழ அம்பலத்தரசன் அருள் புரிவானாக!

# சட்டமும் சமயமும்



திரு. தி. கி. ஆதிமூலம் அவர்கள், B.A., B.L.

தலைவர் அவர்களே! சைவப் பெருமக்களே! தாய்மார்களே!

சைவசித்தாந்த மகா சமாசத்தின் 54-ஆம் ஆண்டுவிழா, எங்கள் அருமை "இந்துமத பாடசாலையில்" இத்துணைப் பெருஞ் சிறப்பாக நடைபெறுகின்றது. இவ்விழாவில் எங்கள் அரும்பெறல் அப்பா திரு. வா. தி. மா. அவர்கள் என்னையும் கலந்துகொள்ளும்படி செய்தருளினார்கள். இவ்விழாவிற் கலந்துகொள்ளுகின்றபோது, இப்பள்ளியிற் பயின்ற எனக்குப் பலப்பல பழைய நல்ல நினைவுகள் எழுகின்றன. இப்பள்ளியிற் பயின்றமையால் யான்பெற்ற நல்ல பழக்க வழக்க ஒழுக்கப் பண்பாடுகளே, இவ்விழாவிற் கலந்துகொள்ளும் பெருந் தகுதியினை எனக்கு வழங்கியுள்ளன என முதற்கண் தெரிவித்துக் கொள்ள விழைகின்றேன்.

## சமயமும் சட்டமும்

சைவ நண்பர்களே! ஒரு நாட்டு மக்களின் வாழ்க்கை நலத்தினையும் நாகரிகத்தினையும் அளந்தறிவதற்குச் சட்டமும் சமயமும் சிறந்த கருவிகளாகும். சட்டமும் சமயமும் மிக்க தொடர்புடையவை,

> " வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
> தொகுத்தார்க்கும் துய்த்தல் அரிது "

என்னும் திருக்குறளில் திருவள்ளுவர் குறிப்பிட்டுள்ளபடி, சமயம் என்பது " வகுத்தான் வகை " யுணர்ந்து நடந்து உய்ய முயலும் நெறியே யாகும். அஃதாவது, இறைவன் அருளிய மறை நூல்களில் விதிக்கப்பெற்ற ஒழுங்கு முறைகளைப் பின்பற்றி நடப்பதே சமயம். உலகியல் வாழ்க்கை நலத்தின் பொருட்டு ஆங்காங்குள்ள மக்கள் தமக்குத் தாமே ஒன்றுபட்டிசைந்து வகுத்துக்கொள்ளும் ஒழுங்கு முறைகளே சட்டம் எனப்படும். எனவே, சட்டமும் சமயமும் ஒன்றினென்று முரண்படாமல் வாழும் மக்களினமே தலைசிறந்ததாகும்.

## சைவச் சட்டம்

நமது தமிழ்நாட்டில், தமிழ் மக்களின் வாழ்வில் சட்டமும் சமயமும் தம்முள் முரண்படாமல் ஒத்து இயங்குகின்றனவா? சிறப்பாக, தமிழர்களாகிய நம்முடைய சைவ வாழ்விற்குத் தற்போதுள்ள சட்டங்கள் மாறுபடாமல் இருக்கின்றனவா? என்பது ஆராய்தற்குரியது. உண்மையாகக் கூறவேண்டுமானால், தற்போதுள்ள சட்ட திட்டங்கள் நமது சைவ வாழ்விற்கு உரியனவாக—நம் சைவ உணர்வைத் தழுவியனவாக இல்லை என்றே வருத்தத்துடன் சொல்லவேண்டியுள்ளது. இப்போது நம்மிடையே நடைமுறையில் இருப்பது இந்துச் சட்டமே (Hindu Law) அன்றி, சைவச் சட்டமோ—தமிழ்ச் சட்டமோ அன்று.

## பழக்க வழக்கப் பண்பாடுகள்

இந்தியநாடு முழுவதும் உள்ள பெரும்பாலான மக்களுக்கு இந்துச் சட்டமும் உரியதென்று கருதப்படுகின்றது. அயலவரின் ஆட்சி இந்தியாவில் ஏற்பட்டபொழுது, இந்துச்சட்டம்

தொகுக்கப்பட்டது. அதனைத் தொகுத்த அயலவர்கள் இவ் இந்திய நாட்டின் பலவேறு இனங்கள் மொழிகள் சமயங்கள் பழக்க வழக்கப் பண்பாடுகள் என்பனவற்றை எண்ணிப் பார்க்கவேயில்லை. இந்துச் சட்டங்களைத் தொகுத்தலில் அயலவர்களுக்கு உதவி புரிந்தவர்களும், நமது சைவ சமயம் பற்றியோ தமிழ்மொழி பற்றியோ, அல்லது தமிழர்களாகிய நமது பழக்க வழக்கப் பண்பாடுகள் பற்றியோ, ஏதும் அறிந்தவர்கள் அல்லர். ஆதலின், நமது சைவ வாழ்விற்கும் தமிழ்ப் பண்பாட்டிற்கும் ஒத்துவராத பலவற்றை, நாம் இன்று நடைமுறையிலுள்ள சட்டத்துட் காண்கிறோம். அவற்றுள் இரண்டொன்றை மட்டும் ஈண்டுக் காண்போம்.

## திருமணம்

'திருமணம்' என்பது தமிழர்களாகிய நமக்கு—சைவர்களாகிய நமக்கு—நம் வாழ்வில் ஒரு சிறந்த நிகழ்ச்சியாகும். உலகிலேயே தமிழன்தான் மிகமிகப் பழங்காலத்திலேயே சிறந்துயர்ந்த திருமண நிகழ்ச்சி முறைகளை நயத்தக்க நாகரிக முறையில் வகுத்துக்கொண்டவன்.

"சத்தியும் சிவமும் ஆய தன்மைஇவ் வுலகம் எல்லாம்
ஒத்தொவ்வா ஆணும் பெண்ணும் உயர்குண குணியும் ஆக
வைத்தனன்; அவளால் வந்த ஆக்கம்இவ் வாழ்க்கை யெல்லாம்!
இத்தையும் அறியார்; பீடலிங்கத்தின் இயல்பும் ஓரார்!"

எனச் சிவஞான சித்தியார் கூறுமாறுபோல, இவ்வுலகமானது ஆணாற்றல்—பெண்ணாற்றல் என்னும் இருதிற ஆற்றல்களும் ஒருங்கியைந்தே நடைபெறற்பாலது. இவ்வுண்மையை உணர்ந்த தமிழன், தான் வணங்கும் இறைவனையே "மாதியலும் பாதியன்" ஆக, "அம்மையப்பன்" ஆகக் கருதி வழிபட்டு வருகின்றான்.

இத்தகைய தமிழனின்—சைவனின் திருமணத்திற்கு இது போதுள்ள இந்துச் சட்டம் இருசெயல்களை இன்றியமையாதனவாக விதிக்கின்றது. ஒன்று திருமணத்தில் குச்சிகளைக் கொண்டு நெருப்பு மூட்ட வேண்டுமாம்! இரண்டு, எள்ளை வைத்துத் தாரை வார்த்துத் தத்தம் செய்ய வேண்டுமாம்! இவ்விரண்டும் இல்லாவிட்டால் திருமணம் செல்லுபடியாகாதாம்!

இவை இரண்டும் செய்யப்பட வேண்டுவது எப்போது? குச்சி களால் நெருப்பு மூட்டுதல், "செத்தால் வந்து உதவுவார் ஒருவர் இல்லை. சிறுவிறகால் தீ மூட்டிச் செல்லா நிற்பர்" என அப்பர் பெருமான் பாடுவதுபோல, பிணத்திற்கே செய்யப் பட வேண்டுவதாகும். அதுபோலவே, எள்ளை வைத்து நீரை வார்த்துத் தத்தம் செய்தலும் பிணச் சடங்கேயன்றி மணச் சடங்கு அன்று.

## கன்னிகாதானம்

இங்ஙனமே, 'கன்னிகாதானம்' எனக் கூறப்படும் நிகழ்ச் சியும் வெறுக்கத் தக்கதொன்று. ஆண்-பெண்ணில் உயர்வு தாழ்வுகள் இல்லை. இருபாலாரும் சமநிலையினரே. அது பற்றியே சக்தியைச் சிவத்திற் "செம்பாதி"யாகக் கொள்ளு கின்றோம். மேலை நாட்டார் ஆணைவிடப் பெண் உயர்ந்தவள் என்ற கருத்தில் மனைவியை "Bettar-half" எனக் கூறுகின் றனர். நெஞ்சப்பை (Heart) பெண்ணுக்குரிய இடப்பக்கத் தில்தான் விளங்குகின்றது. இத்துணைச் சிறப்புடைய பெண் ணினத்தை ஏதோ மற்ற உயிரற்ற பண்டங்களைப் போலக் கருதித் தானம் செய்வதென்பது எத்துணை இழிதகவாக உள்ளது? இப்பழக்கங்கள் எல்லாம் நாடோடிகளாக இருந்த ஒரு சில மக்களுக்கு உரியவை. அவ்வப்போது இடம் விட்டுப் பெயர்ந்து சென்று பிழைக்கும் மக்கள் இனத்தினர், பெண் களைத் தம்மோடு உடன் வைத்துக்கொண்டு காப்பாற்றும் வசதி இல்லாதிருந்தமையால், யாருக்கேனும் தானம் கொடுத்தேனும் தொலைத்துப் போக்கிவிட வேண்டிய நிலையில் இருந்தனர். அங்ஙனம் தானம் கொடுக்குங்கால், தானம் கொள்பவனும் வேறிடம் பெயர்ந்து செல்ல வேண்டியவனாதலால், மறுபடியும் மகளைக் காண்டல் அரிதாதல் பற்றி, அவளை இழந்து விடுவது போலவே கருதி, தாரை வார்த்துத் தத்தம் செய்து கொடுத் தலைப் பழக்கமாகக் கொண்டிருந்தனர் எனலாம்! எனவே, இது போன்ற வேற்று மக்களுக்குரிய பழங்காலச் செயல் களெல்லாம், நயத்தக்க நாகரிகம் வாய்ந்த தமிழர்களாகிய நமக்கு இன்னும் உரியன வாகக் கருதப் பெறுதல், பொருத்த முடையது தானா? என்பது சிந்திக்கற் பாலது.

## ஸ்ரீமந்தம்

இங்ஙனமே, வேறு பல சடங்குகளும் உள்ளன. "ஸ்ரீமந்தம்" என்பது அவைகளுள் ஒன்று. அதற்கு என்ன பொருள்? பெண்டிர் மந்தமாகப் போய் விடுதல் என்பதா? ஒரு சிலர் "பும்ஸவன ஸ்ரீமந்தம்" என்கின்றனர். அதற்குப் பெண் மந்தமாகப் போய்விடுதல் என்பதுதான் பொருளோ? என்னவோ தெரியவில்லை. இங்கே 'வனம்' எதற்கு வந்தது? என்றும் புரியவில்லை. தமிழில் இதனை "வளை காப்பு", "பூ முடித்தல்", "ஐந்துக்குச் செய்தல்", "கரு வளர் சிறப்பு" எனக் கூறுகின்றோம். இச்சொற்களில் அமைந் துள்ள பொருள் எத்துணைச் சிறப்பாகவும் பொருத்தமாகவும் இருக்கின்றன! இது போன்று, நாம் நம் வாழ்விற் செய்யும் சடங்குகள் - சமுதாயச் சட்டங்கள் முதலியன, நம் அறிவிற் கும் நாகரிகத்தும் மாருகாமல் பொருந்தும்படி நன்கினிது அமைதல் வேண்டும்.

## பண்டைக்காலப் பெண்டிர்

இவ்வாறே, வீட்டுக்கரசிகளாய் வாழ்வரசிகளாய் உள்ள பெண் மக்களுக்குப் போதிய உரிமைகள், நம் சமுதாயத்திலும் சமயத்திலும் இன்னும் நடை முறையில் வழங்கப்படவில்லை. பெண்கள் தம் இளமைக் காலத்தில் தாய் தந்தையர்களிடமும், மணமான பின்னர்க் கணவனிடமும், கணவன் இறந்தபோது பிள்ளைகளிடமும், பிள்ளைகள் இல்லாவிட்டால் கணவனின் அண்ணன் தம்பி முதலிய உறவினர்களிடமும் பாதுகாப்பில் வைக்கப்பட வேண்டுமாம்! இவ்வாறெல்லாம் பல வகைகளில் பெண்கள் உரிமையின்றி அடக்கி அடக்கி வைக்கப்படுகின் றனர். அதனுல் தான், முற்காலத்திற் சிறந்து விளங்கிய ஔவையார், பொன்முடியார், காக்கை பாடினியார் நச்செள்ளையார், வெள்ளி வீதியார், ஆதிமருதியார், திலக வதியார், மங்கையர்க்கரசியார், புனிதவதியார் போன்ற பெண்ணினல்லார்களை இக்காலத்துக் காண்டல் இயலவில்லை. மாதொரு பாகனுகிய சிவபிரானை வழிபடும் சைவர்களாகிய நாம், பெண்களுக்குச் "சரிநிகர் சமானம்" ஆக உரிமை தரும் சமுதாயப் பழக்க வழக்கங்களையும் சட்ட திட்டங்களையும் நடை முறைக்குக் கொணர்தல் வேண்டும்.

**சமய உணர்வு**

சமுதாயம் திருந்துவதற்கு வெறும் சட்டங்கள் மட்டும் போதா. சட்டங்களைப் பாதுகாப்பது சமய வுணர்வே. திருடுதல், கள் குடித்தல், சூதாடுதல் போன்ற பல குற்றங்களைத் தடுக்கச் சட்டங்கள் பல இருக்கின்றன. ஆயினும் என்ன பயன்? மக்கள் சமய வுணர்வு பெற்றுத் தாமாகவே ஒழுக்கத்தைக் கடைப் பிடிக்க முயன்றாலன்றி, இச்சட்டங்களால் பயன் விளைதல் ஒரு போதும் இயலாது. மனிதனின் சட்டங்கள் நன்கினிது வெற்றி பெறுவதற்கு, மக்களிடையே இறைவனின் இயற்கைச் சட்டங்களுக்கு உட்பட்டு ஒழுகும் நல்லுணர்வு மலர்தல் வேண்டும்!

> "கண்காணி இல்லென்று கள்ளம் பலசெய்வார்
> கண்காணி இல்லா இடமில்லை காணுங்கால்
> கண்காணி யாகக் கலந்தெங்கும் நின்றானைக்
> கண்காணி கண்டார் களவொழிந் தாரே"

என ஆசிரியர் திருமூலர் அருளிச் செய்தபடி, 'இறைவன் ஒருவன் உளன்! அவன் நாம் செய்யும் செயல்களை யெல்லாம் கண்காணித்துக்கொண்டிருக்கின்றான்' என்னும் சமய வுணர்வு மக்களிடையிற் பரவினால் அல்லாமல், வெறும் சட்டங்களால் மட்டும் சமுதாயம் திருந்திவிடாது என்பது தேற்றம்! உயர்ந்த சமய வுணர்வு இருந்தால்தான் வழக்கறிஞர்களும், தவறான வழக்குகளுக்காகப் பொருள் கருதி அறமன்றங்களில் வாதாட மாட்டார்கள். நீதிபதிகளும் மனச்சான்றுடன் நடுவுநிலை தவறாமல் நீதி வழங்குவார்கள். ஆதலின், உலகில் உண்மைச் சமய வுணர்வு பரவுதல் வேண்டும் என நாம் அனைவரும் உலையாது உழைப்போமாக!

# மருத்துவத்தில் சைவம்



திரு. சி. பதுமநாபன் அவர்கள், B.A., M.B., B.S.
(பள்ளியின் பழைய மாணவர்)

## மருத்துவக்கலை

"மருந்தவை மந்திரம் மறுமைநன்
னெறியவை மற்றுமெல்லாம்
அருந்துயர் கெடும்அவர் நாமமே
சிந்தைசெய் நன்னெஞ்சமே."

எனவரும் திருஞான சம்பந்தர் தேவாரப் பாடல் மருத்துவத்துக்கும் சைவ உணர்விற்கும் உள்ள தொடர்பினை ஒரு வகையில் புலப்படுத்துகின்றது எனக் கொள்ளலாம். தமிழ் நாடு மருத்துவக் கலையில் மிகப்பல நூற்றுண்டுகளுக்கு முன்னரே தலைசிறந்து விளங்கியது. ஆசிரியர் திருவள்ளுவர் 2000 ஆயிரம் ஆண்டுகட்கு முன்னரே "மருந்து" என்னும் பொருள் குறித்துத் தமது ஒப்புயர்வற்ற திருக்குறள் நூலில் விளக்கி

யுள்ளார். மருத்துவன் தாமோதரனுர் என்னும் பெயரோடு சங்ககாலப் புலவர் ஒருவர் வாழ்ந்திருந்தார்.

“ சீந்திநீர்க் கண்டம் தெறிசுக்குத் தேன்அளாய்
மோந்தபின் யார்க்கும் தலைக்குத்தில்—காந்தி
மலைக்குத்தும் மால்யானை வள்ளுவர்முப் பாலால்
தலைக்குத்துத் தீர்வுசாத் தற்கு ”

எனவரும் திருக்குறட் பாயிரப்பாடல், மருத்துவன் தாமோ தரனுர் பெயரால் வழங்குகின்றது. ‘திரிகடுகம்’ ‘சிறுபஞ்ச மூலம்’ ‘ஏலாதி’ முதலியனவாக வரும் தமிழ் நூல்களின் பெயர்களும், மருந்துகளின் பெயர்களை அடிப்படையாகக் கொண்டே அமைந்திருத்தல் காணலாம்.

## திருமூலர்

தமிழ் நாடு பிறகலைகளிற் போலவே மருத்துவக் கலையிலும் சிறந்தோங்கி யிருந்தது. தமிழ் நாட்டு மருத்துவம் “சித்த மருத்துவம்” எனப்படும். அது “சித்தர்கள்” எனப்படும் அருட்பெரு மக்களால் வளர்க்கப் பெற்றது என்பர். சித்தர் களுட் சிறந்தவராகிய திருமூலநாயனுர்,

“ உடம்பார் அழியின் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானம் சேரவும் மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர்வளர்த் தேனே ”

“ உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே உறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில்கொண் டான்என்று
உடம்பினை யான்இருந்து ஓம்புகின் றேனே ”

“ ஏற்றி இறக்கி இருகாலும் பூரிக்கும்
காற்றைப் பிடிக்கும் கணக்கறிவார் இல்லை
காற்றைப் பிடிக்கும் கணக்கறி வாளர்க்குக்
கூற்றைப் பிடிக்கும் குறியது வாமே ”

என அருளிச் செய்துள்ள அரிய திருமந்திரப் பாடல்கள் யாவரும் அறிந்தின்புறுதற்கு உரியன.

## இன்றைய நிலைமை

இந்நாளில் மக்களிடையே எண்ணில்லாத பல நோய்கள் நாளுக்கு நாள் பெருகி வருகின்றன. நாம் ஏதோ பழங்காலத்தில் இருந்த மக்களைவிட, அறிவிலும் ஆற்றலிலும் நாகரிகத்திலும் சிறந்து விட்டவர்களாக எண்ணிக்கொண்டிருக்கின்றோம். ஆயினும், பழங்காலத்தில் வாழ்ந்த மக்களே நல்ல உடல் நலத்துடனும், நீண்ட வாழ்நாளுடனும் மகிழ்ச்சி மிக்க இன்ப வாழ்வை நடத்தினர். ஆனால், நாமோ சொல்லாத் தொலையாத பல பொல்லாத நோய்களால் துயருற்று வருந்தியுழன்று வருகின்றோம். இத்தகைய அவல நிலைகளுக்குரிய காரணம் யாதென ஆராய்ந்து பார்க்குங்கால், நம்மனோர்க்குப் பல உண்மைகள் புலனாகும்.

## பண்டைய நிலைமை

பண்டைய மக்கள் தூய இயற்கை வாழ்வு கடைப்பிடித்தனர்; செயற்கை நாகரிகச் சிறுமைகள் அவர்களைப் பற்றவில்லை; பாவ புண்ணியங்களுக்கு அஞ்சி நடந்தனர்; ஒழுக்கத்தை உயிர் எனப் போற்றி வாழ்ந்தனர்; தூயநீரைப் பருகினர்; நல்ல காற்றை உயிர்த்தனர்; ஞாயிற்றின் ஒளி உடம்பிற்பட உலவினர்; வீணில் உண்டு கொழுக்காது, மெய் வியர்க்க உழைத்து உரம் பெற்றனர். 'உள்ளுவ தெல்லாம் உயர்வுள்ளல்' என்றபடி, உயர்ந்த எண்ணங்களையே எப்போதும் எண்ணி வந்தனர். எண்ணங்களின் தூய்மையால் சொல்லும் செயலும் தூய்மைப்பட்டு, உடலும் அவர்கட்கு நோய் இன்றித் தூய்மையாக விளங்கின. பிசிராந்தையார் என்னும் சங்ககாலப் புலவர், தாம் நரை திரை மூப்பு இல்லாமற் சிறந்த உடல் நலத்துடன் இளமை யெழில் பொங்கப் பொலிவுடன் வாழ்தற்குரிய காரணங்களை,

> " யாண்டுபல ஆக நரையில ஆகுதல்
> யாங்கா கியர்என வினவுதிர் ஆயின்
> மாண்ட என் மனைவியொடு மக்களும் நிரம்பினர்
> யான்கண் டனையர்என் இளையரும் வேந்தனும்
> அல்லவை செய்யான் காக்கும் அதன்தலை
> ஆன்றவிந் தடங்கிய கொள்கைச்
> சான்றோர் பலர்யான் வாழும் ஊரே "

எனக் கிளந்து கூறியதன் நுட்பங்கள் பெரிதும் சிந்தித்துணரற்பாலன. "ஆன்றவிந் தடங்கிய கொள்கைச் சான்றோர்கள்" யார்? உயரிய சமயவுணர்வு கைவரப்பெற்ற பெருமக்கள் அல்லரோ? எனவே, உண்மைச் சமய உணர்வு கைவந்து நாமும் சான்றாண்மை மிகப் பெறுவோமாயின், உடல்நலமும் பிறநலமும் ஒருங்கெய்தலாம் என்பது ஐயுறவின்றிப் பெறப்படுகின்றதன்றோ?

## வைத்தியநாதன்

இந்நுட்பங்களை எல்லாம் உணராமல், இந்நாளில் மருத்துவர்கள் பலர் "குத்தித் தீர்த்திவிடுவோம்" என்று எல்லா நோய்களுக்கும் ஊசிகொண்டு, உடம்பிற் சல்லடைக்கண் போலப் பொத்தல்களைப் போட்டு விடுகின்றனர். மருத்துவர்களுக்கெல்லாம் மருத்துவனாக இறைவன் விளங்குகின்றான். "மந்திரமும் தந்திரமும் மருந்தும் ஆகித் தீராநோய் தீர்த்தருள வல்லான்" ஆக, வைத்தியநாதன் என விளங்கும் அவனே உண்மையில் மக்களின் நோய்களை யெல்லாம் தீர்த்தருள்கின்றான்! இதனை உணராமல் எல்லாம் தங்களாலேயே நிகழ்வது போல, ஒரு சிலர் எண்ணிக்கொள்கின்றனர்.

"நோய்நாடி நோய்முதல் நாடி அதுதீர்க்கும்
வாய்நாடி வாய்ப்பச் செயல்"

எனத் திருவள்ளுவர் கூறியபடியெல்லாம் செய்ய, நமக்கு மூளை அல்லது அறிவு வேலை செய்தல் வேண்டும் அன்றோ? அவற்றையெல்லாம் நமக்குப் படைத்துத் தந்தவன் இறைவனே அல்லனோ?

## திருவருட்செயல்

அன்றியும், நாம் நோய் தீர்க்கப் பயன்படுத்துகின்ற மருந்துப் பொருள்களையும், அவற்றிற்குரிய பண்புகளையும் நாமா படைத்தோம்? அவற்றையெல்லாம் நம்மனோர் நலத்தின் பொருட்டு, இறைவனே யன்றோ தன் பேரருட்டிறனால் இயற்கையிற் படைத்து வைத்தருளினான்! எத்தனைச் சிறந்த அறுவை மருத்துவர்கள் (Surgeon) தாமும், நோயுற்ற உடலுறுப்புக்களைத் திறம்படக் கத்தி கொண்டு அறுக்க

முடியுமே யன்றி, அறுபட்ட உடலுறுப்புக்கள் ஒன்று சேர்ந்து ஒட்டிக்கொண்டு வளரச் செய்யும் ஆற்றலை உண்டாக்க இயலுமா? அவ்வாற்றலை இறைவன் தானே அருளல் வேண்டும்? இவற்றை யெல்லாம் எண்ணிப் பார்க்குங்கால், மருத்துவர்களுக்குச் சமய உணர்வு இல்லாமற் போக முடியுமா?

**வேண்டுதலின் நலம்**

இதனுல்தான் உலகப் புகழ்பெற்ற மருத்துவர்கள் பலர், மருத்துவத் துறையில் தமது அநுபவம் பெருகப் பெருக, நாளடைவில் தன் முனைப்பு நீங்கிச் சமயவுணர்வு மேலோங்கிக் கடவுள் நம்பிக்கையிலும் அன்பிலும் கருத்தூன்றி நிற்கின்றனர். வேலூர், டோணுவூர், நெய்யூர் முதலிய இடங்களில் உள்ள மருத்துவ மனைகளில், சமயவுணர்வு பெரிதும் போற்றப் படுதல் காணலாம். நோயாளிகள் தங்கள் நோய் தீர இறைவனை நோக்கி வேண்டுதல் புரியுமாறு அறிவுறுத்தப் படுகின்றனர். நோயாளிகளின் சார்பில் பிறரும் 'ஜெபம்' செய்கின்றனர். மருத்துவரும் இறைவனை நினைந்து 'பிரார்த்தனை' புரிந்த பிறகே தம் பணியைத் தொடங்குகின்றனர். தமது மருத்துவம் ஒன்றே நோயாளிகளின் நோயைப் போக்கிவிடுவதாக அவர்கள் எண்ணுவதில்லை. இறைவன் திருவருளே குணப்படுத்துவதாக அவர்கள் நம்பிச் செயல்புரிகின்றனர். வெறும் பொருள் ஒன்றே கருதி மருத்துவம் செய்யாமல், நோயாளிகளின் நோய் தீர்த்தலை, ஒரு பெரும் கடவுட்பணி எனக் கருதி அவர்கள் நடந்து கொள்கின்றுர்கள். "More things are wrought by prayer than this world dreams of" எனத் தேனிசையன் (Tennyson) பாடியவாறு போல, 'வேண்டுதல்' அல்லது 'பிரார்த்தனை'யினுல் விளையாத நலம் எதுவும் இல்லை. மருத்துவப் பேரறிஞர் திரு. குருசாமி முதலியார் அவர்களை நாம் நன்கறிவோம். அவர்கள் காலை நேரத்தில் முருகனை வழிபட்டு வந்து, அவ்வுணர்வோடு எழுதித் தந்த மருந்துகளால் நோய் தீரப் பெற்றவர்கள் பல்லாயிரக் கணக்கினராவர்.

**முடிவுரை**

அப் பெருமகனுரைப் போல மருத்துவத் துறையிலுள்ள அறிஞர்கள் அனைவரும் சைவ வுணர்வோடும்—அருள்

உணர்வோடும் பணியாற்றல் வேண்டும். அங்ஙனம் செய்தால் சைவமும் தழைக்கும்—தமிழ்நாடும் சிறக்கும் என்பதில் ஐயமில்லை. சைவ நண்பர்கள் பொதுமக்களுக்கு இலவச மருத்துவ மனைகளை அமைக்கவேண்டும்; அங்கு வருவோர்க்குச் சைவ சமயக் கொள்கைகளைச் சிறு நூல்கள் வடிவில் வழங்குதல் வேண்டும். கிறித்துவத் தாதியர் போலவும் தாய்மார் போலவும் சைவப் பெண்மணிகள் அம் மருத்துவ மனைகளில் தொண்டு புரிதல் வரவேற்கத் தக்கது.

இறுதியாக, இந்துமத பாடசாலையில் நிகழும் இச் சமாஜ விழாவின்கண், இப்பள்ளியிற் பயின்று நலம் பெற்றுள்ள என்னினும் சிறந்த எத்துணையோ மாணவர்கள் பலர் இருப்ப, எளியேனைப் பொருட்படுத்தி ஈடுபடுமாறு செய்து சிறப்பித்த எங்கள் அரும்பெறல் அப்பா திரு. வா. தி. மா. அவர்களுக்கும், அண்ணா திரு. நா. ப. தணிகையரசு அவர்களுக்கும், எனது அன்பு கலந்த நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்ளுகின்றேன். சைவம் தழைக்க! தமிழ் ஓங்குக! சமாசம் வளர்க! எங்கள் இந்துமத பாடசாலையும் அதன் அமைப்புகளும் செழித்துயர்க!

# சைவத்தில் இளைஞர் பற்றுவைக்க வழிவகைகள்



திரு. சொ. பரமசிவம் அவர்கள், எம்.ஏ.
(பச்சையப்பன் கல்லூரி, சென்னை ;
வள்ளலார் இல்லப் பழைய மாணவர்)

## மனித வாழ்வு

இவ்வுலகின்கண் மனிதன் தனித்து வாழ முடியும்; தன் இனத்தைப் பெருக்கிக்கொள்ள முடியும். மற்ற உயிரினங் களைப்போல் மனிதனும் வாழ்ந்துவிட்டுச் சென்றுவிட முடியும். அத்தகைய வாழ்க்கை ஐந்தறிவுக்குட்பட்ட புறவாழ்வாக அமையுமேயன்றி, ஆறறிவு சேர்ந்த அகவாழ்வாக அமைய முடியாது. இறைவனால் படைக்கப்பட்ட மற்ற உயிரினங்கள் ஐந்தறிவோடு நின்றுவிடுகின்றன. எனவே, புறவாழ்வில் மட்டும் அவைகள் கடமையை ஆற்றிவிட்டு மறைந்துவிடு கின்றன. ஆனால் மனிதன் அவ்வாறில்லை. ஐந்தறிவோடு

ஆறறிவும் அவனுக்குண்டு. ஐந்தறிவுடன் நிற்கும் புறவாழ்வி லும் அவன் நிறைவு எய்தவேண்டும்; ஆறும் அறிவாகிய அகவாழ்விலும் நிறைவு எய்தவேண்டும். எனவே இந்த அகமும் புறமுமாகிய வாழ்வில் நிறைவு எய்தினால்தான் மனிதன் அமைதியைப் பெற முடியும்; இன்பத்தைத் துய்க்க முடியும். ஐந்தறிவோடு வாழும் மக்கள் புறவாழ்வில் தம் கடமையை ஆற்றலாம்; ஆனால் அகவாழ்வில் அமைதியைக் காண முடியாது; விலங்கினத்தோடு சேர்க்கப்பட வேண்டிய மாக்களேயாவர்.

## இறையன்பு

மனிதன் புறவாழ்வில் எளிதாக நிறைவை எய்த முடியும். இவ்வுலக வாழ்க்கையே மனிதனின் புறவாழ்வுக்கு நிறைவைக் கொடுக்கும். ஆனால் மனிதனின் அகவாழ்வுக்கு நிறைவைக் கொடுப்பது எது? அதுதான் இறைவன்மீது செலுத்தும் அன்பு. அவ்வன்பு தன்னலமற்ற உள்ளத்தோடு இறைவன் பாற் செலுத்தப்படும்பொழுது பக்தியாகப் பரிணமிக்கின்றது. அந்நிலையில் மனிதன் அமைதியையும் இன்பத்தையும் பெறு கின்றான். இங்ஙனம் அகவாழ்வுக்குரிய இறையன்பும், புற வாழ்வுக்குரிய கடமைகளும் மனிதனின் வாழ்க்கையை நிறைவுபடுத்துகின்றன. சுருங்கக்கூறின், இறையன்பு மன திற்கு உணவளித்து அமைதியை நல்குகின்றது; புறவேலைகள் வயிற்றுக்கு உணவளித்து நிறைவுபடுத்துகின்றன. மற்ற உயிரினங்கள் வயிற்றிற்காக வாழ்கின்றன; ஆனால் மனிதன் வயிற்றிற்கும் மனத்திற்கும் வாழ வேண்டியிருக்கின்றது.

## சமயங்கள்

வயிற்றை ஒதுக்கிவிட்டு மனத்திற்காக மனிதன் வாழத் தலைப்பட்டபொழுதுதான், மதம் அல்லது சமயம் தோன்றியிருக் கின்றது. மக்கள் கூட்டம் செலுத்திய அன்பு பல்வேறு வடிவங் களுக்குச் செல்லவே, அவ்வடிவங்களுக்கொத்துப் பல்வேறு மதங்களும் சமயங்களும் நாட்டில் தோன்ற ஆரம்பித்தன. சிவனை வழிபட்டோர் சைவர் என்றும், விஷ்ணுவை வணங்கி னோர் வைணவர் என்றும் அழைக்கப்பட்டனர். இங்ஙனம் மக்கள் கூட்டததில் பல்வேறு சமயங்களால் அச்சமயங்களை

வளர்க்கின்ற அமைப்புக்களும் பெருகலாயின. சைவசமயம் இங்ஙனம் எழுந்ததேயாகும் எனலாம்.

## சமய வளர்ச்சியும் இளைஞரும்

இச்சைவம் வளர வேண்டுமாயின் சைவத்தை ஆதரிப்போரின் தொகை பெருகி, வளர்க்கின்றவர்களின் எண்ணிக்கை உயரவேண்டும் என்பதன்று. மதத்தை வளர்க்கின்றவர்கள், ஆதரிக்கின்றவர்கள் ஆகியவர்களின் உள்ளம் தெளிவானதாக இருக்கவேண்டும் என்பதுதான். காலச் சூழ்நிலையில் மதத்தை வளர்க்கின்றவர்களும், ஆதரிக்கின்றவர்களும் பெருகுவார்கள். இதனால் மதம் வளர்ந்துவிட்டது என்று கூறிவிட முடியாது. அதே சூழ்நிலையில், பெருகியதைப்போல் குறைந்து விடுவார்கள். முற்றிய உள்ளங்களில் காலச் சூழ்நிலையில் தூவப்பட்ட மதக் கருத்துக்களே இங்ஙனம் பெருகும்படி செய்கின்றன. மதத்தைப் போற்றி வழிபடும் கூட்டம் பெருகலாம். ஆனால் மதம் வளர முடியாது. காலச் சூழ்நிலையில் மாற்றப்பட்ட பல்லாயிரக் கணக்கான முற்றிய உள்ளங்களை நம்புவதைவிட, மதப்பற்றின் சூழ்நிலையில் மாற்றப்பட்ட இளம் உள்ளத்தை நம்புவது சால்புடைத்து. அந்த இளம் உள்ளம்தான் மதத்தை வளர்க்கும் ; வாழச் செய்யும். முன்னது திடீரென்று தோன்றும் காட்டாற்று வெள்ளம் ; பின்னது ஆற்றின் தோற்ற இடத்தில் சுரக்கும் நீரூற்று எனலாம். இளம் உள்ளத்தின்கண் புகுத்தப்படும் மதப்பற்றுத்தான் பல்லாயிரக் கணக்கான உள்ளங்களைப் பற்றுக்கொள்ளச் செய்யும். காலச் சூழ்நிலை எங்ஙனம் இருந்தபோதிலும் அவ்வுள்ளம் மாறாது ; மங்காது. கி. பி. 7-ஆம் நூற்றாண்டில் தோன்றிய திருஞான சம்பந்தரின் இளம் உளத்தில் படிந்த சைவப் பற்றுத்தான் பல உள்ளங்களைச் சைவத்திற்குத் திருப்பியது. சைவம் வளர்ந்தது ; வாழ்கின்றது. எனவே சைவம் வளர வேண்டுமாயின், இளைஞர்களின் உள்ளங்களில் சைவக் கருத்துக்களைப் புகுத்தி அதில் பற்றுக் கொள்ளச் செய்ய வேண்டும்.

## இன்றைய நிலை

இன்றைய சூழ்நிலை இளைஞர்களின் உள்ளங்களைச் சைவத்திற்குத் திருப்பக் கூடியதாக இல்லை. சமய வாழ்வின் நடத்

தத் துணைபுரியும் சூழ்நிலையில் இன்றைய இளைஞர்கள் வாழ்வில்லை. ஒரு பக்கம் அரசியல் தலைவர்கள் அவர்களின் உள்ளங்களை ஈர்க்க, மற்றொரு பக்கம் ஐம்புலன்களுக்கும் இன்பமளிக்கும் வெளியுலகப் பொருள்கள் அவர்களின் உள்ளங்களை இழுக்க, இவ்விரண்டிற்கும் இடையில் இன்றைய இளைஞர்கள் வாழ்கின்றார்கள். புறவாழ்வினை நடாத்த இளைஞர்களுக்கு இன்றைய உலகம் துணை செய்கின்றது; ஆனால் அகவாழ்வு நடாத்தத் துணை செய்வதாக இல்லை. மதம் எங்ஙனம் வளரும்? சைவம் எவ்வாறு உயரும்?

## இளமையிற் பழக்குதல்

இளைஞர்களின் உள்ளம் சமயத்தில் பற்றுக்கொள்ளும் வண்ணம் சூழ்நிலைகளை மாற்றியமைக்க வேண்டும். வெளியுலக நிகழ்ச்சிகள் அவர்களின் உள்ளங்களை ஈர்க்காவண்ணம் அவர்களை வாழச் செய்யவேண்டும். அப்பொழுதுதான் அவர்கள் உள்ளங்கள் மாசுபடியாது தூய்மையுடன் விளங்கும். அத்தூய்மை உள்ளம் சைவப் பற்றினை வளர்க்கும். இவர்களைத் தூய்மையாக வைத்திருக்கும் சூழ்நிலை எது? கட்டுப்பாடான எளிய வாழ்க்கை, வெளியுலக நிகழ்ச்சிகளில் ஈடுபடாச் சூழ்நிலை, சமயப் பெரியோர் வாழும் இடங்களில் உறைதல், இறைவழிபாட்டில் ஈடுபடுதல் ஆகியவற்றினை இளைஞர்கள் பின்பற்றினால் சைவத்தில் பற்று ஏற்படும்; இறைவன்மீது பேரன்பு உண்டாகும். இளம் உள்ளத்தில் பெரியோர்கள் அறிவார்ந்த அன்பு முறைகளில் சைவத்தைப் புகுத்திவிட்டால், இளைஞர்கள் தாமாகவே அதில் பற்றுக்கொண்டு விடுவார்கள் என்பது திண்ணம்.

## இன்றைய கல்வி நிலை

இன்றைய இளைஞர்கள் சைவத்தில் பற்றுக் கொள்ளாத வண்ணம் இன்றைய கல்வியும் தடையாக இருக்கின்றது. பள்ளிகளிலும், கல்லூரிகளிலும் இளைஞர்களுக்கு ஏற்ற கல்வியாக இல்லை. புறவாழ்வினை நடாத்தத் துணைபுரியும் கல்வியாக விளங்குகின்றதேயன்றி, அகவாழ்வு நடாத்தத் துணைபுரியும் கல்வியாக இல்லை. பழங்காலக் குருகுலங்களில் இளைஞர்களின் உள்ளத்திற்கும் மூளைக்கும் தகுந்த கல்வியளித்தார்கள்.

உள்ளம் முதலில் பண்படவேண்டும்; பின்னர் மூளை வளர வேண்டும் என்ற அடிப்படையில் அவர்கள் இளைஞர்களுக்குக் கல்வி அளித்தார்கள். உள்ளம் பண்படச் சமயக் கல்வியும், மூளைவளர அறிவியற் கல்வியும் அன்றைய இளைஞர்களுக்கு இருந்தன. உள்ளம் பண்பட்ட காரணத்தினால் சமயத்தில் பற்றுக்கொண்டு சிறந்த அகவாழ்வு (Spiritual life) நடாத்தினார்கள். மூளை வளர்ந்த காரணத்தினால் புறவாழ்வில் சிறந்த பங்குகொண்டு உயர்ந்த வாழ்க்கை நடாத்தினார்கள். இங்ஙனம் உள்ளமும், மூளையும் ஒருசேர வளரும் வண்ணம் தகுந்த கல்வியைப் பெற்றார்கள். மனம் வேறு, மூளை வேறு என்று வேறுபடுத்திக் காட்டக்கூடிய கல்வியாக இருந்தது. ஆனால் இன்றைய கல்வி இங்ஙனம் வேறுபடுத்திக் காட்டக் கூடியதாக இல்லை. எனவே உள்ளமும் பண்படுவதாக இல்லை; மூளையும் வளருவதாக இல்லை. அக வாழ்விலும், புறவாழ்விலும் எங்ஙனம் சிறந்து வாழமுடியும்? சமயப் பற்று எப்படி உண் டாகும்? உள்ளத்திற்கும், மூளைக்கும் தகுந்த கல்வி இன்றைய இளைஞர்களுக்கு அளித்தால்தான் மதம் வளரும். வாழ்வு சிறக்கும்.

## கிறித்தவர் செயல்

கிறித்துவமதம் நாளுக்குநாள் பெருகி, ஆதரிப்போர் தொகை உயருகிறதென்றால், இளைஞர்களின் உள்ளங்களில் மாறா மதப்பற்று உண்டாகும்படிச் செய்கின்றார்கள். அவர்கள் மனத்தையும் மூளையையும் ஒரு சேர வளர்க்கின்றார்கள். இரண்டும் ஒன்றாக வளர ஏற்ற சூழ்நிலையை உண்டாக்கிக் கொடுக்கின்றார்கள். எனவே இளைஞர்கள் மதத்தில் மாறாப் பற்று கொள்ளுகின்றார்கள். மதம் வளர்கின்றது. மனம் வளரச் சமயக் கல்வியும், மூளை வளர அறிவியல் கல்வியும் அவர்கள் அளிக்கின்றார்கள். நம் இளைஞர்களுக்கு இத்தகைய கல்வி இல்லையே! அவர்களுக்குக்கேற்ற சூழ்நிலையைச் சைவர் களாகிய நாம் உண்டாக்கிக் கொடுக்கவில்லையே! சைவம் எங்ஙனம் வளரும்?

## சைவ இளைஞர் கூட்டம்

சைவம் வளர வேண்டுமாயின் இளைஞர்களுக்கு ஏற்ற

சூழ்நிலைகளை உண்டாக்கிக் கொடுக்க வேண்டும். கிறித்துவ இளைஞர்கள் வாரம் ஒரு முறை கூடித் தம் சமயக் கருத்துக்களைப் பேசுவதுபோல், சைவ இளைஞர்களும் கூடித் தம் சமயத்தைப் பற்றிப் பேச வேண்டும்; கருத்துக்களைப் பரப்ப வேண்டும். இங்ஙனம் கூடிப் பேசுவதினால் சமயப் பண்பு மட்டும் வளருவதில்லை; இளைஞர்களிடையே உறவும் வளருகின்றது; சகோதர உணர்ச்சி ஊற்றெடுக்கின்றது. இவ்வுணர்வே சமயத்தை வளர்க்கும் எனலாம்; 'இறைவனின் குழந்தைகள் நாம்' என்ற எண்ணத்தையும் உண்டாக்குகின்றது. அந்த எண்ணமே சமயத்தில் பற்றை உண்டாக்கும்.

## நல்ல கல்வி

சமயம் வாழ்க்கையோடு தொடர்புடைய ஒன்று. புறவாழ்வின் நிகழ்ச்சிகளில் வேதனையுற்ற மனம் அகவாழ்வோடு தொடர்புடைய சமயத்தில் அமைதி காண்கின்றது; ஆறுதல் பெறுகின்றது. எனவே, சமயம் மனித வாழ்க்கைக்கு அடிப்படை எனலாம். அவ்வடிப்படை இளைஞர்களின் உள்ளங்களில் எழுப்பப்பட வேண்டும் என்பதே. நல்ல அடிப்படையின்மீது எழுப்பப்படும் கட்டிடம்தான் நிலைத்து நிற்கும்; நீடு வாழும் சமயத்தினை நிலைநாட்ட இடம் கொடுக்கும்; உள்ளம் தூய்மையாக இருக்க வேண்டும்; அதற்கேற்ற சூழ்நிலைகளை அமைக்க வேண்டும். மனமும், மூளையும் ஒரு சேர வளரும் வழி வகைகளையும் நல்ல கல்வி முறைகளையும் வகுத்துத்தர வேண்டும். அப்பொழுதுதான் சைவத்தில் இளைஞர்களுக்குப் பற்று ஏற்படும். சைவம் வளரும்.

# தமிழும் சமையமும்



திரு. ச. திருநாவுக்கரசு அவர்கள், M. A.
(துணைத் தமிழ்ப் பேராசிரியர், மாநிலக்கல்லூரி, சென்னை.)

## மொழி

மொழி என்பது மொழிதல் அல்லது பேசுதல் என்ற சொல்லின் அடிப்படையில் உருவானது. பேசுதல் என்பது ஒருவர் எண்ணும் எண்ணத்தினை மற்றொருவருக்குத் தெரிவிப்பது. இதனால்தான் மொழி என்பதனை 'எண்ணம் ஊர்ந்து செல்லும் ஊர்தி' (Language is the vehicle of thought) என்று அறிஞர்கள் கூறிச் சென்றனர். சொல்வோன் உள்ளத்தில் ஊற்றெடுக்கும், எண்ணங்கள் அவன் நெஞ்சினின்று நாவென்னும் சாலைவழியாக, கேட்போர் காதென்ற இடத்திற்குக் காற்றலைகள் என்னும் குதிரைகள் பூட்டப் பட்ட மொழி என்ற வண்டியில் ஊர்ந்து செல்கின்றன. இதுவே பின்னர் வேறு சாலையினையும் ஊர்தியினையும் பெற்றது—எண்ணுவான்

நெஞ்சு என்னும் இடத்திலிருந்து, கைகள் என்னும் சாலை வழியாகப் படிப்போர் கண் என்ற இடத்திற்கு, எழுதுகோல் என்ற கடிவாளத்தாற் பூட்டப்பெற்ற வரி எழுத்தென்னும் வரிக் குதிரைகளால் இழுத்துச் செல்லப்பட்ட மொழி என்னும் வண்டியில் ஊர்ந்து செல்லத் தொடங்கியது. இது பின்னர்வந்த மாறுபாடுதான். எல்லா மொழிகளிலும் பேச்சாகத் தொடங்கிய மொழி எழுத்து வடிவத்தினையும், பின்னர்தான் குறிக்கத் தொடங்கியது என்பதை, அப்பெயரே காட்டும். மொழி என்றழைக்கிறோம் தமிழில்; ஆங்கிலத்திலும் மொழி (Language) என்பது, 'நாக்கு (Lingua) என்ற அடிச் சொல்லினின்றே பிறந்தது என்று அறிகிறோம்.

## மொழிக் கல்வி

மக்களினம் பெருகப் பெருகப் பிரிந்து பிரிந்து வெவ்வேறு இடங்களுக்குச் சென்றது. ஒன்றாக 'இருந்தபோது பேசிய ஒரு மொழியே நாளாவட்டத்தில் திரிந்து வெவ்வேறு மொழிகளாக மாறின. இன்றைய அறிவியல் விளைவுகளை அறியாத அக்கால மக்கள், தொடர்பற்றுத் தொலைவு காரணமாக வெவ்வேறு மொழியின மக்கள் ஆயினர். இக்கால அறிவியல் ஆற்றலால் இடமும் காலமும் சுருங்கின; தொடர்பும் விரியலாயிற்று; ஓருலகம், ஓரினம் என்று எண்ணங்கள் விரியலாயின. பண்ட வணிகத்தோடு நின்ற மக்கள் கருத்து வணிகமுஞ் செய்யத் தொடங்கினர். பண்டங்கள், விலைகள் போன்றவற்றிற்குள்ள சொற்களை மட்டும் தெரிந்து அமைதியுற்ற மக்கள் அறிவுக் கருத்துக்களையும், இலக்கியக் கருவூலங்களையும் தெரிந்து தெளிய முழு மொழியையே கற்க வேண்டிய இன்றியமையாமை எழுந்தது. தாய்மொழி அல்லாது அயல் மொழி ஒன்றினைக் கற்றபின் மேன்மேலும் பல மொழிகளைக் கற்க ஊக்கம் பிறந்தது. பின்னர் அவற்றிடை ஒற்றுமை வேற்றுமைகளை ஆராயத் தொடங்கினர். இவ்வாறு பிற மொழிகளையும் கற்கும் ஆர்வம் வளர்ந்தது.

## சமயமும் மொழியும்

இவ்வாறு அறிவுப் பசியைத் தணிக்க எழுந்த முயற்சி ஒரு புறமிருக்க, இடையில் ஒரு நாடு மற்றொன்றின்மீது செலுத்திய

ஆதிக்கம் காரணமாக ஆள்வோர் மொழியை ஆளப்படுவோர் கற்கவேண்டிய வலுக்கட்டாயமும் ஏற்பட்டது. அரசியலாதிக் கத்தோடு ஆள்வோரின் சமயத்தைப் பரப்ப வந்தவர்கள், அர சியல் செல்வாக்கு ஒன்றினால் மட்டும் சமயத்தைப் பரப்புவது சுருங்கிய காலத்தில் மிகப் பெரும்பாலானோரைத் தங்கள் சம யத்தில் இழுப்பது ஆகியவற்றைச் செய்ய இயலாது—மாறாக வெறுப்புணர்வே வளர்ந்து அரசியல் செல்வாக்கையும் ஆட்டங் காணச் செய்யும்—என்று உணர்ந்தனர். ஆகவே மற்ற வகை களில் எல்லாம் உயர்வு மனப்பான்மை (Superiority Complex) கொண்டவர்களாக இருந்தவர்களும், அடிமை களின் மொழியை அதனைக் காட்டுமிராண்டி அல்லது நாகரிக மற்ற மொழி (Vernaculars) என்று அழைத்தாலும்—கற்றுத் தீரவேண்டி வந்தது. பின்னர் அம்மொழிகளிலேயே தங்கள் கருத்துக்களை நூல்களாகச் செய்யவேண்டி வந்தது. அதோடு தங்கள் சமய மேம்பாட்டை நிறுவப் பிற சமயக் கோட்பாடுகளை யும் அறிகின்ற நிலை தோன்றியது. இவ்வாறு பிற சமய நுட் பங்களையும் கற்கும் கட்டாயம் ஏற்பட்டது. இதுதான் சமயத் திற்கும் மொழிக்கும் உறவு ஏற்பட்ட வரலாறு.

## கிறித்துவர் தமிழ்த்தொண்டு

இனிக் கிறித்தவத்திற்கும் நம் தமிழிற்கும் ஏற்பட்ட உறவையும் அதன் விளைவுகளையும் காண்போம்: கிறித்த வத்தைப் பரப்பவந்த ஆங்கிலப் பாதிரியார்கள் இங்கு வாழ்ந்த நம் மக்களுக்கு அவர்கள் மதக்கருத்துக்களைத் திணிக்கத் தமிழினைக் கற்றனர். தமிழ் அவர்களைத் தன் மக்களாக்கிக் கொண்டது. பெஸ்கி பாதிரியார் வீரமாமுனிவராகச் செய்தது; ஆங்கிலேயராகவந்த போப் அந்தப் பிறப்புப் பெருமையினும் பெரும் பேறாக இறந்த பிறகும் தன் கல்லறையைக் காண்போர் தன்னைத் "தமிழ் மாணவன்" என்றே அழைக்கவேண்டும் என்று கருதுமாறு செய்தது; கால்டுவெல் அறிஞரைத் "திராவிடமொழிகளின் ஒப்பிலக்கணம்" என்ற கருநூலத்தைத் தரச் செய்தது; இன்னும் பல அறிஞர்களைத் தன் தொண்டர் களாக ஆக்கிக்கொண்டது; மீளா உறக்கம்கொண்ட நம்மனோர்களை விழிப்புறச் செய்தது. தன் தாய்மொழியின் பெருமையை உணரக்கூட அயலான் துணைக்கு வரவேண்டி

யிருந்தது. அவன் தட்டி எழுப்பியபின்னும் அயல்மொழி என்னும் அபினியை அளவுமீறி உண்டிருந்ததனால், அவனையே தூற்றிவிட்டுத் தன் பழைய சாலையிலேயே செல்லத் தொடங்கினர் தமிழர். அன்று தொடங்கிய செலவு இன்றும் மாறவில்லை என்றுதான் கூறவேண்டும்.

## தமிழர்க்கு மொழிப்பற்றில்லை

வாழ்வு தொடங்கும் மணத்திலிருந்து, வாழ்வு முடிந்து இடுகாட்டுச் செலவு, இறுதிச் சடங்குவரை—தாய்மொழியைத் தள்ளக் கூசுவதில்லை. செய்ந்நன்றியறிதலைப்பற்றிப் பரக்கப் பேசும் திருவள்ளுவர் வழிவந்த தமிழன், தாலாட்டிப் பாலூட்டித் தன்னை வளர்த்த தாய் பேசிய மொழி, என்பதற்காகவாவது, தமிழ் மொழியின் சிறப்புக்களை அறிந்து கொண்டாடாத குருட்டுப்போக்கினனாக இருக்கிறான். தமிழ் என்றால் இனிமை; தமிழ் என்றால் எழில் என்றெல்லாம் அறிஞர்கள்—தமிழறிஞர் பிற அறிஞர் கூறினாலும்—' உப்புச் சப்பில்லை ' என்ற பொன்மொழியை உதிர்க்கிறான்.

இவை தாம் போகட்டும் என்று விட்டாலும், வாழ்வில் விளையும் துன்பங்களினின்று விடுதலைபெற, அமைதிபெற ஆண்டவனிடத்தில் முறையிடலாம் என்று சென்றாலும், அங்கும் பொருளற்ற சொற்கள்—புதிய சொற்கள்—அறியாத சொற்கள்—நடமாட மனம் ஒன்றும் வழிகாணாது மயங்குகிறான். ' விளங்கவில்லையே ' என்று வினவினால், ' ஆடவன் அறிந்தது அதுதான் ' என்று ஆலயத்தை ஆட்டிவைப்போர் கூறுகின்றனர். ' எல்லாமறிந்த ஆண்டவனுக்கு என்மொழிமட்டும் அறியாமல் போனதென்ன ?' என்றால், அத்துமீறிப் பேசுகிறான்; ஆணவங்கொள்கிறான் ' என்கிறார்கள். ' உள்ள துயரினைக்கூற உணர்ந்த மொழி உதவாதா? ஊமைக்குக்கூட ஊமைமொழி என்று ஒன்று உண்டே என்றால், ' ஊதாரி ', ' உதவாக்கரை ' போன்ற பட்டங்கள் தரப்படுகின்றன. உண்மையிலேயே தமிழ் இப்படித்தானா ? பயன்படாத இழி மொழியா ? என்றால், சிவப்பிரகாசர் சினந்து கூறுகிறார் :

" விளங்கிழை பகிர்ந்த மெய்யுடை முக்கட்
காரணன் உரைஎனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது என்குவீர் ஆயின்.
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்சம்நெக் குருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங்கு ஒருகால் ஓதின்
கருங்கல் மனமும் கரைந்துக் கண்கள்
தொடுமணல் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப் பெய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே."

## உள்ளம் உருக்கும் தமிழ்

சிவப்பிரகாசர் தமிழர், அப்படித்தான் கூறுவர் என்று அவரை விட்டு விட்டு அப்புறம் சென்றால், ஆங்கிலேய அறிஞன் ஒருவன் கூறுகிறான் - மற்ற மொழிகள் மற்றவற்றில் 'ஏற்றங் கொண்டன வென்றாலும், 'தமிழ் உள்ளம் உருக்கும் மொழி' என்று. (If English be the language of commerce, French the language of diplomacy, Italian the language of love and German the language of philosophy, *Tamil is the language of devotion.*) 'திரு வாசகத்திற்கு உருகாதார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' என்று தமிழன் கூறியது சொல்லளவில் நில்லாது, செயலள வில் வடிவெடுத்து, ஆருயிரம் கல்தொலைவிற்கப்பால் கப்பலில் கடல் கடந்து 'கல்லறையில் காட்சி கொண்டது—போப் என்ற ஆங்கில அறிஞரைக் கவர, தமிழ் மாணவனுக்கப் பயன்பட்ட நூல்கள் திருக்குறளும் திருவாசகமுமே.

# மாநாட்டில் கலந்துகொள்ளும் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையின் பழைய மாணவர் பற்றிய குறிப்புகள்



**நா. ப. தணிகை அரசு**

(இந்துமத பாடசாலை வள்ளலார் மாணவர் இல்லம், வாலாஜாபாத்.)

சைவர் மாநாட்டில் கொடி யேற்றிவைக்கும் தீ. வா. து. நடராஜன் அவர்கள் இந்துமத பாடசாலையை நடத்தும் குழு வின் பொருளாதாரப் பணிபுரிபவர். அவர் இந்துமதப் பள்ளி யில் தொடக்கக் கல்வியும், காஞ்சிபுரம் ஆண்டர்சன் உயர்நிலைப் பள்ளியில் உயர்தரக் கல்வியும் கற்றவர். தம் தந்தையார் தீ. வா. சி. துரைசாமி முதலியரர் நடத்திவந்த நெல் வாணி கத்தைத் தம் முயற்சியால் பெரிய அளவில் வாலாசாபாத்தில் நடத்தி வந்தார். இயற்கையாகவே நற்பண்புகள் பல வாய்ந் துள்ள இவர் பொதுத் தொண்டு புரிவதில் பேரார்வம் உடைய

வர். வாலாஜாபாத் ஊராட்சி மன்றத்தின் தலைவராகவும், வாலாஜாபாத் கூட்டுறவு வேளாண் பாங்குக்குத் தலைவராகவும், வாலாஜாபாத் இந்துமத பாடசாலைக் குடிசைத் தொழில் கூட்டுறவுக் கழகத்தின் தலைவராகவுமிருந்து அவர் புரிந்து வரும் செயல்கள் மக்களால் பெரிதும் போற்றப் பெறுகின்றன.

'சங்க காலச் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் **பேராசிரியர் அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.,** அவர்கள் வாலாஜாபாத்திற்கு அண்மையில் உள்ள அங்கம் பாக்கம் தீ. முத்தியப்ப முதலியார் தம் திருமகனாராய்த் தோன்றி, இளமையில் வாலாஜாபாத் இந்துமத பாடசாலையிலும், பின்னர்ச் செங்கற்பட்டு கொலம்பாஸ் உயர்நிலைப்பள்ளியிலும், அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் கல்வி பயின்றார்; இந்துமதப் பள்ளியில் சில ஆண்டுகள் ஆசிரியராகவும் பணியாற்றினார். சென்னைப் பல்கலைக்கழகத்தின் எம். ஏ., எம். லிட்., பட்டங்கள் பெற்று இன்று சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணி புரிந்து வருகிறார். இந்துமதப் பள்ளியில் படித்தபோது பாடசாலைக்கு வருகை புரிந்த டாக்டர் பி. வரதராஜுலு நாயுடு அவர்கள் இவர்தம் பேச்சுத் திறமையைக் கண்டு, வருங்காலத்தில் சிறந்து விளங்க வாழ்த்தி தமக்கு அளித்த மாலையை இவருக்கு அணிவித்து மகிழ்ந்து வாழ்த்திய நிகழ்ச்சி நினைக்கவும் மகிழ்ச்சி தருகின்றது.

'பல்லவர் காலச் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் **புலவர் முருகவேள், எம். ஓ. எல்.,** செங்கற்பட்டு மாவட்டத்தைச் சேர்ந்த நந்திவரம் தீ. இராமசாமி முதலியார் அவர்கள் திருமகனார். இந்துமத பாடசாலையில் இளமையில் கல்வி பயின்ற காலத்தே கற்றவர் பாராட்டும் அறிவுக் கூர்மை இவர்பால் காணப்பட்டது. கரந்தைப் புலவர் கல்லூரியில் புலவர் பட்டம் பெற்று, சென்னைப் பல்கலைக் கழகத்தி எம். ஏ., எம். ஓ. எல். பட்டமும் பெற்று, இன்று சென் (தாம்பரம்), கிறித்தவக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றி வருகிறார்.

'மாணவ வாழ்க்கையில் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் **மணி அர்சு. க. நாராயணசாமி** செங்கற்பட்டு மாவட்டத்தின் பழமத்தூர் என்னும் சிற்றூரில் பிறந்த ஒரு

பழந்தமிழ் மாணவர் ; இந்துமத பாடசாலையில் பயின்றபோதே இனிய பண்புகளும், விடா முயற்சியும், பொதுநல ஆர்வமும் கொண்டிருந்தார். கோபால இரத்தின சபாபதிபுரம் உயர் நிலைப் பள்ளியில் படித்த காலத்தில் 'மணி அரசு' என்னும் கையெழுத்து இதழ் ஒன்று நடத்தியவர். வள்ளலார் இல்லத்தில் பெற்ற அநுபவத்தையும் ஆர்வத்தையும் கொண்டு, தன் வீட்டரசியார் தமிழ்ப் பாவையுடன் சபாநாயகர் சிவசண்முகம் பிள்ளை பெயரால் சென்னையில் ஒரு மாணவர் இல்லம் தொடங்கி நடத்தி வருகிறார்.

'ஆசிரியர் வாழ்வில் சைவம்' என்னும் சொற்பொழி வாற்றும் பேராசிரியர் மு. அண்ணாமலை, எம். ஏ., தனவணிக நாட்டினின்றும் வந்து வள்ளலார் இல்லத்தில் தங்கி இந்துமதப் பள்ளியில் கல்வி பயின்றவர் ; எம். ஏ., பட்டம் பெற்று அண்ணாமலைப்பல்கலைக் கழகத்தில் தமிழ்ப் பேராசிரியராகப் பணிபுரிகிறார்.

'அலுவல் துறையில் சைவம் என்னும் சொற்பொழி வாற்றும் தி. சே. பழநிவேலு சென்னையில் மாடர்ன் பாளையகாட் கம்பெனி, இராமலிங்கம் கம்பெனி ஆகியவை களில் பங்குகொண்டு திறமையுடன் வாணிகம் புரிந்து வருபவர். இவர் திருமலைராயன்பட்டினம் சேஷ முதலியார் திருமகனார். இளைஞராய் வள்ளலார் இல்லத்தில் இருந்த காலத்துக் கருவூல அமைச்சராகவும் விளம்பர அமைச்சராகவும் இரண்டு ஆண்டுகள் அமைச்சர் அவையில் பொறுப்பேற்றிருந்தார்.

'வாணிகத்தில் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் இ. த. தட்சிணாமூர்த்தி பி. காம்., செங்கற்பட்டு மாவட்டத்திலுள்ள திருக்கழுக்குன்றத்திற்குப் பக்கத்தேயுள்ள இரும்புலி என்னும் சிற்றூரில் திரு. தர்மராய முதலியார் அவர்கள் திருமகனார் ; இந்துமதப் பள்ளியில் படித்தபோதே உடற் பயிற்சி அமைச்சராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றிருந்தார். சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் பட்டம் பெற்று இன்று சிம்சன் வாணிகக்கழகத்தில் பொறுப்பான பதவியில் இருந்து வருகிறார்.

'சட்டமும் சமயமும்' என்னும் சொற்பொழிவாற்றும் தி. கி. ஆதிமூலம், பி. ஏ., பி. எல். திருக்கழுக்குன்றம்

தீ. கிருஷ்ணசாமி முதலியார் அவர்கள் திருமகனுர்; இந்துமத பாடசாலையில் தொடக்கக் கல்வி பயின்று, சென்னை மயிலாப்பூர் இராமகிருஷ்ண மாணவர் இல்லத்தில் உயர்கல்வி கற்று, இலயோலாக் கல்லூரியில் பி.ஏ., பட்டமும், சென்னைச் சட்டக் கல்லூரியில் பி.எல். பட்டமும் பெற்றவர். பள்ளியில் படித்த போதே பலருடன் பழகும் நற்பண்புகளும், நல்ல பேச்சாற்றலும் வாய்க்கப்பெற்றிருந்த இவர், இன்று செங்கற்பட்டில் வழக்கறிஞராகப் பணியாற்றிவருகிருர்.

'சமுதாய வாழ்வில் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் மு. சுந்தரவடிவேல், பி.எஸ்ஸி., இந்துமதப் பள்ளியில் படித்தபோது பாடசாலை அமைச்சர் அவையில் ஓர் அமைச்சராகப் பணிபுரியும் வாய்ப்புப் பெற்றிருந்தார்; ஏழைச் சிறுவர்கள் பலரும் படித்து முன்னுக்கு வரவேண்டும் என்பதில் மிக்க ஆர்வங் கொண்டிருப்பவர். கல்லூரிப் படிப்புப் படித்துப் பி.எஸ்ஸி. பட்டம் பெற்றுள்ள இவர் இன்று சென்னைப் பேரஞ்சல் நிலையத்தில் (G. P. O.) அலுவல் பார்க்கிருர்.

'சைவத்தில் இளைஞர் பற்றுவைக்க வழிவகைகள்' என்னும் சொற்பொழிவாற்றும் சோ. பரமசிவம் எம்.ஏ., மதுரை மாவட்டத்தைச் சேர்ந்தவர்; வள்ளலார் இல்லத்தில் தங்கி இந்துமத பாடசாலையில் எட்டாம் வகுப்பு வரை பயின்ற பிறகு உயர்நிலைப் படிப்புப் பெற்றுச் சென்னைப் பச்சையப்பன் கல்லூரியில் கற்று எம்.ஏ., பட்டம் பெற்று ஆங்கே தமிழ்த் துறையில் பணிபுரிந்து வருகிருர்.

'மருத்துவத்தில் சைவம்' என்னும் சொற்பொழிவாற்றும் டாக்டர் சே. பதுமநாபன் பி.ஏ., எம்.பி., பி.எஸ்., சேலம் குகை, பெருந்துறை வாணிகம் திரு. சொ. ந. சி. சென்னி செட்டியார் அவர்கள் திருமகனுர். திரு. செட்டியார் அவர்கள் உயர்குடியில் வந்தவர். பாடசாலையில் பல ஆண்டுகளாகப் பற்றுக்கொண்டு பொருளுதவியும், பிறவுதவியும் செய்துவருபவர். எம்.பி., பி.எஸ்., பட்டம் பெற்ற டாக்டர் பதுமநாபன் எம். டி., தேர்வுக்குப் படித்துக்கொண்டிருக்கிருர். இனிய பண்புகளும், யாவர்க்கும் உதவிபுரியும் இயல்பும், பெரியோர்களிடம் பழகும் சிறப்பும் வாய்ந்துள்ளவர்.